டாக்டர் நா. மகாலிங்கம்

சிவப்பிரகாசர்



சிவஞான முனிவர்



வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்



# ஞானபரம்பரை

தொகுதி 9

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

## வாழ்வு - வாக்கு - பணி

பற்றிய நூல் தொகுப்பு

**தொகுதி ஒன்பது**

வர்த்தமானன் பதிப்பகம்

சென்னை - 17.

முதற் பதிப்பு : 2006
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

இரண்டாம் பதிப்பு : 2009
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

மூன்றாம் பதிப்பு : 2014
*(வர்த்தமானன் பதிப்பகம்)*

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
**வர்த்தமானன் பதிப்பகம்**
**21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.**

*அச்சிடல் :*
**அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058**
**ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817**

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*''சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு ''*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் ''பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது''; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் ''ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது.''

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*''ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம். ''*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றிச் சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே
அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமுதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, மூக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தியிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, மூதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக* அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர் களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

# பதிப்புரை

## முதற் பதிப்பிற்கானது

மாணவர்களின் முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு வெறும் ஏட்டுக்கல்விமட்டும் போதாது. அதனுடன் விழுப்பொருள் உணர்வும் (sense for higher values) மாணவர்களிடையே பதிந்திட வேண்டும் என்பது எங்கள் நிர்வாகத்தின் லட்சியமாகும். இந்தக் குறிக்கோளை முன் நிறுத்தி அறவியல் மற்றும் சமயம் முதலான செவ்வியல் கருத்துக்களை மாணவர்களிடையே பரப்பி வருகிறோம்.

அந்தப் பணியின் வளர்நிலையில் தமிழ் ஞானிகள் மு்ப்பதுபேர்பற்றி நூல்கள் வெளியிட வேண்டும் என்று அருட்செல்வரவர்கள் விரும்பினார்கள். எங்களை எல்லா வகையிலும் வழிநடத்துகின்ற அருட்செல்வரவர்களின் விருப் பத்தை முழுமனத்தோடு ஏற்று, இந்த நூல்வரிசையை வெளியிடுவதில் எம் அறக்கட்டளை பெருமை கொள்கிறது.

இந்தப் பணியில் உறுதுணையாக இருந்து பணியாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமிக்கும், அவருக்கு உதவியாகப் பிழைதிருத்தம் முதலான பணிகளை உவப்போடு செய்த பேராசிரியர் இருசுப் பிள்ளை, புலவர்மணியன், பேராசிரியர் தரணி பாஸ்கர், முனைவர் மனோன்மணி ஆகியோர்க்கும் எம் நன்றி உரியது.

வெளியிட்டுள்ள நூல்களை இளைஞர் உலகம் ஏற்றுப் போற்ற வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இராமானந்த அடிகளார் அறக்கட்டளை
கோயமுத்தூர்

## நுழையுமுன் ஒரு சொல்

நரை திரை இன்றி இளமை நலத்தோடு விளங்கிய முதியவர் பிசிராந்தையார்; அவர் தம் இளமைத் தோற்றத்துக்குப் பல காரணம் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று: 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!' அதாவது, 'நான் வாழும் ஊரில் சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர்; அதனால் நரை திரை மூப்புத் தோன்றாமல் நான் வாழ்கிறேன்' என்கிறார். வாழும் முறையாலும் வழங்கும் மொழிகளாலும் மனநலம் காத்தவர்கள் அந்தச் சான்றோர்கள். அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்தும் வாசகங்களைக் கேட்டும் பிசிர் என்ற ஊரில் இருந்தவர்கள் மனவளம் பெற்றிருந்தார்கள். மனவளம் பெற்றமையால் வாழ்க்கையில் நிறைவு இருந்தது. பொறாமை, பொய் போன்ற தீமைகள் சாராமல் அன்பு, அருள், அறம் போன்ற நல்லவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கு முதுமை நோய் வாராது. இது பெரியோர் அனுபவ மொழி.

அத்தகைய சான்றோர்களின் வாக்கு, வாழ்வு, வழிகளைத் தெரிந்து போற்றினால், சமூக வாழ்வு சிறக்கும்; குறிப்பாக, இளைஞர்கள் நலம் பெற்று, நாட்டை நன்கு வளர்ப்பார்கள்.

இந்தக் குறிக்கோளை நெஞ்சில் நிறுத்தித் தமிழகத்துச் சான்றோர் சிலரைப் பற்றி நூல்கள் வெளியிடும் முயற்சியில் உருவானது இது.

நல்லிளைஞர் மனவளம் பெற்று - அறிவு, அறம், அன்பு, பண்பாடு ஆகியவற்றைப் பேணி, நாட்டுக்கு நலம் செய்வர் என்ற நம்பிக்கையோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் இந்த நூல் வரிசை பற்றித் திட்ட மிட்டார். அவர் தந்த திட்டத்தின் பயன் மக்களைச் சென்று அடைய நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி* நிர்வாகம் ஏற்றுக் கொண்டது.

பயன் பெறுக! பயன் பெறுக!

ம.ரா.போ. குருசாமி
ஒருங்கிணைப்பாளர்

---

*முதற் பதிப்பிற்கான செய்தி

கற்பனைக் களஞ்சியம் எனப் புலவர்களால் போற்றப்பட்ட வீரசைவ அருளாளர் **சிவப்பிரகாச அடிகளார்**. இரண்டு அடிகளில் ஓர் அடி சிற்றடியாக இருப்பது திருக்குறள். எனவே மாதொரு பாகனாகிய சிவபெருமானின் திருவடிகளுக்கு ஒப்பானது திருக்குறள் எனப் பாடியவர் இவர். திருக்குறளை எடுத்தாளாத புலவர்கள் இல்லை; அவருள் இவரைப் போல் மிகுதியாகத் திருக்குறளை எடுத்தாண்டவர்கள் வேறு எவரும் இலர்; பல வகைப் பிரபந்தங்களும் தமிழில் அருளிய இவர் மொழிபெயர்ப்புத் தொண்டும் செய்து தமிழுக்கு வளம் சேர்த்தவர்.

பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்லூரியில் பல்லாண்டுகள் பேராசிரியராகப் பணியாற்றி, இப்போது அக்கல்லூரியின் முதல்வராக வீற்றிருப்பவர் **முனைவர் திருமதி மனோன்மணி** அவர்கள்; பயிற்றும் திறத்தாலும் நல்லாசிரியர்; நிர்வாகத் திறத்தால் நிறை நிலையாளர்.

படைப்பிலக்கியம், இலக்கணம், தத்துவம், தருக்கம் ஆகிய துறைகளில் மட்டுமல்லாமல், மொழி பெயர்ப்பிலும் தம் முத்திரை பதியும் வண்ணம் தமிழ் / சமயப் பணியாற்றியவர் மாதவச் **சிவஞான யோகிகள்**. சைவ சித்தாந்த தத்துவத் தோய்வும் யோகப் பயிற்சியும் கொண்ட ஞான நாயகர், இவர்; நைஷ்டிக பிரமசாரியாக - குழந்தைப் பருவத்திலிருந்தே துறவு நிலைக்குத் தம்மைத் தகுதிப்படுத்திக் கொண்டவர். சிவஞான போதத்திற்குச் சிற்றுரை ஒன்றும் பேருரை (மகாபாஷ்யம்) ஒன்றும் எழுதி, உரையரங்கில் முதன்மை பெற்றவர் சிவஞான சுவாமிகள். பாஷ்யக்காரர் என்று உடையவரை வைணவர் போற்றுவது போலச் சைவர்கள் இவரைப் பாடியக்காரர் என்று போற்றுவர். பிரம்மசூத்திரத்துக்கு மூவர் எழுதிய பாஷ்யங் களுக்கு எவ்வகையாலும் ஈடு சொல்லத்தக்க செறிவும் சிறப்பும் கொண்டது சிவஞான மாபாடியம்.

பேரூர்ச் சாந்தலிங்க அடிகளார் கல்லூரியில் தமிழ் முதுகலைத் தேர்ச்சி பெற்று, அக்கல்லூரியிலேயே ஆசிரியப் பணி

ஏற்றிருக்கும் டாக்டர் திருமதி வே. செல்லாத்தாள், சிவஞான முனிவரின் வாழ்வும் பணியும் பற்றிச் சிறப்பாக நூல் எழுதி வழங்கியுள்ளார். முனைவர் பட்டத்திற்குச் சிவஞான முனிவர் பற்றியே ஆராய்ச்சி செய்து வாகை சூடியவர் இவ்வாசிரியர்.

ஏராளமான பாடல்களை எவ்விதச் சிக்கலுமின்றி மிக எளிதாக இயற்றும் திறத்தில் ஒப்பற்றவராக விளங்கியவர் தண்டபாணி சுவாமிகள். நூறாயிரம் பாடல்கள் பாடிய அவர் சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லமை நாட்டியவர். முருகனையே வழிபடு கடவுளாகக் கொண்ட வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பிற தெய்வங்களையும் போற்றிப் பாடி மகிழ்ந்தவர்; வள்ளற்பெருமானின் சமகாலத்தவர்.

தண்டபாணி சுவாமிகளைப் பற்றி இவ்வரிசையில் நூல் எழுதியுதவியவர் முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம் ஆவார். தண்டபாணி சுவாமிகளின் உறவினர் என்ற பெருமைக்குரிய திரு. சொக்கலிங்கம், சுவாமிகளைப் பற்றிய ஆராய்ச்சியில் முனைவர் பட்டம் பெற்றவர் என்பது குறிப்பிடத் தக்கது. மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் தொலைநிலைக் கல்வியமைப்பில் பணியாற்றி ஓய்வு பெற்றவர்; நூல்கள் எழுதியும் புகழ் பெற்றவர்.



## தொகுதி ஒன்பது

### சிவப்பிரகாசர்

முனைவர் ம. மனோன்மணி

### சிவஞான முனிவர்

முனைவர் வே. செல்லாத்தாள்

### வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம்

# சிவப்பிரகாசர்

## பொருளடக்கம்


1. சிவப்பிரகாசர் வரலாறு - 1
2. சிவப்பிரகாசர் அருளிய நூல்கள் - 14
3. பன்மொழிப் புலமை - 64
4. கடவுட்கொள்கை - 66
5. சிவப்பிரகாசரும் வீரசைவமும் - 71
6. சிவப்பிரகாசரின் தலப்பயணமும் திருமடங்களும் - 76
7. சிவப்பிரகாசர் படைப்பில் இலக்கிய வகைகள் - 82
8. சிவப்பிரகாசர் போற்றும் வள்ளுவர் - 90

# சிவப்பிரகாசர்

## 1. சிவப்பிரகாசர் வரலாறு

### தந்தையார் அறிமுகம்

'தொண்டை நாடு சான்றோருடைத்து' என்பது பழமொழி. இந்நாட்டில் காஞ்சிபுரம் அருள்வளம் நிறைந்த இடம். காஞ்சிபுரத்தில் தொண்டை மண்டல வேளாளர்க்குத் தீட்சா குருவாக விளங்கியவர் குமாரசாமி தேசிகர். அவர் கார்த்திகைத் திருவிழாவில் அண்ணாமலையையும், இறைவனையும் வணங்கத் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். தொடர்ந்து செல்லும் வழியில் ஒரு நந்தவனத்தில் தங்கினார். அங்குத் தமது சிவபூசையை முடித்தார். அங்கிருந்து நடந்து திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். அத்தலம் சென்று சேர்ந்தார். அங்குள்ள ஈசானிய தீர்த்தத்தில் அனுட்டானம் செய்ய எண்ணினார். பூசை செய்வதற்குப் பூசைப்பெட்டகம் ஒன்றைத் தம்முடன் வைத்திருப்பார். அதனை எடுக்கலாம் என நினைத்தார். அப்பெட்டகம் அங்குக் காணப்பெறவில்லை. உடன் தம்முடன் வந்தவர்களிடம் 'பூசைப்பெட்டகம் எங்கே?' என்று வினவினார். அவர்கள் பகலில் தங்கிய இடத்து வைத்து மறந்து வந்ததைத் தெரிவித்தனர். அது கேட்டு மனம் வருந்தினார். தம்முடன் வந்தவர்களைத் தாம் தங்கியிருந்த நந்தவனத்தில் தேடி எடுத்துவர அனுப்பினார். இருப்பினும் தம் ஆன்மார்த்த மூர்த்தியை விட்டுப் பிரிந்ததற்காக வருந்தினார். இரவு முழுவதும் சிவத்தியானத்தில் இருந்தார்.

## இறைவனின் அருள்வாக்கு

அந்நிலையில், அவரின் சிவபுண்ணிய முதிர்ச்சியினால் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் குமாரசாமி தேசிகர் முன்னிலையில் ஒருருவில் தோன்றினார். அவர் தங்கிய இடத்திற்கே எழுந்தருளினார். தேசிகர் தம் எதிரே நின்றவரை அன்பொடு வணங்கினார். பின் தமக்கு வழிபாட்டில் துன்பம் நேர்ந்ததை அவரிடம் தெரிவித்தார். அதைக் கேட்ட வந்தவர், அவர் மீது அருட்பார்வை செலுத்தி, 'இலிங்கத்தை அங்கத்தில் அணிந்திருந்தால் இவ்வாறு நேராது; உமது பூசைப்பெட்டகம் நாளைக் காலை வந்து சேரும். நீர் இது முதல் இலிங்கதாரணம் செய்து கொள்ளும்' என்று கூறினார். இதனைக் கேட்ட குமாரசாமி தேசிகர் 'இச்செய்கை தம் சீடர் முதலானோருக்கு மாறாக இருக்கும்' எனத் தெரிவித்தார். கேட்ட சிவபெருமான், ''அந்தச் சீடர் முதலியோரால் பெறப்படும் பயன் சிறிதுமில்லை; நமது கட்டளைப்படி நீர் சிவலிங்கதாரணம் செய்து கொண்டால், உமக்கு மூன்று புதல்வர்களும், ஒரு புதல்வியும் பிறப்பர்; அவர்களால் இம்மை, மறுமையின்பங்களும், முத்தியும் கிடைக்கும். ஆதலால், இவ்வாலயத்துத் தெற்குத் தெருவில் மடம் ஒன்று உள்ளது. அதில் இருக்கும் குருதேவரிடத்தில் தாரண தீட்சை செய்து கொள்ளும்'' என்று வற்புறுத்தி ஆணையிட்டார். வீரசைவ ஆசார நெறிகளைக் கூறி, அவ்வாறே குருதேவர்க்கும் கட்டளையிட்டு மறைந்தருளினார்.

மறுநாட் காலை சிவபெருமானது திருவாக்கின்படி பூசைப்பெட்டகம் வரப்பெற்றது. அது கண்டு, அடியவர்களுடன் மடத்தையடைந்து குருதேவரை வணங்கினார். அவரால் தாரண தீக்கையும் செய்யப் பெற்றது. திருக்கார்த்திகைத் திருவிழாவும் நிறைவுற்றது. பின், குருதேவரிடத்திலிருந்து விடைபெற்றார். தமது ஊரான காஞ்சிபுரம் திரும்பினார். தமது அனுட்டானப்படி சீடர்களுக்கும் தாரண தீக்கை செய்துவைத்தார்.

## சிவப்பிரகாசம் தோற்றம்

இத்தகு சூழலில் அண்ணாமலையார் அருள்வாக்கின்படி நால்வர் அவதரித்தனர். தந்தையாராகிய குமாரசாமி தேசிகர் அகம் மகிழ்ந்தார். அதன்பின்னர் அவர்களுக்குப் பெயர் சூட்டும் நிகழ்ச்சி நடந்தது. அதில் முன்னவர்க்குச் 'சிவப்பிரகாசம்' என்றும் அடுத்தவர்களுக்கு முறையே வேலாயுதம், கருணைப்பிரகாசம், ஞானாம்பிகை என்றும் பெயர்களைச் சூட்டினார். ஆதி

சிவப்பிரகாசரிடத்துப் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்ததால் தம் மூத்த மகனுக்குச் 'சிவப்பிரகாசர்' எனப் பெயரிட்டுள்ளார். முதல் மூவரும் கல்வி பயின்றுவரும் நாளில் தந்தையார் சிவலிங்கத்தில் கலந்தார்.

## இளமைக்காலம்

இவர்கள் யாருடைய அரவணைப்பில் வளர்ந்தனர் என்பதை அறிய முடியவில்லை. தாய்பற்றிய தகவல்களும் கிடைக்கவில்லை. கடவுளின் அருளால் பெற்ற குழந்தையாகவே அறிந்துகொள்ள முடிகிறது.

## தலப் பயணம்

மூத்தவர் சிவப்பிரகாசர் தம் உடன்பிறப்புக்களோடு திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். அங்கே குருதேவரை வணங்கித் தங்கியிருந்தார். அங்குத் தங்கிய நாட்களில் முயற்சியில் தளராது கல்வி பயின்றார். திருவண்ணாமலையாகிய சோணசைலத்தை வலம் வந்தார். அவ்வாறு வரும்போது 'சோணசைல மாலை' என்னும் பெயரில் நூறு பாடல்களைப் பாடினார். அம்மலையையும் போற்றி வணங்கினார்.

## சாந்தலிங்கர் தொடர்பு

மேலும், திருவண்ணாமலையில் பேரூராதீனக் குரு முதல்வர் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு நட்புக் கொண்டார். திருவண்ணாமலையில் தங்கியிருக்கும் நாளில் சாந்தலிங்கரும் அத்தலத்தில் பல நாட்கள் தங்கி இறை சிந்தனையில் ஈடுபட்டிருக்க வேண்டும். சிவப்பிரகாசரின் கவி பாடும் ஆற்றலைப் பலமுறை உடனிருந்து அனுபவித்திருத்தல் வேண்டும். அதன் பிறகே தலப்பயணத்தில் ஞானாசிரியரைக் கண்டு வணங்கச் செல்லுமிடத்துச் சாந்தலிங்கர் சிவப்பிரகாசரை நூல் பாடச் செய்தார் என்ற பின்னர் வரும் செய்தியை இவ்விடத்து ஒப்புநோக்கிக் காணலாம். சாந்தலிங்கருக்குக் குருவாக விளங்கியவர் ஆதி சிவப்பிரகாசர். அவரது குருமடத்தில் சிவப்பிரகாசர் தங்குகிறார். தம் தந்தை குமாரசாமி தேசிகருக்கும் அவரே குருநாதராக விளங்கியவர். எனவே, திருவண்ணாமலைக் குருபீடத்தில் வணங்கி அத்திருமடத்தில் தங்கும் பேற்றினைப் பெற்றவராகிறார்.

இந்நிகழ்ச்சிவழி இளமைக்காலத்தே நூல் இயற்றும் வகையில் கவிபாடும் திறம் படைத்தவர் என்பதை அறிகிறோம். இருப்பினும் பேரிலக்கணங்களைக் கற்க வேண்டும் எனப் பெரிதும் விரும்பினார்.

தம் உடன்பிறப்புக்களோடு தென்பகுதிக்கு வந்து சேர்ந்தார். அங்குத் 'துறைமங்கலம்' எனும் நகரில் தங்கிச் சிவபூசை செய்து மகிழ்ந்தார்.

## அண்ணாமலை ரெட்டியார் தொடர்பு

அண்ணாமலையாரின் அருள் பெற்றுப் பிறந்தவராகிய சிவப்பிரகாசருக்கு அவ்வூரில் அன்பர் ஒருவர் அறிமுகமானார். அவர் பெயர் அண்ணாமலை ரெட்டியார் என்பது. அவர் சிறந்த சிவபக்தியுடையவர். சிவப்பிரகாசரின் திறத்தை முன்னமே சிறப்பாக அறிந்துவைத்திருக்கிறார். அவர் தம்மூருக்கு வருகை தந்ததை உணர்ந்தார். சிவப்பிரகாசரைக் கண்டு வணங்கி, அவரின் அருள்நிலை பெற விரும்பினார். தமது விருப்பத்தைச் சிவப்பிரகாசரிடம் வேண்டுகோளாகத் தெரிவித்தார். 'இத்தலத்தில் தாங்கள் சிலகாலம் தங்க வேண்டும்' எனவும் வேண்டிப் பணிந்தார். 'அன்பின் வழியது உயிர்நிலை' என்ற தமிழ் நெறியுணர்ந்தவர். ஆதலின் அவர் விருப்பம் நிறைவேறியது.

அவரை உடன்படச் செய்து, தம் குருதேவராகிய சென்னவசவையர் மடத்திற்கு மேற்கில் ஒரு திருமடம் கட்டி, அங்கே சிவப்பிரகாசரை எழுந்தருளச்செய்து, தாமும் அணுக்கத் தொண்டராகப் பிரிவின்றிப் பணிபுரிந்தார். அங்குத் தங்கியிருந்த நாட்களில் சிவப்பிரகாசர் அவருக்கு ஞான நூல்களைக் கற்பித்தார். இரண்டு ஆண்டுகள் அங்கேயே இருந்தார்.

## தென்பகுதி வருகை

துறைமங்கலத்திற்குத் தெற்கு நோக்கிச் செல்லக் கருதினார் சிவப்பிரகாசர். அங்கிருந்து திருநெல்வேலி புறப்பட்டார். திருநெல்வேலியை அடைந்தார். அங்குத் தாமிரபரணிக்கருகில் சிந்துபூந்துறை மடம் உள்ளது. அத்திருமடத்திலுள்ள தருமையாதீன வெள்ளியம்பலவாணத் தம்பிரானிடம் இலக்கண, இலக்கியப் புலமையை வளர்க்க விரும்பி அங்குச் சென்றார். அங்குள்ள சுவாமிகளின் புலமையை நன்கு அறிந்து, வணங்கித் தாம் இலக்கணம் கற்க விரும்பிய வேண்டுகோளையும், வரவையும் தெரிவித்தார். கேட்ட சுவாமிகள், சிவப்பிரகாசரின் இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு, முதலிலும், முடிவிலும் 'கு' என்ற எழுத்து அமைய, 'ஊருடையான்' என்பதை இடைப்பெய்து வெண்பா ஒன்றைப் பாடுமாறு கூறினார்.

இதனைக் கேட்ட சிவப்பிரகாசர்,

'குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னம் அணிவாற்கு - வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு'

தக்கனது பெருவேள்விக்குச் சென்ற சூரியனது பற்களை உதிர்த்தவனும் வராகமூர்த்தியின் கொம்பைப் பறித்து அணிந்தவனும் தென்றல் தேரோனான மன்மதனின் பகைவனும் ஆன சிவபிரானுக்கு ஊர் தில்லைப் பதி என்று உலகம் பேசும் எனும் பொருளுடைய இவ்வெண்பாவைப் பாடினார். கேட்ட தம்பிரான் வியந்து பாராட்டி, சிவப்பிரகாசரைத் தழுவித் தமது அருகு இருத்தினார். சிவப்பிரகாசரின் சகோதரர்களுக்கும் இலக்கண, இலக்கியப் புலமையைக் கற்றுக் கொடுத்தார். அதுகண்ட, சிவப்பிரகாச சுவாமிகள் பெருமகிழ்வடைந்தார்.

தங்களுக்காக வழிச்செலவிற்கு அண்ணாமலை ரெட்டியார் கொடுத்த முந்நூறு பொன்னையும் குரு காணிக்கையாக வைத்தார். இதைக் கண்ட சுவாமிகள், 'இது நமக்கு வேண்டியதில்லை; நிந்தித்தலையே இயல்பாகக் கொண்டு திருச்செந்தூரில் வசிக்கும் தமிழ்ப்புலவர் ஒருவரைத் தாங்கள் வெற்றி கொண்டு அவர் வந்து தலை வணங்கும்படி செய்தலே குரு காணிக்கையாகும்' என்று அருளினார்.

## திருச்செந்தூர் புறப்படல்

சிவப்பிரகாசர் திருச்செந்தூர் புறப்பட்டார். செந்திலம்பதியில் முருகக் கடவுளை வணங்கினார். திருக்கோயில் வலம் வந்தார். அவ்வாறு வருகையில் சுவாமிகளால் குறிப்பிடப்பெற்ற தமிழ்ப்புலவர் எதிர்ப்பட்டார். சிவப்பிரகாசரை 'நீவிர் யார்?' என்று வினவினார். சிவப்பிரகாசர் அப்புலவரிடம் அறிமுகமானார். அவரையும் அப்புலவர் தம் வழக்கப்படி நிந்தனை செய்தார். அந்நிலையில் கலகம் நேர, புலவர் சுவாமிகளைப் புதுமையான வகையில் பாடி வெற்றி பெறுவோம் எனத் துணிந்தார். தமது கருத்தில் ''நாமிருவரும் 'நிரோட்டக யமகம்' பாடுவோம். முன்னர்ப் பாடி முடித்தவருக்கு அஃதியலாதார் அடிமையாவோம்'' என்று கூறினார். சிவப்பிரகாசரும் தம் கருத்து நிறைவேறும் இடம் இதுவே என நினைத்து இசைவு தந்தார்.

## வாதப்புனைவில் வெற்றி

திருச்செந்தூர் முருகக்கடவுள் மீது 'நிரோட்டக யமக அந்தாதி'த் தொடையாக முப்பது பாடல்களைப் பாடி முடித்தார். இதற்கு 'இதழகலந்தாதி' என்ற பெயரும் உண்டு. அது கண்ட புலவர், தாம் ஒரு செய்யுள்கூடப் பாட முடியாமையுணர்ந்தார். சிவப்பிரகாசரின் திருவடிகளில் வணங்கி, 'அடிமையாயினேன்' என்று பணிந்தார். பின், அவரைச் சிந்துபூந்துறைத் திருமடத்திற்கு அழைத்து வந்து அங்குள்ள சுவாமிகளுக்கு அடிமையாக்கினார். சுவாமிகளும் திருவுளம் மகிழ்ந்தார். பின், சிவப்பிரகாசரை நோக்கி, 'தாங்கள் பாடிய செய்யுளில் சிவபிரானுக்குரிய தலம் சிதம்பரமே எனச் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளீர். ஆதலால், அத்தலத்தில் சில காலம் சென்று தங்குக' என்று விடைகொடுத்து அனுப்பி அருளினார்.

## திருவெங்கையில் தங்குதல்

சிவப்பிரகாசர், சிவத்தலங்கள்தோறும் சென்று வணங்கித் துறைமங்கலம் சேர்ந்தார். முன்போலவே அண்ணாமலை ரெட்டியாருக்கு அருள்பாலித்து அவரது வேண்டுகோளின்படி 'திருவெங்கை மாநகரில் தமக்காக அவர் கட்டிய திருமடத்தில் இருந்தார். அத்தலத்துள்ள பழமலைநாதர்மீது திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கையலங்காரம் எனும் நான்கு நூல்களை அருளினார்.

இத்தகு சூழலில் இங்கு நடந்த நிகழ்ச்சியொன்றையும் குறிப்பிடுதல் வேண்டும். ஒருநாள் அவ்வூரில் 'பிடாரி' எனும் தெய்வத்திற்குத் திருவிழா நடைபெற்றது. அத்திருவிழாவில் திருத்தேர் திருவீதியுலா வந்தது. அங்கு அடியாருக்குப் பயன்படும் வகையில் திருமடத்திற்கு அருகிருக்கும் முருங்கை மரம் தேர்பட்டு அழிந்துவிட்டது. அந்த மரம் அழிந்தது கண்டு,

'திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை விருத்தகிரிச்
செல்வற்கோதும்
பெருந்தகைமை யுடையம்யாம் விடுமோலை வெங்கைநகர்ப்
பிடாரி காண்க
விரும்புவியி லொருமுருங்கைக் கொம்பொடியா மற்காத்திவ்
வூருக்கு நீநம்
முருங்கைதனை வேரோடும் களைந்தனை யென் றாலுனக்கு
முறைய தாமோ'

எனும் பாடலைத் திருவாய் மலர்ந்தருளினார்.

சிவப்பிரகாசர் சிலகாலம் அங்கிருந்து துறைமங்கலத்தை அடைந்து அருளினார்.

## தில்லைத் தலம் செல்லல்

அண்ணாமலை ரெட்டியார், உழுவலன்பு காரணமாக, சிவப்பிரகாசரைத் திருமணம் செய்துகொள்ளுமாறு வேண்டினார். அதனைக் கேட்ட சிவப்பிரகாசர் இல்லறத் துன்பங்களை விளக்கி மணம் செய்ய மறுத்துவிட்டார். தம்முடைய நோக்கம் இறைவனைப் பற்றுதல் ஆதலால் இல்லற நெறியில் அவர் நாட்டம் கொள்ளவில்லை. எனினும், தம் தம்பியர்க்கு மணம் செய்வித்தார். இவரது நிலையுணராத சிலர், பெண்மையை இழிவுபடுத்தியதாகக் கதை கூறுவர். அத்தகைய மனமிருந்தால் தம்பியரையும் துறவு நெறியில் செலுத்தியிருப்பர். அவ்வாறு செய்யாமல், தம்பியர் திருமணத்தில், 'புத்திரமித்திரர்களுடன் மேன்மேலும் மிக வாழியே' என இல்வாழ்வாருக்குரிய தகுதிகளோடு வாழ்த்தியுள்ளார்.

தம்மிடத்து மிக அன்பு பூண்ட அண்ணாமலை ரெட்டியாரோடு தில்லைத் தலத்திற்கு எழுந்தருளினார். அங்கும் சிவப்பிரகாசருக்காகத் திருமடத்தை ரெட்டியார் கட்டுவித்தார். அதில் வீற்றிருந்து, இறைவனை வணங்கி, சிவப்பிரகாச விகாசம், தருக்க பரிபாஷை, சதமணிமாலை, நால்வர் நான்மணிமாலை முதலான நூல்களை அருளினார். அத்தலத்தினின்று பிற தலங்களையும் வணங்கப் புறப்பட்டார்.

## திருக்காட்டுப்பள்ளியை அடைதல்

பிற தலங்களை வணங்கித் திருக்காட்டுப்பள்ளியை அடைந்தார். அத்தலத்துள்ள இறைவனை வணங்கி அங்குத் தங்கியிருந்தார். இங்குத் தங்கிய நிலையில் சிவப்பிரகாசரின் வாழ்க்கை வரலாற்றில் மற்றொரு நிகழ்ச்சியும் நடந்தேறியது.

கல்வியிற் சிறந்த பெண்ணொருத்தி, தெருவில் உப்பு விற்று வருதலைச் சிவப்பிரகாசர் கண்டார். அப்பெண்ணின் நிலையுணர்ந்து இரக்கமுற்றார். கருணை நோக்கம் கொண்டு அப்பெண்ணின் நல்லூழையும் பரிபக்குவத்தையும் உணர்ந்தார். அப்பெண்ணின் புலமையை மற்றவருக்கும் புலப்படுத்தத் திருவுளம் கொண்டார். இதனை,

**'நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக் கணிந்த பெம்மா - னுறையும்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு'**

என்ற வெண்பாவைத் திருவாய் மலர்ந்தருளினார். அதனைக் கேட்ட அப்பெண்,

'தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகாசப் பெருமான்
பொன்னோங்கு சேவடியைப் போற்றினோம் - மன்னோன்
திருக்கூட்ட மத்தனைக்கும் தெண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினோம் காண்'

எனும் வெண்பாவைப் பாடிக்கொண்டே, மனமுருகிச் சிவப்பிரகாசரை வணங்கிக் கைகூப்பி நின்றாள். அப்பெண்ணிற்கு உண்மை ஞானம் உண்டாகும்படி திருக்கண் நோக்கம் செய்தருளினார்.

## காஞ்சிபுரம் செல்லல்

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து துறைமங்கலம் சேர்ந்தார். அங்குள்ள தலங்களை வணங்கிக் காஞ்சிபுரம் சென்றார். அடியவர்களும் அண்ணாமலை ரெட்டியாரும் உடன் சென்றனர். வழியில் பேரூரிலிருந்து தலப்பயணம் மேற்கொண்டு வரும் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு களிகூர்ந்தார். அவரை நோக்கி, 'தாங்கள் பேரூரென்னும் புனிதத் தலத்தினின்றும் இங்கு எழுந்தருளியதற்கு என்ன காரணம்?' என்று கேட்டார். அதற்கு, அவர் 'சிவஞானபாலய தேசிகரைத் தரிசிக்க வேண்டும் எனும் பெருங்காதலால் வந்தேன்' என்று உரைத்தருளினார். பின் இருவரும் பேருவகையுற்றுப் பொம்மையபாளையம் அருகிலுள்ள புத்துப்பட்டு என்னும் நகரை அடைந்தனர். அங்குச் சிவப்பிரகாசரை நோக்கிச் சாந்தலிங்கர் 'நாமிருவரும் சிவஞானபாலய தேசிகரைத் தரிசிக்க வேண்டியிருப்பதால் அவர்மீது சில தோத்திரங்கள் பாடுக' என்று கேட்டுக்கொண்டார். சிவப்பிரகாசர் அது கேட்டு, 'நாம் நரர்களைப் பாட மாட்டோம்' என்று மறுத்துவிட்டுச் சாந்தலிங்கரோடு அவ்வூரிலுள்ள ஐயனார் கோயிலில் துயில் கொண்டனர்.

சிவப்பிரகாசரின் கனவில் முருகக் கடவுள் மயில் வாகனராக எழுந்தருளினார். ஒரு பாத்திரத்தில் உதிரிப்பூக்களை வைத்து 'இவற்றை மாலையாகத் தொடுத்து நமக்கு அளிப்பாயாக' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். இக்கனவுச் செய்தியைச் சாந்தலிங்கருக்குச் சிவப்பிரகாசர் தெரிவித்தார். சிவஞானபாலய தேசிகர் முருகக் கடவுளிடத்து மிகுந்த பக்தி பூண்டவர். அது பற்றியே அக்கடவுள் தங்களுக்குக் கனவில் அத்தேசிகரின் மகிமையை இவ்வாறாகப் புலப்படுத்தியிருப்பார் என்று வலியுறுத்தினார். அதன்பின் சிவஞானபாலய தேசிகர்மீது தாலாட்டு, நெஞ்சுவிடு தூது முதலான சிற்றிலக்கியங்களைப் பாடினார்.

## ஞானாசிரியரிடம் ஆசி பெறுதல்

தாம் பாடியவற்றை ஞானாசிரியர் வீற்றிருக்கும் பொம்மையபாளையம் தலத்திற்குக் கொண்டுவந்தார். அங்குள்ள சந்நிதானத்தில் அவற்றை அரங்கேற்றினார். குருவிடம் ஞானோபதேசம் பெற்றார். தம் ஞானாசிரியரது ஆணைப்படி, தம் தங்கை ஞானாம்பிகையைச் சாந்தலிங்கருக்குத் திருமணம் செய்துகொடுத்தார். தம்மை விட்டு நீங்காது உடன் தங்கிய அண்ணாமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குச் செல்ல ஆணை வழங்கினார். தாம் ஞானாசிரியரை வணங்கி அத்தலத்திலேயே தங்கியிருந்தார்.

## பன்னூற்புலமை விளங்கல்

தம் ஞானாசிரியரிடமே சிலகாலம் தங்கியிருந்த சிவப்பிரகாசர், விடைபெற்று மீண்டும் காஞ்சியடைந்தார். அங்குள்ள இறைவனை வணங்கித் திருமடத்தில் தங்கியிருந்தார். அங்கு நிஜகுணயோகி என்பவரால் கன்னட மொழியில் ஆக்கப்பட்டிருந்த வேதாந்த பரிச்சேதத்துக்கு 'வேதாந்த சூடாமணி'யெனப் பெயர் தந்து அதனைத் தமிழில் பாடினார்.

இரேணுகரென்னும் கணத் தலைவரால் அகத்திய மாமுனிவருக்கு உபதேசிக்கப்பெற்ற சித்தாந்த சிகாமணியைப் பாடினார். பிரபுதேவர் சரித்திரமாகிய பிரபுலிங்க லீலையையும் தமிழில் பாடியருளினார்.

பல நூல்களைப் பாடிய நிலையில் தம் ஞானாசிரியரின் நினைவு மீண்டும் காஞ்சிக்கு வருவதை உணர்ந்தார். அதனால், அவர்மீது, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ் எனும் இரண்டு சிற்றிலக்கியங்களையும் இயற்றினார். அவ்விடம் அகன்று இடையிலுள்ள பல தலங்களையும், கண்டு, வணங்கி, கூவம் எனும் தலத்தையடைந்தார். அங்குள்ளோரின் விருப்பப்படி, 'திருக்கூவப் புராணம்' பாடி அரங்கேற்றினார்.

மீண்டும் ஞானாசிரியரை அடைந்து வணங்கி மேற்கூறிய நூல்களைத் திருக்கோயிலில் அரங்கேற்றி உடன் தங்கினார்.

அத்தகைய நாட்களில், ஒருநாள் மாலை அனுட்டானம் முடித்துத் தம் ஞானாசிரியரிடத்துத் தாம் ஏகாந்தமாயிருந்து 'சடுஸ்தல இலிங்கானுபவம்' முதலியவற்றை ஆராய்ந்து இன்புறும் நிலையில் இருந்தார். அச்சூழலில் தம் எதிர்தோன்றிய நிலவு உதயத்தைக் கண்டு,

'கடன் முரசமார்ப்பக் கதிர்க் கயிற்றாலேறி
யடைமதி விண்கழை நின்றாடக் - கொடைமருவு
மெங்கள் சிவஞான வேந்த லிறைத்தமாரி
தங்கியவே தாரகை கடாம்'

எனும் வெண்பாவை அருளிச்செய்தார்.

## பழமலையாரைப் பாடுதல்

பின்பு, ஞானாசிரியர் திருவுளப்படி விருத்தகிரி எனும் தலத்தையடைந்தார். அங்கு வீற்றிருந்தருளும் பழமலைநாதரையும், பெரியநாயகியையும் வணங்கி, அவ்விடத்துத் தம்பொருட்டு அமைத்த திருமடத்தில் தங்கினார். தமக்காக மடம் அமைத்தவரும், தம்மிடம் அன்பு பூண்டு வணங்கி நிற்பவருமான, 'சிதம்பரபூபதி' என்பவரைச் சிறப்பித்தார். இதனை,

'வெங்கைப் பழமணி யார்மீது கோவை வியந்துரைக்கு
மெங்கட் கினிய சிவஞான தேவ னிசைவுகொடு
திங்கட் பவனி யிருகான் முதுகுன்றர் சேர்மறுகின்
மங்குற் சிதம்பர பூபதி நல்கு மடமிதுவே'

எனும் கட்டளைக் கலித்துறையைப் பாடியருளினார். அத்திருமடத்தையடைந்து, பழமலையந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, கொச்சகக் கலிப்பா, பெரியநாயகியம்மை நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தம், பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை என்னும் சிற்றிலக்கியங்களைப் பாடியருளினார்.

## மாஞ்சோலைக் காவலனுக்கு நற்கதி

அத்தலத்தருகே ஒருநாள் மணிமுத்த ஆற்றில் நீராடினார். அதன் அருகே மாஞ்சோலை ஒன்று இருந்தது. அங்கு வந்து வீழ்ந்து கிடந்த மாங்கனியைச் சிவப்பிரகாசர் கண்டார். இது சிவபெருமானுக்கு நைவேத்தியப் பொருளாகும் என்று கையிலெடுத்தார். அது கண்ட சோலைக் காவலன் அடிகளின் மகிமையறியாது சுவாமிகளின் மடி பிடித்திழுத்து மன வருத்தம் அடையுமாறு செய்தான். சுவாமிகள் அவன் சிவநிந்தனைக்குரியவனாயிருப்பது கண்டு, அவனைத் தண்டித்துச் சுத்தனாக்கத் திருவுளம் கொண்டார். அதனை,

'அடுத்துவருந் தொண்டனுக்காக வந்தவனைத் தாளா
லடர்த்ததுவும் சத்தியமே யானால் - எடுத்ததொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்'

எனும் வெண்பாவைப் பாடி, உதய காலையில் உயிர் துறக்கும்படி செய்து நற்கதியில் அடைவித்தருளினார்.

## ஞானாசிரியர் சிவப்பேறடைதல்

இவ்வாறிருக்கும் நாளில், சிவஞான தேசிகர் தமக்கு ஐந்நூறு வயது நிறைவானதைக் கருத்தில் கொண்டார். உலகின்கண் இருத்தலில் உவர்ப்புத் தோன்றியது. பரிபக்குபவராகிய வேறொரு மாணாக்கருக்கு ஆச்சாரிய அபிடேகம் செய்தார். ஞான உபதேசமும் புரிந்தார். தமக்குப் பதிலாக அவரை நியமித்துத் தாம் சிவயோக சமாதியிற்கூடி இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினார்.

தம் குருநாதர் பரசிவத்தில் கலந்ததைச் சிவப்பிரகாசர் அறிந்து, பெரிதும் வருந்தினார். மனம் கலங்கினார். பொம்மபுரத்தை யடைந்து, ஆசிரியர் ஒடுங்கிய குகையுட் சென்றார். அடியற்ற மரம்போல விழுந்து பலமுறை வணங்கித் தொழுதார். 'கருணாமூர்த்தியே இக்கடையேனையும் விரைவில் திருவடியில் சேர்த்தருளுக' என்று வேண்டினார். தாமியற்றிய கலம்பகத்தையும், சந்நிதியில அரங்கேற்றினார். அக்குகையினுள் தம் ஞானாசிரியரைப் பாலனார் வடிவில் வழிபட்டு, மூன்றாம் பட்டத்துச் சுவாமிகளுடன் அங்குத் தங்கியிருந்தார்.

## தலவழிபாட்டிற்குப் புறப்படல்

ஒருநாள் தனிமையில் கடற்கரை அடைந்து மணற்பரப்பில் தாமெழுதிய நன்னெறி வெண்பா நாற்பதையும் எழுதிவரும்படி தம் தம்பிக்குக் கட்டளையிட்டார். கருணைப் பிரகாசரும் அப்பணிக்குச் சென்றார். அப்போது அங்கிருந்த ஞானாசிரியரிடம் விடைபெற்று, திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள்தோறும் தலப்பயணம் சென்று வந்தார்.

அந்நிலையில் வீரமாமுனிவர் எதிர்ப்பட்டு இயேசு மதமாகிய தம் கொள்கையை நிலைநாட்டுதற் பொருட்டுத் தருக்கம் செய்தார். சிவப்பிரகாசர் உடனே அக்கொள்கையை மறுத்து, 'ஏசுமத நிராகரணம்' என்ற பெயரில் நூலை அருளிச் செய்தார். பின்னர்த் தாம் சென்றுவந்த ஒவ்வொரு தலங்களையும், இரண்டிரண்டு வெண்பாக்களால் தோத்திரமாகச் செய்து முடித்தார். பின் நல்லாற்றூரை அடைந்து ஞானாசாரியரின் திருமடத்தில் வீற்றிருந்தார்.

இவரிடத்து விடைபெற்றுச் சென்ற கருணைப்பிரகாசர் இட்டலிங்க அகவல் பாடி முடித்து சீகாளத்தி புராணத்தைப் பாடத்

தொடங்கி 'சீகாளத்திச் சருக்கம்' வரை மட்டும் பாடி முடித்தார். திருவெங்கை மாநகரில் தமது பதினெட்டாம் வயதில் இறையருளில் கலந்தார். இதனையறிந்த சிவப்பிரகாசர் அவ்விடம் சென்று,

'முன்னமொரு தமிழ்ப்புலவன் தனையுண்டு கண்டசுவை
முதிர்ச்சியாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவர்ந்து
தடங்காளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர
மண்ணின்மீதே
யென்னுடன்வந் தவதரித்த இளங்கருணைப் பிரகாச
னென்னும் கோவே'

என்ற பாடலைப் பாடினார். பின் நல்லாற்றூரை அடைந்து திருமடத்தி லிருந்துகொண்டு, சிவநாம மகிமையும், இட்டலிங்கப் பெருமான்மீது அபிடேகமாலையும், நெடுங்கழி நெடிலும், குறுங்கழி நெடிலும், நிரஞ்சனமாலையும், கைத்தலமாலையும், சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கமும், நக்கீரச் சருக்கமும் செய்தருளினார். சிவானுபவச் செல்வராய் வாழ்ந்திருந்து பின் இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினார்.

இவர் வாழ்ந்த காலம் 32 ஆண்டுகள் என்பர். நாற்பது ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் ஆன்றோர்[1] கருதுவர்.

## சிவப்பிரகாசரின் நுண்மாண் நுழைபுலச் சிறப்பு

சிவப்பிரகாசர் என்னும் பெயரில் புலவர், ஞானியர், துறவியர் எனப் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்களுள் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த துறைமங்கலம் சிவப்பிரகாசர் நல்லாற்றூரில் சமாதி கொண்டதால் 'நல்லாற்றூர்ச் சிவப்பிரகாசர்' எனவும், தமிழுலகம் இவர்தம் புலமை நுட்பத்தைக் கருதி, 'கற்பனைக் களஞ்சியம்' எனவும் சிறப்பித்துக் கூறும். இவர்தம் கவிதைகள் கவிச்சுவை, பொருட்சுவை நிறைந்தவை. இலக்கிய அணிநலன்கள் மிக்கு விளங்கும். சொற்சுவை மிகுந்து காணப்படும். இவர் கவிதைகளின் நோக்கம் இறைவன் புகழ் பாடுவதே என்பதாகும். அதுவே இவரின் தலைசிறந்த கொள்கையாகவும் இருந்தது. மேலும், இவர் வீரசைவ பக்தி நெறியையும், சைவ சித்தாந்த

1. திரு. அடிகளாசிரியர், தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் ஆகியோர் இக்கருத்துடையோர்.

நெறிமுறைகளையும் இணைத்து இறைவனைப் பாடிப் பரவியதால் சைவ சமய உலகில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றவர். சிவப்பிரகாசர் சோதிட நூற் புலமையினை, விளக்கமாக அளித்துள்ளார். இதனை அவரது பிரபுலிங்க லீலை காப்பியத்தின் வழி அறியலாம்.. வடமொழி, தமிழ் மொழி இவற்றை ஒப்பிட்டுத் தமிழ் மொழியின் சிறப்பை எடுத்துக்காட்டித் தம்மை இனம் காட்டியவர். தமிழ் உணர்வுபூர்வமான, உயிரோட்டமான மொழி எனக் கண்டு உலகுக்கு உணர்த்தியவர். சிவப்பிரகாசர் இலக்கியங்கள் தமிழை வளப்படுத்தின. அவரது புலமை ஞானம் சமய உலகிற்கு வளர்ச்சியூட்டுவன.

சிவப்பிரகாசரின் தமிழும், அவர்தம் இலக்கியங்களும் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்று நிலைத்த புகழைப் பெற்றுள்ளன. அவர்தம் தமிழ்த் தொண்டால் தமிழ் வளமும் நலமும் பெற்ற சூழலை இன்றைய தலைமுறையினர் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

சிவப்பிரகாசர் துறவு வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்தவர். எனினும், உலகியலார்க்கு வேண்டிய இலக்கியத் தமிழைப் பல்வேறு வகையிலும் வாரி வழங்கியுள்ளார். வாழ்க்கையில் துறவு பூண்டாலும் மொழியைத் துறக்காத மாமுனிவராகத் திகழ்ந்தவர். முப்பத்து ஐந்து நூல்களைப் படைத்துத் தமிழ் மொழிக்கு வளம் சேர்த்தவர். அதன்வழி இந்நாட்டின் சமய கலாசாரத்திற்கு உரமூட்டியவர். அவ்வகையில் அவரின் வாக்குகளாகிய நூல்களின் சிறப்புக்களை அறிமுகம் என்ற வகையில் அடுத்துக் காணலாம்.



## 2. சிவப்பிரகாசர் அருளிய நூல்கள்

### சோணசைல மாலை

திருவண்ணாமலைக்குத் தல யாத்திரை மேற்கொண்ட சுவாமிகள் அம்மலையை வலம் வந்தார். அவ்வாறு வலம் வரும் போது அண்ணாமலையாரின் திருவருளை வேண்டிப் பாடிய நூல் இதுவாகும். நூறு பாடல்களைக் கொண்ட மாலையாகும். இதில் எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் யாப்பாக அமைந்துள்ளது.

பாடல்களின் பன்னிரண்டு அடியில் திருவண்ணாமலையின் பெருமைகளும், சிறப்புக்களும், இயற்கை வளங்களும் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளன. 'சோணசைலனை' முன்னிலையாக்கி இயற்கை வளங்களையும் மிகுந்த கற்பனையோடு வருணித்து விளித்துரைக்கின்றார்.

முன்னிரண்டு அடிகளில் தம் குறைகளைக் கூறித் தமக்கு அருள் செய்ய வேண்டும் என்று முறையிடுகிறார். ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் 'சோணசைலனே கைலை நாயகனே' என்ற தொடர் இடம்பெறுகின்றது.

இறைவன் கருணைமலை, திருவண்ணாமலை என இரு மலைகளை உடையவன் என்றும், திருவண்ணாமலையே கயிலை நாயகமாக உள்ளது எனக் காரண, காரியத் தொடர்பு கொண்டும் இம்மாலையில் விளக்கியுள்ளார். பதினைந்தாவது பாடலில் இவ்வியைபு வெளிப்பட்டு நிற்கிறது. அதாவது, சிவபெருமானுடைய திருவுருவில், சடை முடியில் தங்கிய பிறைச் சந்திரனும், ஆலகால விடத்தைத் தேக்கியிருக்கும் கண்டமும், எடுப்பான தோற்றமும் உடையவை. அவன் தன்னைச் சரணடைந்த பிறைத்திங்களை எடுத்துச் சூடியதும், பயந்த தேவர் துயர் நீங்க விடத்தை எடுத்து மடுத்ததும் 'பிரான்' என்பதை

நிலைநாட்டும் காரணங்கள். திருவண்ணாமலையைச் சிவமாகவே காணுகிறார். பெருமானுக்கு உள்ள அடையாளங்கள் அனைத்தும் அம்மலைக்கும் உள்ளன என்று நிறுவுகிறார். வானத்தில் உலா வரும் நிலவு மலை உச்சிக்கும் வருகிறது. மலைக்குகைகளில் இருள் தங்கியுள்ளது. இவற்றை உற்றுணர்ந்து சிவப்பிரகாசர் அம்மலை நிலவு சூடிய பெருந்தகையாகவும், கறைபொருந்திய கண்டனாகவும் இருப்பதை உணர்ந்து இம்மலையே கயிலை மலை எனப் பாடி, காரண, காரியத் தொடர்புடன் படைத்துள்ளார்.

'வரத்திரு முடியின் மதி திருமுடியின் வனைந்து கந்தரத்து
இருள்கந்
தரத்தினில் இருத்தி விளங்குறும் சோணசைலனே
கைலை நாயகனே'

என்பது அப்பாடல் வரிகளாகும்.

அருணை மலைமீது மழை பொழியும் காட்சியை, வருணபகவான் கடலாகிய குடத்தில், மேகமாகிய சொம்பினால் முகந்து விண் நீராட்டியது போல் விளங்கிற்று என்று மழை பொழியும் இயல்பான நிகழ்வினைத் தம் கற்பனைமூலம், ஏற்றிக் கூறுகிறார்.

'வண்புனல் வேந்தனார்கலிக் குடத்து
மணிமுகிற் கலயத்தின் முகந்து
தண்புனலாட்ட ஆடுறும் சோண
சைலனே கயிலை நாயகனே'

என்ற பாடலில் தற்குறிப்பேற்ற அணி அழகுடன் அமைந்து நயம்படத் திகழ்கிறது.

இறைவனைப் பரவுதலே தமது கொள்கை எனக் கொண்ட சிவப்பிரகாசரின் நோக்கிற்கு,

'அந்தரி குமரி அஞ்சலி கௌரி
யம்பிகை மனோன்மணி மதங்க
சுந்தரி யுமையுண் ணாமுலை யெனநின்
துணைவியை வாழ்த்துமா றருளாய்
வந்தரி குருதி மருங்கினிற் பாட
வயங்குதும் புருவுநா ரதனுத்
தந்திரி யிழை வாழ் பாடறுஞ் சோண
சைலனே கைலை நாயகனே'

என்ற பாடலைச் சான்றாகக் கூறலாம். மனம், மொழி, மெய்களால் வணங்கி இறைத்தொண்டில் ஈடுபட, பண்பாடு வந்து மனம் உருகத் தொடங்கும். இக்காலத்தில் கிரிவலம் வருவது மிகவும் புகழ்பெற்று விளங்குகிறது. முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே சிவப்பிரகாச சுவாமிகள் மலைவலம் வருவது பற்றி

'கருத்திடை நினது கருணை மாமேனி
கண்டு எழுத்தைந்தும் நா இயம்பச்
சிரத்தினில் அமைத்த கரத்தொடு நினையான்
தினம் வலம் புரியுமாறு அருளாய்'

எனப் பாடுகிறார்.

'சோணசைலம்' எனும் சொல்லுக்கு அருணகிரி, செம்மலை, செவ்வண்ணாமலை என்பது பொருள். இத்தலம் ஐம்பூதத் தலங்களுள் நெருப்புத் தலம் ஆகும். தேவார மூவரில் சம்பந்தர், அப்பர் இருவரின் பாடல் பெற்ற தலமாகவும், சுந்தரர் தேவார வைப்புத் தலமாகவும், மணிவாசகர் திருவெம்பாவை பாடிய தலமாகவும் விளங்கும் சிறப்பினது.

'உண்ணாமுலை உமையாளோடும் உடனாகிய ஒருவன்'

எனச் சம்பந்தரும்,

'ஆதியே அமரர் கோவே அணியணா மலையுளானே'

எனத் திருநாவுக்கரசரும்,

'விடங்களூர் திருவெண்ணி அண்ணாமலை'

எனச் சுந்தரரும் பாடியுள்ளனர்.

சிவபெருமானின் அறுபத்து நான்கு மூர்த்தங்களுள் லிங்கோற்பவ மூர்த்தராக அருணாசலர் விளங்குகிறார்.

''தில்லையைக் காண, காசியில் இறக்க, சிறக்கும்
ஆரூர்தனில் பிறக்க
எல்லையில் பெருமை அருணையே நினைக்க எய்தலாம்முத்தி''

என்பதிலுள்ள உண்மையை ஆய்ந்த சிவப்பிரகாச சுவாமிகள்,

"ஆரூரும் காசியும் சிற்றம்பலமும் நின்னகரை ஒக்குமோ''

எனத் திருவண்ணாமலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

திருவண்ணாமலைக்குப் பெருமை சேர்ப்பது 'கார்த்திகை விளக்கீடு' ஆகும். இதனைச் சிவப்பிரகாசர் பல இடங்களில் குறிப்பிடுகிறார். 'உலகிலுள்ள விளக்கு' தான் புகுந்த இடத்துப்

புறத்திருளை நீக்கும். கார்த்திகை விளக்கும், சோணசைலமும் அகத்திருள் நீக்கும் ஆற்றல் கொண்டவை. 'அகல், திரி, நெய், தீ, ஆக்குவோர் இன்றியே ஒளிரும் அண்ணாமலை, ஏற்றிடும் பிற விளக்கின் வேறுபட்டு, தன்பெயர் ஒருகால் சாற்றினும், அகத்தின் இருள் எல்லாம் ஒழிக்கும் விளக்கெனும் சோணசைலம்,' என்கிறார். 'உலக விளக்கு அண்ணாமலை', 'செந்தாமரை மலர் போல் (கார்த்திகை) விளக்கு எரியும் முடி எனக் கார்த்திகை தீபத் திருவிழா சுவாமிகளால் போற்றப்பட்டுள்ளது.

'அகக்கண்ணால் உமைக்காண அருள்வாய், அன்பர் பணி செய்யும் ஆவலும், பூசைபுரி நற்பணியும் எனக்கு அருள்வாய்', 'மதுரம் பெருகுறு தமிழ்ச் சொல் மலர் நினக்கணியும் பிறவியே வேண்டுவன்' எனவும், 'உடலினை உயிர் துறக்கும் சமயம் நும்மைத் தியானிக்க அருள்வீர்' எனவும் வேண்டுகிறார்.

சோணசைலனை வழிபடுவோர் இகபர சுகங்களைப் பெற வேண்டும் என்றும், அண்ணாமலையான் அடிக்கமலம் மறவாது போற்றுவார் பெறும் பேறுகளையும் அடுக்கிக் கூறி அண்ணாமலையானிடம் சிவப்பிரகாசர் ஆற்றுப்படுத்தியுள்ளார். அதனைக் கூறும் பாடலாக,

'நின்னையே நோக்கி விடாத கட்புலனும்
நின்னையே நினைக்கும் நெஞ்சகமும்
நின்னையே துதிக்கும் நாவும் என்றருளி
நின் திருவடியின் வைத்தருள்வாய்
தன்னை யேறினர்க்குச் சகமெலாம் காட்டும்
தரணியோ டிகலி மேவினர்க்கும்
தன்னையே காட்டு மலையெனும் சோண
சைலனே கைலை நாயகனே'

என்ற பாடல் அமைந்துள்ளது. இப்பாடலை நாள்தோறும் பாடி வழிபடும் பாடலாகவும் கொள்ளலாம். நினைக்க முத்தி தரும் தலமாகிய இத்தலத்தையும் இறைவனையும் வைத்துத் தமது முதற்படைப்பை நல்வாக்காக, அருள் வாக்காகக் கொடுத்துள்ளார் சிவப்பிரகாசர்.

## திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி

இந்நூல் சிவப்பிரகாசரின் இரண்டாவது படைப்பு. நிரோட்டகமும், யமகமும் இணைந்து பாடப்பட்டுள்ளது இந்த

அந்தாதி ஆகும். நிரோட்டகமாவது இதழ் முயற்சியால் பிறக்கும் மெய், உயிர், உயிர்மெய் எழுத்துகள் வராமல் பாடப்படுவது. யமகமாவது அடி முதல் எழுத்தோடு இரண்டெழுத்துக்கள் முதல் பத்தெழுத்துக்கள் வரை முதலடி போன்றே நான்கடிகளையும் பாடுவதாகும். இத்தகு இலக்கண வரம்பைக் கொண்டு திருச்செந்தூரில் உள்ள முருகனைப்பற்றிப் பாடியதால் 'திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி' என்ற பெயர் பெற்றது. மொத்தம் முப்பது பாக்களை உடைய இதழகல் அந்தாதியாகும்.

இந்நூலில் திருச்செந்தூரின் வளமும், சிவன், திருமால் பெருமைகளும், புராணக் கதைகளும், முருகப் பெருமானது தோற்றம், கருணை, வழிபாட்டின் பயன்கள் ஆகியவையும் விளக்கம் பெற்றுள்ளன.

'தினகரன் தந்த நனி இலங்கா நின்ற செய்ய நல்செந்தில் நகரன்' என்று செந்திலம்பதியின் சிறப்பும் முருகனின் புகழும் இடம் பெற்றுள்ளன.

முருகப் பெருமானின் சிறப்பினைக் கூறும் இந்நூலில் சிவபெருமானது சிறப்புக்களும் கூறப்பட்டுள்ளன. சுந்தரரின் முதலைவாய்ப்பிள்ளை மீட்டதையும் முப்புரங்களை அழித்ததையும் விளக்கியுள்ளார்.

திருமாலின் பெருமைகளும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. முருகனை வழிபடுவதால் ஏற்படும் பயன்களைக் குறிப்பிடுகின்றார். தாம் திருச்செந்தூர்த் தலத்தை அடைந்ததனால் முருகப் பெருமான் முத்தியளித்தருளினார், என்பதைச் சிவப்பிரகாசர்

'தளையின் நந்தி அங்கு இசையக்
கதியீந்தனன் என்ற னக்கே'

என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

திருச்செந்தில் வீற்றிருக்கும் முருகனை வணங்கினால் பிறவித் தளையை விட்டு நீங்கலாம் என்கிறார் சிவப்பிரகாசர். பல தெய்வங்களைப்பற்றிய வருணனைகள், பல்வேறு கதைக் குறிப்புக்கள், புராணக் கருத்துக்கள் முதலானவற்றையும் விளக்கமாகப் பாடியுள்ளார். மனித மனங்கள் அனைத்தும் ஏற்கும் அரிய அறிவுரைகளையும் இந்நூலின்வழி சிவப்பிரகாசர் விளக்கியுள்ளார்.

### திருவெங்கைக் கோவை

திருச்சி மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தைச் சேர்ந்த வெங்கனூரில் இருக்கும் இறைவன்மீது பாடப்பெற்ற கோவை

நூலாகும். 425 பாடல்களைக் கொண்ட அரிய கோவை நூல் இது. திருவெங்கனூரில் எழுந்தருளியுள்ள பழமலை நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நாயக - நாயகி பாவத்தில் பாடப்பட்ட நூலாகவும் அமைகிறது. அகப்பொருள் கூறுகளாகிய களவியல், கற்பியல் மற்றும் அவற்றிற்குரிய துறைகளையும் கொண்டு விளங்குகிறது.

தலைவனுக்கு ஓம்படை சாற்றும் பாடலில், ''பிறவா வடிவன் திருவெங்கை மேவும் பிரானொடு போய் உறவா ருயிருறவேயாக்கும் சக்தியையொப்ப வின்று குறவாணர் தங்கண் மடமாதை நின்னொடு கூட்டுமெனை மறவா திருமன் னாவிது வேநல் வரமெனக்கே'' என்ற பாடலில் இறைவன் ஆற்றற் சிறப்பு போற்றப்படுகிறது.

அகப்பொருள் உணர்வில்,

''மலர்விழி மாதே! என்றாயினும் காதலர் ஈங்கு
ஒருநாள் வருவர் என்றே நின்றது ஆவியுடலகத்தே''

என்ற பாடலில் தமது உணர்வினை வெளிப்படுத்துகிறார்.

திருக்குறட் கருத்துக்கள் அதிகப் பாடல்களில் வெளிப்படுத்தப்படுகின்றன.

'அனிச்சமும் அன்னத்தின் தூவியு மாதர் அடிமலர்க்குச்
சனித்த நெருஞ்சிப்பழ மென்றறிந் தகுவரன்றி
மனித்தர் வழங்கரும் வெங்கொடும் பாலை வழியொருநாள்
இனித்த மொழியுடை யாரை யெவ்வாறு கொண்டேகுவேனே'

என்ற பாடல் வழி, பொருள்நுட்பம் விளக்கப்படுகிறது. தலைவனொடு தலைவி இல்லற வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் அழகைக் காண விரும்பி வந்த செவிலித் தாயிடம் தோழி, ''திருவெங்கைப் பதியில் நமது ஆரணங்கின் இல்லறமானது மிக நன்று என்று உலகினர் புகழ்கின்றனர்'' என்பதைப்

'பல்லறம் ஆற்றியும் எல்லாம் ஒருங்குபடத் துறந்தோர்
நல்லறம் ஆற்றும் துணையாகவும் பெறு நன்மையினால்
அல்லற மாற்றுங் களத்தார் திருவெங்கை யாரணங்கின்
இல்லறம் ஆற்றவு நன்றெனு மால் இவ்விரு நிலமே'

என்ற பாடலில் அறியலாம்.

சிவப்பிரகாசரின் கவிதை நயம் திருவெங்கைக் கோவையின் ஒவ்வொரு பாடலிலும் விளங்குகிறது. பாங்கின்யத் தலைவன்

பழித்தல் என்னும் துறையில் தலைவியைக் காண விரும்பிய தலைவன், அதற்காகத் தோழியை வேண்டுகிறான். 'மேருமலையாகிய கல்லை வில்லாக வளைத்துப் பழக்கப்பட்டவன்; தில்லையம்பதியில் நடனமாடுகின்றவன்; அத்தகைய திருவெங்கைச் சிவனே நின் நெஞ்சக் கல்லை மாற்ற முடியும். வெறும் சொற்களைக் கொண்டு உன் மனத்தை நான் மாற்ற நினைப்பது, புல்லைக் கொண்டு கடலை நீந்தக் கருதுவது போன்றது' என்று தலைமகன் கூறுதலைக் குறிப்பிடலாம்.

சிவானுபவச் செல்வராகிய சிவப்பிரகாசர், 'இறைவன் திருமேனியும், அம்மையின் திருமேனியும் வேறன்று; அது போன்று உன் சாரல் வியன்பதியும், என் மாறாப்பழனம் உடைய ஊரும் ஒன்றி மருவுமே' என்று கூறியுள்ளார்.

இலக்கணத்தில் மொழிமாற்றுப் பொருள்கோள் என்பதும் ஒன்று. செய்யுட்களின் மொழிகளை மாற்றியமைத்துப் பொருள் கொள்ளும் முறை இதுவாகும். 'சுரையாழ அம்மி மிதப்ப, யானைக்கு நீத்து, முயலுக்கு நிலை' என்ற செய்யுளில் 'சுரை மிதப்ப அம்மியாழ, யானைக்கு நிலை, முயலுக்கு நீத்து' என்று சொற்களைப் பொருள் கொள்ளும் நிலைக்கு ஏற்ப மாற்றிப் பொருள் கொள்கிறோம். இம்முறையை, திருவெங்கைக் கோவையிலும் சிவப்பிரகாசர் எடுத்தாண்டுள்ளார்.

புணர்ந்து, பிரிந்து செல்லும் தலைவன், தலைவியைத் தேற்றுகிறான். 'எங்கள் திருவெங்கையில் எவரும் சொன்ன சொல் பிழையார் மொழிமாற்று எனும் பொருள்கோளில் மட்டுமே மொழியை மாற்றுவர். எனவே, 'வருவேன் என்ற சொல்லை மறந்தும் பிழையேன்' என்று கூறித் தலைவியைத் தலைவன் தேற்றுகிறான். 'நின்ற சொல்லர்' என்ற சங்க இலக்கியப் பாட்டும் இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

மகளிர் கற்பு நெறி நிற்றலால் மழை பொழியும் என்ற தமிழர் மரபுக்கேற்பத் தலைவியோடு கூடி மகிழும் தலைவன் 'திங்கள் மும்மாரி பொழிக' என்று கார்காலம் நோக்கிக் கூறுவதால் இக்கோவையின் இறுதிப்பாடல் அமைந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது.

### திருவெங்கைக் கலம்பகம்

திருவெங்கனூர் இறைவன்மீது பாடப்பெற்ற அழகிய கலம்பகம் ஆகும். இது கலம்பக உறுப்புகள் முழுவதும்

அமையப்பெற்ற நூலாகும். இறைவன் திருவடிக்கு இணையாகத் திருக்குறளைக் கற்பித்துப் பாடியிருக்கும் திறம் போற்றற்குரியதும், எந்த நூலிலும் காண முடியாததுமாகிய சிறப்புகளையுடையது. பெரிய புராணம் கூறும் அடியார்களின் அருமையையும் புகழ்ந்துள்ள முறையும் சிறப்புக்குரியது.

'வேண்டுவார் வேண்டியதே யீவா னென்னும்
வியன்திரு நாவுக்கரசின் மாற்றம் பொய்யோ
ஈண்டுவா வென்னைவலப் பாகந் தன்னி
லிருத்துகென நினைவேண்டி யொழியா மையல்
பூண்டுவார் விழிததும்ப புனலோ டொன்றும்
பொற்றொடிக்கும் திருவருள் செய்கின் றாயில்லை
நீண்டுவா னுலகளக்கும் பொழில் சூழ்வெங்கை
நிமலனே யெமையாளும் அமரர்கோவே'

என்ற பாடலில் திருநாவுக்கரசருக்கு இறைவன் திருவருள் திறம் புரிந்ததை விளக்கிக் கூறுகிறார்.

இறைவன் பெருமையை,

'நயன மிருண்டு போகாமுன் னடனப் பெருமான் தனைப் பாரார்
நடக்கும் பதங்கள் தளராமுன் னடவார் அமலன் திருக்கோயில்
பயனின் மொழிகள் குளறாமுன் பரமனடித் தாமரை துதியார்
பழுதில் செவிகள் செவிடாமுன் பரிந்து சிவன் மெய்ப் புகழ் கேளார்
செயலின் நெடுங்கை நடுங்காமுன் திருமாமகளும் கலைமகளும்
சொரியுந் திருவெங்கைக் கரசைச் செழுமென் மலர் கொண்டருச்சியார்
மயலின் அழுந்தி அயராமுன் மனத்தி லவனை யிருத்திடார்
மனித ருழன்று வாளா போய் மறியா நரகின் மறிவாரே'

என்ற பாடலின்வழி அப்பரின் அங்கமாலைத் திருப்பாடல்களைப் போல உடலுறுப்புகள் அதன் வலிமையிழந்து போகும் முன்பே இறைவனை நாட வேண்டும், அவ்வாறு செய்யாதவர் நரகில் சென்று உழல்வர் என்ற நெறிகளை அருமையாக விளக்கித் தம் உள்ளுணர்வு என்றும் இறைவனை நாடும் என்பதையும் காட்டியுள்ளார்.

இக்கலம்பகத்தின் செய்யுட்கள் சிறந்த ஒலிநயம் மிக்கவை. இதனை,

'விண்டபூ முடிவெங்கை புரத்தனைக்
கண்ட மாதர் பெறுவது காமமே'

எனும் பாடலடிகளால் அறியலாம்.

'வாழ்நாளை வீணாள் ஆக்காத அன்பர்க்கு அன்பனாகிய வெங்கை விமலனே! நான்முகனும் காணாது தேடிய, நின் திருமுடியில், கண்ணப்பன் தன் செருப்பணிந்த காலை வைத்த போது கொடிய நாகம் ஒதுங்கிற்றோ? வெண்பிறைக் கொழுந்து பொறுக்காது விலகிற்றோ? கங்கை வெறுத்து ஒதுங்கினளோ? கொன்றை மாலை அக்காலைப் பற்றி இழுத்ததோ? கூறுக' - என்னும் ஓர் உயரிய கற்பனையைச் சிவப்பிரகாசர் இக்கலம்பக நூலில் படைத்துள்ளார்.

குறள் வெண்பாவின் முதலடி நான்கு சீராயும், இரண்டாம் அடி முச்சீராயும் அமைவது யாப்பிலக்கணம். இதனை ஆடவரின் காலடியைவிடப் பெண்களின் காலடி அளவிற் சிறியது. உமையொரு பாகனான இறைவனின் திருவடி ஒன்று பெரியது. ஒன்று சிறியது. இவ்வமைப்பு, குறளைப்போல அமைந்துள்ளது என்று நயந்தோன்ற விளக்கியுள்ளார்.

### திருவெங்கையுலா

திருவெங்கனூர் இறைவனைச் சிறப்பித்துப் பாடும் வகையில் இந்நூலும் இடம் பெறுகிறது. இந்நூலுள் சிவப்பிரகாசர் தம்மையாதரித்த அண்ணாமலை ரெட்டியாரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். மணிமுத்த ஆற்றினைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டியுள்ளார். அவ்விடங்கள் இலக்கிய நயம் மிக்க பகுதிகளாகும். 419 கண்ணிகளால் இயற்றப்பட்டுள்ளது. உலா நூல் வரிசையில் சிறப்பிடம் பெறுதற்குரியது.

'திருமாலும் நான்முகனும் தேடும் பொருளைக்
கருமாமிடற்றெங் கரும்பைப் - பெருமானைத்
தெள்ளமுதைத் தெய்வ சிகாமணியைத் தன்னடியார்
உள்ளுயிரைத் தோன்றா உறுதுணையைக் - கள்ளவிழும்
கொன்றைப் பவளநெடுங் குன்றைப் பழமலையை
மன்றிற் குனிக்குமொரு மாமணியைச் - சென்றுற்
றுளத்துப் புணர்ந்துவிடாது ஓங்கின்ப முற்றாள்'

என்ற பாடலடிகளின் வழி இறைப் பேராற்றல், மெய்யன்பர்களுக்கு

எளிவந்த தன்மை முதலான சிறப்புக்கள் விளக்கம் பெற்றுள்ளன. இந்நூலிலும் தேவார மூவர் சிறப்பு புகழப் பெற்றுள்ளது. இதனை

'பந்தடித்துப்
பூவை விளையாடும் போதி லொருமூவர்
பாவை விழையும் பழமலையான் - கோவை
எழுதும் திருக்கரத்தான் எய்யாமல் வேதம்
முழுதும் புகழு முதல்வன்!'

என்ற பாடலடிகளால் ஒப்பற்ற ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என மூவரின் திருப்பாடல்களை விரும்பும் பழமலையான் என்ற இறைவனின் சிறப்புப் போற்றப்படுகிறது. மணிவாசகருக்குக் கோவையை எழுதிய திருக்கரத்தான் வேதமுதல்வனாம் இறைவன் என்பதும் தெளிவாக்கப்பட்டுள்ளது.

திருவெங்கைக் கோயிலின் அழகு பற்றியும், அதனைக் கட்டுவித்த அண்ணாமலை ரெட்டியார் பற்றியும் இவ்வுலாவில் சிவப்பிரகாசர் கூறியுள்ள பகுதிகள் தனிச் சிறப்புடையன. செய்யுள் இயற்றும் கவிஞர்கள் சொற்களைச் சந்தி பிழையாது பொருத்தமாக அமைப்பர். தம் கற்பனைத் திறத்தால் சிறந்த அணிகளைப் படைப்பர். அதுபோலக் கோயில் கட்டுவோரும் கற்களை அடுக்கி, இடைவெளி இல்லாதவாறு சந்தி அமைப்பர். அந்தக் கற்களைச் சீர்கெடாமல் அற்புதமாகச் செய்வர். திருவெங்கைக் கோயிலும் இத்தகையதே என்பதை,

'சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழற்புத அணித்தாய் - முந்தையோர்
செய்யுள் போற் செய்த திருக்கோயில்'

என்று சிவப்பிரகாசர் அழகாக விளக்கியுள்ளார். சிறந்த செய்யுள், சிறந்த கோயிலனையது என்று அவர் கொண்டிருந்த கவிதை இலக்கணம் இவ்வரிகளால் அறியப்படுகிறது.

அண்ணாமலை வள்ளல் இலிங்கா ரெட்டியாரின் குலமகன், 'இல்லை என்ற சொல் இல்லையாகும் வகையில் ஈயும் வள்ளல்'. பண்பும், அறமும் கொண்டவன். புலவர்களைக் கண்ணிமைபோல் காப்பவன். அவன் இல்லத்தில் அழகுக்குக் கதவு உண்டு. நாளும் விருந்தினர் வருவதால் அது அடைக்காத கதவாயிற்று. 'கரும்பு அயிலக் கூலி கொடுக்கும் குலத்தோன்றல்', அவர் 'வல்லகோல்' என்னும் பட்டம் பெற்றவர்' என்று இவ்வுலாவில் கூறியுள்ள பாடலடிகளால், சிவப்பிரகாசரின் நன்றியுணர்வு வெளிப்படுகிறது.

சிவப்பிரகாசர், இவ்வுலாவில் புதுமைகளைப் புகுத்தியுள்ளார். சிற்றில், புனலாட்டு, பந்தடித்தல், வீணையிசைத்தல் ஆகியவற்றை முறையே பேதை, பெதும்பை, அரிவை, தெரிவை நிகழ்ச்சிகளாக அமைத்துள்ளார். சிவன் புகழெனும் தேனைப் பருகுபவளாகப் பேரிளம் பெண்ணைப் படைத்துள்ளார்.

சிவன் உலா வந்ததைச் சொல் நயந்தோன்றப் புலப்படுத்துகிறார். 'சடைக்கண் நிலாவினான் வெங்கை நிலையினான் ஆதியுலாவினான் போந்தான் உலா' என்ற அடிகளின் வழித் தோற்றச் சிறப்பு, தலச்சிறப்பு, பாட்டுடைத் தலைவன் சிறப்பு என அழகிய சொற்களின் ஆட்சித் திறத்தால் சிவப்பிரகாசரின் வாக்குத் திறமை வெளிப்படுகிறது.

## திருவெங்கை அலங்காரம்

இந்நூல் வெங்கனூர் இறைவனைப் புகழ்ந்து போற்றும் சிற்றிலக்கியமாகும். ஆனால், இன்றுவரை இந்நூல் கிடைக்கவில்லை. தண்டபாணி சுவாமிகளின் 'தமிழ் அலங்காரம்' போன்று இத்தல அலங்காரம் புகழ் பெற்று விளங்கியிருத்தல் வேண்டும்.

## சிவப்பிரகாச விகாசம்

சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கமாக உணர்த்தும் நூலாக இடம் பெறுகிறது. 150 பாடல்களுக்கு மேலாகக் கொண்டுள்ள நூலாகும். பதிமரபு, பசுமரபு, பாசமரபு என முப்பொருள் உண்மைகளை விளக்கியுரைத்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

இந்நூலின் மூலத்தை மட்டும் 1939இல் திரு. அடிகாளசிரியர் வெளியிட்டார். மயிலம் மட வெளியீடாக வெளிவந்துள்ளது. இந்நூல்,

'படைத்திட லளித்திடல் பரிந்தொடுக்குதல்
தடுத்திட லருளுத லென்று தகுமுறை
அடுத்திட வினைசெயு மைந்தொழிற்பெயர்
விடுத்திடு மவற்றினை விரித்தி யம்புவாம்'

என, பதியியல் நுட்பம் விளக்கும் தன்மையை இப்பாடலால் அறியலாம். மேலும், பதியின் இயல்பை எடுத்துச் சொல்லுமிடத்து அறிஞருள்ளம் பொருத்தி உணரும் வகையில் கூறுவதாக,

'திருந்துகுரு வடிவாகி அருளின்நல்கும்
சிவபெருமா னென்றுலகந் தெளிந்து ரைக்கும்
மிகுந்தவுயி ரிலக்கணமிவ் வாறுகூறி
இலக்கியமாம் பசுவிடையிவ் விலக்கணங்கள்
பொருந்துமுறை யில்நனிசோ திக்குந் தன்மை
புகன்றுரைப்பன் அறிஞருளம் பொருந்து மாறே'

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. பசுவினியல்பு கூறும் பகுதியில் மாவிரதம், பாசுபதம், மீமாம்சம் முதலான சமயக் கருத்துக்களையும் விளக்கிக் காட்டியுள்ளார்.

பாசமரபுப் பகுதியில் ஆணவ மலத்தின் கூறுகளை ஆறு பாடல்களில் தெளிவாகக் கூறியுள்ளார். கன்ம மலம்பற்றிப் பதினேழு பாடல்களில் புலப்படுத்துகிறார். 'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே' என்றும், 'மந்திரம் அஞ்செழுத்து' என்றும், 'கற்றுணைப்பூட்டியோர் கடலில் பாய்ச்சினும் நற்றுணையாவது நமசிவாயவே' என்றும், 'நான்மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' என்றும், 'நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்' என்றும் அருளாளர்கள் சொன்னதற்கு இலக்கியமாகவும், திருமந்திர நெறிக்கேற்பவும் சிவப்பிரகாச சுவாமிகள்,

'மந்திரங்கள் அனைத்தினுக்கும் அஞ்செழுத்தே மூல மந்திரமாகும்'

என இந்நூலில் குறித்துள்ளார். நிறைமொழி மாந்தர் ஆணைகளாக உள்ள அருமைப்பாட்டைத் தமது இலக்கியப் படைப்பிலும் கூறியுள்ளார்.

இந்நூலில் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விரிவாகவும், விளக்கமாகவும் பாசமரபுப் பகுதியில் விளக்கியுள்ளார்.

சிவபெருமான் ஐந்தொழில் புரிகிறான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. இதனை,

'படைத்திடல் அளித்திடல் பரிந்து ஒடுக்குதல்
தடுத்திடல் அருளுதல் என்று சாற்றுவர்
அடுத்தஅவ் இறைசெயும் ஐந்தொழிற்பெயர்'

என்ற பாடலில் விரித்துக் கூறியுள்ளார். இதில் 'தடுத்திடல்' என்ற சொல் வடமொழியில் 'திரோதானம்' என்றும், தமிழில் 'மறைத்தல்' என்றும் வழங்கும். வினைப் பயன்களை உயிர்களுக்கு ஊட்டும் போது அவற்றின் அறிவினை மறைப்பதாகிய தொழிலைக் குறிக்கும் 'பரிந்து ஒடுக்குதல்' என்ற தொடர் உயிர்கள் இளைப்பாறுவதன்

பொருட்டு அவற்றை ஒடுக்குவதாகிய இறைவன் தொழிலைக் குறிக்கும். இத்தொழில்களின் முடிந்தபயன் எண்ணற்ற பிறவிகளின் வலைப்பட்டுத் தடுமாறும் உயிரை என்றும் மாறாத பேரின்ப வீட்டில் அமர்த்துவது ஆகும்.

ஒரு பொருள் தோன்றுவதற்கு மூன்று காரணங்கள் தேவை என்பர் மெய்யியலார். அவை முதற்காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் என்பன. ஒரு பானையை வனைவதற்கு முதற்காரணம் மண் - துணைக்காரணம் குயவன் - பயன்படுத்தும் சக்கரம், கோல் முதலிய கருவிகள். பானையை வனைந்தெடுக்கின்ற குயவனை நிமித்த காரணம் என்பர். சைவசித்தாந்தத்தில் இறைவன் ஒருவன் உளன் என்பதை நிறுவ,

'ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று
உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று
போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும்'

என்று சிவஞான சித்தியார் கூறுகிறது. இத்தகு கருத்துக்களைச் சிவப்பிரகாச விகாசமும் விளக்குகிறது. மலங்கள்பற்றிக் கூறும் சிவப்பிரகாசர், அவற்றை ஆணவம், கன்மம், வியந்தவம் மாயை எனப் பெயரிடுகிறார். சுத்த மாயைக்கு 'விந்து' என்ற பெயர் வழங்குவதால் 'வயிந்தவம்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

ஆணவம் பற்றிச் சிவப்பிரகாசர்,

'அறிவிலதாகி ஒன்றாய் அனாதி ஆணவந்தான் நின்ற
முறை எதுவாகும் என்னின் நெல் உமி தவிடுபோலப்
பிறவியின் ஏது வாகும்'

என்று கூறுகிறார். இருவினை எனப்படும் கன்மமலம் சஞ்சிதம், பிரார்த்தம், ஆகாமியம் என இவற்றின் வகைகளையும் விளக்குகிறார். இறுதியில் மாயாமலம் பற்றி வகைப்படுத்தி விளக்கம் தருகிறார். முப்பத்தாறு தத்துவங்களையும் பல பாடல்களில் இந்நூலில் தெளிவாக்கியுள்ளார்.

'பிரளய இயல்' என்ற தலைப்பிட்டுள்ள பகுதியில் ஒரே பாடல் கிடைத்துள்ளது. இப்பகுதியில் சிவப்பிரகாசர் கூற வந்த கருத்துக்களை முழுவதும் தெரிந்து கொள்ள இயலவில்லை. இதன் பகுதி மறைந்ததாகத் தமிழ்ப்புலவர் கூறுவர். இந்நூல் பதி, பசு, பாச இயல்புகளைச் சிவாகமத்தைத் தழுவி எடுத்துரைக்கிறது எனலாம்.

இந்நூல் முழுமையாகக் கிடைத்ததாகத் தெரியவில்லை. நூலுக்கு உரையும் இதுவரை யாரும் எழுதியதாகத் தெரியவில்லை. காப்புச் செய்யுள் உட்பட பதி மரபு கூறும் செய்யுட்கள் - 59, பசுமரபு கூறும் செய்யுட்கள் - 78, பாசமரபு கூறும் செய்யுட்கள் - 141, பிரளய இயல் -1 என்ற அமைப்பில் இந்நூல் விளங்குகிறது.

## தருக்க பரிபாஷை

தருக்கம் பயில்வோருக்குப் பாலபாடமாக அமையும் வண்ணம் உரைநடையில் செய்யப்பட்ட நூலாகும் இது.

'நியாயநூற் பிரவேசம் சுருங்கிய கேள்வியினால் அடைதலை
மடியனாயும் வாஞ்சிக்கின்ற பாலனெவன் அவனுக்கு
யுக்தியந்வித தர்க்க பரிபாஷையை யான் சுருக்கி விளக்குகின்றேன்'

எனத் தொடங்குகிறது இந்நூல்.

தருக்க பரிபாஷையை யான் சுருக்கி விளக்குகின்றேன் என்று முதலில் கூறி இந்நூலினைத் தொடங்குகிறார் சிவப்பிரகாசர். இது நியாயத்தினது முதற்சூத்திரம். இதன் பொருள் பிரமாணம் முதல் பதினாறு பொருளது. உண்மையறிவால் வீடடைதல் உளதாமென்பது என்று விளக்கியுள்ளார்.

அகராதியமைப்பில் பொருள் கூறிச் செல்லும் பாங்கு புலனாகிறது. சான்றாக, உத்தேசம் - என்பதற்குப் பெயர் மாத்திரையால் பொருளைச் சொல்வது. இலக்கணம் - சிறப்பியல்பு - பரிட்சை - இலக்கியத்திற்கு இலக்கணம் பொருந்துமோ பொருந்தாதோ என்று ஆராய்தல் பரீட்சை என்பது முதலான விளக்கம் இந்நூல் முழுதும் காணப்படுகிறது.

தருக்க நூல் ஆராய்ச்சியுடையவர்க்கே விளங்கும் வகையில் பொருள் கூறிச் செல்கிறார். பதினாறு பிரிவுகளுக்குள் நூற்று ஐம்பது விளக்கங்கள் தர்க்க பரிபாஷை விளக்கங்களாகப் பெறப்படுகின்றன.

நூல் விளக்கத்திற்காகச் சில சான்றுகளை மட்டும் இங்குக் காணலாம். இந்நூலில் மனத்தைப் பற்றி 'பிரமேயத்தில் அருத்தம்' என்ற தலைப்பில் மனம் என்ற உள்தலைப்பில் கூறுகிறார். 'மனத்துவ சாமாநியமுடையது மனம்' என்கிறார். பொதுவாக மனத்தை அணு என்று சொல்லுதல் தருக்க நூலாருடைய கருத்து. இக்கருத்தை எடுத்துக்கூறி அதனை மறுக்கவும் செய்கிறார் சிவப்பிரகாசர்.

பிரபுலிங்க லீலையில் மாயை உற்பத்தி கதியில் மாயைக்குத் தந்தையாகிய 'மமகாரன்' என்ற அரசன் தன் குழந்தைக்குப் பெயரிடும் சடங்கைச் செய்கிறான். இந்நிகழ்ச்சியைக் கூற வந்த சிவப்பிரகாசர்,

''காந்தம் வலியும் இரும்புபோல் கண்கள் தன்னொடு
உறப்பிணித்து
நேர்ந்த மனமோர் அணு வென்னல் நியாயம் அன்றென்று
அம்மனத்தில்
போந்த ஆசைப் பெருங்கடலைப் புகட்டு மகளைக்கண்டு உவந்து
வேந்தன் மாயையெனும் நாமம் விளம்பிச் சிறப்புப் பல செய்தார்''

என்ற பாடலில் பாடியுள்ளார்.

அரசன் தன் மன்னவியான மோகினியிடத்துப் பிறந்த பெண் குழந்தையை முதன்முதல் பார்க்கிறான். கண்டவுடன் அக்குழந்தையைக் காந்தம் இழுக்கும் இரும்பைப் போல் தன்னுடைய கையால் தூக்கிக் கண்ணோடு வைத்து அணைத்துக் கொண்டான். அக்குழந்தை ஆசையாகிய பெருங்கடலை அரசனுடைய மனத்திற்குள் புகட்டுவதாக இருந்தது.

இந்த நிகழ்ச்சியைச் சிவப்பிரகாசர் கூறும் நிலையில் மனத்தை தருக்க நூலால் அணுத்தன்மையுடையது என்று சொல்கிறார்களே, மனம் அணுவானால் ஆசையாகிய பெருங்கடலை அணு வடிவான மனத்திற்குள் எப்படிப் புகட்ட முடியும் - என்ற வினாவை எழுப்பி, 'ஆசைக் கடலைப் புகட்டுவதற்குரிய இடமான மனம் இருத்தலால் அம்மனம் அணுப்பரிமாணம் உடையதன்று' என்று கூறி மறுக்கின்றார்.

இனி, தருக்க நூலில் 'பிரமாணம்' என்ற தலைப்பில் அநுமானப் பிரமாணமும், அருத்தாபத்திப் பிரமாணமும் கூறப்பட்டுள்ளன. இதில் 'அநுமானப் பிரமாணம்' என்பது காரியத்தால் காரணத்தைத் துணிதல். புகை உண்மையால் நெருப்பாகிய காரணம் உண்டு என்று துணிதலாம்.

இது தன்பொருட்டு அனுமானம், பிறர்பொருட்டு அனுமானம் என இரண்டு வகைப்படும். காரியத்தால் காரணம் உண்டு என்று தான் துணிதல் அது தன்பொருட்டு அனுமானமாகும்.

அருத்தாபத்திப் பிரமாணமாவது ஒருவன் சொல்லுகின்ற பொருளாலோ (அல்லது) காணும் பொருளாலோ மற்றொரு பொருள் தோன்றுவது இப்பிரமாணமாகும்.

பிரபுலிங்க லீலையில் பிரபுதேவர் வந்த கதியில் பிரபுதேவரை மாயை கண்டு மயங்கிய செய்தியைக் கூறும் பாடலில் இந்த இரண்டு பிரமாணங்களையும் எடுத்தாள்கிறார்.

தருக்க நூலில் 'திரவியம்' என்ற தலைப்பில் நிலம் முதலான பூதங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் நெருப்பைக் கூறுமிடத்து அது வெள்ளை ரூபம் உடையது என்பர்.

இவ்வாறான தருக்க நூல் கருத்துக்களை இவ்வுரைநடை நூலிலும், தமது படைப்புக்களிலும் சிவப்பிரகாசர் விளக்கியுள்ளார்.

### நால்வர் நான்மணிமாலை

திருமுறையாளர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைப் புகழ்ந்தும், திருமுறைகளைப் போற்றியும் படைக்கப் பெற்ற அரிய நூலாகும். வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் என நால்வகைப் பாக்களில் 40 பாடல்கள் கொண்டது. அரும்பெரும் ஞானிகளின் அற்புதங்களையும் அருளிச் செயல்களையும் வியந்த போற்றும் நூலாகும்.

*1, 5, 9, 13, 17, 21, 25, 29, 33, 37* என எண்களையுடைய வெண்பாக்கள் பத்தும் திருஞான சம்பந்தரின் மாண்பைப் போற்றுவன.

*2, 6, 10, 14, 18, 22, 26, 30, 34, 38* என எண்களுடைய கலித்துறைப்பாக்கள் பத்தும் அப்பரின் பெருமைகளை உணர்த்துவன.

*3, 7, 11, 15, 19, 23, 27, 31, 35, 39* என எண்களைக் கொண்ட விருத்தப்பாக்கள் பத்தும் சுந்தரரின் பெருமைகளை இசைப்பன.

*4, 8, 12, 16, 20, 24, 28, 32, 36, 40* ஆகிய எண்களைக் கொண்ட அகவற்பாக்கள் வாதவூரரின் அன்பின் பெருக்கையும், திருவாசகத் தேனின் சிறப்பையும் சிறப்பிப்பன.

ஞானசம்பந்தரின் திருப்பாதமே சிவப்பேறு தருவன என உறுதி கூறுகிறார்.

அப்பர் சுவாமிகளின் அருட்பாக்கள் வீட்டுலகத்திற்கு வாயிலாக அமைவன என்பதை,

'வீட்டிற்கு வாயிலெனுந் தொடை சாத்து சொல் வேந்தே'

என, சிவப்பிரகாசர் மெய் சிலிர்த்துப் பேசுகிறார்.

பிறந்தால் திருநாவுக்கரசரைப் போல் பிறக்க வேண்டும் என்பதைக் கூறவந்த அடிகளார்,

'பெற்றால் நினைப் பெற்றவர் போற் பெறலும்'

என்ற அடிகளில் விளக்குவதை அறியலாம்.

'திருநாவுக்கரசு' எனும் ஒரு சொல்லையே உயிர்க் குறுதி பயக்கும் மந்திரமாக உச்சரித்து என்றும் இன்பமேயான முத்தியை எய்தினர் என அப்பூதியடிகளின் வரலாறு மூலமாகத் தாண்டக வேந்தரின் பெருமையை விளக்குகிறார்.

சிவபெருமான் சுந்தரரைத் தடுத்தாட் கொண்டது, சுந்தரருக்காகப் பரவை நாச்சியாரிடம் தூது சென்றது, இறைவன் மனைகள்தோறும் சென்று இரந்து சுந்தரருக்குச் சோறு இட்டது முதலான அருட்செயல்களைச் சொல்லித் தாமும் மகிழ்ந்து படிப்பவரையும் மகிழ்விக்கிறார் சிவப்பிரகாசர்.

''பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய மனிதன்''

''மாணிக்கவாசகன் எனுமொரு மாமழை''

''தெய்வ சிகாமணி பாதம் போற்றும் வாதவூரன்ப''

என மாணிக்கவாசகரைப் பக்திச் சுவை ததும்பப் பாராட்டுகிறார். நூற்றுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகளுள் மாலை இலக்கிய வகையும் ஒன்றாகும். மாலை என்ற சொல், தொடுத்த பூந்தொடை மாதரணிவடம், பிரபந்தவகை, வரிசை முதலான பல பொருண்மைகளைக் குறிக்கும் என்பர் அறிஞர். பாட்டியல் நூல்கள், பொருள், யாப்பு, அமைப்பு, எண்ணிக்கை முதலான அடிப்படையில் அமைந்த மாலை பலவற்றைத் தருகின்றன.

புறத்திணை அடிப்படையில் வெட்சிமாலை, கரந்தைமாலை, வஞ்சிமாலை முதலான மாலைகளை இலக்கண நூல் வழியாக அறியலாம். பலவகை யாப்பு விரவிவரும் நிலையில் இணை மணிமாலை, இரட்டை மணிமாலை, மும்மணிமாலை, நான்மணிமாலை முதலான மாலை நூல்களை அறியலாம். பல கந்தமாலை, கலம்பகமாலை, வருக்கமாலை முதலான ஒரு குறிப்பிட்ட அமைப்புக் காரணமாகத் தனிவகையில் அமைந்து உள்ளன. எண்ணால் பெயர் பெறும் மாலைகளுள் குறிப்பாக நான்மணிமாலை அமைகிறது.

சிவப்பிரகாசரின் நான்மணிமாலை அவர்தம் நுண்மாணுழைபுலத்திற்குச் சான்றான மற்றொரு நூலாகும். புதிய

சிந்தனையில் சில வினாக்களை எழுப்பி விடை காண முயல்கிறார். அதனால் புதிய விளக்கமும், இறைப் பேராற்றலும் புலப்படுகின்றன.

சிவஞானசம்பந்தர் வரலாற்றில் ஞானப்பால் உண்ட செய்தி, படிக்காசு பெற்ற வரலாறு, திருமறைக்காட்டில் கதவம் திறந்த வரலாறு முதலியன சிறந்த விளக்கங்களைப் பெறுகின்றன. அதற்கும் மேலாகச் சிவப்பிரகாசரின் சிந்தையில் ஞானசம்பந்தரின் திருப்பாடல்கள் ''எம் செவியமுது, எம் தந்தையினும் தாய்க்கு மகிழ்வூட்டுவது'' எனப் போற்றியுள்ளார். ஞானசம்பந்தன் திருவடிகள் பிறப்பறுக்கும் வண்மைநலம், கல்வி ஞானங்கள் எல்லாம் தரும் என்று அவற்றின் உயர்ந்த பயனையும் பட்டியலிடுகிறார்.

திருநாவுக்கரசரின் திருப்பாடல்கள் 'வீட்டிற்கு வாயில் எனும் தொடை' என்கிறார். திருத்தாண்டகம் நோயிலியாகிய சொல். இறைவனை மகிழ்விப்பது ''நாவுக்கர செனுமோர் சொல் தான் எழுதியும் கூறியுமே என்றும் துன்பில் பதம் பெற்றான் ஒருநம்பி'' என்று அப்பூதியடிகளின் வரலாற்றையும் உணர்த்துகிறார்.

சுந்தரரின திருப்பாட்டை மதிப்பிடும் சிவப்பிரகாசர் ''படியில்லாத பாட்டு பாவாய்ப் பொழிந்த வானமுதம்'' என்றும் கூறுகிறார். ''துறந்த முனிவர் தொழும் பரவை'' என்று சுந்தரரின் மனைவியைப் புகழ்ந்து பேசுகிறார்.

மணிவாசகரையும், திருவாசகத்தையும், உருகி உருகிப் போற்றி இருப்பதையும் உணர முடிகிறது. 'வாசகத்தேன்' என்றும் 'புனிதன் மொழிந்த வாசகமே வாசகம்' என்றும் ''மதுரவாசகம்'' என்றும் திருவாசகத்தின் சிறப்பை விளக்குகிறார் சிவப்பிரகாசர். 'மணிவாசகரை மனத்தகத்தே கட்ட வல்லவர்க்கு இறைவன் தானே விரும்பி முத்தி தருவன்' எனப் பெருமையோடு பேசுகிறார்.

'ஆதிசீர்பாவும் வாதவூர் அண்ணல்...
திருவாசகம் இங்கு ஒரு கால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துக் கண்கள்
தொடு மணற் கேணியில் சுரந்து நீர் பாய
...
அன்பராகு நன்றி
மன்பதையுலகின் மற்றையரிலரே'

எனத் திருவாசகத்தின் சிறப்புப் பற்றி எடுத்துரைக்கிறார். ''பாட்டு என்றால் அது உன்பாட்டு'' என்று கூறி அதற்குக் காரணம் மாணிக்கவாசகர் கூற, இறைவனே எழுதினான் என்கிறார்.

பிற நான்மணிமாலைக்கும், நால்வர் நான்மணிமாலைக்கும் உள்ள வேறுபாடு இங்குக் குறிப்பிடத்தக்கது. பிற நான்மணிமாலைகள் இறைவன் இயல்பு, திருக்கோயில் இடம் பெறும் ஊர்ச்சிறப்பு, அடியவர்க்கு இறைவன் அருள்புரிந்த சிறப்பு ஆகியவற்றைக் கூறுகின்றன. மேலும் இறைவனிடம் வேண்டுதல்களும், உயிர்கட்கு இறைவழிபாடு தேவை என்பதையும் கூறுகின்றன. சிவப்பிரகாசரின் இந்நூல் சமயக்குரவர் நால்வரைப் பற்றியும், அவர்களின் பேராற்றல், செயல்கள், தேவார, திருவாசகங்களின் சிறப்பு, இறைவன் அவர்களை ஆட்கொண்டு அருளிய திறம் ஆகியவற்றைக் கூறுகிறது. பிற நான்மணிமாலைகள் ஆண்டவனைப் பற்றிக் கூற, நால்வர் நான்மணிமாலை அடியார்களின் பெருமையைக் கூறுகிறது.

இவரின் இந்நூலைப் பின்பற்றி, திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை, 'சந்தானகுரவர் நான்மணிமாலை' என்ற நூலையும் இயற்றியுள்ளார். இது, சிவப்பிரகாசரின் தாக்கத்தால் கிடைத்த பெருமையாகக் கூறலாம்.

'பூவால்' என்று முதற்செய்யுளில் தொடங்கும் இச்சிற்றிலக்கியம் 'பூவே' என்ற சொல்லை நாற்பதாவது செய்யுளின் ஈற்றில் கொண்டு முடிகிறது. இதுவும் குறிப்பிடத்தக்க சிறப்பாகும். சமயக்குரவர்களாகிய நால்வர்களது பெருமையைப் போற்றிய முதல் நூல் இது.

### சதமணி மாலை

நூறு பாடல்களையுடைய நூல். தத்துவ நூலாகவும் விளங்குகிறது. ஆகமப் பொருளை விளக்கும் சாத்திர நூல். மனம் ஒருங்கிய அறிஞர் கேட்கும்வகையில் ஞான தீக்கைகளின் நுட்பங்களைக் கூறுவதாக அமைவதைப் பாயிரப் பாடல் இந்நூலின் தொடக்கத்தில் அறிமுகம் செய்கிறது. வடமொழியில் சைவ சித்தாந்த ஆகம சூத்திரங்கள் உள்ளன. அவற்றின் மொழிபெயர்ப்புப் போல ஆகம சித்தாந்தக் கருத்துகளைக் கூறுவது இந்நூல். இந்நூலைச் சிவப்பிரகாசர் சிதம்பரத்தில் இருக்கும்போது பாடியுள்ளார். ஞானம் இருவகைப்படும். அவை பரஞானம், அபர ஞானம் என்பவை எனக் குறிப்பிடுவர்.

இறைவனின் ஐந்தொழில் பற்றிப் பல இடங்களிலும் தம் நூல்களில் விளக்கும் சிவப்பிரகாசர் இந்நூலிலும்,

'படைப்பதும் உலகமெல்லாம் பாதுகாத் தளித்தலும் பின்
துடைப்பது மறைத்தல் தானும் தொல்லைய மலங்கள் யாப்பு
விடுப்பது மாகும் இவ்வைம் பயன்படு வினைகளெல்லாம்
தடுப்பில னாம் ஒருத்தன் தன் பெருந்தொழிலென் றோர்வாய்'

என ஐந்தொழில் சிறப்பையும் இறைவனின் உயர்வையும் பேசுகிறார்.

இறையுண்மைத் தத்துவம் கூறுவதால் இந்நூலினைப் படிப்போர் அடையும் பயன் 'ஞானச்சுடராகிய இறைவனைக் காண்பது உறுதி' எனக் குறிப்பிடுகிறார். இதனை,

'சாற்று மேன்மைச் சதமணி மாலையைப்
போற்றி யோதிப் பொருள் தெரிகிற்பவர்
மாற்றி மூல மலத்தை யெப் போதினும்
தேற்று ஞானச் சுடரினைக் காண்பரே'

என நூற்பயனைப் புலப்படுத்தியுள்ளார் சிவப்பிரகாசர்.

மேலும் ''பரம நூல்கள் பலவினும் தேர்ந்து தேர்ந்து அருமை ஞானம் அறியத் திரட்டிய பெருமை நூலின் பெரும் பொருள்'' என நூல்நுவல் பொருளின் நுட்பத்தையும், தமது அறிவாராய்ச்சியின் பயனான பெருமைமிகு நூல் 'சதமணி மாலை' என்பதையும் விளக்கியுள்ளார்.

சைவ சித்தாந்தத்தின் சந்தான ஆசாரியர்களுள் ஒருவர் உமாபதி சிவாச்சாரியார். இவர் பத்துச் சிவ ஆகமங்களில் உள்ள ஞானபாதச் செய்திகளைத் தொகுத்து, 'சாதன சங்கிரகம்' எனத் தொகைநூல் ஒன்றைப் படைத்துள்ளார். இது வடமொழி நூலாகும். இதனைச் 'சதமணிமாலை' எனச் சிவப்பிரகாசர் மொழிபெயர்த்துள்ளார்.

### ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடு தூது

பாட்டுடைத் தலைவனிடத்துத் தூது அனுப்புவதாகக் கலிவெண்பாவால் பாடப்படுவது தூது எனப்படும். அவ்வகையில் சிவப்பிரகாச சுவாமிகள் தம் ஞானாசிரியர்மீது தம் உள்ளத்தைத் தூதாகச் செலுத்தும்வகையில் 'சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடு தூது' எனும் நூலை யாத்துள்ளார். இது காப்பு வெண்பா ஒன்றுடன் 255 கண்ணிகளைத் கொண்டது. கலிவெண்பாவில் இயற்றப்பட்டுள்ளது. சிவப்பிரகாசருக்கு ஞானகுருவாக வாய்க்கப்

பெற்றவர் இரண்டாம் பட்டத்துச் சிவஞான பாலய தேசிகர் ஆவர். இவர் சிவப்பிரகாசரின் ஐந்து நூல்களுக்கும் பாட்டுடைத் தலைவராகும் பெருஞ்சிறப்பைப் பெற்றவர். அவற்றுள் ஒன்று சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடு தூது ஆகும்.

சிவப்பிரகாசர் தம் நெஞ்சைச் சிவஞான பாலய தேசிகரிடம் தூதுவிடுவதாக அமைகிறது. தம்மைத் தலைவியாகவும், தம் ஞானாசிரியரைத் தலைவனாகவும் கொண்டு இயற்றப்பெற்ற சிறப்புடையது.

சிவஞானி உலா வரும்போது, உலாக் கண்ட மகளிருள் ஒருத்தி அவரைப் பெற விரும்பி நெஞ்சை விளித்துச் சிவஞானியிடம் தூது சென்று தன் நிலை கூறி, 'மாலை வாங்கி வா!' எனக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூற் செய்திகளை மூன்று வகையாகப் பாகுபடுத்தலாம். முதற்பகுதி சிவஞானியின் சிறப்புகளைக் கூறுகிறது. இரண்டாம் பகுதி தூதுப் பொருளாக அமைந்த நெஞ்சின் சிறப்புக்களைக் கூறுகிறது. இறுதிப் பகுதி தூதுச் செய்தி.

சிவப்பிரகாசர் தம் ஞானகுருவான சிவஞானியின் சிறப்புக்களை நூலின் தொடக்கத்திலேயே சிறப்பித்துள்ளார். சிவபெருமானே சிவஞானியாக வந்துள்ளார் என்னும் நம்பிக்கை நூல் முழுவதும் வெளிப்படுத்தப்பெறுகிறது. சிவஞானியின் சிறப்பை, விடம் கலவாத அமுதம் சிவஞானி என்றும், 'என்னைத் தானாக்குபவன்' என்றும், 'தன்னையே எனக்கு அருள்பவன்' என்றும், 'மனித வடிவம் கொண்டு வந்த நம்பன்' என்றும் போற்றுகிறார்.

சிவஞானியின் தோற்றப் பொலிவு கண்ட சிவப்பிரகாசர் 'கயிலை மீதிருந்த காட்சி போல் வந்து மயிலை மலை மீதிருக்கும் வள்ளல்' என்று சிறப்பிக்கிறார். மேலும் சிவஞானி பொருந்தி வாழும் ஊரைச் சிறப்பிக்கின்ற வகையில் 'பொம்மபுரம் எனும் புகழ்ப்பதி' என்று புகழ்ந்து போற்றுகிறார். சான்றோர்க்குத் தோன்றாத் துணையாகவும், தோன்றும் துணையாகவும் அருள்பாலிப்பவர் சிவஞானி என்கிறார். அறு சமயங்கட்கும் அப்பாற்பட்டவராகிய தம் ஞானாசிரியர் கரும்பினைப் போல் அடியார்களுக்கு அருள்பவர் எனக் கூறுகிறார்.

சிவபெருமானாக இருந்த நிலை சிவஞானியுடன் ஒப்பிட்டுப் பேசப்பட்டுள்ளது. சிவபரம்பொருளின் அருளிச்செயல்கள் சிலவற்றை விளக்கியுள்ளார். உலாவரும் சிவஞானி அவரது

பக்கங்களில் பல்வேறு அடியார்கள் சூழ்ந்துவர, பல்லியங்கள் ஒலிக்க, தேவர்கள் புகழ உலா வருவதாகக் குறிப்பிட்டுள்ளார். பாட்டுடைத் தலைவனின் பெருமைகளை இறைவனுக்குரிய பெருமைகளோடு ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். 'தமது பெயரைச் சொன்னாலே தவஞானமில்லாதார்க்கும் வீடுபேறு அளிக்கும் சிவஞானதேவன்' எனக் குறிப்பிடுகிறார்.

உலா வரும் சிவஞானியைச் சூழ்ந்து வரும் அடியவர்களின் இயல்புகளும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. சிவன் திருவடிக்கு மெய்யன்பு கொண்டு பூசனை செய்வார், திரும்பவும் பிறப்பில்லா வகை எது என எண்ணிப்பார்ப்பார், வேத சிவாகமங்களை ஆராய்வார், அன்பால் துதி செய்பவர் எனப் பல திறத்து அடியவரின் நிலைகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. அடியவர்களின் புகழ் மொழிகள் விண்ணில் புக உலா வரும் சிவஞானியை 'மாசு அகன்று அம்மண்ணில் புகும் மாமதி' என்று கருதிப் பல்லியங்கள் ஆரவாரம் செய்தன எனச் சிவஞானியின் சிறப்புக்கள் போற்றப்பெறுகின்றன.

உலா வரும் சிவஞானியைப் பலரும் எதிர்கொண்ட செய்தியைச் சிவப்பிரகாசர் விரிவாகப் பாடுகிறார். திருநீற்றினைத் தம் மேனியில் தரித்து வந்துள்ள காட்சியைப் போற்றுகிறார். ஓங்கார நாதமுறும் பொருள், நாயகன் வேதமணிமுடியான், வித்தகன், பதமருள் நாயகன், மயிலை மலைத்தேன், கருணாலயன் என்னும். அடைச்சொற்களாலும் சிவஞானியின் சிறப்புக்கள் புகழ்ந்துரைக்கப் பெற்றுள்ளன.

சிவஞானி முத்திபாதத்தில் என்றும் அழியா இன்பம் அருள்பவர் என்றும், உயர்ந்தோர் பழித்துரையா ஒழுக்க சீலர் என்றும், உலகம் கடந்த ஞானோதயர் என்றும், புலன்களைத் தன்வயமாக்கிக் கொள்ளும் உணர்வாகிய படையையுடையவர் என்றும் 'வந்தியர் துதி' எனும் பகுதியால் அறியலாம். 'என்று, திரை வேலையுல கெல்லாம் வியக்கும்' சிவஞானியாகக் காட்சிப்படுத்துகிறார்.

இத்தகு பெருங்குண இயல்புகளைக் கொண்ட சிவஞானியிடத்துத் தம் நெஞ்சைத் தூது விடுக்கும் சிவப்பிரகாச சுவாமிகளின் ஞான அனுபவங்களையும், இறைஞானக் காட்சிகளையும் விரிவாக இந்நூல் வழி உணர்த்தியுள்ளார்.

மயிலம் பொம்மபுர ஆதீனத்தின் குருமுதல்வராகிய சிவஞான பாலய சுவாமிகள்மீது பேரூராதீனத்தின் ஆதிகுருமுதல்வர் சாந்தலிங்க சுவாமிகளின் வேண்டுகோளுக்காகப் பாடப்பட்டதாக

இதன் வரலாறு கூறுவர். இந்நூலுள் தசாங்கமும், புறச்சமயக் கண்டனமும் மிகத் தெளிவாகவும் சுவையாகவும் சொல்லப்பட்டுள்ளன. தூது நூல்களில் இது சிறப்பிடம் பெற்ற நூலாகக் கருதப்படுகிறது.

பாட்டுடைத் தலைவனையே இறைவனாகக் காட்டும் நிலையை நூல் முழுவதும் காணலாம்.

'பத்திக் கடலுட் படிந்த அடியார்க்குத்
தித்திக்குங் கோதிலாத் தேறலே - முத்திக்குச்
சாதியாய் அன்று உரிமை சாதனத்தால் - என்றுண்மை
போதியா நல்குமொரு பொன்மலையே - நீதியால்
வீடும் பொருளும் வெறுத்துமுத்தி வேண்டுவார்
தேடுஞ் சிவஞான தேசிகனே'

என்ற பாடலடிகளைச் சான்றாகக் கூறலாம்.

இது, தம் ஞானாசிரியரைப் பற்றிய நூல். ஆதலால், காமச்சுவை கலவாமல் ஞான நூலாகப் பாடியிருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

இந்நூலுள் பாடப்படும் நெஞ்சின் பெருமை தனிச்சிறப்புடையது. அடியார் வாழ்விலும், பெரியபுராணத்திலும் ஈடுபாடுடைய சிவப்பிரகாசர் - சுந்தரர், அப்பர், சம்பந்தர், திருநீலகண்டர், இயற்பகையார், சிறுத்தொண்டர், இளையான்குடிமாறர், மானக்கஞ்சாறர், ஏனாதிநாதர், மெய்ப்பொருள் நாயனார், எறிபத்தர், விறன்மிண்டர், நீலநக்கர், குங்கிலியக்கலயர், மூர்க்கநாயனார், அமர்நீதியார், கலிக்கம்பர், கண்ணப்பர், அதிபத்தர், சேரமான்பெருமாள், திருக்குறிப்புத் தொண்டர், கோட்புலியார் ஆகியோரின் ஆற்றல்மிகு செயல்கள் எல்லாம் நெஞ்சின் இசைவால் அமைந்தனவே! 'நெஞ்சே! நின் பெருமை யார் அறிவார்? நீ என்னோடு கூடினால், என் பெருமையும் மிகும்' என்று நெஞ்சின் பெருமையைக் கூறுகிறார்.

இந்நூலில் அடுக்கடுக்காக வரும் சொற்றொடர்கள் நெஞ்சைக் கனிவிக்கும் தன்மையன. சான்றாக,

'பாரானோ என்னும் பரமஞானி
வாரானோ என்னும் வழி பார்க்கும்'

என்ற பாடலடிகளைக் குறிப்பிடலாம்.

## சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு

இந்நூலும் தம் குருநாதர் மீது பாடப்பட்ட தாலாட்டு வகையைச் சார்ந்த சிற்றிலக்கியமாகும். வீரசைவ சித்தாந்தங்களை மிகத்

தெளிவாக விளக்குகின்ற நூல்களுள் சிறப்பு நூலாகக் குறிப்பிடலாம். சிவப்பிரகாச சுவாமிகளுக்குக் குருவாக விளங்கியவர் சிவஞான பாலய சுவாமிகள். இவர் சிவஞான நெறியை அறிய விரும்புவோர்க்கு உண்டி, உறையுள் கொடுத்து, ஞான நெறிக்கு வழிகாட்டியவர். சிவப்பிரகாசருக்குத் தம் குருவின் இறைப்பணியும், தவப்பணியும், அறப்பணியும் வியப்பைத் தருவனவாக அமைந்தன. எனவே, குருவின் இயல்பைப் புகழ்ந்து சிற்றிலக்கியங்களைப் படைத்தார்.

தமிழ் இலக்கியத்தில் குருவைப் பிள்ளைத்தமிழுக்குரிய பாட்டுடைத் தலைவனாக ஆக்கியோரில் சிவப்பிரகாசர் குறிப்பிடத்தக்கவர். இவ்விலக்கியத்துடன் பிள்ளைத்தமிழில் தாலப்பருவத்தையும் குருவிற்குத் தாலாட்டாகப் பாடியுள்ளார். பாட்டுடைத் தலைவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாடுதல் போன்றே இவரது தாலாட்டுப்பாடல், குருவை ஈசன் வடிவினன் எனவும், ஈசனே குருவாய் வந்தனன் எனவும் குறிப்பிட்டுள்ளது. சிவப்பிரகாச சுவாமிகளுக்குத் தம் குரு ஈசன் வடிவினராகத் தோன்றியுள்ளார்.

இதனை,

''உருத்திரனே ஐயமிலை ஓர் உருத்திராக்கந்
தரித்தவ னென்றெமக்குச் சாற்றும் பெருமானோ''

என்று தம் குருவை உருத்திரன் என்று நினைத்துப் பாடியமையைக் காணலாம். 'குருவே சிவமெனக் கூறினன்' என்று திருமந்திரமும், 'தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த' என்று சிவஞான போதமும் குறிப்பிடுவதையும் இங்குக் கூறலாம்.

சிவப்பிரகாசரின் இத்தாலாட்டு நூறு தாழிசைகளால் இயன்றது. தத்துவஞானப் பொருளை உட்பொருளாகக் கொண்டு விளங்குகிறது. குருவைப் பற்றிய உயர் எண்ணங்கள், குரு தமக்குப் போதித்த கருத்துக்கள், குருவின் புகழ் ஆகியவை இங்குத் தாலாட்டாக உருப்பெற்றுள்ளன. இந்நூலின் குரு - சீடன் என்ற உறவுமுறையே அதிகம் இடம் பெற்றுள்ளது. மேலும், தாலாட்டு நூல்களில் உள்ள தாய், குழந்தையை உறங்கச் செய்வதான பொருளில் அமையவில்லை. இதுவே இந்நூலின் தனித்தன்மையாகிறது. மாறாக, தமக்குக் கிடைத்த குழந்தை தமக்கு இவற்றையெல்லாம் போதிக்க வந்த சிவஞான தேசிகனோ! அருட்கடலோ! நாயகனோ! சிவஞானியோ! பெருமானோ, முதலான சொற்களால் அமைகிறது. நூல் முழுவதும் தம் குருவின் சிறப்பு,

குணச்சிறப்பு, தம்மை நன்னெறிப்படுத்திய பாங்கு, தனக்குக் கொடுத்த அருட்கொடை முதலியன பாடப்பட்டுள்ளன. முடிவாகத் தவஞானியிடம் தவசீடர் எவ்வெவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற கருத்துக்களே அதிகமாக இடம் பெற்றுள்ளன.

ஒரு தாய் தன் குழந்தையை வருணிப்பதுபோல ஒரே ஒரு தாழிசை அமைந்துள்ளது. இதனை,

'ஊனோ, உயிரோ, உயிர்க்குயிரோ, ஆனந்தத்
தேனோ, அமுதோ, சிவஞான தேசிகனோ'

என்ற அடிகள் காட்டுகின்றன. தாயன்பு இவ்வடிகளில் காணப்படுகிறது. இத்தாலாட்டு நூல், சிவப்பிரகாசர் தாமே தாயாக மாறிவிடுவது போன்று அமைந்துள்ளது. இத்தாலாட்டு இலக்கியத்திற்கு, 'தவஞானத் தாலாட்டு எனும் தமிழ்' எனச் சுவாமிகள் பெயரிட்டுள்ளார்.

''தன்னை அருளாள னென்னும் தன்மையுலகறிய
என்னை யடியாரோ டெழுந்தருளிக் காத்தானோ''

என்று தம்மை அடியார் கூட்டத்தில் சேர்த்துத் தம் அருட் தன்மையைக் காட்டிய குருபக்தியை வியக்கிறார்.

குருவின் அருள் தன்மையை,

'பொய்ம்மாயை யென்னும் புலியின்வாய்ப் பட்டேனைக்
கைம்மாறி லாமற் கருணை கொடு மீட்டானோ'

என்று கூறிக் கைம்மாறிலாமல் காத்த தன்மையினையும்,

'என்புன் சொல்லைத்
திருப்பதம் கொள்கின்ற சிவஞான தேசிகனோ'

எனத் தம் சொற்கள் அற்பமானவை. அச்சொற்களையும் ஏற்று அருள்பாலித்த தன்மையையும் புகழ்ந்துள்ளார்.

சிவப்பிரகாசர் தம் குருவை, திருஞானசம்பந்தருடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். இறைவனிடம் சம்பந்தர் ஞானப்பாலினை ஒரு முறையே பருகினார். ஆனால் தம் குருவோ தமக்கு நாளும் சம்பந்தர் உண்ட ஞானப்பாலுக்கு இணையான ஞான அமுதத்தினைத் தருவதாகக் கூறும் வகையில்,

'சம்பந்தன் அன்றொருநாள் தானுண்ட பால் நாளும்
எம்பந்த நீங்க இனிதமுது செய்தானோ'

என்று கூறுவதால் தம் குருவினால் தாம் பெற்ற பேறு உயர்ந்தது என்கிறார்.

சிவஞான பாலய சுவாமிகள் அற்புதங்கள் பல செய்து, மக்களைக் கொடிய நோய்களினின்றும் காத்தார் என்பதை,

"ஆர்க்கும் கொடு நோய் அனைத்தும் கடைக்கண்ணால்
தீர்க்கும் கருணைச் சிவஞான தேசிகனோ'

என்ற பாடலடிகளால் உணர்த்துகிறார்.

குரு தமது அருட்பார்வையால் பாவம் போக்குபவராகவும் குணக்குன்றாகவும் விளங்கியதைத் தாலாட்டுப் பாடல்கள் காட்டுகின்றன. குருவின் திருவடிச் சிறப்பும் விளக்கம் பெறுகிறது. நூல் அனைத்தும் குருவின் பெருமை, குருவும் இறைவனும் ஒன்றாகக் காணும் சிறப்பு அமைந்து தாலாட்டிலும் புதுமையாகக் குருவின் சிறப்பைக் கூறுவதாகக் காண முடிகிறது.

### சிவஞான பாலய தேசிகர் பிள்ளைத்தமிழ்

இந்நூலும் தம் குருநாதர்மீது பாடப்பட்டதாகும். தாம் குருநாதரிடம் பெற்ற அருட் சிறப்புக்களைச் சிவப்பிரகாசர் பிழிந்து தந்துள்ளார். பொதுவாகப் பத்துப் பருவங்களையும் பத்துப்பத்துப் பாடல்களாக நூறு பாடல்களைப் பாடுவது பிள்ளைத்தமிழின் மரபு. சிவப்பிரகாசர் பாடியுள்ள இப்பிள்ளைத்தமிழில் விநாயகர் பற்றிய செய்யுளுடன் காப்புப் பருவம் தொடங்குகிறது.

குழந்தையைக் காத்தருள வேண்டும் என்று தெய்வங்களை வேண்டிப் பாடுவது இப்பருவத்தின் இலக்கணம். காப்புப் பருவத்தில் திருமால், மல்லிகார்ச்சுனேசுரர், உமாதேவியார், விநாயகர், முருகன், அல்லமதேவர், மாணிக்கவாசகர், வசவதேவர், தேவார மூவர், சென்னவசவதேவர் ஆகியோரிடம் வேண்டிக் குழந்தையாகிய சுவாமிகளைக் காத்தருள வேண்டுகிறார் சிவப்பிரகாசர். வீரசைவக் கடவுளரையும் 'குழந்தையைக்' காக்க வேண்டும் என்று சிவப்பிரகாசர் புதிய மரபைப் படைத்துள்ளார்.

செங்கீரைப் பருவத்திலும், தாலாட்டுப் பருவத்திலும் தம் குருநாதரின் பெருமைகளை விளக்கியுள்ளார். சப்பாணி கொட்டுமாறு வேண்டும் பாடலில் முழுமுதற் பொருளாக விளங்கும் மெய்ப்பொருளே பொருள் என்று தம் அடியவர்களுக்குக் காட்டி, தீங்கு நீக்கி அருளும் தன்மையைச் சுட்டிக்காட்டி,

"... நடுங்கு ஆவி
கொள்ளை கொண்டுண்ண எம் பால்வரும் கொடிய வெங்
கூற்றைத் தடுப்பதாய்

தண்டளிர் கவற்று நின்கையினால் ஐயநீ
சப்பாணி கொட்டியருளே''

என்று வேண்டுகிறார்.

அம்புலிப் பருவத்தில் தம் குரு 'மாசிலாத் தன்மையர்' எனும் மெய்ஞ்ஞானப் பொருளில், 'ஆசிலாத சிவஞான தேவனுடன் ஆட அம்புலீ வருகவே' என அம்புலியை விளையாட அழைக்கிறார்.

சிறுதேர்ப் பருவத்தில் குருவின் திருவடிகளைத் தமது புன்தலையில் அணிந்த பெருமையை, 'திருவடிகள் புன்தலைக்கு அணி செய்த அருளாள! சிறுதேர் உருட்டியருளே' என்றும், 'சிவசமய குருதிலக சிவஞான மாமுனிவ சிறுதேர் உருட்டியருளே!' என்றும் தெளிவாக்குகிறார்.

இவ்வாறு தம் ஞானாசிரியன் மீது பாடியுள்ள பிள்ளைத் தமிழ் இலக்கியத்திலும் குருவின் அளப்பரும் பேராற்றலையும் தமக்கு அருள்புரிந்த தன்மையையும் விரிவாக விளக்கியுள்ளார்.

சிவஞான பாலய சுவாமிகள் மீது தாம் பாடிய இப்பிள்ளைத் தமிழ் 'சங்கப் புலவர்களின் செந்தமிழ் மலர்மாலைகளில், பொருட்சுவை எனும் தேனைப் பருகும். கல்வி நிறைந்த புலவரின் மனவண்டு, முழுவதும் தங்கி அனுபவிப்பதற்காக, புதிய தமிழ் மலர்களால் தொடுக்கப்பெற்ற பாமாலை ஆகும்' என்று சிவப்பிரகாசரே விளக்கம் தந்துள்ளார்.

நால்வர் பாடல்களில் சிவப்பிரகாசர் பெரிதும் ஈடுபாடு உடையவராதலால், 'தேவாரம் அருளிய மூவரையும், மாணிக்கவாசகப் பெருமானையும், சிவஞான பாலயராகிய குழந்தையைக் காக்க' என்று காப்புப் பருவத்தில் பாடியுள்ளார்.

இந்நூலில் 'வாரானைப் பருவம்' மட்டும் பதினொரு பாடல்களைக் கொண்டுள்ளது. எனவே 101 செய்யுட்களைக் கொண்டுள்ளது இப்பிள்ளைத்தமிழ் இலக்கியம்.

இந்நூலில் ஞானாசிரியரின் அருட்செயல்களாக, செஞ்சி மன்னன் மகளின் நரைத்த கூந்தல் நிறம் மாறியமை, பலருடைய கூன் நிமிர்ந்தமை, பிணிகள் அகன்றமை, குழந்தைச் செல்வம் கிடைத்தமை, செல்வம் வளர்ந்தமை முதலானவற்றைச் சிவப்பிரகாசர் குறித்துள்ளார்.

### சிவஞான பாலய தேசிகர் கலம்பகம்

கலம்பகம் என்பது, பலவகை உறுப்பும், பொருளும், பாட்டும் கலந்து பாடப்பெறுவது. பலவகையான மலர்களைக் கொண்டு

தொடுக்கப்பட்ட பூமாலை போல, பலவகையான பாக்கள், பாவினங்கள், உறுப்புகள் பயின்று சுவையுடைய பாடல்கள் அமைந்து கலம்பகம் பாடப்பெறும் 93 பாடல்களே கிடைத்துள்ளன.

நூலின் தொடக்கம் முதலே ஞானாசிரியனின் புகழையே பேசுகிறார். 'தனிமாயப் பெருங்கடல் உன் மெய்த்தாட் புணையன்றி வேறொன்றால் கடப்பரிதே' என்ற போற்றுகிறார்.

குருநாதரை,

'வாத மாற்றுநீ, போத மாற்றுநீ,
வாய்மையாக்கு நீ, தீமை போக்குநீ' என்றும்,
வசை கெடுத்தனை, இசை கொடுததனை,
செயல் ஒழித்தனை, மயலழித்தனை,
அறம் விரித்தனை, மறமிரித்தனை,
விழை வறுத்தனை, பிழை பொறுத்தனை'

என்றும் போற்றி வணங்கி,

'நாவலர்புகழ் சிவஞான தேசிக!'

என்று விளித்து,

'நின்னடிக் கமல நெஞ்சுற விருத்தி
நறுமலர் தூவி நாடொறும் பரவுதும்'

எனப் போற்றுகிறார். திருத்தொண்டு நெறியில் எம்குடி முழுதும் திருத்தொண்டில் ஈடுபடும் செயலுக்கு ஏற்பச் சிவஞான தேசிகன் திருவடியே துணை என்கிறார்.

தம் குருநாதரின் திருவருள் திறத்தால் பரமுத்தி கிடைத்தல் உறுதி என்பதை,

'பெருமானே சிவஞானிப் பெயருடையோய்! நினதருளால்
வருமால்மா பரமுத்தி'

என்ற பாடலடியால் அறியலாம்.

'சிவஞான தேவன் திருவடி வாழியன்னான் திருப்புகழ் வாழி வாழி'

என்ற வாழ்த்துடன்,

'மானுடர்காள் - சிவஞானிபதம் எல்லாம் வழங்குகிறான் இன்று', எனவே 'வம்மின்' என அழைக்கிறார்.

தம் ஞானாசிரியரின் பெருங்கருணைத் திறத்தையும், அவரின் பேராற்றல் பொலிவையும் வியந்து விளக்குவதை நூல் முழுவதும் காணலாம்.

தம் ஞானாசிரியரைப் 'பவப்பிணி மருத்துவன்' என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கிறார் சிவப்பிரகாசர். இத்தொடர் 'பசிப்பிணி மருத்துவன்' என்ற சங்க இலக்கியத் தொடர் போல உள்ளது. குருவினுடைய நீறுபூசிய கோலத்தை நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம். அவருடைய பெருமையைக் கூறும் நாவே பேசும் நா, மயிலையில் வாழும் ஞானியின் திருவடிகளைப் பற்றும் கைகளே கைகள், என்று புகழ்ந்துள்ளார்.

காஞ்சி நகரின் பெருமையை, இந்நூல் மிகச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது. மாருதி, சஞ்சீவிமலை எடுத்த தன்மைபோல, ஆதிசேடன் இவ்வுலகைத் தன் தலைமீது தாங்குகிறான். உலகமோ கச்சிப்பதியைத் தன் உச்சிமீது வைத்துப் போற்றுகிறது என்பதை,

'காதல் கூர்ந்து கண்ணகல் ஞாலம்
உச்சிக் கொண்ட கச்சிப்பதி'

என்று சிவப்பிரகாசர், காஞ்சிபுரத்தைப் போற்றியிருப்பது அவரது ஊர்ப் பெருமைக்குச் சான்றாகிறது.

## சிவஞான பாலய தேசிகர் திருப்பள்ளியெழுச்சி

4 பாடல்களை மட்டும் கொண்ட தனி நூலாக இந்நூல் சிறப்புப் பெறுகிறது. சிவஞான பாலய சுவாமிகளைப் பாட்டுடைத் தலைவனாகச் சுவாமிகள் தேர்ந்தெடுத்துள்ளார். சமய உரை கேட்கவும், ஐயம் நீக்கவும் துயில் எழுப்புதலை இந்நூலில் காணலாம்.

சிவத்தோடு உயிர் இணைவதுபற்றிய கருத்தில் இருவேறு கொள்கையமைவதைக் காட்டி, அவற்றில் எது சரி என்று உணர்த்தக் குருநாதர் எழுந்தருள வேண்டும் என்று முதல் பாடலைச் சிவப்பிரகாசர் அமைக்கிறார். சிவமும் உயிரும் எப்போது ஒன்றாகும், இரண்டறக் கலக்கும்? சத், சித், ஆனந்தம் நிறைந்ததான பரசிவத்தில் நிகழும் உயிர், சிப்பியில் முத்துப்போல் தோன்றி, அறிவு பெற்று, மயக்கம் அகன்ற பின்பு அச்சிவத்தோடு ஒன்றாகும் என ஒரு சாரார் கருதுவர்.

வேறு சிலர் வேறொரு கருத்தைக் கூறுவர். அதாவது பதி, பசு, பாசம் என்பவற்றில் பதியான சிவத்தைப் போன்று ஆருயிர் நித்தியம். மும்மலப் பற்றைக் கடந்து பின், அவ்வுயிர் சிவத்தோடு ஒப்புமையுடையதாக அமையும் என்பது இரண்டாம் கருத்து. இவற்றில் சரியானது எது என அறிவதற்குக் குருநாதரிடம் கேட்க 'ஐயம் நீங்க அடியவராகிய நாங்கள் கூடிக் குழுமியுள்ளோம்.

எனவே, துயில் நீங்கி எழுக' என முதற்பாடல் விளக்குகிறது. அதனை,

'நிறைந்த ஒரு சச்சிதானந்த பரசிவத்தில்
நிகழும்·உயிர் இப்பியிடை வெள்ளி போல் தோன்றி
அறிந்த மயல் அகன்றிடல் ஒன்று அன்றி வேறு இல்லை '

என்று அறைவர் சிலர்; 'பதியினைப் போல் ஆருயிர் நித்தியமே இறந்து மல சத்திவிடில் சிவசமானதையாய் இருக்கும்' என அறைவர் சிலர், 'எது வழக்கு என்று அறியேம் செறிந்தனம், நின்தனை வினவ, எங்கள் சிவஞான தேசிகனே, அருள்மலையே, பள்ளி எழுந்தருளே' எனத் தத்துவ விளக்கத்தின் நோக்கமாக இப்பாடல் அமைந்துள்ளது.

'நின் திரு அடியில் போதுகள் தூவிப் பரவிப் போற்றவே' அடியவர் வந்துள்ளனர். 'பள்ளி எழுந்தருளே!' என்று நான்காம் பாடலில் பக்தித் திறத்தை உணர்த்தித் திருமுறைகளில் வரும் அடியவர்களின் இயல்பையும் சுட்டியுள்ளார்.

### திருக் கூவப் புராணம்

தலபுராண வகைமைப்பாட்டில் இந்நூல் இடம் பெறுகிறது. தொண்டை நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று திருக்கூவம். இது திருவிற்கோலம் என்றும் அழைக்கப்படும். இத்தல இறைவன் திருவிற்கோலநாதர், கூவநாதர் என்றும், இறைவி திரிபுராந்தக நாயகி என்றும் அழைக்கப்படுவர். திருஞான சம்பந்தரால் பாடல் பெற்ற தலமாகவும் திகழ்கிறது.

திரிபுராந்தகர்களை அழிக்க மேருவை வில்லாகக் கொண்டு நின்ற கோலம் 'திருவிற்கோலம்' ஆகும். சம்பந்தர் தேவாரத்தின் வழி, கூவத்திற்குக் 'கூகம்', 'திருவிற்கோலம்' என்ற இரு பெயர்கள் இருப்பதை அறியலாம். இத்தலத்தில் தங்கி, வழிபட்டு, சிவப்பிரகாச சுவாமிகள் அருளியது திருக்கூவப் புராணம் ஆகும்.

இப்புராணம், திருத்தலச் சருக்கம், திரிபுர தகனச் சருக்கம், சந்தானகிரிச் சந்தானச் சருக்கம், அடிமுடிதேடிய சருக்கம், செந்நெல் வைத்த சருக்கம், தாருகன் வதைச் சருக்கம் என்ற அமைப்பில் அமைந்துள்ளது. 703 பாடல்களையுடையது. புராண அமைப்பில் நயம்மிக்க தலபுராணமாக இது திகழ்கிறது.

மூர்த்தி, தலம், தீர்த்தம் நிறைந்த தலம். திருவாலங்காட்டிற்குத் தெற்கில் உள்ளது. சுற்றிலும் உள்ள பத்து ஊர்களுக்கும் திருவிற்கோல நாதரே குலதெய்வம் ஆவார். இம்மூர்த்தி இங்கு

மணல் இலிங்கமாகக் காட்சியளிக்கிறார். தீண்டாத் திருமேனி, பல அற்புதங்களை நிகழ்த்துபவர். இதனை ஞானசம்பந்தரும் 'ஐயன் நல் அதிசயன்' என்று குறித்துள்ளார்.

சிவப்பிரகாசர் இத்தல இறைவனுக்குரிய பன்னிரு திருப்பெயர்களைப் புகழ்ந்து பாடுகிறார்.

'இரட்சகர் தியாகர் இசைச் சந்த தாரர்
எழில்மிக வளர்சடைக் கூத்தர்
அருட்சக நாதர் அஞ்ச நா பகண்டர்
அருங்கிலா நீக்கின ரோடும்
திருக்கறு புவன நாயகர் திரிபு
ரக்கினர் அப்பிர திட்டர்
தெரிந்திடு கூவநாதர்அன்பர்க்குச்
செந்நெல்ஈத் தவர்என லாமால்'

என்பது அத்திருநாமம் சுட்டும் பாடலாகும்.

இதில் குறித்துள்ள பன்னிரண்டு திருப்பெயர்களுள் ஒன்றையேனும் தம்மக்கட்குப் பெயராக இட்டவர், இம்மையில் அழியாப் போகமுடன் வாழ்ந்து மறுமையில் சிவனடி சேர்வர் என்கிறார் சிவப்பிரகாசர்.

இத்தலத்தில் சிவனடியார்க்குக் காட்சி தந்தருளிய இறைவன் திருவிளையாடலைத் தனியே ஒரு சருக்கமாக அமைக்கிறார். 'செந்நெல் வைத்த சருக்கம்' எனும் பகுதியில் 42 பாடல்களில் திருவிற்கோலநாதர் அடியவருக்காக நாள்தோறும் நெல் வழங்கி, 'செந்நெல்வைத்தவர்' என்ற பெயர் பெற்ற வரலாற்றை மிக அழகாகப் பாடுகிறார்.

பெரியபுராணம் காட்டும் அடியவர் போன்று சிவப்பிரகாசர் காலத்திலும் அடியவர் இருந்து திருத்தொண்டு செய்து இறையடியார்களுக்கு உணவிட்டுத் தம் பெருஞ்செல்வம் தொலைந்து இறையருளால் அப்பணி முட்டின்றி நடைபெறத் துணை நின்றுள்ளனர் என்ற நோக்கினைச் சிவப்பிரகாசர் இத்திருக் கூவப்புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

'முத்தலை எஃகம் ஏந்தும்
முதற்பெருங் கடவுள் தன்பால்
உய்ந்தவர் உலக வாழ்வை
ஒரு பொருளாகக் கொள்ளார்'

என்ற பாடலடிகளின் வழி, சிவபிரானிடத்து உய்ந்தவர். உலக வாழ்க்கையை விரும்பார் என்பதைச் சிவப்பிரகாசர் இந்நூலில் எடுத்துக்காட்டியுள்ளார்.

இறைவனிடத்துப் பூசை செய்யும் முறையை இப்புராணத்தில் எடுத்துக்கூறி விளக்குமிடம் திருவாசகத்தை நினைவூட்டுவதாகவே அமைந்துள்ளது.

இதனை,

'கண்புனல் துளிப்ப நெஞ்சம்
கரைந்து உக மெய்ம்மயிர் பொடிப்பத்
தண்புனல் தரித்த வேணித்
தம்பிரான் பூசை செய்வார்'

என்ற பாடலால் அறியலாம்.

இவ்வாறு செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள கூவம் என்னும் ஊரிலுள்ள திருவிற்கோலநாதர் புராணமாக இந்நூல் அமைந்து விளங்குகிறது.

## பிரபுலிங்க லீலை

இந்நூல், சிறந்த மொழிபெயர்ப்பு நூலாகும். கன்னட மொழியில் சாமரசன் என்பவர் எழுதிய பிரபுலிங்க லீலையைத் தமிழில் சிவப்பிரகாசர் காப்பியமாகப் படைத்துள்ளார். சிவப்பிரகாசரின் பிறமொழிப் புலமைக்குச் சான்று காட்டும் நூலாகவும் திகழ்கிறது. அல்லமதேவரின் விளையாட்டைக் கூறுவது, மாயையின் முயற்சியைத் தோல்வியுறச் செய்வதாகக் கதை அமைக்கப்பட்டுள்ளது.

'கற்பனைக் களஞ்சியம்' என்ற பட்டத்தைச் சிவப்பிரகாசருக்கு வழங்கிய நூலாக இதனைக் கூறுவர்.

இருபத்து ஐந்து கதிகளைக் கொண்டது இந்நூல். *1159* பாடல்களைக் கொண்டது. சிவபெருமான் வீரசைவ சமயத்தினைப் போதிக்க அல்லமரை மண்ணுலகில் தோன்றச் செய்கிறார். இறைவனே அல்லமனாகத் தோன்றினார் என்பர் சிவப்பிரகாசர். அல்லமர் கூற்றில் வீரசைவ சமயத்தில் ஒன்றிய நிலை, அச்சமயத்தின் சிறப்பு எனப் பலவற்றைக் கூறுவதாக அமைந்துள்ளது.

அல்லமர், பிரபுலிங்க லீலையின் பாட்டுடைத் தலைவராகி எங்கும் நிறைந்துள்ள இறைவனாகக் காட்டப்படுகிறார். இதன்

மூலம் உலகத்தில் மெய்ஞ்ஞானம் அஞ்ஞானத்தை வென்றதாகவும் காட்டியுள்ளார். மேலும், மெய்ஞ்ஞானத்தை நிலை நிறுத்தினார் என்றும் கூறுகிறார்.

இந்நூலின் பெயரில் உள்ள 'பிரபு' என்பது அல்லமரையும் 'லிங்கம்' சிவனையும் குறித்தது. சிவபெருமான் அல்லமனாகத் தோன்றிச் செய்த லீலைகளை உணர்த்துவதாக எழுந்த புராணம் பிரபுலிங்க லீலை. அல்லமர் தோன்றியதைப் 'பிரபுதேவர் வந்த கதி' என்று சிவப்பிரகாசர் பெயரிடுகிறார்.

இதில் பாட்டுடைத் தலைவன் 'அல்லமர்'. இவரது கூற்றின் மூலம் வீரசைவ சமயத்தின் பொருளையும் சைவத்தின் சிறப்பினையும் கூறுகிறார். இறையடியார் அனைவரும் சமமானவர் என்றும், உடம்பு முழுவதும் நீறு பூசிய அடியவர்களைக் கண்டாலே சிவனைக் கண்டதாகக் கொண்டு பாடியுள்ளார். அடியவர் ஒருவருக்கொருவர் அன்பு கொண்டு வாழ்தல் வேண்டும் என்றும், அதனால் எளிதில் வீடுபேறு வாய்க்கப்பெறும் என்றும் குறிப்பிடுகிறார்.

காப்பிய அமைப்பில் 'கதி' என்ற பிரிவு அமைந்துள்ளது. 25 கதி என்ற எண்ணிக்கை அமைந்துள்ளது. தமிழ்க் காப்பிய மரபில் இம்முறை இல்லை. ஆனால், கன்னட பிரபுலிங்க லீலையில் உள்ளது போன்றே சுவாமிகள் அமைத்துள்ளார்.

விநாயகப் பெருமானின் திருவடிகளைத் தொழும் காப்புச் செய்யுளோடு இந்நூல் தொடங்குகிறது. அதனையடுத்த துதிகதியில் சிவபெருமான், பார்வதி, முருகன் ஆகியோரை வணங்கும் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அல்லமர், வசவேசர், சென்னை வசவேசர், மடிவால மாச்சையர் ஆகியோர்பற்றியும் கூறுகிறது.

நாற்பொருளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றில் அறமும், வீடும்பற்றியே விரிவான கருத்தைச் சிவப்பிரகாசர் அமைத்துள்ளார்.

'இட்டலிங்க கதியில்' வசவண்ணருக்கு இட்டலிங்க வழிபாட்டின் சிறப்பை எடுத்துக் கூறும் அல்லமர் கூற்றில், 'ஆணவம்' கெட அந்த உள்ளத்துள் சிவபெருமான் குடிகொள்வான் என்கிறார். மனத்தை அடக்குபவன் பிறவியைக் கடக்க முடியும் என்பதை,

'கெடுக்க வல்லதும் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லதும் இம்மனம் என்றதை

அடக்க வல்லவன் ஐய பவக்கடல்
கடக்க வல்லவன் ஆவன் கடிதரோ'

என்ற பாடலில் மனத்தை அடக்குபவன் பிறவிக் கடலை நீந்தி வீடு பேறு அடைய முடியும் என்கிறார். வீடுபேற்றின் இயல்புகளை விரிவாகப் பிரபுலிங்க லீலை குறிப்பிடுகிறது. வீடுபேற்றை அடைய விரும்புவோர்

1. ஆணவமலத்தை நீக்குதல் வேண்டும்;
2. உடற்பற்றை அழிக்க வேண்டும்;
3. மனத்தை அடக்குதல் வேண்டும்;

என்ற நெறிகளைச் சிவப்பிரகாசர் இந்நூலில் பல இடங்களில் விளக்கியுள்ளார்.

சிவப்பிரகாசர் வீரசைவத்தின்மீது மிகுந்த விருப்பம் கொண்டவர். அச்சமயத்தின் பெருமையினை இறைவனே கூறுவதாகப் பிரபுலிங்க லீலை அமைந்துள்ளது. இறைவி வீரசைவத்தைப் பற்றி வினவ, இறைவன் அம்பிகைக்குக் கூறுவதாக,

'எவ்வகைச் சமயத்திற்கும் இறைவனே எனினும் நேயம்
சைவநற் சமயத் தூற்றான் சைவத்தும் வீரசைவத்து
அவ்வவர் பிறவி நீக்கும் அல்லமன் விருப்பம் உள்ளான்'

என்று வீரசைவத்தைப் பரப்ப அல்லமன் சென்றுள்ளான் என்றும், எல்லாச் சமயங்களிலும் வீரசைவமே சிறந்தது என்பதை,

'சமயமெவ் வகையினுந்தான் சைவமேல் ஆயதென்கொல்
அமையும்நல் வீரசைவம் அதனினும் சிறந்ததென்கொல்'

என்றும், அவ்வாறு வீரசைவத்தைச் சேர்ந்தவன் வீடு பேற்றினை அடைவான் என்றும் இறைவியிடம் கூற உண்மைப் பொருளை உணர்ந்து இறைவி, 'மெய்ம்மை நின் பவள வாயால் விளம்ப நான் அறிந்தேன்' என்று கூறுவதால் மாயையை அல்லமன் வென்றான் என்று பாடுகிறார். இந்நூலில் பல இடங்களில் ஆசிரியர் கூற்றாக வீரசைவ சமயம்பற்றிய தமது கருத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

வீரசைவம் வேதத்தைவிட ஆகமங்களுக்கே சிறப்புத் தருகின்றது. ஆகமம் எனும் சொல் ஒன்றிலிருந்து வெளிவந்தவை எனும் பொருள் உடையது. ஆகமங்கள் சிவனிடத்து வந்ததாக வீரசைவவாதிகள் சொல்வர். இந்நூலில் அருமறை முடிவும், ஆகம முடிவும் ஒத்திருப்பதைச் சிவப்பிரகாசர் காட்டியுள்ளார்.

'அருமறை முடிவும் சீர்சால் ஆகமமுடிபும் ஒத்துப்
பொருமறம் இல்லாமல் முற்றும் பொருளினை விளங்கக் காட்டித்
தருமறை அதனால் வீரசைவமே தலைமைத்தாயின்
இருபது வறு நன்னூலும் இதிற் பிரமாணம் ஆகும்'

என்று ஆகமங்கள் அன்பும், ஞானமும் கலந்த சிவத்துவத்தை அளிக்க வல்லது என இறைவியிடம் விளக்குகிறார்.

சிவ வழிபாடு குருவின் ஆணைப்படி நன்கு தெளிந்து நிகழ்த்தப்பட வேண்டும் என்பதைக் கூறியுள்ளார்.

வீரசைவமே அனைத்துச் சமயங்களிலும் உயர்ந்த நெறி என்கிறது இந்நூல். சத்துவ குணத்தால் இறைவனைக் காண இயலும். பக்தியே இறைவனை அடையும் நெறி. மெய்யன்புடைய அடியார்க்கு ஈசனே குருவாக வந்து அருள்வான் என்பதைக் குறிப்பிடுகிறது.

'மனத்தூய்மையோடு தன்னையே சிவம் என்று கருதுபவன் ஞானியாவான்' என்பதற்கான நிகழ்ச்சிகளும், விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. இறைவனை ஞானநெறியில் அடையப் பெண்களும் உரிமை படைத்தவர்கள் என்பதை, அக்கமாதேவியின் வரலாற்று வழி உணர்த்துகிறார். அக்கமாதேவி அரச வாழ்வைத் துறந்தாள். அறிவார்களை நாடினாள். இறுதியில் அல்லமரைக் கண்டாள். 'அஞ்சினேன் பவப்பிணி இனி அருள்செய்' என்று அழுதாள். அவரது பக்குவநிலையை உணர்ந்த அல்லமர், 'வீடு உவப்பவர் ஆணெனப் பெண்ணென வேறோ' என்று கூறி மெய்ப்பொருளையும் உணர்த்தினார். வீட்டுநெறிக்குச் செல்ல ஆண், பெண் வேறுபாடில்லை என இக்காப்பியத்தின் வழி உரைத்துப் பெண்மைக்குப் பெருமை தந்துள்ளார்.

அனைத்துச் சமயத்தாரும் போற்றும் வகையில் இதனைச் சிவப்பிரகாசர் படைத்துள்ளார். கவினுறு கற்பனைகள், அரிய கருத்துக்கள் ஆகியவை இடம்பெற்று அறநூலாக, அருள்நூலாக, நற்காப்பியமாக விளங்குகிறது.

## வேதாந்த சூடாமணி

வேதாந்தத்தின் பொருளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தமிழ் மக்கள் எளிதில் உணர வேண்டும் என்ற நோக்கில் அருளப் பெற்றது, இந்நூல். வேதாந்தப் பரிச்சேதப் பொருளை விடாது அமைத்து விருத்தப்பாக்களால் பாடியுள்ளார். 'வேதாந்த சூளாமணி' எனவும் அழைக்கப்பெறும். பாயிரம் உள்பட 185

செய்யுட்களையுடையது. இந்நூலின் சிறப்பைச் சுருக்கமாகச் 'சிறப்புப் பாயிரம்' எடுத்தியம்புகிறது. சிவப்பிரகாசர் என்ற கவிஞர் வேந்து 'விவேக சிந்தாமணியுள்' விளக்கப்பட்ட வேதாந்தப் பொருளினைத் தமிழுலகம் அறிந்துகொள்ளச் சுவையுடன் பாடியதாகப் பாயிரம் காட்டுகிறது.

'சீவப் பிரம்ம ஐக்கியமே' வேதாந்த சூடாமணியென்ற நூலின் பொருளாகும். துன்பம் அனைத்தையும் ஒழித்து ஆனந்த வடிவமாக விளங்கும் நிலையைப் பெறுவதே இந்நூலின் பயனாகும்.

இவ்வுலக மக்களுக்கு ஏற்படும் துன்பங்கள் மூன்று வகையால் வரும். அவை தன் உடம்பைப் பற்றி வரும் துன்பம், பிற உயிர்களால் வரும் துன்பம், தெய்வத்தைப் பற்றி வரும் துன்பம், இவ்வகையாக வருகின்ற மூன்று துன்பங்களின் தன்மைகளை அறிதல் வேண்டும். இதனை அறிதற்கு நூல்களில் கூறப்படும் சுருதி வாக்கியத்திலும் குரு உபதேச வாக்கியத்திலும் உறுதியாக இருந்து நம்பிக்கை கொண்டால், அறிய வேண்டிய பொருளையும், அடைய வேண்டிய சிவத்தையும் அடையலாம் எனக் குறிப்பிடுகிறது. மேலும் குரு உபதேசம் பெற விரும்பும் மாணாக்கர் (சீடர்) நான்கு வகை நிலைக்குத் தம்மை உட்படுத்திக்கொள்ளலாம்.

1. குருவிற்குப் பிரியமாக ஒழுகுதல் (ஆப்தம்);

2. குருவிற்குத் துணி தோய்த்தல் முதலியன (அங்கம்);

3. குருவின் வீடு விளைநிலம் முதலியவற்றைப் பாதுகாத்தல் (தாளம்);

4. பரசிவமே குரு வடிவாக அனுக்கிரகம் செய்ய வருதலை உணர்தல் (சற்பாவம்)-

- இவ்வாறு குருசேவையைச் சீடர்கள் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். இதே போன்று குருவின் தன்மையை எட்டு வகையாகக் கூறியுள்ளார். இந்நூலுள் சிவதத்துவக் கருத்துக்கள் விளக்கமாக இடம் பெற்றுள்ளன.

இந்நூலுள் பிரபஞ்ச விளக்கம், அந்தக்கரணம், பிராண பஞ்சகம், தத்துவங்கள், சிருஷ்டி, தத்துவமசி, விதேக முக்தி என்பன பற்றியும் விளக்கியுள்ளார்.

**சித்தாந்த சிகாமணி**

இது, காப்புப் பாயிரம் உட்படச் செய்யுள் 880 உடைய நூல். கடவுளர் வணக்கத்துடன் பாயிரப் பகுதியில் நூல் வரலாறும், நூல் நுவல் பொருளும் விளக்கப்பெற்றுள்ளன. அறிஞர் உள்ளம்

பொருத்தும் வகையில் வீரசைவ நெறியனைத்தும் ஒருங்கமைத்து இறைவன் உமையொடும் முருகனுக்கு அருளியதாக இடம் பெறுகிறது. இந்நூல் வீரசைவ சமயக் கருத்துக்களை விளக்குகிறது. வடமொழி நூலாகிய சித்தாந்த சிகாமணியின் மொழிபெயர்ப்பாகும்.

நான்முகன் படைப்புத் தொழிலை இறைவனிடம் இருமுறை கேட்டுச் செய்ததாக நூல் தொடங்குகிறது. கயிலைமலையின் சிறப்பைக் கூற வந்த சிவப்பிரகாசர், 'தெள்ளு சோதியங் கயிலை' என்று போற்றுகிறார். சிவப்பிரகாசரின் இலக்கிய வகையில் இந்நூல் சாத்திர நூலாகும்.

## பழமலை அந்தாதி

விருத்தாசலம் என்று அழைக்கப்பெறும் பழமலையில் வீற்றிருக்கும் இறைவன்மீது பாடப்பெற்ற நூல் இது. 100 பாடல்களைக் கொண்ட அந்தாதியாகும். திருமுதுகுன்றம் என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

இறைவனின் சிறப்புகளைக் கற்போர் மனம் கொள்ளும் வகையில் எடுத்துக்கூறுவதை இந்நூல்வழி அறியலாம். 'விருத்தாசலம்' என்னும் பழமலையை உடையவர் ஈசர். சுகம் அளிப்பவர்; உமாதேவியின் கண்களிக்கத் திருநடம்புரிபவர். மெய்ஞ்ஞானிகளின் கருத்தர். மனித வாழ்க்கையில் தருமங்களை உணர்த்தவல்ல சிறப்புடையவர் ஈசர் எனப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

'விருத்தாசல! சங்கரா! மலைமாது விழிகளிக்கும்
நிருத்தா; சலசந்திரன் போலுடம்பிடை நின்றவர்தம்
கருத்தா; சலம் சம்பவம் இலர்க்கு ஆண்டறங் காட்டிய சொல்
திருத்தா; சலசம் தமியேன் தலைக்கு உன் திருவடியே'

என்பது இறைப்பெருமை காட்டும் பாடலாகும்.

திருவைந்தெழுத்தை முறையாக உச்சரிக்க வேண்டும். மனத்தில் சிவனின் திருவுருவத்தை நிறைத்துக்கொள்ள மந்திர உச்சரிப்பு உதவும்.

'சிவாய நம' எனும் ஐந்தெழுத்து மந்திரம் உச்சரிக்க எளியது. தொடர்ந்து கூற மனத்தில் சிவனது உருவம் நிறைந்து ஒளிரும் என ஐந்தெழுத்து மந்திரம்பற்றிச் சிவப்பிரகாசர் குறிப்பிடுகிறார்.

திருமுறைக் கருத்துகள் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. தல யாத்திரை செய்தல், திருமுறைகளை ஓதுதல், வழிபாடு செய்தல்

ஆகிய அனைத்தும் ஞானத்தினை அடையும் வழிகள் எனச் சுவாமிகள் உறுதியாக இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். அத்தகு மெய்ஞ்ஞானத்தைச் சிவனால்தான் தர முடியும் என்றும் கூறுகிறார்.

உலக உயிர்களுக்குக் காப்பு, பழமலை நாதராம் சிவனன்றி வேறில்லை என்பதும், உயிர்களிடத்து நேசம்மிக்கவர் அவர் என்பதும் விளக்கப்பட்டுள்ளன.

மனித உயிருக்கும் சிவனுக்கும் உள்ள உறவு பலவகையான சிறப்புக்களையுடையது.

சிவப்பிரகாச சுவாமிகள் 'தமக்குத் தலையில் அணிவதற்குரிய தாமரை மலர்கள் சிவபெருமானின் திருவடிகளே' என்பதையும் ஆழமாகக் குறிப்பிட்டுள்ளார்.

'இறவாத ஆனந்த வெள்ளத்து அழுத்தி எனை அருளால்
துறவாத ஆனந்தம் ஆள்வதென்றோ? மெய்த்துறவர் தொழும்
மறவாத ஆனந்தம் சூழ் முதுகுன்று அடைந்தவர்தம்
உறவா ஆனந்த கோபாலன் என்றற்கு உடையவனே'

என இறைவனின் சிறப்புக்கள் புகழப்பட்டுள்ளன. வழிபாட்டு நெறிகள், வழிபடுவோர் பெறும் பலன், வழிபாட்டின் இலக்குக் குறித்து எடுத்துரைக்கும் கருத்துக்கள் அனைத்தும் இந்நூலில் விளக்கம் பெற்றுள்ளன.

## பிட்சாடன நவமணிமாலை

இது, சிவபெருமான் தாருகாவனத்திடத்துச் சென்று முனிவர் பத்தினிகளுடன் உரையாடியதாகக் கற்பனை செய்து பாடப்பெற்ற நூலாகும். இலக்கிய வளமும், கற்பனை ஊற்றும் மிக்க நூலாக விளங்குகிறது. ஒன்பது பாடல்களை மட்டுமே கொண்ட நூலாகும்.

'ஆன்மாக்களின் மலம் தீர்க்கும் பழமலை நாதர்' என்ற பொருளில் 'நம்குற்றம் தீர்க்கும் பழமலை நாதர்' என்று சிவனைக் குறிப்பிட்டுள்ளார். பாடலடிகளில் பழமலையாகிய 'திருமுது குன்ற'த் தலச் சிறப்பு போற்றப்பட்டுள்ளது. இந்நூலின் இறுதியில் அமைந்துள்ள சிறப்புப் பாயிரப் பாட்டு சிவப்பிரகாசரின் பெருமையைப் புகழ்ந்து சிறப்பிக்கிறது.

'பிச்சாடன நவரத்தின மாலையைப் பீடுபெறத்
தைச்சான் துறைமங் கலமுறை சிவ தயாபரன்நம்
பொய்ச்சார் பதனை யொழிக்கும் செரும்புலி யூர்ப்புனிதன்
நற்சார்பு சார்ந்த சிவப்பிரகாச நவமணியே'

என்பது அப்பாயிரப் பாடலாகும். நூலின் பெயரில் நவமணி இருப்பது போன்றே நூலைப் படைத்த ஆசானும் நவமணியாகத் திகழ்ந்துள்ளார்.

## கொச்சகக் கலிப்பா

சிவப்பிரகாசரால் படைக்கப் பெற்ற இந்நூல் இதுவரை கிடைக்கவில்லை. ஆகவே இந்நூல் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ள வாய்ப்பில்லை.

## பெரியநாயகியம்மை கலித்துறை

பழமலையாகிய திருமுது குன்றத்து இறைவி பெரியநாயகி. அவ்வம்மையின்மீது கலித்துறைப் பாடல்களால் இயற்றப்பட்ட நூலாகும் இது. இந்நூலில் 19 பாடல்களே உள்ளன. தலத்தோடு இணைத்துக் 'குன்றைவாழும் பெரியம்மையே' என்று பாடல்கள்தோறும் வேண்டுகிறார் சிவப்பிரகாசர். திருமுறைக் கருத்துக்களும் இடையிடையே இடம் பெற்றுள்ளன. இதனை 'இயற்பகையார் மனைக்கு உற்றவொரு பிழை பொறுத்தாய் நன்று காண் குன்றை வாழும் பெரியம்மையே' என்ற பாடலடிகளைச் சான்று கூறலாம். அம்பிகையின் பெருமைகளைத் தலச் சிறப்போடு கூறும் நூல் இதுவாகும்.

## பெரியநாயகி நெடுங்கழிநெடி லாசிரிய விருத்தம்

திருமுதுகுன்றத்து வீற்றிருக்கும் பெரியநாயகியம்மையின் மீது பாடப்பெற்ற நூலாகும். பத்துப் பாடல்களைக் கொண்ட பதிகமாகத் திகழ்கிறது.

திருவருட்சத்தியால் ஆன்மாக்கள் சிவத்தையடைய வேண்டும் என்னும் சித்தாந்தக் கருத்தை உள்ளடக்கியதாக இந்நூல் திகழ்கிறது. 'விருத்தகிரியமர் பெரியநாயகியே' எனப் பாடல்தோறும் பெரியநாயகியைச் சிவப்பிரகாசர் புகழ்ந்து போற்றுகிறார்.

மெய்ஞ்ஞானக் கருத்துக்களை இந்நூலுளும் காணலாம்.

'சுட்டுதற் கரிய நின்னைமெய்ஞ் ஞான
சொரூபியென் றருமறை யனைத்தும்
சொல்லுவ துண்மை யென்ன நன் குணர்ந்தேன்'

எனப் பெரியநாயகியம்மையை 'மெய்ஞ்ஞான சொரூபியாகவே' குறித்துள்ளார். இச்செய்தியுணர்த்தும் பாடலில் திருஞான சம்பந்தர்க்கு ஞானச் செழும்பால் கொடுத்த செய்தியையும் சிறப்பிக்கிறார்.

சிவப்பிரகாசரின் அனுபவ உணர்வுகள், திருமுறைக் கருத்துக்கள் முதலான செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

'தன் ஒரு மகனைத் தன் கையால் உள்ளத்தில் களிப்போடு அரிந்து சமைத்து உனக்கு இட்ட அப்பெருந்தொண்டனை, அவ்வூனைப் பெற்ற நீயே சிறுத்தொண்டன் என்று பகர்ந்தாய் எனில், ஒன்றும் செய்யாத நான் நின் திருத்தொண்டன் என்று சொல்லவும் தகுமா?' என்று சிவபெருமானிடம், சிறுத்தொண்டர் பெருமையும், தன் சிறுமையும் தோன்றப் பாடுகிறார் சிவப்பிரகாசர்.

## ஏசுமத நிராகரணம்

இந்நூல் கிடைக்கவில்லை. சதுரகராதி இயற்றிய வீரமாமுனிவரென்னும் கிறித்தவரைச் சிவப்பிரகாச சுவாமிகள் கண்டித்து எழுதிய நூலாக இதனைக் கூறுவர். பேரூராதீனக் குருநாதர் அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் இயற்றிய கொலை மறுத்தல் என்னும் நூலின் உரையில் மேற்கோளாக 3 பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. வீரசைவ நெறி 'பக்தி வைராக்கிய நெறி' ஆதலின் சிவப்பிரகாசர் பிற சமயக் கருத்துகளை மறுக்கும் போக்கில் இந்நூலினை அருளியுள்ளார்.

## நன்னெறி

நாற்பது வெண்பாக்களால் ஆன நீதி நூலாக இது திகழ்கிறது. தமிழரிடையேயும், இளைஞர்களிடையேயும் மாணாக்க ரிடையேயும் அதிகம் பயிலப்பட்ட நூலாகவும் அமைகிறது. நல்வாழ்க்கைக்குரிய நெறிகளைக் கூறுவது. இன்சொல், உதவிபுரிதல், சினம் காத்தல், மெலியாரைப் போற்றல், நல்லோர் உறவு, அறத்தின் ஆற்றல் முதலிய நெறிகள் கூறுப்பட்டுள்ளன. சமய வாழ்க்கைக்குரிய செய்திகள் நன்னெறியில் இடம் பெற்றுள்ளன.

சமுதாயம் நல்லநெறியில் செல்ல மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களை எடுத்துரைக்கிறார். வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டியவை, நீக்கவேண்டியவை பற்றியும் விளக்கியுள்ளார். தூய மனம், அறச் செயல்கள், தூய வாழ்க்கை சிறந்த வாழ்வைத் தரும் என்று மக்களுக்கு அறிவுறுத்தியுள்ளார்.

நன்னெறியின் சிறப்பியல்புகளை அனைவரும் விளங்கிக் கொள்ளும் வகையில் டாக்டர் ஜி.யு. போப் அவர்களும், டி.பி. கிருட்டிணசாமி அவர்களும் மொழிபெயர்த்துள்ளனர்.

சிறுவர்களுக்கான பாட நூல்களில் நன்னெறி இடம் பெற்றிருப்பது இத்தகு நீதி நூலின் சிறப்பைக் காட்டுகிறது.

மகடூஉ முன்னிலையாகப் பெரும்பான்மையான பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு வெண்பாவும் முதலிரண்டு அடிகளில் நீதிக் கருத்தையும், பின்னிரண்டு அடிகளில் அக்கருத்தை விளக்கும் அழகிய உவமையும் கொண்டு விளங்குகிறது. சிவப்பிரகாசரின் நூல்களுள், இந்நூல் மிக எளிமையாகப் படிப்போருக்குப் புரியும் வகையில் அமைந்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

இந்நூலில் பெரியோராகிய சான்றோர், மேன்மக்கள் இயல்பு, கீழோர் இயல்பு ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளார். ஈகையறம், இன்சொல் கூறல், கல்விச் சிறப்பு, நட்புப் பாராட்டுதல், கல்விச் செருக்கு உறாமை, உயர்வு, தாழ்வு பாராட்டாமை, சினவாமை, நிலையாமை முதலான அறங்களைக் கூறி மக்களை நெறிப்படுத்துகிறார்.

கணவனும், மனைவியும் கருத்தொருமித்துச் செய்யும் தருமம் உயர்வினது என்பதை,

'காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்யவே...'

என்று கூறியுள்ளார்.

'பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார் - நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன் கோல்அடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது'

என்ற பாடலில் பெரியோர் பிறர்க்கு வரும் துன்பத்தைத் தாங்கள் ஏற்றுக்கொண்டு அவர்களைக் காப்பாற்றுவர் என்று உவமை வழி விளக்குகிறார்.

இனிய வாழைப்பழத்தைப் பால் விரும்பும்; புளிங்காடி விரும்பாது. அதுபோல் மேன்மக்கள் கற்றோரை விரும்புவர், கீழ்மக்கள் விரும்பார் என்று காட்டியுள்ளார்.

நிலவின் வருகையால் கடல் பொங்கும்; சூரியன் வருகையால் பொங்காது என்ற உவமையைக் கூறி மக்கள் இன்சொல்லன்றிக் கடுஞ்சொல் விரும்பார் என்று கூறுகிறார்.

அறிவுடையோர்க்கு நல்லோர் வரவு இன்பமும் தீயோர் வரவு துன்பமும் அளிக்கும் என்பதற்குத் தென்றல் காற்றால் மாமரம்

மகிழ்தலையும், சூறைக்காற்றால் வருந்துதலையும் காட்டுகிறார். தென்றலுக்கு நல்லவரையும், சூறைக்காற்றுக்கு வன்னெஞ்சரையும் ஒப்பிட்டுள்ளார்.

ஒருநாள் இவர் தனியாகக் கடற்கரை சென்றார். அங்குள்ள மணற்பரப்பில் நன்னெறி வெண்பா நாற்பதையும் எழுதிவிட்டு வந்தார். தம் தம்பி கருணைப்பிரகாசரை அங்கு அனுப்பி அப்பாடல்களை ஏட்டில் எழுதி வரும்படி பணித்தார். அவரும் அப்படியே எழுதிவந்தார் என்று கூறுவர். இந்நூலுக்கு, சரவணப் பெருமாள் ஐயர், ந.மு. வேங்கடசாமி நாட்டார் முதலானோர் உரை எழுதியுள்ளனர்.

இன்சொல் என்பது மாசற்ற நெஞ்சுடன் சொல்லப்படுவது. இனிய சொல்லினால்தான் மக்கள் மகிழ்வர். வன்சொல்லினால் மகிழ்ச்சியடைய மாட்டார் என்று இன்சொல்லின் சிறப்பையும், அதனால் வரும் மகிழ்ச்சியையும் விளக்கியுள்ளார்.

அறிவுடையோர் பிறர்க்குத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்வர்; கோபத்திலும் கொடுப்பர். மூடர் மகிழ்ச்சியிலும் பிறர்க்குக் கொடார் என்கிறார் சிவப்பிரகாசர். மற்றவர்க்குக் கொடுத்து உதவுவதில் அறிவுடையோர், அறிவற்றோர் முதலியோரின் இயல்புகளைத் தெளிவாக்கியுள்ளார்.

### சிவநாம மகிமை

சிவநாமத்தின் சிறப்பை, பெருமையை, உயர்வைப் பதினொரு பாடல்களில் பாடியுள்ளார். இந்நூல்வழி முன்னோர் மொழிப்பொருளாம் அருளாளர்களின் மரபினையும் போற்றியுள்ளார். 'நாதனின் நாமமாகிய நமசிவாய', 'ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உய்ப்பது' என்று திருஞானசம்பந்தர் சிறப்பித்துள்ளார். 'நற்றுணையாவது நமசிவாயவே' என்று சிறப்பிக்கிறார் திருநாவுக்கரசர். 'நான் மறக்கினும் சொல்லும் நா நமசிவாயவே' என்று நமசிவாயப் பதிகத்தைச் சுந்தரமூர்த்தியார் கூறியுள்ளார். 'நமசிவாய வாழ்க' என நூலினைத் தொடங்குகிறார் மாணிக்கவாசகர். 'சிவசிவ என்கிலர் தீவினையாளர்' என உயர்வாகத் திருமூலர் காட்டியுள்ளார். இவ்வருட்பாக்களை ஓதியுணர்ந்து தமது படைப்புக்களுள் 'சிவநாம மகிமை' என்ற பெயரில் சிவப்பிரகாசர் தனி நூலினைப் படைத்துள்ளார்.

'சிவாயநம', 'நமசிவாய' என்பன திருவைந்தெழுத்து மந்திரமாகும். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' இது. இலக்கணத்திற்கேற்பத் தனி இலக்கியமாக திகழ்கிறது.

திருவைந்தெழுத்தைப் 'பஞ்சாக்கரம்' என்று கூறி அதன் நிலைகளைச் சித்தாந்தம் விளக்குகிறது. இம்மை, மறுமைப் பயன் அளிக்கும் இயல்பினது 'நமசிவாய'. இதனை 'ஸ்தூல பஞ்சாக்கரம்' என்பர். மலத்தை அழிக்கும் ஆற்றலுடையது 'சிவாயநம'. இதனை 'சூக்கும பஞ்சாக்கரம்' என்பர். பாசத்தைக் கெடுக்கும் இயல்பினது 'சிவாயசிவ'. இதனைக் காரணபஞ்சாக்கரம் என்பர். சிவத்தோடு இணைந்து இன்பம் அளிக்கும் இயல்பினது 'சிவ'. இதனை 'மகா காரண பஞ்சாக்கரம்' என்பர். சிவமாகவே ஆக்கவல்லது 'சி' ஆகும். இதனை 'மகாமநு' என்பர்.

திருமுறைகளைப் போன்றே சாத்திர நூல்களும் திருவைந்தெழுத்தை விரிவாக விளக்கியுள்ளன.

'சிவசிவ என்னச் சிவகதி' கிடைக்கும் நன்னெறியினைத் திருமந்திரம் விளக்குகிறது. அன்பு, அருள், சிவம் என மூன்றையும் அனுபவித்து உணர்ந்தவர்கள் அருளாளர்கள். இவற்றை அடையச் 'சிவ' எனும் மந்திரமே சிறந்தது என்பதைத் தம் பாடல்களில் தெளிவாக்குகிறார்.

ஒளியினைக் கண்ட இருள் விலகி ஓடுதல் போலச் 'சிவசிவ' என்று கூறத் தீமையெல்லாம் நம்மை விட்டு ஓடும் என்கிறார்.

நம் உறுப்புக்கள்தோறும் தீவினை செய்திருந்தாலும் 'சிவசிவ' என்று கூறினால் அவை தீர்ந்துவிடும் என்று அருமையாகவும், எளிமையாகவும் நெறிப்படுத்துகிறார். இதனை,

'நாக்கி னாலும் நயனங்களாலும் இவ்
வாக்கை யானும் அருஞ்செவியாலும் நம்
மூக்கி னாலும் முயங்கிய தீவினை
தீர்க்க லாகும் சிவசிவ என்மினே'

என்ற பாடலால் அறியலாம். 'வைதாரையும் வாழ வைப்பவன்' சிவன் ஆதலால், அவனை நிந்தை செய்தாலும் 'சிவ சிவ' எனச் சொன்னால் அத்தீவினையையும் இறைவன் மாற்றிவிடுவான் என்கிறார். இதைவிட எளிமையாகப் பக்தி நெறியை எடுத்து விளக்க முடியாது. அத்தகு எளிமை இப்பாடல்களில் அமைந்துள்ளன. அதுமட்டுமன்றி மனிதனால் செய்யத்தக்க தீய செயல்களில் கொடியது எதுவோ அதனைச் செய்பவரும் 'சிவசிவ' என்று ஒருமுறை சொன்னாலே அவரது பாவச் செயல்கள் நீங்கிப் புண்ணியபதம் அடைவர் எனப் புலப்படுத்தியுள்ளார்; அவனிடத்துள்ள தீயது அனைத்தும் தீர்ந்துவிடும் என்கிறார் சிவப்பிரகாசர்.

நினைந்து நினைந்து 'சிவசிவ' என்று கூறுபவரைக் கண்டால் கூற்றுவனும் உள் நடுங்குவன்; இது உறுதி என்கிறார். மேலும் ஒருபடி சென்று 'சிவசிவ' என்று ஒருமுறை கூறுபவன் 'எங்கள் குலதெய்வம்' எனப் போற்றியுள்ளார். வானோர் செல்வம் தருவதன்றித் தீமை நீங்கும். ஆயுள் பெருகும். நாள், கோள்களால் வரும் நோய் நீங்கும். அறம் வளரும். எல்லாச் சிறப்புக்களும் அடையும் என இத்திருநாம மந்திரத்தின் பயன்களை எடுத்தாள்கிறார். இதனை,

'தீய நாளொடு கோளின் செயிர்தபும்
நோய் அகன்றிடும் நூறு எனக்கூறிய
ஆயுள் பல்கும் அறம் வளர்ந்து ஓங்குறும்
தீய தீரும் சிவசிவ என்மினே'

என்ற பாடலில் அறியலாம்.

## தலவெண்பா

இந்நூல் கிடைக்கவில்லை. எனவே இதனுடைய விளக்கங்கள், செய்திகள் முதலானவற்றை அறிய முடியவில்லை.

## இட்டலிங்க அபிடேகமாலை

வீரசைவர்க்குரிய இட்டலிங்கத்திற்கு அபிடேகம் செய்யும் முறையை வியந்து பாடியுள்ளார் சிவப்பிரகாசர். இந்நூல் பத்துப் பாடல்களால் படைக்கப்பட்டுள்ளது.

சைவர்களுக்கு இலிங்கம் வழிபாட்டிற்கு உரிய வடிவமாக இடம் பெறுகிறது. வரலாற்றுக் காலத்திலிருந்தே இலிங்க வழிபாடு தொடங்கியது. தொல்பொருளாய்வாளர் கி.மு. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த இலிங்க வடிவங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாம்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்'

எனச் சேக்கிழார்பெருமான் குறிப்பிட்டுள்ளார். அவரின் கூற்றுப்படி இலிங்கம் சிவபெருமானைக் குறிக்கும் குறியாகக் கொள்ளலாம்.

வீரசைவர்கள் இலிங்கத்தைத் தமது அங்கத்தில் வைத்து வழிபட்டு வருகின்றனர். சிவப்பிரகாச சுவாமிகள் வீரசைவம் சார்ந்த பெரியோராதலால் தம் நூல்கள் பலவற்றுள் 'இட்டலிங்கம்' பற்றிக் கூறியுள்ளார்.

'இட்டலிங்க வழிபாடு' செய்பவன் ஏற்றம் பெறுவான் என்பதனைச் சுவாமிகள் தமது பிரபுலிங்க லீலையில் கூறியுள்ளார். இட்டலிங்கம் வீரசைவர்களுக்கு உயிர்போல் விளங்குகிறது.

இட்டலிங்க அபிடேகமாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில் என மூன்று படைப்புக்களிலும் 'இட்டலிங்கம்' பற்றிப் பாடியுள்ளார். இதனை ஏத்தி வழிபடும் கையைச் சிறப்பித்துக் 'கைத்தலமாலை' எனும் இலக்கியத்தைப் போற்றியுள்ளார்.

இந்நூல் இட்டலிங்கத்திற்குத் திருமுழுக்குச் செய்யும்போது பாடியதாக அமைகிறது. இந்நூலில் தத்துவக் கருத்துக்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. அபிடேகமாலை என்னும் பெயருக்கேற்ப ஒன்பதாவது பாடல் அமைகிறது. இட்டலிங்கம் அபிடேகம் கொள்ளும் முறையும், அபிடேகப் பொருட்களும் சொல்லப்பட்டுள்ளன. இட்டலிங்கத்திற்குரிய ஏழு வகையான தீக்கைகள், பிராணலிங்கத்திற்குரிய ஏழு வகையான தீக்கைகள், பாலலிங்கத்திற்குரிய ஏழு வகையான தீக்கைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

தாம் எப்பொழுதும் உடனிருத்தி வழிபட்டு வரும் இலிங்கம் இட்டலிங்கமாகும். இத்தகைய இலிங்கத்திற்குத் திருமுழுக்குச் செய்தபோது அடிகளார் இம்மாலையைப் பாடியருளினார். சிறந்த தத்துவப் பொருளைத் தன்னகத்துக் கொண்டது. 'மகிழ்ச்சியோடு அபிடேகம் ஆடியருளே' என்றும் 'அறிவுற்று என் அங்கைமலர் செறிவுற்றமர்ந்த இறை அபிடேகம் ஆடியருளே' என்றும் போற்றியுள்ளார்.

அபிடேகத்திற்குரிய பொருட்களாக எள்நெய், ஆனைந்து, மலர்கள், பழச்சாறு, இளநீர் ஆகியவற்றைக் கூறி 'ஆடல், பாடல் நடக்க... நீ அபிடேகம் ஆடியருளே' என்று பாடுகிறார்.

இட்டலிங்கம் அணிந்திருப்போருக்கு அபிடேக வழிபாடு இன்றியமையாதது என்பதை இந்நூல் வழி அறியலாம்.

## நெடுங்கழிநெடில்

இந்நூலும் இட்டலிங்கப் பெருமானை வழிபடும்போது துதித்துப் பாடப்பெற்ற நூலாகும். ஒவ்வொரு பாடலும்,

"இட்டநன் குதவியென் கரத் திருக்கும்
ஈசனே மாசிலா மணியே''

என முடியுமாறு அமைக்கப்பெற்றது. சிவபெருமான் தம் கைகளில் வீற்றிருப்பதற்குத் தம் கைகள் என்ன புண்ணியம் செய்தனவோ என்று வியக்கின்றார்.

இந்நூலின் முதல் பாடல் துறவறத்தைச் சிறப்பிக்கின்றது. அடியவர் பெறும் சிறப்பு இந்நூலில் மிகுதியும் விளக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் பாடலில் இறைவனின் அட்டமூர்த்தங்கள் பெருமைப்படுத்தப்பட்டுள்ளன. உரு, அரு முதலான இறை நிலைகள் புகழப்பட்டுள்ளன.

'எட்டுரு வடைந்து முருவமொன் றின்றி
இற்றென உணர்வரும் பொருளே...'

என்றும், 'என்கரத்திருக்கும் ஈசனே' என்றும் போற்றியுள்ளார். அழுக்காறு, அவா, வெகுளி, செற்றம் முதலியன அழுக்குகள். அவற்றைத் 'தியானம்' என்ற புனலால் நீக்குதலை விளக்கியுள்ளார். 'தீச்சொல் எனும் வாய் அழுக்கை நினது அருட்பாடலால் கழுவலாம்' என வழிகாட்டியுள்ளார்.

இறையடியார்களின் பெருமைகளும் புகழ்ந்து போற்றப்பட்டுள்ளன. தமது நிலையையும் விளக்கும் வகையில் 'உன் திருத்தொண்டன்' என்று இருக்கத் தாம் விரும்புவதைக் கூறியுள்ளார்.

நம்பியாரூரருக்கு ஏவல் செய்யும் இறைத்திறத்தைக் கூறி நூலினை முடிக்கின்றார்.

## குறுங்கழிநெடில்

முன்சொன்ன நூலின பாடலடிகளைவிடக் குறுகியது. ஆதலின் குறுங்கழிநெடில் என்று பெயர் பெற்றது இது. திருக்கையில் எழுந்தருளியுள்ள இட்டலிங்கத்தின் மீது பாடப்பட்டுள்ள நூலாகும். இந்நூலில் அமைந்துள்ள ஒவ்வொரு பாடலின் இறுதியும் 'ஈசனே! மாசிலாமணியே' என அமைந்துள்ளது. அருட்கடலே! கண்மணியே! என் உயிர்த்துணையே! என்று சிவனைப் புகழ்கிறார்.

'எந்தச் சூழலிலும் உனை மறவேன்' என்று கூறும் சிவப்பிரகாசர் சூழல்களை விரிவாகக் கூறியுள்ளார். இதனை,

"சரிப்பினு மொருபா லிருப்பினு முறக்கச்
சார்வினும் விழிப்பினு மொரு சொல்
உரைப்பினும் போக நுகர்வினு மாவி
யொழி வினு நின்னையான் மறவேன்"

என்று குறிப்பிட்டுள்ளார். இந்நூலிலுள்ள பாடல்கள் அனைத்தும் தமக்கும் இறைவனுக்கும் இடையிலான நெருக்கமான உறவினைப் புலப்படுத்துகின்றன. உவமைகளும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

தத்துவக் கருத்துகளும் இந்நூலில் ஒளிவிட்டு விளங்குகின்றன.

## நிரஞ்சன மாலை

கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் 31 கொண்டதாக இந்நூல் விளங்குகிறது. இட்டலிங்கப் பெருமானை வாழ்த்தும் நூலாகவே காணப்படுகிறது. வீரசைவக் கருத்துக்களைப் பதிவு செய்யும் நூலாகவும் இந்நூல் விளங்குகின்றது.

'நிரஞ்சனம்' எனும் வடசொல், நிறைவு, இருளின்மை ஆகிய பொருள்களைக் குறிக்கும் இந்நூல் மெய்யறிவின் நிறைவை உணர்த்துகிறது. அறிவின்மையைப் போக்கி மெய் அறிவைத் தரவேண்டுமென்று வேண்டுவதாக அமைகிறது.

இந்நூலின் மூன்றாவது பாடலில் 'என்னையறிதல் நினை அறிகின்ற இயல்பு' என்று குறிப்பிட்டு மெய்யுணர்தலைப் புலப்படுத்துகிறார். 'அங்கையின் நெல்லியென வந்து என் அங்கையமர்ந்த' என அழகிய உவமையின் வழி விளக்கியுள்ளார்.

சிவத்தின் தன்மை கூற வந்தவர், ஒன்றாய்ப் பலவாய் நிற்கும் தன்மையை,

'ஒன்றிரண் டாயவை பற்பல வாகி யுதித்தமுறை
சென்றிரண் டாகிப்பின் னொன்றாகி நிற்கும் சிவமொடங்கம்
என்றிரண்டாக வுரைப்பார் நினதிய லெய்திலர்காண்
மின்திரண்டாலன்ன மேனிய னேயென்கை வித்தகனே'

என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

இறைவன் ஆனந்தக் கடலாக வந்து தம் கையில் அமர்ந்திருக்கும் சிறப்பை, 'ஆனந்த வாரிதியாகிய நீ கையமர்ந்திருப்ப' என்ற பாடலடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

அழியும் பொருள், அழிவில் பொருள் எனப் பொருளின் நுட்பத்தையும் - பழி, பாவம், ஆகியவைபற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

## கைத்தலமாலை

சிவபெருமானின் திருவுருவத்தைத் தாங்கப்பெற்ற கை மிகச் சிறப்புடையதாகலின் அக்கையைக் குறித்துப் பாடப்பெற்றது

இக்கைத்தலமாலை. கலிநிலைத்துறை என்னும் பாவால் பத்துப் பாடல்களால் அமைந்துள்ளது. இந்நூலின் பாடல்கள் 'என்ன மாதவம் செய்ததோ எனது கைத்தலமே' என அமைந்துள்ளது.

இந்நூலின் எட்டுப் பாடல்களில் சிவபெருமான் அரி, அயன் தேடி அடைய இயலாத செய்தியும், இரண்டு பாடல்களில் கூற்றுவனை உதைத்த செய்தியும் விளக்கப்பெறுகின்றன.

இறையின் பெருமைகளைப் 'பன்னும்ஆரணம் போற்றுதற்கரிய நம் பரமன்' என்றும், 'முதல்வன்' என்றும், 'பெருந்தகை' என்றும், 'அரியவன், அ்ன்னையானவன், என் உயிர்க்குயிரானவன்' என்றும் கூறியுள்ளார்.

சிறப்புமிக்க சிவத்தலங்கள் பல இந்நூலில் சுட்டப்பட்டுள்ளன. அவை வடகாசி, தென்கயிலை, கேதாரம் முதலான தலங்களாகும்.

தன்னை இறைஞ்சுவார்களை நாடி இறைவன் வரும் செய்தியும் இறுதிப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

'இத்தகைய கடவுள் கைத்தலத்து வீற்றிருப்பதால் தம்கை மாதவம் செய்ததாக'வும் குறிப்பிட்டுள்ளார்.

## சீகாளத்திப் புராணம்

இப்புராணம் மூவரால் பாடப்பெற்றதெனக் கூறுவர். இப்புராணத்தின் முற்பகுதியைக் கருணைப்பிரகாசர் பாடி மறைந்தனர். இடைப் பகுதியைச் சிவப்பிரகாசர் பாடி மறைந்தார். இறுதிப் பகுதியை வேலையசுவாமிகள் பாடி நிறைவு செய்தார் எனக் கூறுகின்றனர். உடன்பிறந்தோர் மூவரும் சேர்ந்து பாடிய பெருமையைப் பெற்றது இந்நூல்.

சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கமும் நக்கீரச் சருக்கமும் சிவப்பிரகாசர் பாடியனவாகும். இவ்விரு படலத்திலும் புராணத்தின் பாத்திரப் படைப்பு உணர்வுபூர்வமாகவும், பக்திபூர்வமாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

நக்கீரச் சருக்கத்தில் திருமுருகாற்றுப்படை நிகழ்ச்சியும், தருமிக்குப் பொற்கிழி பெற்ற திருவிளையாடல் நிகழ்ச்சியும், நக்கீரரின் 'கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி' நூல் சிறப்பு என்பதையும் விளக்கி நிகழ்ச்சிகளைப் படைத்துள்ளார்.

'கயிலை வேறு காளத்திவே றென்றெண்ணுங் கருத்திலனாய்க்
கயிலை பாதி காளத்தி பாதியாக்க் கலந்துறழ்ந்தும்
மயலில் கரும் பாமொழிபாகன் மகிழ வெண்பா அந்தாதி
மயிலில் வருவோன் பேரருளால் வந்த புலவன் பாடினான்'

என்ற பாடலில் அந்த நிகழ்ச்சி இடம் பெறுகிறது.

கண்ணப்பச் சருக்கத்தில் கண்ணப்பரின் வரலாறு விரிவான விளக்கமாக இடம்பெறுகிறது. அதில் இலிங்கத்தின் பெருமையும் அது கிடைக்கும் முறையும் விளக்கப்படுகிறது. இலிங்கத்தின் பெருமையை 'அது துயரனைத்தும் வீட்டி அரும் பெறலின்ப நல்கும்' என்று குறிப்பிடுகிறார். கண்ணப்பரின் நிகழ்ச்சிகளை விரிவாகக் கூறி 'முதற்கண் இடந்து - அப்பிப்பின் அடுத்த கண் தோண்டத் தன் செருப்புக் காலைத் தம்பிரான் கண்ணில் ஊன்றிக் கணை கண்' வைக்கும் நேரத்தில் சிவபிரானே பொறுக்கலாற்றாது அருட்காட்சி தந்து கண்ணப்பரைத் தழுவும் நிகழ்ச்சியைக் கூறுகிறார். இதனை,

'இன்னுமோர் கண் எனக்குண்டாதலின் அதற்கஞ்சேன் என்று
அன்னது களைந்த காலை ஐயர் கண்ணறிதற்காகத்
தன்னொரு செருப்புக் காலைத் தம்பிரான் கண்ணி லூன்றிப்
பின்னடு கணை கண் வைத்தான் பிரானது பொறுக்கலாற்றான்'

என்றும்,

'மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தரும்பேராழி
இறைவன் கண்ணப்ப நிற்க வென முக்கான் மொழிந்த வன்கை
கறையணற் கங்கணத்த கையினாற் பிடித்துக் கொண்டான்
உறுநறைப் பொலம் பூ மாரியும்பர் மண் புதையப் பெய்தார்'

என்றும் வரும் பாடல்களால் அறியலாம்.

இவ்வாறு 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்ட' செய்தியைப் பெரியபுராணத்துள் அறிந்திருப்பது போன்றே சிவப்பிரகாசரின் திருக்காளத்திப் புராணமும் காட்டுகிறது.

இறைவனால் நேரடியாக வந்து ஆட்கொள்ளப்பெற்ற அன்பு வழி அடியாரான கண்ணப்பரையும், அறிவுவழி அடியாரான நக்கீரரையும் சீகாளத்திப் புராணத்தில் சிவப்பிரகாசர் பாடியுள்ளார்.

கண்ணப்பரின் பக்தித் திறத்தை உணர்வுபூர்வமாகப் பாடியுள்ளதனை,

'ஓடினான் திசைகளெல்லாம் உடம்பெல்லாம் குலுங்க நக்கான்
பாடினான் வாயில்வந்த படியெலாம் கைகள் கொட்டி
ஆடினான் துள்ளித் துள்ளி யாரவாரித்தானின்று
நாடினான் செய்த செய்கை நன்றுநன்று என வியந்தான்'

என்று கூறியிருப்பதால் உணரலாம்.

## சிவப்பிரகாச சுவாமிகள் தனிப்பாடல்கள்

பல்வேறு வகையான இலக்கியங்களைச் சிவப்பிரகாசர் படைத்திருப்பினும் தனிப்பாடல்களையும் பாடியுள்ளார். தனிப்பாடல்களைப் பாடிய வகையிலும் சிவப்பிரகாசர் சிறப்புப் பெறுகிறார். தனிப்பாடல்களாகப் பதின்மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன. இப்பாடல்களில் முதலாவதாக அமைந்திருப்பது திருமண நிகழ்ச்சியில் மணமக்களை வாழ்த்தும் வகையில் பாடியிருப்பதாகும். ஐந்து பாடல்களில் இவ்வாழ்த்துச் செய்தி அமைந்துள்ளது. இத்தகு பாடல்களில் இறைவன், இறைவி பற்றிய புராணச் செய்திகளும், நிகழ்ச்சிகளும் அமைந்துள்ளன.

தலச் செய்திகளில் அந்தந்த நிகழ்ச்சிகளைக் கூறியுள்ள இடங்களில் தனிப்பாடல் செய்தியும் இடம் பெற்றுள்ளது. விநாயகப் பெருமான், முருகப் பெருமான் பற்றிய செய்திகளையும் தம் தனிப்பாடல்களில் விளக்கியுள்ளார். உமையம்மையின் சிறப்புக்களைக் கூறியுள்ளார்.



# 3. பன்மொழிப் புலமை

'கற்பனைக் களஞ்சியம்' சிவப்பிரகாச சுவாமிகள் கடவுள் தத்துவத்தை உணர்த்தவும், மனிதநேயத்தை வளர்க்கவும் பல நூல்களைப் பாடியுள்ளார். அவற்றின்வழி அவரின் மொழியறிவையும் இலக்கண அறிவையும் சிந்தனைத் திறத்தையும் தமிழ் இலக்கியங்களில் தோய்ந்தமையையும் உணரலாம். அவ்வகையில் சுவாமிகள் பன்மொழிப் புலமையிலும் வல்லவராக விளங்கியுள்ளார். இதனை அவர் படைத்துத் தந்த நூல்கள்வழி அறியலாம். வடமொழி, கன்னடம், தெலுங்கு ஆகியவற்றிலும் சிறந்த புலமை அறிவு பெற்றிருக்கிறார்.

இந்த மூன்று மொழிகளிலும் ஆறு நூல்களைத் தமிழ்ச் செய்யுள் நூல்களாக மொழிபெயர்த்தும், சிறந்த மொழிபெயர்ப்பாசிரியராகத் திறம்படைத்துள்ளார் என்பதையும் அறியலாம்.

'கூவத் தல புராணம்' என்ற நூல் புராண வகையுள் இடம் பெறுவது. இது வடமொழிக் காந்தத்தின் சனற்குமார சங்கிதையின் ஒரு பகுதியாகிய காளிகா காண்டத்தில் இடம்பெற்ற கூவநகரச் செய்திகளின் மொழிபெயர்ப்பாகக் கூறலாம். இதனை அறிந்து கொள்ளத் 'திருக்கூவப் புராணம் - பாயிரம் - 14ஆம் செய்யுளில் 'கூவநீர்மை உட்கொண்டு யான் கூறுவன் தமிழால்' என்ற நான்காம் அடியால் தெளிவாக உணரலாம்.

'சதமணிமாலை' வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்ற தமிழ்ச் செய்யுள் ஆகும். சைவ சித்தாந்தத்தை விளக்கிய சந்தான ஆச்சாரியர்களுள் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியார் பத்துச் சிவாகமங்களில் இடம் பெற்றுள்ள ஞானபாதச் செய்திகளைத் தொகுத்துச் 'சத ரத்ன சங்கிரகம்' என வடமொழியில் தொகைநூல் ஒன்றை இயற்றியுள்ளார். அதன் மொழிபெயர்ப்பாகச்

சிவப்பிரகாசர் தமிழ்ப்படுத்திச் 'சதமணிமாலை'யை இயற்றியுள்ளார். இந்நூலும் அவரின் வடமொழிப் புலமைஅறிவுக்கு மற்றொரு சான்றாகும்.

'தருக்க பரிபாஷை' - இது சுவாமிகளால் படைக்கப்பெற்ற ஒரே உரைநடை நூலாகும். இதில் இடம் பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் வடமொழி நூலுக்குரிய விளக்கச் செய்திகளால் இருப்பதால் தமிழாக்கம் செய்யப்பெற்றதாகக் கருதலாம்.

மேற்கூறிய மூன்று இலக்கிய வகையின்வழி சிவப்பிரகாசரின் வடமொழிப் புலமையால் நூல்கள் தமிழாக்கம் செய்யப்பெற்றதை அறியலாம்.

சிவப்பிரகாசரின் பெரும் புகழுக்குக் காரணமாகிய காப்பிய நூல் 'பிரபுலிங்க லீலை' ஆகும். இது கன்னட மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பெற்ற தாகும். கன்னட மொழியில் நிஜகுண யோகி என்பவரால் இயற்றப்பெற்றுள்ள 'விவேக சிந்தாமணி' என்ற நூலின் ஒரு பகுதியான 'வேதாந்த பரிச்சேதத்தை'ச் சிவப்பிரகாசர் 'வேதாந்த சூடாமணி' என மொழிபெயர்த்துள்ளார். ஆக, பிரபுலிங்க லீலையும், வேதாந்த சூடாமணியும் என இரண்டு வகை இலக்கியங்கள் கன்னடம் தந்த மொழிபெயர்ப்புக்கள். இவற்றால் சிவப்பிரகாசரின் கன்னட மொழி அறிவை அறியலாம்.

சீகாளத்திப் புராணத்தின் இரு சருக்கங்களைச் சிவப்பிரகாசர் பாடியதை நூல் அறிமுகத்தில் அறிந்தோம். அந்நூலின் மூலக்கருத்துக்கள் தமிழ்மரபில் உள்ளன. இருப்பினும் 'தெலுங்கில் தூர்ஜடி மகாகவியால் இயற்றப்பெற்றுள்ள 'காளஹஸ்தி மஹாத்மியமு' என்பதன் மொழிபெயர்ப்பாகவும்' கூறுவர். இதன்வழி சிவப்பிரகாச சுவாமிகளின் தெலுங்கு மொழிப் புலமையும் தெளிவாகிறது.

இதுகாறும் அறிந்ததன் வழி சிவப்பிரகாசர் மூன்று மொழிகளிலிருந்து ஆறு வகையான நூல்களைச் செய்து அவற்றுள் ஒன்றை உரைநடையாகவும், ஐந்தைச் செய்யுள் நூல்களாகவும் இயற்றித் தமது பன்மொழியறிவையும் வெளிப்படுத்தியுள்ளார் என்பது தெளிவு.



# 4. கடவுட்கொள்கை

மெய்ஞ்ஞானம் அடைவதே சிவப்பிரகாசருக்குக் குறிக்கோள். அதனை அடைவதற்கான நெறிகளைப் பல பாடல்களில் கூறியுள்ளார். மெய்யடியார்களுக்குச் சிவன் தன் உண்மைத் தன்மையைக் காட்டுபவனாக விளங்குகிறான். சிவசக்தி வடிவில் இருப்பவன் சிவபெருமான். சிவன் செய்யும் தொழில்களுக் கெல்லாம் உடனிருப்பவள் சக்தி. அவள் சிவனுக்கு அமுதாக இருப்பவள். சிவசக்தி தத்துவத்தை உணர்ந்தாலன்றி முக்தி கிடைக்காது. பிறப்பு, இறப்பு இல்லாத சிவனால்மட்டுமே முக்தியைத் தரமுடியும். மெய்யடியார்களுக்கு மட்டுமே சிவத்தை உணரமுடியும்.

மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கான நெறிகளையும் தம் பாடல்களில் கூறியுள்ளார். ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்களிலிருந்து நீங்க வேண்டும். இவற்றிற்குக் காரணம் வினைப்பயன். அதற்கு ஆசைகள் அடிப்படையாக உள்ளன. அவற்றை வேருடன் நீக்க வேண்டும். மண், பெண், பொன் முதலான ஆசைகளே பிறவித் துன்பங்களுக்குக் காரணம் ஆகின்றன. சிவப்பிரகாசர் சிற்றின்பம், வினை, அறியாமை, ஆசை முதலானவை குறித்துப் பல்வேறு பாடல்களில் பாடியிருப்பது, வீடுபேறு ஒன்றையே அடைவது அவருடைய குறிக்கோள் என்பதை உணர்த்துகிறது.

இறைவன்மீது செலுத்தும் தீராத பக்தியினால்மட்டும் அவன் அருளினைப் பெறமுடியும். வீடுபேறு எனும் குறிக்கோளை அடையப் பக்தி நெறியே அடிப்படையாக உள்ளது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகள் இறைவனை அடைவதற்குரிய வழிகள். அவற்றுள்ளும் சரியை, கிரியை இரண்டினால்மட்டுமே தொண்டு செய்து பெறும் பேற்றினைப்

பெற முடியம். தொண்டு செய்யாமலே இறைவனை அடைவது ஞான மார்க்கம். சாதாரண நிலையிலிருந்து மனிதன் படிப்படியாக மனத்தால் உயர்ந்து வரமுடியும். எனவே, எல்லா உயிர்க்கும் ஈடேறுவதற்கான வழிகளைத் தம் பாடல்களில் விளக்கியுள்ளார்.

மேற்கூறிய நான்கு நெறிகளைப் பின்பற்றுதல், மெய்யடியார்களுக்கு அடிமையாக இருந்து தொண்டு செய்தல், அடியார்களைப் போலவே விரதமிருந்து உடம்பு வருத்தித் தவம் செய்தல், மெய்ந்நூல்களைக் கற்று, அவற்றின் வழியில் நடத்தல், இறைவனுக்கு உகந்தவையான திருநீறு பூசுதல், உருத்திராக்கம் அணிதல், திருவைந்தெழுத்தைப் பலமுறை கூறுதல் ஆகியவற்றையும் பல நூல்களிலும் விரிவாக விளக்கியுள்ளார். எனவே, மெய்ப்பொருளைத் தேடுவதற்கு அல்லது அடைவதற்கு இவை உதவும் என்பதிலும் சுவாமிகள் அழுத்தம் காட்டியுள்ளார்.

சிவ வழிபாட்டு நெறிகளின்வழி கிடைக்கும் பயன்களையும் விளக்குகிறார். சிவன், பிரமன், திருமால் எனும் முக்கடவுளர்களில் முதற்கடவுளான சிவபெருமானை, சிவனோடு இணைந்து தொழில் புரியும் பிரமனும், திருமாலும்கூட வழிபடுவர். அவர்களோடு இந்திரன் முதலான தேவர்களும் சிவனை வழிபாடு செய்வர். கடவுளர்களும் தேவர்களும் தங்களின் பக்தி மேலீட்டால் வழிபாடு செய்து பேறு பெற்றனர் என்பதை அறியலாம்.

'இம்மைமறு மைப்பயனும் மறையின்முடி
தெருட்டு பேர் இன்ப வீடு'

எனும் பாடலடிகளின்வழி சிவப்பிரகாசர் பட்டியலிட்டுக் காட்டுகிறார். துயரங்களைப் போக்க வேண்டி இறைவன் பல்வேறு தோற்றம் கொண்டு, நல்ல சக்திகளுக்குத் திருவருள் புரியும் இறைவன் தீய சக்திகளை வேரோடு களையச் செய்கிறார். சிவபெருமான் கடவுளர்கள், தேவர்கள், அடியார்கள் எனும் மூவகையினரின் துயர் துடைத்துள்ளார். துன்பங்கள், துயரங்கள் தங்களிடத்து வந்தபோதும் தங்கள் நெறியிலிருந்து வழுவாத நிலை கொண்ட அடியார்க்கே இறைவன் வீடு பேறு தருகிறான்.

மேலும் இவர் வீரசைவ சமய நெறிகளை நன்கறிந்துள்ளார். சைவ சித்தாந்தத்தைத் தமது வாழ்க்கையின் வழியாகக் கொண்டுள்ளார். சிவத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று நன்னெறி காட்டிய தனிப்பெருமை பெற்றவர். வீடு பேறு பெற ஈசனைப் போற்றி வணங்குதல் வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக,

'மருவே மலரே சரணம் சரணம்
மணியே ஒளியே சரணம் சரணம்
திருவே பொருளே சரணம் சரணம்
தேனே அமுதே சரணம் சரணம்
இரவே பகலே சரணம் சரணம்
எமையாளுடையாய் சரணம் சரணம்
அருவே உருவே சரணம் சரணம்
அருளாகரனே சரணம் சரணம்'

என்ற பாடலைக் காட்டலாம்.

மெய்ஞ்ஞானத்தைப் போதிக்க மனிதருள் வேற்றுமை காணக் கூடாது என்கிறார். எல்லோர்க்கும் மெய்ப்பொருளை விளக்கும் பாங்கைப் பிரபுலிங்க லீலையில் விளக்குகிறார் சுவாமிகள். இறைவனை ஆணவத்தாலோ அதிகாரத்தாலோ கல்வியாலோ அடைய முடியாது. அன்பால்மட்டுமே காண முடியும். அப்போதே அவனருளில் தோய முடியும் என்பதைப் பிரபுலிங்க லீலை குறிப்பிடுகிறது. தன் மெய்ப்பொருளின் திரண்ட வடிவாக அல்லமன் நிலவுலகில் தோன்றியுள்ளான். அவனே யாவர்க்கும் முக்தியடையவும் வழிகாட்டுவோன். அவனை ஆணவத்தால் காண முடியாது. அன்பால் காணலாம் என்று கூறுவதாகச் சிவப்பிரகாசர் காட்டுகிறார்.

பக்தியால் எதையும் சாதிக்கலாம் என்பதும் அவரது ஆழமான கொள்கையாக இருந்துள்ளது. பழி, பகை, அச்சம், துன்பம், பிணி, நிந்தை, வறுமை, சோகம், மோகம் அனைத்தும் நீங்கும் என்று உறுதியாகக் கூறுகிறார். நம்பிக்கையூட்டுதல் வழியும் பக்தியைச் செலுத்தும் பாங்கினைச் சிவப்பிரகாசர் காட்டுகிறார். பக்தியில் வேறுபாடு காணாத நிலையையும் விளக்கியுள்ளார்.

கடவுட் கொள்கையில் ஆன்மநேய ஒருமைப்பாட்டை வலியுறுத்துவதும் இவரது கொள்கையாக அமைகிறது. சமூக உணர்வில், கூட்டுப் பொறுப்புக்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். சமுதாயத்திற்கு வேண்டிய கல்விச் செல்வத்தையும் வழங்கி இறைப் பேருண்மையைத் தெளிவாக்கியுள்ளார். மனிதப் பிறவியின் குறிக்கோள் இறைவனடியடைந்து, பிறவியில்லாப் பெருவாழ்வு பெறுவதாகும். இதனை,

'ஞான நூல்தனை யோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றா

ஈனமிலாப் பொருள்தனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை'

என்ற சிவஞான சித்தியாரின் பாடலடிகளுக்கேற்ப நெறி கொண்டு வாழ்ந்தவர் சிவப்பிரகாச சுவாமிகள் எனலாம்.

'திருநாவுக்கரசு' என்ற பெயரினை எழுதியும் கூறியுமே அப்பூதியடிகள் இறைவன் திருவடியடைந்தார். அதுபோல 'வாதவூர் அண்ணலை' மனத்தில் பிணிக்க வல்லார்க்குத் தாமே முத்தி தருகுவன் சிவன் என்பதைக் கூறுமிடத்துச் சிவப்பிரகாசரின் கடவுட் கொள்கை புலனாகிறது. இந்நிகழ்ச்சிகளின்வழி அன்பு நெறியால் கடவுளையடையும் நன்மை புலப்படும்.

சிவப்பிரகாச சுவாமிகளோடு நெருங்கிய தொடர்புடையவரான சாந்தலிங்க அடிகளாரால் துறவு நெறியாம் 'இகலிலா நெறி' விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. அப்பெருமான் இகலிலா நெறிக்காக 'அவிரோத உந்தியார்' என்ற ஆப்த வாக்கியம் தந்தவர். சமய உலகில இவரது 'அவிரோதம்' எனும் முரணின்மைக் கோட்பாடு சிறப்புற்று நிற்கும் தன்மையது. 'எந்தவொரு சமயிகள் எந்தவொரு கொள்கை கூறினாலும் அது தற்போதத்தை நீக்குமாயின் அதனை இகல் இன்றி ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்' என்பதைச் சாந்தலிங்க சுவாமிகள்,

'எம்மதத்தோர் எவ்வகை நிட்டை சொல்லினும்
சம்மதமே எமக்கு உந்தீபற
தற்போதம் மாய்க்குமேல் உந்தீபற'

என்று அருளுகின்றார்.

ஒத்த கருத்துடையோரை நட்பாம்கிழமை கொண்டவர் என்ற கருத்தால் சிவப்பிரகாசரும், சாந்தலிங்கரும் 'இகல் இலாத ஞானப்பண்பினர்' எனலாம். இரு துறவோர்கள் கொண்ட நெறியாதலால், முரண்மை நெறியைத் துறவு நெறியாகக் கொள்ளலாம். நட்புடைய நெறி துறவோர்க்கும் உரிய நெறி என்பதைச் சிவப்பிரகாச சுவாமிகள் விளக்குகிறார். சாந்தலிங்கர் முதலான துறவோர்களிடத்துச் சிவப்பிரகாசர் தொடர்பு கொண்டதை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

முழுமுதற் பொருளின் எண்குண இயல்புகளை விளக்கியுள்ளார்; முப்பொருளியல்பை விளக்கியுள்ளார்; ஐந்தொழிலாற்றும் முதல்வனின் சிறப்புக்களைத் தெளிவாக்கியுள்ளார்.

இறைவனை மட்டுமே பாடவேண்டும் எனும் கொள்கையுடைய சிவப்பிரகாசர் இறைவனையே பாடிய இறையடியார்களையும் கடவுளாகவே கண்டு வழிகாட்டியுள்ளார். தமது வாழ்வியல் கொள்கையும் இறைவனைப் பாடுவது என்பதேயாகும்.

சுவாமிகளின் பற்றற்ற துறவுள்ளமும் சைவ சமய நூல்களிடத்து ஈடுபாடும் கற்பனைத் திறமும் உவமையமைக்கும் திறமும் தத்துவ நூலறிவும் இவர் யாத்த நூல்களில் இடம் பெற்றுள்ளன. இருப்பினும், சீரிய இறையன்பே அவற்றின் அடிப்படை என்பதை அவர் கொள்கையாகக் கூறலாம்.

'பிறவாமையை வேண்டுவோர் வேண்டுக. ஆனால் யானோ மதுரம் பெருகுறு தமிழ்ச் சொல் மலர் நினக்கு அணியும் பிறப்பையே வேண்டுவேன்' என்கிறார். மற்றோர் இடத்தில் 'உகம் பல வாழினும் அன்றியோர் கணத்தில் இறப்பினும் நல்லதே உனது கமல மலரடிக்கு அன்பராய் இருக்க நேரின்' என்ற கூற்று அவரது இறையன்பின் உறுதிக்குச் சான்றாகும்.



# 5. சிவப்பிரகாசரும் வீரசைவமும்

பாரத நாட்டின் தொன்மைச் சமயம் சைவம். சைவ சமயத்தில் நிலவிய மூடச் சிந்தனைகளை விலக்கி அகத்தைத் தூய்மைப்படுத்துவதற்காகத் தழைத்தது வீரசைவம். சாதிபேதங்கள், தேவையற்ற சடங்குகள் முதலானவற்றை எதிர்த்துப் புரட்சி செய்ததால் 'வீர' எனும் அடைமொழி பெற்றது. தாய்ச் சமயமாம் சைவத்திற்குச் சமத்துவம் எனும் கோட்பாட்டை வழங்கியது 'வீரசைவம்' ஆகும்.

''சைவ சமயம் சிவசம்பந்தம் உடையது. சிவன் வீரக்கடவுள். சிவனுக்கு 'வீர' என அடைமொழி இணைக்கப்பட்டது. சிவன் 'வீரசிவன்' ஆனான். வீரசிவனை வழிபடுபொருளாகக் கொண்ட சமயம் 'வீர சைவம்' எனப் பெயர் பெற்றதை'' முனைவர் வை. இரத்தினசபாபதி அவர்கள் விளக்கியுள்ளார்.

வீரசைவத்தைத் தோற்றுவித்தவர்களாக ஐந்து ஆச்சாரியர்களைக் கூறுவர். கி.பி. 12ஆம் நூற்றாண்டில் கருநாடக மாநிலத்தில் வாழ்ந்த வசவண்ணரால் புதிய பரிமாணத்தைப் பெற்றது.

சிவப்பிரகாசர் காஞ்சியில் பிறந்தாலும், துறைமங்கலம் பேரூர் முதலான மடங்களின்வழித் தமிழகத்தில் வீரசைவத்தை வளர்த்த அறிஞர் ஆவார். அல்லமரின் வரலாற்றைத் தமிழ் மரபுக்கேற்பப் 'பிரபுலிங்க லீலையாக'ச் சிவப்பிரகாசர் பாடியுள்ளார். இந்நூலின் வழி சிவப்பிரகாசர் வீரசைவக் கருத்துக்களை விரிவாக விளக்கியுள்ளார்.

இறைவனும், இறைவியும் கயிலையில் உரையாடுகின்றனர். அங்கு வரும் திருமால் உள்ளிட்ட தேவர்கள் 'வீடுபேறு அடைய முடியுமா?' என இறைவி, இறைவனிடம் கேட்கின்றார்.

'மண்ணுலகில் மக்களாய்ப் பிறந்தவர்கள் யோக நெறியில் ஒழுகினால் வீடுபேறு அடையலாம்' எனப் பதில் தருகிறார் இறைவன். 'மனிதப் பிறவிகளாக மண்ணுலகம் செல்வோருக்கு யார் வீடுபேறு அளிப்பர்?' என இறைவி வினவ, இறைவன் 'யாமே உரு அருவ வடிவில் அல்லமப் பிரபுவாக அவதரித்து வழிகாட்டுவோம்' என்கிறார். இவ்வடிவத்தை மண்ணுலகில் கண்டுவரத் தமோ குணமுடைய மாயையை இறைவி அனுப்பித் தோல்வி அடைகிறாள்.

மாயை நீண்டகாலம் ஆகியும் வராதது குறித்து விமலையை அனுப்புகிறாள். மாயை அல்லமரின் ஆற்றலை விமலைக்கு விளக்குகிறாள். பின்னர் அல்லமர் பல இடங்களுக்கும் சென்று வீரசைவத்தை வளர்க்கிறார். இறைவி இங்குள்ள சூழ்நிலை குறித்து இறைவனிடம் வினவ, வீரசைவ நெறி பரப்புதலில் ஈடுபட்டிருப்பதை விளக்குகிறார். அவரால் வீரசைவம் உயர்நிலை அடைந்தது என்றும், இறைவிக்கு இறைவன் எடுத்துரைத்தார் என்றும் பிரபுலிங்க லீலை கூறுகிறது.

வீரசைவக் கருத்துக்களாக,

தலம்
மெய்யறிவு
வீரசைவ நெறிகள்
ஏமநெறி
அகத்தீ நெறி
நந்தி நெறி
நாக நெறி (யோக நெறி)
இலிங்காயதர்

வீரசைவத் துறைகளாக,

ஐவகை ஒழுக்கம், எண்வகைக் காப்பு,
இலிங்க ஒழுக்கம் அறுவகையிணைப்பு,
சிவ ஒழுக்கம், சகுந்தலம்,
தாழ்வெனும் தகவு, குருவின் தீட்சை,மொழிகள்,
கூட்டமைப்பு, ஆகமங்கள்

எனச் செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

மூலப் பரம்பொருளைத் 'தலம்' என்கிறது வீரசைவம். சிவனே உயிர்ப்பொருள், உயிரில் பொருள் என அமைத்து பிரபஞ்ச சக்தியாக விரிவு அடைகின்றான் என்பதே இதன் படிநிலையாகும். பிரபுலிங்க லீலையில் அல்லமதேவர், முத்தாயி அம்மைக்கு மெய்ப்பொருள் உணர்த்தி வீடுபேறு அளிக்கும் நிலையில் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருள் சிவம் என்பதைக் கூறி, பிறவிப்பிணி நீங்க, அச்சிவத்தோடு ஒன்ற வேண்டும் என்பதை வசவண்ணருக்கு அல்லமதேவர் எடுத்துரைக்கிறார். அதனால் இறைவன் உயிர்களோடு ஒன்றியிருக்கும் அத்துவித தத்துவத்தைக் குறிப்பிடுகிறார்.

சிவஞானமாகிய மெய்ப்பொருளை அறிவதே வீரசைவத்தின் குறிக்கோள் என்பதையும் இந்நூல் விரிவாக விளக்குகிறது. பரமஞானத்தை அடைய உயர்ந்த மெய்யறிவே பயன்படும் என்கிறார். இதனை, 'உரைசெயில் பரமஞானம் ஒன்றுமே முக்திக்கேது' என்ற பாடலடியால் உணரலாம்.

வீரசைவ நெறிகளுள் 'அகத்தீநெறி' பற்றியும் இந்நூல் கூறுகிறது. 'யாராலும் காணுதற்கு அரிய அரு உரு வடிவில் உலகில் விளங்குவேன்' என்று இறைவனே கூறியிருப்பதன்வழி 'அன்புரு நிலையில் அகத்தில் காண்போருக்கு அல்லமதேவன் அருள் கிடைக்கும்' என்று கூறுவதனால் அறியலாம்.

'ஏம நெறி' என்பது உடலைப் பாதுகாப்பாக வைத்து இறைநெறி அடைய உலகியலை எதிர்த்து நிற்பது ஆகும். இதனைப் புலப்படுத்திச் சிவப்பிரகாசர் பிரபுலிங்க லீலையில் மாயை உற்பத்தி கதியில் முனிவர்கள் உடலை ஏமமாக வைத்து அல்லமதேவரை நோக்கித் தவம் செய்தலைக் குறிப்பிடுகிறார்.

> 'நெஞ்செனும் அகலில் அன்பால் நெய்நிறைத்துள்ளம் என்னும்
> பஞ்சுறு திரியின் உச்சி பற்றிட அல்ல மப்பேர்
> அருஞ்சுடர் இலக ஏற்றி அருந்தவர் மாயை என்னும்
> துஞ்சிருள் அகன்றி ருந்தார்'

என்று கூறி அல்லமதேவனாகிய விளக்கு ஏற்றி மாயை என்ற இருள் போக்கியதை அறிய முடிகிறது.

'நந்தி நெறி' என்பது உடலைப் பொன்னுடலாக மாற்றி மரணமிலாப் பெருவாழ்வு எய்த வழிகாட்டக்கூடிய 'யோக' நெறியாகும். இந்நெறியை விளக்கத் தோன்றிய வசவண்ணர்

நந்தியின் அவதாரம் என்பது வீரசைவ மரபு என்று கூறி இதனையும் சிவப்பிரகாசர் இந்நூல்வழி விரிவாக விளக்கியுள்ளார்.

'நாக நெறி' என்பது யோகப் பயிற்சி மூலம் மனிதனைவிட மேலான உருவம் பெற்று வாழும் நெறியாகும். இந்நெறியாகிய சிவயோகத்தில் மூழ்கிப் பேரின்பப் பெருவாழ்வை அடைதலை இந்நூல் விரிவாகக் 'கொக்கிதேவர்' வரலாற்று நிகழ்ச்சியில் விளக்குகிறது.

'இலிங்காயதர்' என்பவர் உடம்பில் லிங்கத்தைக் கட்டித் தொங்கவிட்டிருப்பதால் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர். மனத்தை இலிங்க வடிவமாக்கல் வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும். யோக நெறி மூலம் உயிர்க் காற்றை நிறுத்தி மனத்தை லிங்க வடிவமாக்கினால் வீடுபேறு கிடைக்கும் என்கிறார் சிவப்பிரகாசர்.

வீரசைவத் துறைகளுள் தனிமனிதனை உலகப்பொது மனிதனாக மாற்ற ஐவகையொழுக்கங்கள் பயன்படுத்தப் படுகின்றன. இவற்றை விரிவாகச் சிவப்பிரகாசர் விளக்கியுள்ளார்.

'இலிங்க ஒழுக்கம்' என்பது ஆணவத்தை ஒழித்து வினைவலி அறுக்கும். இம்முறையையும் பல பாடல்களில் விளக்கியுள்ளார்.

'சிவ ஒழுக்கம்' என்பது தலை, உள்ளம், கை எனும் மூன்றும் இணைந்து மக்கட்தொண்டு புரிய வேண்டும் என்னும் நியதியாகும்.

'தாழ்வெனும் தகவு' என்பது உலக உயிர்கள் அனைத்தையும் சமமாகப் பாவித்துத் தொண்டு செய்தல் இவ்வகை ஒழுக்கம் ஆகும்.

'கூட்டமைப்பு ஒழுக்கம்' என்பது அடியவர் கூட்டத்தோடு கலந்து பழகும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்வதாகும். இந்நூலில், வசவேசர் அல்லமப் பிரபுவையும், சிவ அடியார்களையும் போற்றி அவர்களோடு கலந்துரைக்கின்றார். வசவேசர் சிவனடியார்களுக்கு உணவு படைத்துச் சிவத்தொண்டு புரிகிறார். வசவேசர் அல்லமர் மீது கொண்ட பக்தியால் அடியவர் தொண்டினை மறந்துவிடுகிறார். அப்போது அல்லமப்பிரபு அடியார்க்குச் செய்யும் தொண்டினை நினைவூட்டி மெய்ப்பொருள் உணர்த்துகிறார்.

இதனை நன்குணர்ந்த வசவேசர் தமது மறதிக்கு வருந்தி இறைவனைக் கருதித் தன்னிலைக்கு இரங்கி நிற்க,

'செம்மை நெறியான் அருணந்தி தேவன் தன்னைப் புகழ்வமோ
பொய்ம்மை தீரும் அல்லமனைப் புகழ்வமோ விங் கன்றியிவர்

தம்மை விழியாற் காண்பதற்குத் தவஞ்செய் துடலம் இது பெற்ற
எம்மை யாமே புகழ்வமோ என நின்றனர்தம் பிரானடியார்'

என்று சிவ அடியார்கள் தவறை உணர்ந்ததால் நேர்மையான வசவண்ணரையும், மெய்ப்பொருள் உணர்த்தியதால் அல்லமதேவரையும் புகழ்கிறார்.

சிவஞானத்தை வழங்கும் வகையில் எண்வகைக் காப்பு, அறுவகையிணைப்பு முதலான வீர்சைவக் கொள்கைகள் பிரபுலிங்க லீலை நிகழ்ச்சியில் விளங்குகின்றன.

குருதீட்சை என்பதில் வீர்சைவம் குருவானவர் தீட்சை செய்யும் மொழிகளுக்குச் சிறப்பிடமும், முதலிடமும் தருகிறது.

வீரசைவம் வேதத்தைவிட ஆகமங்களுக்கே சிறப்பிடம் தருகிறது. 'ஆகமம்' எனும் சொல் ஒன்றிலிருந்து வெளிவந்தவை எனும் பொருள் தருவது. ஆகமங்கள் சிவனிடத்து வந்ததாக வீரசைவ நெறிகள் கூறுகின்றன. பிரபுலிங்க லீலையில் அருமறை முடிவும் ஆகமத்தின் முடிவும் ஒத்திருப்பதை, இறைவன்,

"அருமறை முடியும் சீர்சால் ஆகமமுடியும் ஒத்துப்
பொருமறம் இலாமல் முற்றும் பொருளினை விளங்கக் காட்டித்
தருமறை அதனால் வீரசைவமே தலைமைத்தாம்இவ
இருமறு வறுநன் னூலும் இதிற் பிரமாணம் ஆகும்"

எனக் கூறி ஆகமங்கள் அன்பும், சிவமும் கலந்த சிவத்துவத்தை அளிக்க வல்லது என இறைவியிடம் கூறுவதாக அமைகிறது.

இலிங்கத்தின் பாகுபாடுகளைத் திருமூலர், அண்டலிங்கம், பிண்டலிங்கம், ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சதாசிவ லிங்கம் எனச் சிவலிங்க தத்துவமாக விளக்கியுள்ளார். இட்டலிங்க வழிபாடு செய்பவன் ஏற்றம் பெறுவான் என்பதையும் பிரபுலிங்க லீலையில் கூறியுள்ளார்.

'இட்டலிங்கம்' வீரசைவர்க்கு 'உயிர்' ஆதலால் அதன் சிறப்பைக் கருதுகிறார் சிவப்பிரகாசர். அதற்கென இட்டலிங்க அபிடேக மாலை, நெடுங் கழிநெடில், குறுங் கழிநெடில் என்னும் மூன்று நூல்களையும் பாடியுள்ளார். மேலும் இட்டலிங்கத்தைத் தம் கையில் வைத்து அபிடேகம் செய்யும் முறையையும் விளக்கியுள்ளார்.

அன்பால் இறைவனை அடைய முடியும் என்ற அன்புக் கொள்கையை வீரசைவத்தின் வழி விளக்குகிறார்.



# 6. சிவப்பிரகாசரின் தலப்பயணமும் திருமடங்களும்

தமிழகத்தில் 'மடங்கள்' அமைத்து, அதில் அருள் நிலையுடையோர் தங்கிப் பணிகள் செய்யும் பழக்கம் முற்காலத்தில் இருந்துள்ளது. நாயன்மார் காலத்தில் திருமடங்கள் சமயச் செந்நெறியை வளர்க்கும் அமைப்பில் நாடெங்கும் உருவாயின. அருளாளர்களும், அடியவர்களும் அத்திருமடங்களில் தங்கித் தத்தம் சமயப் பணிகளை வளர்த்தனர். பக்தி நெறியும் திருத்தொண்டு நெறியும் அவற்றின்வழி செழித்தோங்கின. திருநாவுக்கரசரையே குலதெய்வமாகக் கொண்டு வழிபட்ட அப்பூதியடிகளாரின் அறப்பணிகளுள் ஒன்று திருமடம் அமைத்தலாகும். அவை வருவோர், போவோர் ஆகியோருக்குத் தங்குமிடங்களாகவும், உணவு உண்ணும் இடங்களாகவும் இருந்தன. அவற்றின் வளர்ச்சியில் 'குருமரபு' முதலியன தோற்றம் பெற்றுச் சீடர்களை உருவாக்கி இலக்கியப் பணிகளையும் வளர்த்தன.

அத்தகு திருமடங்களின் சார்பில் கடவுளர்க்குத் திருக்கோயில்கள் எழுப்பப்பெற்றன. அவற்றில் நாள் வழிபாடுகளும் சிறப்பு வழிபாடுகளும் பெருகின. மக்கள் பக்தியுணர்வோடு செம்மை நலம் பெறப் பெருமளவில் அவற்றை நாடி வந்தனர். அவை தெய்விக ஆற்றல் பெற்றவையாகத் திகழ்ந்தன. அதனால் திருமடங்கள் பக்தியை வளர்த்துச் சமய, சமுதாயப் பணிகளை ஆற்றின. மொழிக்கும் பணி செய்தன. எனவே மொழி, சமுதாயம், சமயம், பக்தி ஆகியவற்றில் ஒருமைப்பாட்டுணர்வைக் கருதிச் செயல்பட்டவையாகத் திகழ்ந்துள்ளன.

அவ்வகையில் துறைமங்கலம் சிவப்பிரகாசரின் தலப்பயண வரலாற்றில், அவர் திருமடங்களில் தங்கிப் பணியாற்றி, இலக்கியங்களைப் படைத்துப் பெருமை செய்த நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன.

## சிவப்பிரகாசரும் திருமடங்களும்

சிவப்பிரகாச அடிகளார் தமிழகத்திலுள்ள பல திருமடங்களுக்கும் எழுந்தருளி ஞானப் பணியாற்றிய நிகழ்ச்சிகளை அவரது வரலாற்றால் அறியலாம். அவர்தம் தந்தையார் குமாரதேசிகரே திருவண்ணாமலையில் தீட்சா குருவின் வழிகாட்டுதலால் மடாலயத்தில் தங்கினார். அங்கு இறைவன் ஆணையில் அவரது வாழ்வியல் நிகழ்ச்சிகள் அமைந்தன. தந்தைக்குக் கிடைத்த பேறுகளைப் போன்றே சிவப்பிரகாசருக்கும் பண்புடையாளர் தொடர்புகள் கிடைத்தன. அவ்வகையில் அவருக்கு ஆதரவாகத் திகழ்ந்த நன்னெஞ்சினராக அண்ணாமலை ரெட்டியார் அமைகிறார். இவர் சிவப்பிரகாசருடன் தலப்பயணம் செய்து, சிலகாலம் தங்குவதற்குரிய திருவுளச் சூழல்கள் அமையும் இடங்களிலெல்லாம் அவர் தங்குவதற்குத் திருமடங்களை அமைத்துக் கொடுக்கும் நற்பண்புடைய ஆற்றலர். தம் தந்தை இலிங்கா ரெட்டியாரொடு பழமலை சென்று திருக்கோயில் எழுப்பித் திருப்பணிகள் பல செய்தவர். அவரும் சிவப்பிரகாசரோடு பல திருமடங்களுக்குச் செல்லும் நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன.

## துறைமங்கல மடத்தில் தங்குதல்

சிவப்பிரகாசர் துறைமங்கலத்திற்கு வருகை தருகிறார். அவரின் பெருமைகளால் ஈர்க்கப்பெற்ற அண்ணாமலை ரெட்டியார் அங்கு வந்து சுவாமிகளை வழிபட்டுத் தொண்டாற்றுகிறார். சுவாமிகளை 'இவ்விடத்தில் தங்கியருள வேண்டும்' என்று வேண்டுகிறார். அதற்குச் சிவப்பிரகாசரும் உடன்படுகிறார். ரெட்டியார் உடனே தம் குலகுருவான 'சென்னவசவையர்' மடத்திற்கு மேற்குப் பக்கம் திருமடத்தைக் கட்டி, அதில் சிவப்பிரகாசரை எழுந்தருளச் செய்து பிரிவின்றி அணுக்கத் தொண்டராகப் பணியாற்றினார். அவரின் பக்குவம் கண்டு, சன்மார்க்கங்களைப் போதித்து, அங்கு வரும் சீடர்களுக்கு 'இலிங்கதாரணம்' செய்து இரண்டு ஆண்டுகள் அத்திருமடத்திலேயே வீற்றிருந்தருளினார்.

## திருநெல்வேலித் தருமையாதீனக் கிளை மடத்தில் தங்கல்

இரு ஆண்டுகள் கழிந்தபின் சிவப்பிரகாசர் தென்னாடு செல்ல நினைத்தார். தமது சிந்தனையை ரெட்டியாரிடம் கூறினார். அவரும் உடன்வர ஆயத்தமானார். திருநெல்வேலி அடைந்து, அங்குத் தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ள சிந்துபூந்துறை அடைந்தனர். அங்குள்ள தருமையாதீனக் கிளை மடம் சேர்ந்தனர். அங்குள்ள வெள்ளியம்பலவாணத் தம்பிரானின் புலமையறிந்து அவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தெளிவு பெற்றார். அங்கு முதற்பகுதியில் குறித்துள்ள சில நிகழ்ச்சிகள் நடந்தன. அத்திருமடத் தலைமைத் தம்பிரான் அவர்கள் சிவப்பிரகாசரைத் தில்லைக்கு புறப்படுமாறு விடை கொடுத்தனுப்பினார்.

## திருவெங்கை மடத்தில் தங்கல்

அங்கிருந்து புறப்பட்டுத் துறைமங்கலம் வந்து அண்ணாமலை ரெட்டியாருடன் தங்கினார். அவரின் வேண்டுகோள்படி அவராளுகைக்குட்பட்ட திருவெங்கை மாநகரம் புறப்பட்டனர். அங்குச் சிவப்பிரகாசருக்காக அண்ணாமலை ரெட்டியார் திருமடம் கட்ட, அத்திருமடத்தில் எழுந்தருளினார். சில காலம் திருவெங்கைத் திருமடத்தில் வீற்றிருந்து அத்தல இறைவன்மீது நான்கு நூல்களைப் பாடினார்.

## துறைமங்கலம் வருகை

திருவெங்கையிலிருந்து மீண்டும் துறைமங்கலம் வந்து சில காலம் தங்கினார். தமது துறவறக் கருத்தைக் கூறித் தம் சகோதரர்க்குத் திருமணம் முடித்துவைக்கிறார். அவரின் திருமண வாழ்த்தாக ஐந்து பாடல்கள் உள்ளன. இந்நிகழ்ச்சியை அடுத்துச் சிவப்பிரகாசர் முழுத் துறவொழுக்கத்தில் சிறந்திருந்ததால் 'சிவப்பிரகாச சுவாமிகள்' என அழைக்கப்பட்டார்.

## சிதம்பர மடத்தில் தங்குதல்

தில்லையில் வீற்றிருக்கும் ஆடல்வல்லானைக் கண்டு மனிதப் பிறவியின் பயனடைதலை விளக்கியுள்ளார் அப்பரடிகள். அத்தகு பெருமைமிகு சிதம்பரத்திற்குச் சென்று இறைவனை வழிபடக் கருதினார். தம்முடன் அண்ணாமலை ரெட்டியாரையும் உடனழைத்துச் செல்கிறார். அங்கும் ரெட்டியார் அவர்களால் சுவாமிகளுக்குத் திருமடம் அமைக்கப்பட்டது. அதில் வீற்றிருந்து, அம்பலவாணரை வணங்கினார். சில காலம் தங்கி, நான்கு நூல்களைப் பாடியுள்ளார்.

### பொம்மபுரத்தில் தங்குதல்

தில்லையிலிருந்து திருக்காட்டுப்பள்ளி முதலான தலங்களுக்குச் சென்று வழிபட்டார். அங்கிருந்து சென்று காஞ்சிபுரத்தை வழிபட விரும்பினார். அண்ணாமலை ரெட்டியாருடன் இருவருமாகப் புறப்பட்டுவந்தனர். வரும் வழியில் பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளைச் சிவப்பிரகாசர் கண்டு அளவளாவினார். சுவாமிகள் மீது 'நெஞ்சுவிடு தூது' பாடிச் சந்நிதானத்தில் அரங்கேற்றி ஞானோபதேசம் பெற்று மகிழ்ந்தார் என்ற வரலாறு இடம் பெறுகிறது.

அத்திருமடத்தில் சிலகாலம் தங்கினர். தம்மால் தலங்கள் தோறும் வழிபடப் பெற்ற சிவபரம்பொருளே சிவஞான பாலய சுவாமிகள் என்பதை ஆத்மார்த்தமாக உணர்ந்து மகிழ்ந்தார். 'சிவனே சிவஞானி' என்ற 'குருவழிபாட்டு நெறி' இவர்கள் காலத்தில் சிறப்பாக விளக்கம் பெற்றது.

பின் தம் ஞானாசிரியரின் ஆணைப்படி தம் தங்கை ஞானாம்பிகையைச் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். தம்முடன் பிரியாது அன்புடையவராக இருந்த அண்ணாமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குச் செல்லக் கட்டளையிட்டுத் தாம் ஞானாசிரியரை வணங்கி அவ்விடத்தில் தங்கி யிருந்தார்.

### காஞ்சிபுரத்தில் மீண்டும் தங்குதல்

ஞானாசிரியரிடம் விடைபெற்றுக் காஞ்சிபுரம் அடைந்தார். அங்கு வழிபாடாற்றித் தங்கினார். இங்குத்தான் சிவப்பிரகாசரின் பன்மொழித் திறம் விளங்க வடமொழி விவேக சிந்தாமணியின் ஒரு பகுதியை 'வேதாந்த சூடாமணி' எனத் தமிழில் மொழிபெயர்த்தார். கன்னட மொழியிலுள்ள பிரபுலிங்க லீலையைத் தமிழில் பாடியருளினார். ஞானாசிரியர்மீது தாலாட்டு, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ் என மூன்று நூல்களையும் பாடித் தலப்பயணம் மேற்கொண்டார்.

### திருக்கூவத்தில் தங்குதல்

வழியிலுள்ள பல சிவத்தலங்களையும் வணங்கினார். பின் கூவம் எனும் திருத்தலம் அடைந்தார். அங்குள்ள திருமடத்தில் தங்கி, 'திருக்கூவத் தல புராணம்' பாடினார். சில காலம் அங்குத் தங்கியிருந்தார்.

## பொம்மையபாளையம் வருகை

தம் ஞானாசிரியரைக் கண்டுகளிக்க உள்ளம் விரும்பியது. பொம்மபாளையம் மீண்டும் வந்து தங்கி ஞானாசிரியர் மீது தாம் பாடிய நூல்களைச் சந்நிதியில் அரங்கேற்றி அங்கேயே தங்கினார். அந்நிலையில் ஒருநாள் ஞானாசிரியரின் அங்கலிங்க அனுபவங்களை ஆராய்ந்து குருவின் தோற்றம் கண்டு வெண்பாப் பாடினார்.

## விருத்தாசலத்தில் தங்குதல்

தம் ஞானாசிரியரின் அருளாணைவழி விருத்தாசலம் வந்தடைந்தார். அங்கு அருளாட்சி செய்துவரும் பழமலை நாதரையும் பெரியநாயகியம்மையையும் வணங்கி, தம்பொருட்டு ஒரு திருமடம் அமைத்து எதிர்கொண்டு வணங்கி நிற்கும் சித்திரபூபதியைச் சிறப்பித்து, 'வெங்கைப்பழமலையார் மீது' எனத் தொடங்கி, 'மங்குள் சிதம்பர பூபதி நல்கும் இடமிதுவே' என முடித்துப் பாடியருளினார்.

விருத்தாசலத் திருமடத்தில் சிலகாலம் வீற்றிருந்து ஐந்து நூல்களைப் பாடியருளினார். அங்கிருக்கும் காலத்தில் நடந்து முடிந்த நிகழ்ச்சியையும் இங்குக் குறிப்பிடுதல் வேண்டும். மணிமுத்தா நதியில் சுவாமிகள் நீராடி வரும் வேளையில் அந்நதி அருகில் ஒரு மாஞ்சோலை இருந்தது. அச்சோலையின் புறத்தே மாங்கனி கிடந்தது. இது சிவபெருமானுக்குப் படைத்தற்குரிய பொருளாகும் எனக் கருதிச் சுவாமிகள் அதனை எடுத்தார். அதைக் கண்ட சோலைக் காவலன் மடி பிடித்து இழுத்து, மன வருத்தம் செய்தான். சிவநிந்தனை செய்தான் என்பதையறிந்த சிவப்பிரகாசர் இவனைச் சுத்தனாக்கினார்.

## மீண்டும் பொம்மையபாளையம் வருகை

இந்நிலையில் சிவஞானபாலய சுவாமிகளுக்கு ஐந்நூறு வயது நிறைவுற்றமையால் மற்றொரு சீடரை ஆச்சாரிய அபிடேகம் செய்துவிட்டுத் தாம் சிவயோக சமாதியில் கூடி, சித்தியால் தமது திருமேனியைத் திருநீற்றுமயமாக்கி, ஒடுக்கி, இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினார். இவரின் காலத்தைத் திருவெங்கைத் தலக் கல்வெட்டு கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் பதினேழாம் நூற்றாண்டு வரை எனக் குறிப்பிடுகிறது. தம் ஞானாசிரியர் பரசிவத்தில் கலந்ததை அறிந்த சிவப்பிரகாசர் மனம் கலங்கிப் பொம்மபுரம் சென்று தம் ஞானாசிரியர் ஒடுங்கிய குகையுட் சென்று

வணங்கித் துதித்தார். தம் குருநாதரை வழிபட்டு மூன்றாம் பட்டத்துச் சுவாமிகளோடு சில காலம் தங்கியிருந்தார்.

## நல்லாற்றூர் வருகை

பொம்மபுரம் சுவாமிகளைப் பிரியக் கருதி, வருந்தி, விடைபெற்றுக்கொண்டு நல்லாற்றூருக்கு வருகை புரிந்தார். அங்குள்ள திருமடத்தில் தங்கியிருந்தார். இங்கிருந்த நாட்களில் முன்னமே கூறியுள்ளவற்றுள் ஏழு நூல்களைப் பாடியுள்ளார். ஒரு புரட்டாசி மாதத்தில் பௌர்ணமி திதியில், சிவயோக சமாதி அடைந்து திருவருளில் கலந்தார்.

சிவப்பிரகாச அடிகளார் எழுந்தருளும் தலங்கள்தோறும் அவர் வந்து தங்குவதற்கேற்ற சூழ்நிலையில் திருமடங்களைக் கட்டுவித்தவர் அண்ணாமலை ரெட்டியார் ஆவர். அவ்வாறே அவர் தலந்தோறும் கட்டிய திருமடங்களில் தங்கிப் பல நூல்களைப் பாடியதையும் அறிந்தோம். அவர் சுவாமிகளிடம் கொண்டிருந்த அன்பினால் திருவெங்கைக் கோயிலில் உள்ள தூணில் சிவப்பிரகாசரின் திருவுருவத்தையும் செய்துள்ளார். அவ்வுருவத்திற்கு நாள்தோறும் பூசனை செய்து திருவிழாவும் நடத்தி வந்துள்ளார். அவ்வாறே இடையறாது செய்து திருவருட்கு உரியவராகிச் சிவத்தில் கலந்தார்.

இவ்வாறாக, சிவப்பிரகாசரின் தலப்பயணங்களும் திருமட நிகழ்ச்சிகளும் அமைந்திருந்தன.



*ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளின் சிவயோக சமாதித் திருச்சந்நிதி, நல்லாற்றூர்*



# 7. சிவப்பிரகாசர் படைப்பில் இலக்கிய வகைகள்

சிவப்பிரகாசர் வாழ்ந்த காலச்சூழல் சிற்றிலக்கியங்களும், தல புராணங்களும் வேகமாக வளர்ந்த காலமாகும். தமது இடச்சூழல், பாடுபொருள் மரபு, கடவுட்கொள்கை ஆகியவற்றை வெளிப்படுத்தும் நோக்கில் தம் படைப்புக்களைக் காப்பிய வகை, புராண வகை, சிற்றிலக்கிய வகை, மொழிபெயர்ப்பு, நீதிநூல், போற்றிநூல், தனிப்பாடல் எனும் வகையில் படைத்துள்ளார். இவர் பாடியவையாகக் கூறப்படும் திருவெங்கை அலங்காரம், கொச்சகக் கலிப்பா, தலவெண்பா ஆகிய மூன்றும் கிடைக்கவில்லை.

## காப்பிய வகை

சிவப்பிரகாசர் படைத்த காப்பிய வகை நூல் 'பிரபுலிங்க லீலை' ஆகும். பிரபுலிங்க லீலையை இவர் பாடியதற்கான செவிவழிச் செய்தியாக ஒரு கதையைக் கூறுவர். அதில், 'கன்னட வீரசைவத் துறவிகள் பலர் தலப்பயணம் மேற்கொண்டு பொம்மபுர மடத்தில் தங்கினர். அங்குச் சிவப்பிரகாசரும் தங்கியிருந்தார். ஒருநாள் இரவு உறங்குவதற்கு முன், சிவப்பிரகாசரின் வேண்டுகோள்படி கன்னட வீரசைவத் துறவி பிரபுலிங்க லீலையைக் கூறினார். பின் அவர் தலயாத்திரை சென்று திரும்பி வருவதற்குள் சிவப்பிரகாசர் தமிழில் பிரபுலிங்க லீலையை எழுதி முடித்துவிட்டார். அத்துறவி நூலின் சொற்சுவை, பொருட்சுவைகளை உணர்ந்து அழுக்காறு காரணமாக, இரவில் சிவப்பிரகாசருக்குத் தெரியாமல் அவற்றைக் கடற்கரை மணலில் புதைத்துவிட்டுக் கன்னட நாடு சென்றுவிட்டார். சிவப்பிரகாசர் ஒருநாள் தமது பல்குச்சியை மணலில் புதைக்கத் தோண்டியபோது தாம் எழுதிய இக்காப்பிய நூல் கண்டு வியப்புற்றார். ஏடு கிடைத்ததும் இறைவன் திருவருள் என

மகிழ்ந்தார். இக்கதை எல்லோராலும் அக்காலத்தில் பேசப்பட்டு வந்துள்ளது.

கன்னட இலக்கியப் பெயரை இக்காப்பியம் பெற்றிருந்தாலும் தமிழ் மரபுக்கேற்ப இந்நூலை ஆக்கியுள்ளார். சொற்சுவை, பொருட்சுவை நிறைந்த காப்பியம். இந்நூல் தோன்றிய காலம் கி.பி. 1652 என்பர். இறைவன் எல்லாமாய் நிற்பவன், அல்லவுமாய் அகல்பவன், யாவர்க்கும் மேலானவன், அருட்செல்வமானவன், இலிங்கவடிவினன், சிவம் ஆனவன். இத்தகு இறைவனின் சிறப்புக்களைக் கூறும் நூல் பிரபுலிங்க லீலை. காப்பிய இலக்கணத்திற்கு முழுத் தகுதியுடைய நூலாகத் திகழ்கிறது.

**தல புராண வகை**

தல புராண வகையில் கூவத்தல புராணம், சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் ஆகியவை இடம் பெறுகின்றன. கி.பி. 16 முதல் 19ஆம் நூற்றாண்டுவரை தமிழ் இலக்கிய வரலாற்றில் தல புராண வளர்ச்சி பேரிடத்தைப் பெற்றுள்ளது. அறுநூற்றுக்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தமிழில் உள்ளன.

இறைவன் எழுந்தருளியுள்ள தலத்தை முதன்மையாக வைத்துப் பாடப்படுவது இதன் சிறப்பாகும். இப்புராண இலக்கிய வகையில் சிறப்பிடம் பெறுவது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவாகும். அவ்வகையில் சிவப்பிரகாசர் 'கூவம்' என்னும் ஊரைப் பற்றிப் பாடிய தலபுராணம் 'திருக்கூவத் தல புராணம்' ஆகும்.

கூவம் என்னும் ஊர் இன்றைய சென்னைக்கு மேற்கில் கடம்பத்தூர் இரயில் நிலையத்திற்கு அருகில் ஆறு கிலோ மீட்டரில் உள்ளது. தொண்டை நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற முப்பத்து இரண்டு தலங்களுள் இக்கூவத்தலமும் ஒன்றாகும். ஞானசம்பந்தரின் தேவாரம் பெற்ற தலம். 'கூகம், திருவிற்கோலம்' எனத் தேவாரமும், பெரியபுராணமும் இத்தலத்தைப் போற்றுகின்றன.

விற்கோலநாதர் சிவலிங்கமாக உறைந்த சிறப்பு உடையது கூவத்தலம். தேவர்களே இத்தலத்தில் உருவும், பெயரும் மாறி, நால்வகை வருணத்தாராய் வாழ்வர். இத்தலபுராணத்தில் இலிங்க வழிபாட்டின் மாண்புகள் விளக்கப்பெற்றுள்ளன.

காப்பியம் போன்றே இத்தலபுராணத்திலும் இயற்கை வருணனை, கற்பனை நயம், பொருட்சிறப்பு, நடை, சொல்லாட்சி,

ஆகியவை அமைந்துள்ளன. மக்கட்பேற்றின் சிறப்பும் விளக்கம் பெறுகிறது. மக்கட் சமுதாயத்திற்கு விழிப்புணர்வூட்டும் செய்திகள் விவரமாக இடம் பெற்றுள்ளன.

### சீகாளத்திப் புராணம்

இந்நூலில் இரு சருக்கங்கள்மட்டும் சிவப்பிரகாசரால் பாடப்பட்டுள்ளன. கண்ணப்ப நாயனார் வரலாற்றையும், நக்கீரரின் வரலாற்றையும் இப்பகுதிகள் விளக்குகின்றன. தமிழ்த் தலபுராணங்களுக்கென்று தனிமரபு ஒன்றுண்டு. அவை 'நைமிசாரண்யவனத்தில்' தொடங்கும். ஆனால், இந்நூலில் சிவபெருமானே காளத்தியின் பெருமையை மன்னனுக்குக் கூறுவதாக இத்தல புராணம் தொடங்குவது புதுமையாகும்.

சைவ அடியவர்களின் வரலாறுகளுள் 'கண்ணப்பர்' வரலாறு சிறப்பிடம் பெற்றுள்ளது. சிவப்பிரகாசருக்கு முந்தைய நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆனந்தக்கூத்தர். அவரது 'சீகாளத்திப் புராணத்தில்' கண்ணப்பர் வரலாறு இடம் பெறவில்லை. அக்குறையைப் போக்கும் வகையில் சிவப்பிரகாசர் இப்புராணத்தில் 'கண்ணப்பர் வரலாற்றை'ப் படைத்துள்ளார். பெரியபுராணத்துள் இடம் பெற்றுள்ள திருநாவுக்கரசர் புராணத்தின் தாக்கமாக இதனைக் கொள்ளலாம்.

சிவப்பிரகாசரின் பக்தி நலத்திற்குக் கண்ணப்பச் சருக்கம் என்றால், அவரது தமிழ்ப் பற்றினை விளக்குவது நக்கீரச் சருக்கம் ஆகும். 'திருமுருகாற்றுப்படை' பாடிய நக்கீரரையும், 'கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி' பாடிய நக்கீரரையும் இணைத்து ஒரு புதிய கதையைச் சிவப்பிரகாசர் படைத்துள்ளார்.

திருமுருகாற்றுப்படை பாடிய சங்க கால நக்கீரர் வேறு; பதினோராம் திருமுறையிலுள்ள 'கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி' பாடிய சமய நக்கீரர் வேறு என்பர். நக்கீரர் வரலாற்றைக் கூறும் வேறு நூல்கள், பெரும்பற்றப் புலியூர் நம்பி பாடிய 'திருவிளையாடற் புராணம்', நிரம்ப அழகிய தேசிகர் பாடிய 'திருப்பரங்கிரிப் புராணம்', பரஞ்சோதி முனிவரின் 'திருவிளையாடற்புராணம்' முதலியனவாகும். சிவப்பிரகாசர் இம்மூவர் பாடிய கதையையும் இணைத்துத் தமது கதையைப் புதுமையாக ஆக்கியுள்ளார். இறைவனோடு வாதம் செய்த நக்கீரர், குட்டநோய் அடைந்து, அது தீர இறைவன் அருளியபடி கயிலையைக் காணச் சென்றார். வழியில் பூதத்தால் மலைக்

குகையில் அடைக்கப்பட்டார். திருமுருகாற்றுப்படை பாடி முருகனருளால் அக்குகையினின்றும் விடுதலை செய்யப்பட்டார். முருகப் பெருமான் பணித்தபடி, அங்கிருந்த பொய்கையில் முழுகினார். காளத்தியிலுள்ள பொன்முகலியாற்றில் எழுந்தார். கயிலைபாதி, காளத்திபாதி அந்தாதி பாடினார் எனச் சிவப்பிரகாசர் இச்சருக்கத்தில் படைத்துள்ள கதை புதுமையாகும்.

இவரின் தமிழ்ப்பற்றுக்கு நக்கீரச் சருக்கம் சான்றாகிறது. இச்சருக்கத்தின் முதல் செய்யுளை 'அமுதுறழ் தமிழ்' என்று தொடங்குகிறார். 'புலவர் சிங்கம்', 'செந்தமிழாளி' என்று சிவப்பிரகாசர் நக்கீரரை நாவாரப் புகழ்ந்துள்ளார்.

கல்வியில் செருக்கு இருக்கக் கூடாது; தவறு இழைத்தவரையும் இறையருள் பொறுக்கும். தமிழ்ப் பாட்டால் இறைவனும் ஓடிவந்து அருள்வான் என்னும் தமிழ்நெறியை நக்கீரச் சருக்கம் தெளிவுபடுத்துகிறது.

### சிற்றிலக்கியங்கள்

இருநூற்றுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் உள்ளன. இருப்பினும் சிவப்பிரகாசர் தம் செய்யுள் நூல்களாகிய முப்பத்தொரு நூல்களில் மாலை, கலம்பகம், தாலாட்டு, திருப்பள்ளியெழுச்சி, தூது, பிள்ளைத்தமிழ், மகிமை, விகாசம் அந்தாதி, சூடாமணி சிகாமணி முதலான சிற்றிலக்கிய வகைகளை மட்டும் எடுத்துக் கொண்டுள்ளார். யாப்பு அடிப்படையில் குறுங்கழி நெடில், நெடுங்கழி நெடில், கொச்சகக் கலிப்பா, கலி வெண்பா, கலித்துறை, தனிப்பாடல்கள் என்ற வகைகளிலும் பாடியுள்ளார்.

### வகைமை

சிவப்பிரகாசர் எடுத்துக்கொண்ட படைப்புக்களில் வடிவம் நோக்கி இரண்டு வகையாகக் கொள்ளலாம். அவை செய்யுள் நூல்கள், உரைநடை நூல்கள். உரைநடை நூல்களுள் தருக்க பரிபாஷை மட்டும் உள்ளது. ஏனையவை செய்யுள் யாப்பிலேயே அமைக்கப்பட்டுள்ளன.

சிவப்பிரகாசரின் சிற்றிலக்கிய வகைகளை தோத்திரம், சாத்திரம், நீதி என்ற வகைகளுள் கண்டு தெளியலாம்.

தோத்திர வகையில் இட்டலிங்க அபிடேக மாலை, குறுங்கழி நெடில், கைத்தல்மாலை, சிவஞானபாலய தேசிகர் கலம்பகம், திருப்பள்ளியெழுச்சி, நெஞ்சுவிடு தூது, பிள்ளைத்தமிழ்,

சோணசைலமாலை, செந்தில் நிரோட்டக யமக அந்தாதி, திருவெங்கைக் கலம்பகம், உலா, கோவை, நிரஞ்சனமாலை, பழமலை அந்தாதி, பெரியநாயகி கலித்துறை முதலான பத்தொன்பதும் அடங்கும். இவற்றுள் அடங்கிய கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலான சிற்றிலக்கிய வடிவங்களில் உள்ள படைப்புக்களும் தலைவனைப் போற்றுதல், அவனிடமிருந்து ஒன்றை வேண்டுதல் என்னும் குறிப்பை உடையதாதல் பற்றித் தோத்திரமாகவே கருதலாம்.

சதமணிமாலை, சித்தாந்த சிகாமணி, சிவஞானபாலய தேசிகர் தாலாட்டு, சிவநாம மகிமை, சிவப்பிரகாச விகாசம், தருக்க பரிபாஷை, வேதாந்த சூடாமணி ஆகிய ஏழும் சிவப்பிரகாசரால் இயற்றப்பட்டுள்ள சாத்திர நூல்களாகும். நீதியைப் புகட்டும் அறநூலாக நன்னெறி இடம் பெறுகிறது.

எனவே சாத்திர நூல், நீதி நூல் அல்லாத பத்து வகையான சிற்றிலக்கிய வகைகளைச் சிவப்பிரகாசர் பாடியுள்ளார்.

சிவப்பிரகாசர் தமிழ், வடமொழி, கன்னடம், தெலுங்கு ஆகிய நான்கு மொழிகளில் வல்லவராக விளங்கியிருத்தலால் மொழிபெயர்ப்பிலும் தம் பங்களிப்பைச் செய்துள்ளார்.

'தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்பது
எதிர்நூல் என்ப ஒருசா ரோரே'

என்ற இறையனார் அகப்பொருள் உரை மேற்கோளுக்கு ஏற்ப எதிர்நூலாக இயேசுமத நிராகரணம் பாடியுள்ளார்.

**பதிகம்**

பதிகம் என்ற சிற்றிலக்கிய வகையினைப் பாடியுள்ளார். குறிப்பிட்ட ஒரு பொருளைப் பற்றி ஒரே யாப்பில் பத்துப் பாடல்கள் பாடுவது 'பதிகம்' ஆகும். இதனைச் சிவப்பிரகாசரின் இட்டலிங்க அபிடேகமாலை, குறுங்கழிநெடில், கைத்தலமாலை, சிவநாம மகிமை, நெடுங்கழிநெடில், பழமலை பெரியநாயகியம்மை நெடுங்கழி நெடில் ஆசிரிய விருத்தம் என்ற ஆறு நூல்களிலும் காணலாம். இவை 'பதிகம்' என்ற சிற்றிலக்கிய வகையினவாகும்.

'மாலை' வகைச் சிற்றிலக்கியங்களுள் சதமணிமாலை, சோணசைலமாலை, நிரஞ்சனமாலை மூன்றும் அடங்கும். (இட்டலிங்க அபிடேகமாலை, கைத்தலமாலை இரண்டும் 'மாலை' என்ற பெயரினைப் பெற்றிருந்தாலும் பத்துப் பாடல்களால் மாலை

இயற்ற இலக்கணம் இல்லாததால் அவை பதிகங்களே ஆகும்). மூன்றில் சதமணிமாலை சாத்திர நூலாகும். சோணசைலமாலை எழுசீர் ஆசிரிய விருத்தங்கள் நூறையும், காப்பு வெண்பா ஒன்றையும் உடையது. துதிநூலாகக் கொள்ளலாம். நிரஞ்சனமாலை இட்டலிங்கத்திடம் வேண்டுகோள் விடுப்பதாக 31 கட்டளைக் கலித்துறைகளால் ஆனது. இந்நூலில் முதற்செய்யுள் 'நிரஞ்சன்' எனத் தொடங்குவதால் நூலின் முதற்சீரால் நூற்பெயர் அமைந்ததாகக் கூறலாம். 19 கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டுள்ள 'பழமலை பெரியநாய்கி அம்மை கலித்துறை', 'பெரியம்மையே' என நிறைவுபெறுகிறது. பெரும்பாலும் 30 செய்யுட்களையுடைய மாலையாக இருந்திருக்க வேண்டும். தற்போதுள்ள வடிவில் இந்நூலினையும் 'மாலை' வகை என்றே கொள்ள வேண்டும். இவ்வாறு மாலை வகையில் சாத்திரம் அல்லாத மூன்று நூல்கள் இடம் பெறுகின்றன.

### கலம்பகம்

சிவஞானபாலய தேசிகர் கலம்பகம், திருவெங்கைக் கலம்பகம் என இரண்டு கலம்பகங்களைச் சிவப்பிரகாசர் இயற்றியுள்ளார். முதல் கலம்பகம், பதினாறு கலம்பக உறுப்புக்களைப் பெற்று விளங்குகிறது. 94 முதல் நூறு வரையிலான பாடல்கள் இல்லை.

திருவெங்கைக் கலம்பகத்தில் 100 செய்யுட்கள் உள்ளன. இந்நூலில் பதினைந்து கலம்பக உறுப்புக்களே உள்ளன. அகத்துறைப் பாடல்கள் அதிகம் உள்ளன.

### பிள்ளைத்தமிழ்

ஒரே நூல் மட்டும் உள்ளது. காப்பாக 'பெண்முறை' பாடல் ஒன்றும் பத்துப் பருவத்திற்கு 101 பாடலும் (வருகைப் பருவத்தில் 11 பாடல்கள்) என மொத்தம் 102 செய்யுட்கள் இந்நூலில் உள்ளன.

### அந்தாதி

அந்தம் ஆதியாக வருவது. இதில் பல வகைகள் உள்ளன. சிவப்பிரகாசர் இரு வகைகளில் இலக்கியம் படைத்துள்ளார். உதடு ஒட்டாத எழுத்துக்களைக் கொண்டு மட்டும் பாடுவது 'நிரோட்டகம்' எனப்படும். செய்யுள் அடிகளின் தொடக்கத்தில் மடக்கணி அமைவது 'யமகம்' எனப்படும். 'திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி' இவ்வகையில் அமைந்துள்ளது.

மற்றொரு வகை திரிபந்தாதியில் அமைவது. ஒரு செய்யுளின் தொடக்கத்தில் நான்கு அடிகளிலும், முதலெழுத்து நீங்கத் தொடரும் நான்கைந்து எழுத்துக்கள் ஒன்றாகவே வருவது திரிபு என்னும் சொல்லணி ஆகும். இத்தகைய திரிபுக்கவிகள் அந்தாதியாக அமைவது 'திரிபந்தாதி' எனப்படும். சிவப்பிரகாசரின் பழமலை அந்தாதி இத்தகைய வகையினதாகும். பல அகத்துறைச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

## உலா

பாட்டுடைத் தலைவன் திருவீதி உலா வரும்போது அவனைக் கண்டு எழு பருவ மடத்தையர் காதல் கொண்டதாகக் கலிவெண்பாவால் பாடுவது உலா ஆகும். 'உலாப்புறம்' எனவும் அழைக்கப்படும். இதில் பாட்டுடைத் தலைவனுக்குரிய 'தசாங்கங்கள்' இடம் பெறவேண்டும் என்பது சிறப்பு வழி. இதனை,

'பேதை முதல் ஏழ்பருவப் பெண்கள் மயக்கம்உற
ஓதும் மறு குற்றான் ஒள்வேலோன் - என்று
ஏதம் அறக்கலி வெண்பாவில் மாட்டல் உலாவாம்
புறம் தசாங்கம் தாங்கிப் போற்று'

என்கிறது பிரபந்தத் திரட்டு. இவ்வகை இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைவது சிவப்பிரகாசரின் திருவெங்கை உலா ஆகும். பழமலைநாதரைப் போற்றும் தோத்திரப் பிரபந்தமாகக் கொள்ளலாம்.

## அகப்பொருட்கோவை

'கோவை' இலக்கியத்திற்குக் கூறும் இலக்கண மரபுக்கேற்ப 'வெங்கனூர்ப் பழமலைநாதரை'ப் பாடியுள்ள திருவெங்கைக் கோவை அமைந்துள்ளது.

## நான்மணிமாலை

வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், அகவல் ஆகியவை வரிசையாக அமைந்து, அந்தாதி முறையில் 40 பாடல்களையுடையது நான்மணிமாலையாகும். சிவப்பிரகாசரால் படைக்கப்பட்டுள்ள நால்வர் நான்மணிமாலை இத்தகையினதே. இலக்கண விளக்க நெறியைப் பின்பற்றியது.

## நவமணிமாலை

இது அரிய சிற்றிலக்கிய வகை. இது மாதிரியான இலக்கிய வகை அதிகம் தோன்றவில்லை. பாட்டியல் நூல்களும், இலக்கண விளக்கமும் இதுபற்றிக் கூறுகின்றன. ஒரே வகையில் ஒன்பது பாக்கள் அந்தாதியாகவோ, அல்லாமலோ அமைவது நவமணிமலை ஆகும். சிவப்பிரகாசரின் 'பிட்சாடன நவமணிமாலை' ஒன்பது கட்டளைக்கலித்துறைப் பாடல்களால் அமைந்துள்ளது.

இவ்வாறாகப் பத்து வகையான சிற்றிலக்கியங்களைப் பத்தொன்பது நூல்களாகச் சிவப்பிரகாசர் படைத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.



# 8. சிவப்பிரகாசர் போற்றும் வள்ளுவர்

'பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ'

எனத் திருவள்ளுவரையும் திருக்குறளையும் தமிழுலகமும் அறிஞர் உலகமும் போற்றியுள்ளன. 'திருவள்ளுவமாலை' அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. இலக்கியப் படைப்பாளரால் மேற்கொண்டிருக்கும் குறட் கருத்துக்கள் மிக அதிகம். இலக்கண, இலக்கிய, உரை ஆசிரியர்களால் பெரிதும் எடுத்துக்காட்டி விளக்கம் பெற்ற இலக்கியம் திருக்குறள் ஆகும். இது கருதியே, 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து, வான்புகழ் கொண்டது தமிழ்நாடு' என்று பாட்டுக்கொரு புலவன் பாரதியால் புகழப்பெற்றது. அவ்வகையில் சிவப்பிரகாசரும் தாமியற்றிய நூல்களில் வள்ளுவரின் கருத்துக்களைப் போற்றியுள்ளார்.

## வள்ளுவரைப் போற்றும் முறை

தெய்வப்புலவராம் திருவள்ளுவரை 'புலவர்', 'தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்', 'என்னடிகள்', 'அறஞ்சூழ்ந்தோர்', 'பெரியோர்', 'கற்றுணர் பழமையோர்', 'ஆற்றல் பெரியோர்', 'அறத்தூய்மை உணர்ந்தவர்', 'இணையில் திருவள்ளுவப் பெயர்கொள் எம்மான்', 'வாய்மையால் சிறப்பவர்' என உளமாரப் புகழ்கிறார் சிவப்பிரகாசர்

## திருக்குறளைப் போற்றும் வகை

'சிந்தைக்கினிய செவிக்கினிய வந்த இருவினைக்கு மாமருந்து' என்றும், 'தமிழ்வேதம்' என்றும், 'இலக்கிய மதியம்' என்றும், 'அகத்திருள் நீக்கும் விளக்கம்' என்றும், 'அணுவைத் துளைத்து ஏழ்கடலைட் புகட்டிக் குறுகத் தரித்த குறள்' என்றும், புலவர் பெருமக்களால் திருக்குறள் போற்றப்பட்டுள்ளது.

சிவப்பிரகாசர், ஒவ்வொரு குறளையும், உமையொரு பாகனின் திருவடிகளாகவே கண்டுள்ளார் என்பதைத் 'திருவெங்கைக் கலம்பகம்' போற்றுகிறது.

ஒவ்வொரு அதிகாரத்திலும் அமைந்துள்ள பத்துக் குறட்பாக்களையும், திருமாலின் பத்து அவதாரங்களாகவே காட்டியுள்ளார். இதனை,

''வற்புறுத்த ஓர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொருத்தி ஓதும் துணிவுபோல் - தற்பதத்தால்
ஓதும் பிரமமொரு தானென்ப தொன்றனைமால்
காதுபவம் பத்தெடுத்துக் காட்டினோன்''

என்று விளக்கும் பாடலடிகளின்வழி, ஒரு பொருளை வற்புறுத்தி, திருவள்ளுவர் பத்துமுறை கூறியது போல், 'தத்துவமசி' என்னும் சொற்றொடரில், 'தத்' என்ற சொல்லின் பொருளாக உள்ள பரம்பொருளை அறிவிக்கப் பத்து அவதாரம் திருமால் எடுத்தார் என்று சிவப்பிரகாசர் திருக்குறள் அதிகாரத்தையே உவமை கூறியுள்ளார்.

திருக்குறளை, 'செஞ்சொல்', 'நவத்தமிழ் வேதம்' என்று போற்றுகிறார். திருக்குறள், குறளடிகள், குறளின் பொருண்மை ஆகியவற்றை எடுத்தாண்டுள்ளார். ஒரே குறளைப் பல இடங்களில் ஆண்டுள்ளார். அதேபோல, பல அறங்களை ஒரே பாடலில் தொகுத்துக் கூறியுள்ளார். குறளின் உரைகளை, குறிப்பாகப் பரிமேலழகரின் உரையை ஏற்றும், மறுத்தும் சிவப்பிரகாசரின் பல பாடல்கள் அமைந்துள்ளன. குறள் நெறிக்கேற்ப வாழ்ந்து காட்டிய பெருமக்களையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

### ஒரே குறளை - பல இடங்களில் கையாளுதல்

சிவப்பிரகாசர் ஒரு குறளைப் பல இடங்களில் மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு'

எனும் குறளை

'உடையிழந்த ஒருவன் கரமெனக்
கடிதடைந்து களைந்தருள் செய்யுநாள்'

என்று பிரபுலிங்க லீலையிலும்,

'உடுக்கை யிழந்தவன் கையோர் பொருளை யொழித்ததனைத்
தடுக்கை விரைந்தது போல்'

என்று திருவெங்கைக்கோவையிலும் எடுத்தாண்டுள்ளார்.

## ஒரே பாடலில் வள்ளுவரின் பல அறங்கள்

வள்ளுவர் கூறும் பல அறங்களையும் ஒரே பாடலில் தொகுத்துக் காட்டியுள்ளார் சிவப்பிரகாசர். பிரபுலிங்க லீலையில்,

'கொலை களவு அழுக்காறு அவாவொடு வெகுளி
கொடுஞ்சொல் பொய் பயனில கூறல்
நிலையழீஇ ஒருவன் செய்ந்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறந்தகம்
சிலை நுதல் மடவார்க் கருதல் என்றனைய தீமைகள்'

எனவரும் பகுதியில் வள்ளுவர் கூறும் அறங்கள் பல இங்கு ஒன்றாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

## உரைக்கு உரை விளக்கம் கூறல்

பரிமேலழகர் உரையைப் போற்றியுள்ள சிவப்பிரகாசர் அவ்வுரையை மறுத்தும் கூறியுள்ளார். காட்டாக, 'புதல்வரைப் பெறுதல்' என்ற திருக்குறள் அதிகாரம் உள்ளது. இதற்கு வள்ளுவர், 'மக்கட்பேறு' என்றுதான் பெயர் வைத்திருந்தார். மணக்குடவரும் 'மக்கட்பேறு' என்றே குறித்துள்ளார். ஆனால், பிற்காலத்தில் பரிமேலழகர், 'புதல்வரைப் பெறுதல்' என மாற்றியமைத்துவிட்டார் என்று கூறுவர்.

'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'

என்ற குறள் இவ்வதிகாரத்தில் இடம்பெறுகிறது. தன் மகனைச் சான்றோன் எனப் பிறர் கூறும்போது, அவனைப் பெற்ற காலத்தையும்விடப் பெருமகிழ்ச்சி எய்துவாள் அவள் தாய் என்பது இக்குறள் தரும் செய்தி. அங்ஙனம் ஆயின், பெண் குழந்தைகளைப் பெற்றோர் ஈன்ற பொழுதினும் மகிழும் காலம் இல்லையா என்று கூர்ந்து நோக்கியது சிவப்பிரகாசரின் அறிவு. தன் மகளின் திருமணநாளில் ஈன்ற பொழுதினும் பெருமகிழ்ச்சி கொள்வாள் அத்தாய் என உணர்ந்தார் சிவப்பிரகாசர். இதனை,

'நான்ற சடிலத் திருவெங்கை நாயகர் நல்குமொரு
கான்ற குருதிக் குடல்மாலை வேலுடைக் காளையெழில்
போன்ற வுருவத் திறைவர்மென்றோளிடு பூந்தொடைகண்டு
ஈன்ற பொழுதிற் பெரிதுவ வாநிற்கும் எம்மனையே'

என்ற பாடலில் அமைந்துள்ள உலகியல் நுட்பம் சிறப்புடன் திகழ்கிறது. 'திருவெங்கைநாதர் ஈன்ற அழகுடைத் தலைவன் தன்தோளில் மணமாலை இடுவதைக் கண்டு, தன் தாய் பெருமகிழ்ச்சி அடைவாள்' என்கிறாள் தலைவி. மகனால்

மட்டுமல்ல, மகளாலும் தாய் உள்ளம், ஈன்ற பொழுதினும் மகிழும் எனும் புதுமையைப் படைத்துள்ளார் சிவப்பிரகாசர்.

இவ்வுரை மறுப்புச் செய்தி பெண்மையைப் போற்றிய திறத்தைக் காட்டுகிறது.

### குறட்கருத்துச் சிறப்புப் பெறுதல்

தாம் எடுத்தாண்ட குறட்கருத்துக்களால் மேலும் திருக்குறளின் ஏற்றத்தை அறிய முடிகிறது. புத்துணர்வும் பெறுவது போன்று அமைத்துள்ளார்.

"வாய்மை யெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்"

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்னும் இக்குறட்பாக்களால், எவ்வுயிர்க்கும் தீங்கு உண்டாக்காத நிகழ்ந்தது கூறல், வாய்மை. தீமை ஏற்படுமாயின், அது பொய்ம்மை. குற்றமற்ற நன்மையைப் பயக்குமாயின், நடவாததைக் கூறுதலும் வாய்மை என்னும் கருத்துக்கள் பெறப்படுகின்றன. இவ்விரு குறள்களுக்கும், 'தீங்கு தராத நடந்ததைக் கூறுதல், நன்மை பயக்கும் நடக்காததைக் கூறுதல் ஆகிய இரண்டும் மெய்ம்மை. நன்மை பயக்காத நடவாதது கூறுதல். தீங்கு தரும் நடந்தது கூறுதல் ஆகிய இரண்டும் பொய்ம்மை' எனும் விளக்கம் தந்துள்ளார். இப்பொருள்களைத் தம் பாட்டுத்திறத்தால் புதுப்பொலிவும் சிறப்பும் பெறச் செய்துள்ளார் சிவப்பிரகாசர்.

### குறளை உவமைத் தொடராக்குதல்

குறளையும், சிறிய தொடராக்கி உவமை கூறும் திறத்தைச் சிவப்பிரகாசர் கையாண்டுள்ளார்.

'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்'

என்னும் குறளை,

'ஊர் நடுநயப் பண்பினேன்திரு'

என்னும் அரிய சிறு தொடராக்கியுள்ள திறம் பெறப்படுகிறது.

குறள் கூறும் ஈகையின் விளக்கமாகச் 'சேயூர் என்னும் நகரத்துச் செல்வர்களையும் சிவப்பிரகாசர்' காட்டியுள்ளார். 'இரப்பார் இல்லாத உலகம் மரப்பாவை இயங்குவது போன்றது' என்று வள்ளுவர் வசையோடு சொன்ன கருத்தை நினைந்து அஞ்சிச் சேயூர் செல்வர், இரப்பவர் வருகையை எதிர்நோக்கியிருந்தனர் என்பதைச் 'சிவஞானபாலய சுவாமிகள் நெஞ்சுவிடு தூது' என்னும் நூலில் கையாண்டுள்ளார்.

பிற்காலப் புலவர்களில் சிவப்பிரகாசரைப் போல் திருக்குறளைக் கையாண்டவர்கள் இல்லை என்றே கூறலாம். இது பற்றியே சிவப்பிரகாசரும், 'வள்ளுவப் பிரகாசர்' என்று போற்றப்படுகிறார். திருக்குறட் கருத்துக்களை நேரடியாகவும், உவமை வழியாகவும் வெளிப்படுத்த 'நன்னெறி' எனும் நூலையே இயற்றியதாகக் கூறலாம்.

**நல்லோர் நட்பு**

நல்லவர்களின் உறவு என்றும் நன்மை பயக்கும், கீழோர் உறவு ஒருவனைக் கிளையொடு சாய்க்கும்.

'நல்லோர் வரவால் நகைமுகங் கொண்டின்புறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவார்'

என்றும்,

'குணமும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு'

என்றும் வள்ளுவர் கூறி நிற்கும் தன்மையைச் சிவப்பிரகாசர்,

'நல்லோர் செயும் கேண்மை நாடோறும் நன்றாகும்
அல்லார் செயும் கேண்மை ஆகாதே - நல்லாய்கேள்
காய்முற்றின் தின்தீங் கனியாம் இளந்தளிர் நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்'

என்ற பாடலில் உவமை நயம் தோன்ற உரைத்துள்ளார்.

**கல்விச் செருக்கு நீங்க**

ஒருவர் எத்துணைப் பெருங்கல்வியறிவுடையவராயினும் செருக்கடைவராயின் வல்லவர் ஒருவரால் கட்டாயம் வெல்லப்படுவர் என்பதை,

'கடலே யனையம்யாம் கல்வியா லென்னும்
அடலே றனைய செருக்காழ்த்தி விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும்'

என்று நன்னெறி குறிப்பிடுகிறது. இதில் செருக்கு அடைவதற்கல்ல கல்வி. இறைவனை என்றும் வணங்கப் பயன்பட வேண்டும் என்ற வள்ளுவரின் 'கல்வி' பற்றிய சிந்தனையை ஒப்புமையாகக் கூறியுள்ளார். அதனை,

'கற்றதனா லாயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்'

என்ற குறளாலும் அறியலாம்.

### ஈகைப் பண்பு

மனிதனிடம் இருக்க வேண்டிய அடிப்படைப் பண்புகளில் ஒன்று ஈகை.

'உண்டாலம்ம இவ்வுலகம்
இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும்
இனிதெனத் தமியர் உண்டலுமிலரே'

என்ற புறநானூற்றுப் பாடலுக்கேற்ப 'ஈதல், இசைபட வாழ்தல் என்பது வாழ்வியல் கொள்கை' என்பது வள்ளுவம். இல்லையென வந்தவர்க்கு இல்லை என்னாது தரவேண்டும் என்பது தமிழ் மரபு. இவ்வுண்மையைச் சிவப்பிரகாசர் 'ஈயேன் என்று உரைப்பதைப் பெரியோர் இழிந்ததாகக் கருதினர். எனவே, தம்மிடம் உள்ள பொருளின் அளவிற்கேனும் இரந்தவர்க்கு ஈகை செய்பவர்' என்ற கருத்தினைக் குறிப்பிடுகிறார்.

'பெருக்க மொடு தருக்கம் பெற்ற பொருட் கேற்ப
விருப்ப மொடு கொடுப்பர் மேலோர்'

என்று கூறுகிறார் சிவப்பிரகாசர். ஈகையில் சிறந்து விளங்கும் முறையையும் திருக்குறள் கருத்துக்களுக்கு ஏற்பவே கூறுகிறார்.

### சினம் காத்தல்

வெள்ளப்பெருக்கினை எப்படிக் கரைகட்டிக் காக்க வேண்டுமோ அதுபோலக் கோபத்தையும் காத்தல் வேண்டும். இல்லையெனில் கட்டுக்கடங்காத வெள்ளம் அனைத்தையும் அழித்துவிடுதல் போல மனிதனின் கோபமும் தன்னைச் சுற்றியுள்ள அனைத்தையும் அழித்துவிடும் என்று காரணகாரியத்தோடு மனிதனுக்குக் கோபம் கூடாது என்று சிவப்பிரகாசர் தெளிவாகக் கூறுகின்றார்.

'தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்'

என்ற வள்ளுவர் வாக்கும் இங்கு ஒப்புநோக்கற்குரியதாம்.

### காலம் அறிதல்

'காலம் பொன் போன்றது' என்பதற்கேற்பக் காலத்தை அறிந்து செயல் செய்ய வேண்டும் என்ற வள்ளுவரின் சிந்தனையை உட்பதித்த சிவப்பிரகாசர், 'திரிபுரதகனச் சருக்க'த்தில் காலத்தின் தன்மையை,

'வெல்கொடி வருத்த வெருவிக் கூகை'

என்ற அடியில் வள்ளுவரின்,

'பகல்வெல்லும் கூகையை காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது'

என்ற குறட்பாக் கருத்தோடு பொருந்திச் செல்வதைக் காணலாம்.

**தீண்டாமை**

சாதிக்கொடுமை வேண்டாத ஒன்று. அனைத்துயிர்களும் பிறப்பால் ஒன்றே என்பதை வள்ளுவர்,

'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

என்ற குறளில் விளக்குகிறார். இதனைச் சிவப்பிரகாசரும் நன்னெறி நூலில்,

'ஆக்கும் அறிவால் அல்லது பிறப்பினால்
மீக்கொள் உயர்வு இழிவு வேண்டற்க'

என்று கூறுகிறார்.

**இன்சொல்**

மனத்துக்கு உவகையை ஏற்படுத்துவதற்கான இனிய சொற்களைச் சொல்லுதல் 'இன்சொல்' ஆகும். மாசற்ற மனதில் இருந்து வெளிப்படுவது இன்சொல். இன்சொல்லால் மக்கள் மகிழ்வர். வன்சொல்லால் மக்கள் மகிழ்ச்சியடையார் என்று இன்சொல்லின் சிறப்பையும், அதனால் வரும் மகிழ்வினையும் சிவப்பிரகாசர் கூறுகிறார். 'இனியவை கூறல்' என்ற அதிகாரத்தில் கூறப்படும் இன்சொல் கருத்துக்கள் நன்னெறியிலும் இடம் பெற்றுள்ளன.

**வாழ்வியல் அறங்கள்**

வள்ளுவர் கூறும் வாழ்வியல் அறங்களைச் சிவப்பிரகாசரும் நன்னெறியில் விளக்குகிறார். அவை, பெரியாரைத் துணைக் கொண்டு ஒழுக வேண்டும். பழிக்கு அஞ்சுதல், பிறர் துன்பம் நீக்கல், தன்னைத் தான் வியந்துகொள்ளாமல், இனம் கண்டு வாழ்தல், புலன்களால் வரும் தீமை காணுதல், உடம்பு, உயிர் என இவற்றின் தன்மை கண்டு நன்னெறி நடத்தல் என மனித வாழ்க்கைக்குத் தேவையானவை என்பதை அறியலாம்.

இவ்வாறு திருவள்ளுவரையும், திருக்குறட் கருத்தையும் கையாண்ட சிறப்பினால் சிவப்பிரகாசர், 'வள்ளுவப் பிரகாசர்' என்று பேரறிஞரால் போற்றப்பட்டுள்ளார்.



# சிவஞான முனிவர்

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| 1. | சிவஞான முனிவர் வரலாறு | - | 1 |
| 2. | சிவஞான முனிவரின் நூல்கள் | - | 14 |
| 3. | முனிவரின் வாக்கில் பாடுபொருள் உத்தி | - | 63 |
| 4. | முனிவரின் வாக்கில் சைவ சமய சாதனங்கள் | - | 73 |
| 5. | சிவஞான முனிவர் வாக்கில் வழிபாடும் பயனும் | - | 89 |
| 6. | சிவஞான முனிவரின் வாக்கில் - சமுதாயம் | - | 99 |

# சிவஞான முனிவர்

## 1. சிவஞான முனிவர் வரலாறு

உமையம்மையொடு திருக்கயிலாய மலையில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான் சிவாகமப் பொருளை நந்தி யெம்பெருமானுக்கு அருளினார். அவர் தாம் பெற்ற சிவஞானத் தெளிவைச் 'சனற்குமார' முனிவருக்கு அருளினார். சனற்குமார முனிவர் சத்தியஞான தரிசனிகளுக்கு அருள, அவர் பரஞ்சோதி முனிவருக்கு அருளினார். இதுவரை அருளுரையாக வளர்ச்சி பெற்று வந்த சிவாகமப் பொருள் பரஞ்சோதி முனிவர் வழியே திருவெண்ணெய் நல்லூரில் தோன்றிய மெய்கண்டாரால் அருளப்பெற்றுச் சிவஞானபோதம் எனப் பெயர் பெற்றது. இதுவே சைவசித்தாந்த உண்மைகளை விளக்கும் சாத்திர நூல்களுள் சிறப்புப் பெற்றதாகும்.

இந்நூலின் உண்மைப் பொருளை வழித்தொடர்ந்து மெய்கண்டாரது அருள்மாணாக்கர் 'அருள்நந்தியார்' வழிநூல் செய்துள்ளார். அதுவே சிவஞான சித்தியார் ஆகும். இதனைப் பயின்ற அருள்நந்தியாரின் மாணாக்கர் மறைஞானசம்பந்தர் ஓர் அழகிய உரை நல்கினார். பிறகு தில்லை மூவாயிரவர் வழித்தோன்றியவரும் தம் மாணாக்கருமாகிய உமாபதியாருக்கு அருள, அவர் அந்த ஞானத்தெளிவை விளக்கச் 'சிவப்பிரகாசம்' என்ற நூலை நல்கினார். இத்துடன் சிறு சிறு நூல்கள் ஏழினையும் நல்கியுள்ளார்.

இவ்வாறு சிவாகமப் பொருள் விரிந்த வரலாற்றினையே திருக்கயிலாய மரபு என்கின்றனர். இம்மரபினை,

‘ தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறா
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே’

(சிவப்பிரகாசர்)

என உமாபதியார் குறிப்பிட்டுள்ளார்.

உமாபதியார் தம் மாணாக்கர் சித்தர் சிவப்பிரகாசருக்கு உபதேசஞ் செய்தார். சித்தர் சிவப்பிரகாசர், வைத்தியநாதன் எனப் பெயர் கொண்ட நமசிவாய மூர்த்திகளுக்குச் சிவஞானத் தெளிவை உணர்த்தியருளியபின், தாம் பொதியமலைக்குச் செல்ல இருப்பதைத் தெரிவித்தார். இந்நிலையில் தம் குருவை அன்புடன் நோக்கிய நமசிவாய மூர்த்திகள் ‘‘தாங்கள் இன்னும் சிலகாலம் இங்கேயே இருந்து எனது அறிவு அமைதிபெறத் தகுதியான சாதனங்களைக் கற்றுத்தர வேண்டும்’’ என வேண்டிப்பின் ‘‘எனக்கு எக்காலம் ‘மெய்யறிவு’ கிட்டுமோ?’’ என ஏங்கி நிற்கிறார் நமசிவாய மூர்த்திகள். அவருக்காக உளமிரங்கிய சிவப்பிரகாசர் ‘‘கவலற்க. எமது பெயரில் உன்னிடம் ஒரு சீடர் வருவார். உனது உளக்குறை நீங்கும்’’ என அருளிப் பொதிகைமலைக்கு எழுந்தருளினார்.

அருள்பெற்ற நமசிவாய மூர்த்திகள் திருவாவடுதுறை என்னும் தலத்திற்குச் சென்று அன்பர்கள் அமைத்துக் கொடுத்த திருமடம் ஒன்றில் இருந்துகொண்டு அங்கு வந்துசெல்லும் அடியார்களுக்கு ஞானத்துக்கு ஏதுவாகிய உண்மைப் பொருளை உபதேசித்து வந்ததால் மிகப்பெரிய ஞானவள்ளலாகப் போற்றப்பட்டார். அன்று முதல் திருவாவடுதுறை ஆதீனம் மலர்ந்தது.

## திருவாவடுதுறை ஆதீனம் (அரசமரத்து அறநிலையம்)

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்டது திருவாவடுதுறை ஆதீனம். இவ்வாதீனத்தில் இதுகாறும் 21 சந்நிதானங்கள் அருளாட்சி செய்துள்ளனர். இம்மடம் 164க்கும் மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளது.

திருவாவடுதுறை நாரசிங்கன்பேட்டைக்கு அருகில் உள்ள ஒரு சிவத்தலம். திருமூலர் திருமந்திரத்தை அருளிய தலம் இதுவே. இத்தல இறைவன் மாசிலாமணியீசர். இறைவி ஒப்பிலாமுலையம்மை. மூவர் பாடல் பெற்ற தலம். சேந்தனார் திருவிசைப்பா அருளியுள்ளார். இத்தலத்தின் பெருமைகளை விளக்கும் பாங்கில் சாமிநாத முனிவர் என்பவர் ஒரு தலபுராணம் பாடியுள்ளார். மகாவித்துவான் பிள்ளையவர்கள் யமகவந்தாதியும், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் ஒரு கோவையும் அருளியுள்ளனர்.

இத்தலத்தின் சபை போதியம்பலம். தலமரம் படரரசு. அம்மை 'பசு வடிவம்' கொண்டு வழிபட்ட தலம். மாணிக்கவாசகருக்குக் குருவடியாய் இறைவன் காட்சி நல்கிய தலமும் இதுவே என ஒரு வழக்காறு உண்டு.

மு.ரா. அருணாசலக்கவிராயர், சே.ரா. சுப்பிரமணியக்கவிராயர், டாக்டர் உ.வே. சாமிநாதையர், சபாபதி நாவலர், மு.ரா. கந்தசாமிக்கவிராயர், ஆறுமுக நாவலர், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் போன்ற தமிழ்ப்புலவர்களை உருவாக்கித் தமிழையும் சைவத்தையும் வளர்த்த ஆதீனம் திருவாவடுதுறை ஆதீனம்.

பார் போற்றும் பெருமைகொண்ட ஆதீனத்தின் அருமை மாணாக்கர் 'உரை வள்ளல்' சிவஞான முனிவர்.

## இனி அவரைப் பற்றி

மா தவசியாக வாழ்ந்து 'திராவிட' என்ற அடையாள மொழியோடு 'திராவிட மாபாடியகாரர்' என அடையாளங் காட்டப்பட்டவர் சிவஞான முனிவர். சிவஞான முனிவர் பிறந்து வளர்ந்த ஊர் விக்கிரமசிங்கபுரமாகும். இவ்வூர் பொதிகை மலைக்கு அருகே திருநெல்வேலியிலிருந்து அம்பாசமுத்திரம் செல்லும் வழியிலுள்ளது. இவ்வூரில் வாழ்ந்தபோது அவரது பெயர் 'முக்களாலிங்கர்' என்பதாகும்.

## முக்களாலிங்கர் குடும்ப மரபு

பொதிகைமலையில் அகத்தியர் வாழ்ந்துவந்ததாகக் கூறப்படுகின்றது. இவரின் அருளைப பெற்ற குடும்பம் ஆனந்தக்கூத்தர் என்பவரது குடும்பம். இவர்தம் இல்லக்கிழத்தியின் பெயர் மயிலம்மை. இவர்களின் அருமை மகவே முக்களாலிங்கர்.

ஆனந்தக்கூத்தர், மயிலம்மை இருவரும்,

' துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை'

என்ற வள்ளுவரின் வாக்கினைப் போற்றி வாழ்ந்தவர்கள். அடியார்களுக்கும் துறவிகளுக்கும் உணவளிப்பதைத் தமது கடமையாகப் போற்றிச் செய்துவந்தனர்.

ஒருமுறை திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரான்களை முக்களாலிங்கர், வீட்டிற்கு அழைத்துவந்து, அம்மாவிடம் அவர்களுக்கு உணவு சமைத்துப் படைக்குமாறு வேண்டிக் கொண்டார். அவர்கள் உணவருந்திவிட்டு ஊரிலுள்ள மடம் ஒன்றில் தங்கியுள்ளார்கள். வெளியே சென்றிருந்த ஆனந்தக்கூத்தர் இல்லத்திற்கு வருகிறார். அப்பொழுது ஐந்து வயதே நிரம்பியிருந்த முக்களாலிங்கர், தம்பிரான்மார்களுக்குத் தாய் உணவு படைத்ததை,

' அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி - பொருந்தவே
யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந்த வாத மயில்'

என ஒரு வெண்பாவாக வடித்துக் கூறியுள்ளார்.

இப்பாடலில் 'அடியவர்கட்கு', 'திருந்த அமுதளிக்கும் செல்வி', 'ஆனந்தக்கூத்தர் அகம் மகிழத் தொண்டு செய்யும்' என வரும் சொற்கள் அடியார்க்கு உணவிடும் கொள்கையினையும் அக்கொள்கை குடும்பத் தலைவர்வழி அமைந்தது என்பதையும் காட்டுகின்றன எனலாம்.

திருஞான்சம்பந்தர்,

' மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்'

என ஆணையிட்டவர். இவ்வாணை சைவ சமயத்தின் தலையாய கொள்கையுமாகும். இக்கொள்கையில் தலைநின்ற குடும்பமாக ஆனந்தக்கூத்தர் குடும்பம் விளங்கியுள்ளது.

திருஞானசம்பந்தர் முதலான இருபத்தேழு அருளாளர்கள் அருளிய திருமுறைகள்வழிச் சைவச்சித்தாந்தக் கொள்கைகளை நிலைநாட்டியவர் சிவஞான முனிவர்.

திருஞானசம்பந்தரின்,

' பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாந் தீவினையே'

என்ற பாடல்வழி உலகில் தோன்றியவர் மெய்கண்டார். அவர் அருளிய சிவஞான போதத்திற்குப் பேருரை கண்ட பேராளர் சிவஞான முனிவர். இவையெல்லாம் திருவருள் அடிப்படையிலேயே அமைந்தன எனலாம்.

முக்களாலிங்கர் அழைத்துவந்த தம்பிரான்மார்களைத் தரிசிக்க முக்களாலிங்கருடன் அவர்கள் தங்கியிருந்த மடத்திற்கு ஆனந்தக்கூத்தர் சென்றார். தம்பிரான்மார்களைக் கண்டு வணங்கியபின் அவர்களுடனேயே செல்ல விரும்பினார் முக்களாலிங்கர். ''ஞான விழைவுடைய தம்மகவு சைவக் கொள்கைகளில் பயிற்சி பெறுவதை மிக விரும்பினார்.'' எனினும் குழந்தையைப் பிரிய மனம் இடந்தரவில்லை. என்றாலும் குழந்தையின் அவாவினை நினைந்து,

' தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்'

என்ற வள்ளுவர் வாக்கினைப் போற்றி, குழந்தையை அனுப்பி வைத்தார். (இந்நிலையில் முக்களாலிங்கர் வயது ஐந்து என்கிறார்கள்.)

''தம்பிரான்மார்களுடன் சென்ற கூத்தரின் மகவு பல தலங்களை வழிபட்டபின் 'சுசீந்திரம்' சென்றுள்ளார்கள். இந்நிலையில், திருவாவடுதுறை ஆதீனத்துப் பத்தாவது குருமுதல்வர் வேலப்ப தேசிகர் - பேரூர் வேலப்பதேசிகர் என்பவருக்கு நிர்வாண தீட்சை, ஆசாரிய அபிடேக ஞான உபதேசம் ஆகியனவற்றை முறையே செய்வித்துச் சின்னப் பட்டமாக அமைத்துச் சுசீந்திரத்திலுள்ள மடாலயத்தில்'' இருத்தியுள்ளார்கள். மடாலயத்துள் சென்ற முக்களாலிங்கர் ஆதீனப் பெருங்குரவரான நமசிவாய மூர்த்திகளின் திருவுருவைத் தொழுது, பின் சின்னப் பட்டமாகிய பேரூர் வேலப்ப தேசிகரை வணங்கி, அவரிடம் சில காலம் உடனிருந்து, பின் சைவ சந்நியாசமும், சிவ தீக்கையும் பெற்றுள்ளார். அப்பொழுதுதான் அவரது நாமம் 'சிவஞான யோகிகள்' என்னும் தீட்சா நாமம் ஆயிற்று. அதன்பின் சிவஞான யோகிகள் தமிழ்மொழி, வடமொழி இரண்டனையும் கசடறக் கற்றுள்ளார்.

பேரூர் வேலப்பதேசிகர் சிவத்தல யாத்திரை மேற்கொண்ட பொழுது சிவஞான யோகிகளும் உடன் சென்று அவர்களுடன் பேரூரில் சிலகாலம் தங்கியிருந்துள்ளார்.

வேலப்பதேசிகர் பரிபூரணமுற்றபின் சிவஞான முனிவர் திருவாவடுதுறை அடைந்துள்ளார். அந்தக் காலத்தில்தான் - பன்னிரண்டாம் குருமகாசந்நிதானம் திருச்சிற்றம்பல தேசிகர் சிவஞான யோகிகளின் மாணாக்கரா யிருந்துள்ளார்கள்.

இவ்வாறு திருவாவடுதுறை ஆதீனத் தலைவர்கள் மூவருடன் தொடர்பு கொண்டிருந்த சிவஞான யோகிகள் சகாப்தம் 1708க்குச் சரியான விசுவாவசு ஆண்டு (17-4-1785) (1708 + 77) சித்திரைத் திங்கள் எட்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை சிவானந்தப் பெருவாழ்வு பெற்றார் என்கிறது வரலாறு.

திருவாவடுதுறை ஆதீனப் பதினொன்றாம், பன்னிரண்டாம் பட்டத்துச் சுவாமிகள் இருவரும் எழுந்தருளியிருந்த மன்றத்தில் 'சிவஞானபோதத் திராவிடமா பாடியத்தை' அரங்கேற்றினார் என்று ஆதீன வெளியீடுகள் தெரிவிக்கின்றன.

சிவஞான முனிவர் தம் ஞானகுருவாகிய வேலப்ப தேசிகருக்கு,

' கல்வி ஞானக் கடலமு தாயசீர்
பல்கு தேசிகர் பாதம் இறைஞ்சுவாம்'

என்று சிவதத்துவ விவேகம் என்ற நூலுள் வணக்கம் செலுத்தியுள்ளார்.

இப்பாடலில் 'தேசிகர்' என்ற சொல்லால் மட்டும் தம் குருவைப் பொதுப்படக் கூறிய சிவஞான முனிவர், 'வேலப்ப தேசிகர்' என்றே,

' எவ்வெகோட் படுபொருளும் அஞ்செழுத்தின் அடக்கிஅவற்றியல்பு காட்டி
மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை ஓதுமுறை விளங்கத் தேற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச் சிவபோகத் தழு த்தி நாயேன்
செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்தாள் சென்னி சேர்ப்பாம்'

எனவரும் காஞ்சிப்புராணச் செய்யுளுள் குறிப்பிட்டுள்ளார்.

இப்பாடலில், ''ஐந்தெழுத்து இயல்பும் அவற்றை ஓதும் முறையையும், அவற்றின் உள்ளீடும் அறிவித்துச் சிவபோகத்தில் அழுத்திச் செய்வினையினை ஏற்று நெறிப்படுத்துகின்ற குருநெறியாளராக'' வேலப்பதேசிகரைப் புகழ்ந்து குருவின் செயலையும் தெளிவுபடுத்தியுள்ளார்.

## முனிவர் 'உரைமன்னர்' ஆதல்

பிரம சூத்திரத்திற்கு வடமொழி அறிஞர்கள் செய்த தத்துவ உரைகள் 'பாஷ்யம்' (உரை) என்றே அழைக்கப்படுகின்றன. ஆனால், சிவஞான முனிவர் சிவஞான போதத்திற்கு யாத்த பேருரை (மாபாஷியம்) மாபாடியம் என்று அழைக்கப்படுகிறது.

செந்தமிழிலே உரைநடை கைவந்தவர்களுள் தலைசிறந்தவர் இவரே; உரைத்தலைவரும் இவரே; ஆதலின் இவரை 'உரை மன்னர்' எனலாம். கரிசற்ற கல்வியிலும் மாசற்ற சிவஞான ஒழுக்கத்திலும் . இறையடிப் பேரன்பிலும் தகைசான்ற இப்பெருந்தகையார் ''தமிழ்ச் சைவ நன்மக்களுக்குக் 'குலதெய்வம்' எனப்படுதற்குரியார்'' என்று இவரை 'உரை மன்னர்' 'குலதெய்வம்' எனக் கா. சுப்பிரமணிய பிள்ளை குறித்துள்ளார்.

## முனிவரின் புலமைக்குக் கிடைத்த பரிசு

முனிவர் திருவாவடுதுறை மடத்திலுஉ்றந்த காலத்து ஒருநாள் அடியார்கள் அனைவரும் உணவுண்ணச் செல்கிறார்கள் - உணவு மிகவும் குழைந்திருக்கிறது. வரிசையில் முதலில் அமர்ந்திருந்தவர், 'கொங்கர் வந்து பொங்கியிட்ட' எனத் தொடங்க, வரிசையில் ஒவ்வொருவரும் ஒருவரி பாட, ஈற்றில் முனிவர், 'எங்கள் பாவம் எங்கள் பாவம் எங்கள் பாவம் ஈசனே' என்று பாடி முடித்தாராம். அப்பாடல்,

'கொங்கர்வந்து பொங்கியிட்ட குழையலரிசிச் சோற்றினைச்
சங்கமங்கள் கூடிவந்து சாப்பிடத் துணிந்தபின்
அங்குமிங்கும் பார்ப்பதனால் ஆவதென்ன காரியம்
எங்கள்பாவம் எங்கள்பாவம் எங்கள்பாவம் ஈசனே'

என்பதாகும்.

இந்நிகழ்வுக்குப் பின் திருமடம் முனிவருக்குத் தனியாகப் பணியாள் நியமித்ததாகச் செவிவழிச் செய்தி.

இப்பணியாள் முனிவரிடம் கலந்தாலோசித்த பின்னே உணவு வகைகளைப் பொங்கியிருக்கிறான். இப்பணியாளுக்கு உணவு பொங்க முனிவரே கற்றுக்கொடுத்துள்ளார். இதன்னை,

' சற்றே துவையல் அறை; தம்பிஒரு பச்சடிவை;
வற்றல்ஏ தேனும் வறுத்துவை; குற்றம்இலை
காயமிட்டுக் கீரைகடை; கம்மென வேமிளகுக்
காயறைத்து வைப்பாய் கறி'

என்ற அவரது தனிப்பாடலால் உணரலாம். இதன்மூலம் முனிவரின் வாழ்வியல் சிந்தனைகளையும் உணர முடிகிறது.

## முனிவரின் இனிய மாணாக்கர்

மாணாக்கராகத் தகுதியுடையவர்களாக,

' தன்மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே'

என்ற நூற்பாவில் பவணந்தி முனிவர் குறிப்பிட்டுள்ளார். இவ்வகையில் சிவஞான முனிவரின் மாணாக்கராயிருந்து அருந்தமிழ்ப் பணியாற்றியவர்கள் பன்னிருவர். அவர்கள் பெயர் வருமாறு:

திருத்தணிகை கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், கச்சிச் சிதம்பர முனிவர், இலக்கணம் சிதம்பரநாத முனிவர், காஞ்சி முத்துக்குமார தேசிகர், காஞ்சிச் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை, திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், மதுரை ஆதீனம் வேலாயுத தேசிகர், அடைக்கலங்காத்தான் முதலியார், கடம்பர்கோவில் கல்யாணசுந்தர உபாத்தியாயர், அரும்பாக்கம் சிற்றம்பல தேசிகர்.

இவர்கள் உலகு போற்றும் வண்ணம் பன்னூல்களும் படைத்துள்ளனர்.

## முனிவர் வாய்மலர்ந்த வாக்குகளின் சுவடுகள்

சிவஞான முன்ிவர் அருளிச் செய்த நூல்கள் இருபத்தொன்பது. நன்னூல் விருத்தியுரைத் திருத்தத்தையும் சேர்த்து முப்பது எனக் கூறும் மரபும் உண்டு. இந்நூல்களை அருளிய கால வரலாற்றினை உணரமுடியவில்லை. எனினும், முனிவரின் வரலாற்றைக் கூறும் பல நூல்களும். முனிவர் காலத்தில் நூல்கள் வெளிப்பட்ட நிகழ்ச்சியை ஓரளவு குறித்துள்ளன.

காஞ்சிப்புராண நூலின் குறிப்புரையாசிரியரும், கழக வெளியீட்டுச் சிவஞானபோத மாபாடியத்துள் ம.வே. நெல்லையப்ப பிள்ளையும் சிவஞான முனிவர் வரலாற்றை

முறைப்படுத்தி முனிவர் நூல்களை அருளிய முறைமையை விளக்கியுள்ளனர்.

சிவஞான முனிவர் இளமைக்காலத்து முக்களாலிங்கர் என்ற பெயருடையவராக இருந்த காலத்தில் பாடியது தம் 'அம்மா'வின் மீது பாடிய செய்யுள்.

சிவஞான யோகிகள் என்ற தீக்கைத் திருப்பெயர் பெற்றுப் பாடிய முதல்நூல் 'அகிலாண்டேசுவரி பதிகம்'.

சின்னப்பட்டத்திலிருந்த வேலப்ப தேசிகர் தம் ஞானாசிரியரைக் காணச் சிவஞான முனிவருடன் சுசீந்திரத்திலிருந்துப் புறப்பட்டுப் பாண்டிய நாட்டுப் பதிகளை வணங்கிக் கொண்டு 'செப்பறை' என்ற ஊரைச் சார்ந்தார். அதனருகே இருந்த இராசவல்லிபுரம் சென்று அங்கிருந்த 'அகிலாண்டேசுவரி' மீது பதிகம் பாடுமாறு வேலப்ப தேசிகர் ஆணையிட்டவண்ணம் சிவஞான சுவாமிகள் பாடியது அகிலாண்டேசுவரி பதிகம்.

பேரூர் வேலப்ப தேசிகர், சிவஞான முனிவர் முதலியோருடன் கொங்குநாட்டிலுள்ள திருப்பேரூர் சென்று தங்கியிருந்தனர். சிறிது காலத்தில் தேசிகர் முத்தியடைந்தார்கள். அவருக்குச் செய்ய வேண்டிய பணிகளை யெல்லாம் முனிவர் செய்துவிட்டு, தாம் மட்டும் திருவாவடுதுறை மடம் வந்துசேர்ந்தார். திருவாவடுதுறையில் இருந்த முன்வேலப்ப தேசிகரை வணங்கி நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் தெரிவித்தார். பண்டார சந்நிதியாகிய அவர், அங்கிருந்த தம்பிரான்களுள் வேலப்ப தேசிகர் என்பாரைச் சின்னப்பட்டமாக்கிச் சுசீந்திரம் அழைத்துச் சென்றுள்ளார்.

முன்வேலப்ப தேசிகராகிய பண்டார சந்நிதி தம்பிரான்களோடும் சிவஞான முனிவரோடும் திருக்குற்றாலம் முதலிய இடங்களை வணங்கிக்கொண்டு, சங்கர நயினார் கோயிலை அடைந்து அங்குத் தங்கியிருந்தார். அப்போது முன்வேலப்ப தேசிகர் முத்தி பெற்றார். இச்செய்தியைச் சிவஞான முனிவர் சுசீந்திரத்தில் இருந்த வேலப்ப தேசிகருக்குத் தெரிவித்தார். அவர் வந்து இறுதிச் சடங்குகளை யெல்லாம் செய்து முடித்து, பின்வேலப்ப தேசிகர் எனப் பண்டார சந்நிதியானார். (திருச்சிற்றம்பலத் தம்பிரான் என்பவரைச் சின்னப்பட்டத்திற்குரியவ ராக்கினார். இவரே பன்னிரண்டாம் பட்டமாக ஆனவர். இவர் சிவஞான முனிவரின் மாணவராக அமைந்தவர்.)

பின்வேலப்ப தேசிகரோடு திருவாவடுதுறை சென்று சிவஞான முனிவர் அங்குத் தங்கி யிருந்தார். அங்குப் பஞ்சாக்கர தேசிகர் மாலை, சங்கரநமச்சிவாயர் எழுதிய நன்னூல் விருத்தியுரைத்திருத்தம், இலக்கண விளக்கச் சூறாவளி, சித்தாந்த மரபுக் கண்டனம் ஆகியவற்றை இயற்றினார்.

சிவஞான முனிவர் திருவாவடுதுறையிலிருந்து தம் மாணாக்கர்களுடன் மாயூரம், தில்லை, கொற்றவன்குடி, திருக்களஞ்சேரி முதலிய தலங்களுக்குச் சென்று வழிபட்டபின் மீண்டும் தில்லை வந்து, பின் திருப்பாதிரிப்புலியூர் சென்று தங்கியிருந்தார். அங்கு, பேசுவதுபோல்,

' வரையேற விட்டமுதஞ் சேந்தனிட
வருந்தினைவல் லினமென்றாலும்
உரையேற விட்டமுத லாகுமோ
வெனைச்சித்தென்று ரைக்கி லென்னா
நரையேற விட்டமுத னாளவனாக்
கொண்டுநறும் புலிசை மேவுங்
கரையேற விட்ட முதல்வா உன்னை
அன்றியும் ஓர்கதி உண்டாமே'

என்ற ஒரு தனிப்பாடலைப் பாடினார். அப்பாடல் செல்வர் ஒருவர் தந்த ஈற்றடிக்கேற்பப் பாடினால் 'நூறுபொன்' முடிப்புத் தருவதாகக் கூறியதறிந்து அந்தணர் ஒருவர் வேண்டியவாறு பாடினார். இப்பாடலால் அந்தணர் பொருள் பெற்றார்.

திருப்பாதிரிப்புலியூரிலிருந்து காஞ்சீபுரம் சென்றார். அங்கு, 1. கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி; 2. எடுத்து என்னும் சொல்லுக்குச் சிவசமவாத உரைமறுப்பு; 3. எடுத்து என்னும் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயம்; 4. சிவசமவாத உரைமறுப்பு; 5. சித்தாந்தப் பிரகாசிகை; 6. சுலோக பஞ்சகம்; 7. சிவதத்துவ விவேகம்; 8. தொல்காப்பியச் சூத்திர விருத்தி ஆகிய நூல்களைச் செய்தார்.

காஞ்சீபுரத்திலிருந்து திருவொற்றியூர் சென்று தங்கினார். திருவொற்றியூரில் மணலி சின்னையா என்பவர் சிவஞான முனிவரைத் தங்கியிருக்கும்படி வேண்டியவண்ணம் அங்குச் சிறிதுகாலம் தங்கியிருந்தார். அக்காலத்தில் சிவஞான முனிவர்

ஆகமப் பண்டிதர்கள் மூலமாக ஆகம ஐயங்களைத் தெளிதற்கு எண்ணங்கொண்டார். அதற்காகச் சின்னையா அவர்கள் சைவ அந்தணர்களை வருவித்து ஆவன செய்தார். அதன் மூலம் முனிவர் ஆகம விளக்கங்களைத் தெளிந்தார் என்பர்.

திருவொற்றியூரிலிருந்து காஞ்சிபுரம் வந்தார். அங்குச் 'சிவஞானபோத மாபாடியம்' செய்தருளினார். பின்பு அந்நூலுடன் திருவாவடுதுறை சென்று பண்டார சந்நிதானம் வேலப்ப தேசிகரும் சின்னப்பட்டம் திருச்சிற்றம்பல தேசிகரும் இருந்த அவையில் 'மாபாடியத்தை' விளக்கினார்.

திருவாவடுதுறையிலிருந்து காஞ்சி வந்து இருந்தார். தென்னாட்டுத் தலயாத்திரை சென்றிருந்த பண்டார சந்நிதானம் முத்தி அடைய, திருச்சிற்றம்பல தேசிகர் பண்டார சந்நிதி ஆனார். அவர் 'அம்பலவாண தேசிகர்' என்பாரைச் சின்னப்பட்டமாக்கிய விழாவிற்குச் சிவஞான முனிவர் சென்றுவிட்டு மீண்டும் காஞ்சி வந்திருந்தார்.

காஞ்சியில் மார்கழித் திருவாதிரை விழா வந்தபோது 'திருத்தொண்டர் திருநாமக்கோவை' செய்தார். பின், வடதிருமுல்லைவாயில் சென்று, 'வடதிருமுல்லை வாயில் அந்தாதி' பாடினார். அங்கிருந்து குளத்தூர் சென்றார். அங்குச் சோமேசரை வணங்கியபின் 'குளத்தூர் பதிற்றுப்பத்தந்தாதி', 'சோமசேர் முதுமொழி வெண்பா' ஆகிய நூல்களையும், அம்மைமீது 'அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்' என்ற நூலையும் அருளினார்.

அங்கிருந்து இளங்காடு என்ற ஊருக்குச் சென்று 'இளசைப் பதிற்றுப் பத்தாந்தி' பாடினார். மீண்டும் காஞ்சி வந்தார். அங்கு, 'கம்பர் அந்தாதி', 'திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு' ஆகிய நூல்களை இயற்றினார். மேலும், 'காஞ்சிப்புராணம்' என்ற மொழிபெயர்ப்பு நூலும் செய்தார். காஞ்சியில் முனிவரை உபசரித்த பெரியார் பிள்ளையார்பாளையம் 'மணியப்பர்' என்பவராவார்.

காஞ்சியிலிருந்த காலத்து, 'கேசவன்' என்பார் வேண்டுகோளின்படி 'தொட்டிக்கலை' என்ற அவர் ஊருக்குச் சென்றிருந்தார். அப்போது, 'கலைசைப் பதிற்றுப்பத்தாந்தி', 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்' ஆகிய நூல்களைச் செய்தார்.

இறுதியில் காஞ்சியிலிருந்து திருவாவடுதுறை சென்று அங்கேயே முத்திப் பேறு பெற்றார் சிவஞான முனிவர்.

## சிவஞான முனிவர் காலம்

சிவஞான முனிவர் வரலாற்றைக் காண உதவும் அகச்சான்றுகளுள் தலையாயதாக இருப்பது 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்' நூலின் பாடல் ஒன்று. அப்பாடல் சிறப்புப் பாயிரத்துள் இடம்பெற்றுள்ளது. அப்பாடலுள் சிவஞான முனிவர் நூலை அரங்கேற்றிய நாள் குறிப்பிடப்பட்டுள்ளது.

அச்செய்யுளில் குறிப்பிடப்பட்ட நாள் சாலிவாகன சகாத்தம் 1694 இக்கர வருடம் மாசி மாதம் 27 எனவும் அது கி.பி. 1772 எனவும் கூறப்படுகிறது.

சிவஞான முனிவர் வாழ்ந்த காலம் 1785 ஏப்ரல் மாதம்வரை என்பது முடிவு செய்யப்பட்டுள்ளது. 'சகாத்தம் 1708-க்குச் சரியான விசுவாவசு ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் நாள் (கி.பி. 17-4-1785) ஞாயிற்றுக்கிழமை 1.40 மணிக்கு சிவஞான முனிவர் சிவானந்தப் பேறுற்றார் என்பர். இந்த நாளை எவரும் வேறுபடுத்தவில்லை. ஆயினும், அவர் வாழ்ந்த காலம் எத்தனை ஆண்டுகள் என்பதில் பலரும் வேறுபடுகின்றனர்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் சுவாமிகள் வாழ்ந்தார் எனக், கி.பி. 1785 ஆக முனிவர் காலத்தைத் திருவாவடுதுறை ஆதீன வெளியீடு குறிப்பிடுகிறது.

சிவஞான முனிவர் எண்பது வயதுவரை வாழ்ந்திருக்கலாம் என்ற மு. கோவிந்தசாமி தெரிவிக்கும் செய்தியும், எண்பத்தைந்து ஆண்டுகளாகக் கொள்ளலாம் என்று க. விநாயகம் தெரிவிக்கும் செய்தியும் முனிவர் வாழ்ந்த காலத்தை நீட்டித் தெரிவிக்கின்றன.

எண்பத்தைந்து ஆண்டுகள்வரை வாழ்ந்தார் என்ற செய்தியைக் கூறுபவர்கள் முனிவரின் இளமைக்காலத்தை விரிவாகக் குறிப்பிடவில்லை.

முனிவரின் இளமைக்கால ஐந்து வயதில் தம்பிரான்களோடு தொடர்பு கொண்டு ஆதீனம் வந்ததைத் திருவாவடுதுறை வெளியீடு தெரிவிக்கிறது. மேலும், முனிவர் மிக 'இளம் பருவத்திலேயே' தம்பிரான்களைக் கண்டதை வரலாற்றில் மாற்றமின்றிப் பலரும் எழுதியுள்ளனர். எனவே, தம்பிரான்களோடு வந்து பேரூர் வேலப்ப தேசிகர் பத்தாவது (வேலப்ப தேசிகர்) பதினொன்றாவது, (பின்வேலப்ப தேசிகர்), பன்னிரண்டாவது (திருச்சிற்றம்பல தேசிகர்) இருமகா சந்நிதானங்கள் காலத்து ஆதீனத்தில் இருந்தார்.

பன்னிரண்டாவது ஆதீனம் இளையபட்டமாயும் பதினொன்றாம் ஆதீனம் பெரியபட்டமாயும் இருந்தபோது மாபாடியத்தை முனிவர் அரங்கேற்றினார் என்பதால் சுவாமிகள் இளமைக்காலத்து வந்து இரண்டு பெரியபட்டங்கள் இருந்த காலம்வரை இருந்ததனால் 80 ஆண்டுக் காலம் வாழ்ந்தார் என்பது பொருத்தமாக இல்லை. ஆதீன குருமகா சந்நிதானங்களின் தொடர்பு அடிப்படையிலும் ஆதீன நூல் வெளியிடும் காலங்களின் அடிப்படையிலும் சிவஞான முனிவரின் காலத்தை 32 என்று கொள்வதே ஏற்புடையதாக இருக்கிறது.



# 2. சிவஞான முனிவரின் நூல்கள்

நூல்கள் தரும் அடிப்படைப் பொருள்கள் அடிப்படையிலும், பாடப்பட்ட தலங்கள் வரிசையிலும் நூல்கள் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன.

## தொல்காப்பியச் சூத்திர விருத்தி

'வடவேங்கடம் தென்குமரி' - எனத் தொடங்கும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்திற்குச் செய்த பாயிரவிருத்தியும்,

' எழுத்தெனப்படுவ
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃதென்ப சார்ந்துவரல் மரபின்
மூன்றலங் கடையே'

என வரும் தொல்காப்பிய முதற்சூத்திரத்திற்குச் செய்த விருத்தியுரையும் 'தொல்காப்பியச் சூத்திர விருத்தி' என்ற பெயரில் அமைந்துள்ளது.

முதற்சூத்திரத்திற்குப் பொருள் எழுதி அதனை ''ஒரு வகையான் முடிந்தது'' என்று கூறி, ''இனிச் சொன் முடிவு ஆமாறு'' என்று மேலும் தொடங்கி முதற்சூத்திரத்தை விரித்துக் காட்டியுள்ளார்.

அந்நூலுள் - தற்சிறப்புப் பாயிரத்தில் தொல்காப்பியச் சூத்திர விருத்தியானது இயற்றமிழ் வல்லவர்கள் மகிழச் சொன்னது என்று கூறியுள்ளார் சிவஞான முனிவர்.

## நன்னூல் விருத்தியுரை

திருநெல்வேலியைச் சேர்ந்த சங்கர நமசிவாயப் புலவர் நன்னூலுக்கு விருத்தியுரை எழுதினார். அவர் திருவாவடுதுறை

ஆதீனசுவாமிகள் தேசிக மூர்த்திகளின் மாணாக்கர். அவர் எழுதிய விருத்தியுரையினைத் திருத்தியும், புதியன சேர்த்தும் சிவஞான முனிவரால் தரப்பெற்ற விருத்தியுரை 'புத்தம்புத்துரை' எனப் பெறும். அவ்வுரையில் தமிழ் நெடுங்கணக்கினுள் அகரம் முதலாக னகரம் ஈறாக அமைந்த முறைமைக்குப் பதினான்கு காரணங்களை விரிவாகத் தந்துள்ளார். மேலும், குற்றியலுகர விளக்கம் சகரக்கிளவி முதலாக அமைதல் முதலியவற்றையும் தெளிவாகக் கூறியுள்ளார். மேலும் இப்புத்துரைவழித் தொல்காப்பியத்துடன் நன்னூலையும் இணைத்த பெருமை சிவஞான முனிவருக்கு உண்டு. மேலும் சமணச் சார்புடையவரால் செய்யப்பெற்ற இலக்கண நூலைத் தமிழகத்தின் தொன்மை அடிப்படையிலும், தொன்மைச் சமய அடிப்படையிலும் மொழிப் பயன்பாட்டை நன்னூல் இலககண நூலில் நிலைநிறுத்தியுள்ளார் சிவஞான முனிவர்.

## இலக்கண விளக்கச் சூறாவளி

இலக்கண விளக்கம் என்னும் நூல் திருவாரூர் வைத்தியநாத நாவலரால் செய்யப்பெற்றது. அந்த நூலின் மறுப்பு விளக்கமாக அமைந்த நூல் இலக்கண விளக்கச் சூறாவளி எனப்படும். தொல்காப்பியச் சூத்திர விருத்திக்குப்பின் இலக்கணக் கொள்கைகளை விளக்குமுகத்தான் சூறாவளி நூலைப் பின்னர்ச் செய்தார் சிவஞான முனிவர். இந்த நூல் 'இலக்கண விளக்கம்' என்ற நூலை மறுத்து எழுந்த நூல் எனப் பொதுவாகக் கூறினாலும் சிவஞான முனிவர் விளக்கிய உரைகளோடு இணைத்து இலக்கண விளக்கத்தை ஒரு முழுமை இலக்கண நூலாகக் கொள்ளலாம்.

## அகிலாண்டேசுவரி பதிகம்

திருநெல்வேலிக்கு அருகில் அமைந்துள்ள செப்பறைப் பதியில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் அக்கினீசுவரர். இறைவி அகிலாண்டேசுவரி இவ்வம்மைமீது சிவஞான முனிவர் அருளிய தோத்திர நூலே 'செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம்' ஆகும். இப்பதிகத்தில் பதிக இலக்கணத்திற்கேற்பப் பத்துப் பாடல்களே உள்ளன. இப்பாடல்கள் அம்பிகையின் கருணைத் திறத்தினைப் புகழ்வதாக அமைந்துள்ளன. அம்பிகையின் உறுப்பழகு கூறுமிடம், உவமைகள், உருவகம் போன்றவற்றை உறுதியாகக் கொண்டு சில உண்மைகளை வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் சிவஞான முனிவர் பாடியுள்ளார்.

## பிறவிக்கடலும் திருவடித் தாமரையும்

பிறவிக்கடலும், திருவடித் தாமரையும் உருவகப்படுத்தப் பட்டுள்ளன. அவ்வுருவகம், முன்னைமல மென்ற பேய்பிடித்து, இருவினையாகிய வெறிபிடித்த அரவு சுற்றி, முடியாத பிறவியாகிய கடற்குள்ளாக வீழ்ந்த ஆசையென்னும் சுழி வந்து அமிழ்த்த, ஒருபுறம் மின்னனைய மாதரெனும் மகரமீன் ஒருபுறம் விழுங்கிட ஒருபுறம் ஐம்பொறிகளென்னும் விறல் சுறாமீன்கள் இழுக்க நான் துன்பம்அடைவதானேன். எனக்கு உன் அடியான திருவடித் தாமரை யல்லது வேறு புகலிடம் காணேன். பொய்யன் என்றாலும்கூட என்னைக் கைவிடாது ஆளும் இப்புவனங்களை ஈன்ற அன்னையே என்று இக்கருத்தினைக் கொண்ட பாடலடிகள்,

' முன்னைமல மென்னுமொரு பேய்பிடித் திருவினை
முதிர்ந்தவெளி யரவு சுற்றி
முடியாத பிறவிக் கடற்குள்வீழ்ந் தாசையென
மூண்டசுழி வந்த மிழ்த்த
மின்னனைய மாதரெனு மகரமீ னொருபுறம்
விழுங்கவைம் பொறிக ளான
விறல்சுறா வைந்தும் வந் தெங்கணு மிழுக்க நான்
வீணிலே நைவ தானேன்.
பொன்னனைய நின்னடித் தாமரைத் தலமலாற்
புகலிடம் பிறிது காணேன்'

என்பனவாகும்.

ஆணவத்தின் சேட்டையினையும், பயனையும் அகிலாண்டேசுவரி பதிகத்தில் மிக விரிவாகக் கூறியுள்ளார். 'செம்பிலே உள்ள களிம்பு என அநாதியே ஆணவ மலத்தில் மூழ்கிய உயிர்', 'இருளைச் சேர்ந்த விழித்த விழி யென்ன' எனும்படி தெளிவற்ற கேவலாவத்தையில், அசைவற்றிருந்து ஆணவமலச் சேட்டையால் குழவி பாலையும், குருடர் கோலையும் விரும்ப, அவற்றை அளிப்பாரைப்போல நான் என்னைச் சார்ந்த கன்ம, மாயைகளை விரும்ப, நீ அவற்றைத் தந்திட நான் சகலனாய்ச் சுழல்கின்ற கறங்கு பம்பரம் என்ன பிறவிச் சுழிக்குளே பட்டு உழல்கின்ற பெரும்பாவி ஆனேன். பாழான மலம், வினை, மாயை ஆகிய மும்மலங்களின் பற்று விட்டு எனை நான் அறிந்து உன் அழகிய பொன்னார் திருவடி நீழல் சேர்ந்து ஆனந்தம் உண்டு 'நான் அதுவாய்' இருப்பது என்றோ-என்பது அவர்தரும் விளக்கமாகும்.

இங்கு, கேவலாவத்தையில் உயிரின் நிலை அசைவற்றிருத்தல் என்பதும், குழவி பாலையும் குருடர் கோலையும் விரும்புவது இயல்பு. அதுபோலவே உயிர்களுக்கு விருப்பம் விளைந்தது என்பதும், தேவையைப் பூர்த்தி செய்யக் குழவிக்குப் பெற்றோரும் மற்றோரும் பாலைக் கொடுப்பது மாயை - உடம்பு முதலியனவற்றைத் தந்தது என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

## கச்சியானந்த ருத்திரேசர் பதிகம்

பதினொரு பாடல்களால் ஆன பதிகம். முதற்பாடலில் ஐந்து பொறிகளை அடக்கிக் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மார்ச்சரியம் ஆகிய ஆறு பகைகளை வென்று தவம் புரியவில்லை என்றாலும் ஐயா என வணங்கி உயர்வதற்கு உரிய இடமாக அமைந்தது இறைவி முப்பத்திரண்டு அறங்களைச் செய்த காஞ்சி என்று குறிப்பிட்டு, அங்குள்ள ஆனந்த ருத்திரேசனை இறைஞ்சி வாழ்க எனக் குறிப்பிடுகிறார்.

மாதவர் மனம்போல் காஞ்சியானது தூய்மையானது எனவும் அத்தலத்து இறைவனை இறைஞ்சித் தூய்மை பெறலாம் என்றும் கூறியுள்ளார்.

அறுபத்து நான்கு கலைகளும் எட்டுவகைச் செல்வங்களும், புகழும் காஞ்சி ருத்திரேசனை இறைஞ்சினால் பெறலாம் என்றும் கூறுவார்.

'பொறைதவ மறிவொ முக்கம் புத்திர மித்திராதி
குறைவறு செல்வம் யாவுங் குலவவீற் றிருக்க லாமால்
மறையொலி முரசந் துஞ்சா வளநகர்க் காஞ்சிவாழும்
இறைவனா னந்தருத்தி ரேசனை யிறைஞ்சி னோர்க்கே'

என்றவாறு ஆனந்த ருத்திரேசனால் உலக அனுபவத்தில் வீற்றிருக்கும் மேன்மை புலப்படுத்தினார். ஆசையாகிய வேரை அகழ்ந்துவிட்டு வெண்ணீறு, ஐந்தெழுத்து ஓதுதல், அக்கமாலை பூணுதல், புனிதரோடு இணங்குதல் ஆகிய மரபுகளை இங்கே காட்டுகின்றார். யாரும் வணங்க வாழ்ந்திருக்கும் அனுபவம் உயிர்களுக்கு வாய்க்குமாறு ஆனந்த ருத்திரேசன் அருள்துணையால் பெறலாம் என்றார். வேட்கை முதலான குழிகளில் வீழும் துயரை அழிக்க ருத்திரேசனை வணங்குதலைக் கூறுகிறார். இருக்கு முதலிய வேதங்கள் அறிய எட்டாத பேரின்பக் கடல் காஞ்சி வாழ்வுற்ற ஆனந்த ருத்திரேசன் என்று கூறுகின்றார்.

பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை மூன்றும் ஒவ்வொரு கடலாக இருக்க, அவற்றையும் நீங்கி மேலான முத்தி எனும் நீண்ட கரை காணலாம் என்று கச்சிஆனந்த ருத்திரேசர் அனுபவத்தால் வாய்க்கும் பேறுகளைச் சுட்டுகிறார். ஆனந்த அமிழ்தம் ஊறி, ஆனந்த மகிழ்ச்சி பெறுவதற்கு ஆனந்த நிருத்தம் செய்பவன் கச்சி ஆனந்த ருத்திரேசன் என்று கூறி அவன் அடியிணைக்கு அன்பு செய்வாம் எனக்கூறி முடிக்கின்றார்.

## குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

ஆசிரியர் கருத்தும் அவையடக்கமும் என முதற்கண் இரண்டு பாடல்களைப் பாடி, விநாயகர் வணக்கம் எனக் காப்புச் செய்யுளும் பாடிப் பிறகு, பத்துப் பருவங்களை அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் அமைத்துள்ளார் ஆசிரியர். காப்புப் பருவத்தில் பதினோரு பாடல்களும் ஏனைய ஒன்பது பருவங்களில் ஒவ்வொன்றுக்கும் பத்துப் பாடல்களாகவும் மொத்தம் நூற்றுநான்கு பாடல்களைக் கொண்டது அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்.

அம்பிகை பரம்பொருள் தன்மையிலேயே ஒரே பரம்பொருளின் வேறுபட்ட வடிவமாகக் கண்டு வழிபடும் அமைப்பில் அமைத்துக்கொண்டு அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் பாடிய தம் கருத்தைத் தெரிவிக்கின்றார் சிவஞான முனிவர்.

' மனம்வாக்கி லெட்டாத சிற்சத்தி யாயிடினு
மன்பதைகள் உய்யவேண்டி
மலையரையன் முதலோரிடத்தவ தரித்தொரு
மடப்பிள்ளையாய் வருதலால்
இனநாட்டி வாழ்த்திடுவார் பெரியோர்கள்'

என்றவாறு, கடந்தநிலைப் பரம்பொருள், மன்பதைகள் உய்ய வந்த பல்வேறு வடிவத்தை இனம்நாட்டி வாழ்த்த வேண்டும் என்று கூறுகின்றார்.

அமுதாம்பிகையைப் பெண்அணங்கு அரசி என்றும் சுந்தரப்பெண் அமுது என்றும், கமலாகரி என்றும் பல்வேறு பெயர்களாலும் சுட்டுகின்றார்.

' சிற்சபையி னெற்றிவழிக யற்புதனை யாட்டுமயில்
செங்கீரை பாடியருளே'

என்று செங்கீரைப் பருவத்தில் ஈற்றடியில் அமைத்துக்காட்டும் முனிவர் ஆட்டத்தின் அடிப்படையில் இறைவியைச் சுட்டிக்காட்டுகிறார்.

'சொல்லுமம் பொருளும் என நடமாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே'

என்று அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் இறைவியை நடமாடும் துணைவருடன் புல்லுபவளாகக் கூறினார்.

இங்கே முனிவர் 'ஆட்டும் மயில்' என்று கூறினார். மயில் என்றாலே ஆடுவதற்குரியது. ஆடுவது, என்பதாகச் சுட்டப்படும். ஆனால், இறைவியாகிய மயில் இறைவனை ஆட்டுவிக்கிறது என்றவாறு கூறினார்.

பரையிடமாநின்று மிகு பஞ்சாக்கரத்தால், உரை உணர்வுக்கு எட்டா ஒருவன், வரைமகள் தான் காணும்படியே நின்று ஆடல் செய்யும்,

'பரையிடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்
வரைஉணர்வுக் கெட்டா ஒருவன் - வரைமகள்தான்
காணும் படியே கருணைஉருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு'

என்ற, உண்மை விளக்கப் பாடலானது இறைவி காணுமாறு இறைவன் ஆடுகின்றான் என்ற செய்தியைக் குறித்தது.

இறைவி இறைவனை ஆட்டுவித்துக் காண்கிறாள் என்பதாக இறைவன் ஆட்டத்திற்கு அடிப்படையான அருள்நிலை அமைப்பில் இறைவியை முனிவர் எடுத்துக்காட்டுவது உளங்கொளத்தக்கது.

இறைவனுடைய அமைப்பிலேயே அமுதாம்பிகையை அடிமுடி காணாத அமைப்பில் அளந்தறியப் படாதவள் என்பதை,

'அளந்தறியாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை'

என்று சுட்டியுள்ளார் முனிவர்.

பல்வேறு கற்பனைகளால் அம்மையினுடைய கோலத்தையும் மும்மலம் தவிர்க்கும் அம்மையின் அருட்பணியினையும் பலபட விளக்கியுள்ளார் முனிவர்.

துவாதசாந்தப் பெருவெளியில் ஆனந்த வெள்ளப் பெருஞ்சோதி அனுபவம் தருபவள் அம்மை என்றும் குறிப்பிடுகின்றார்.

முப்புரங்களை ஒவ்வொரு பதத்தில் நிறுத்திக் கருணை செய்தவள், பரமானந்தப் பெருவாழ்வைத் தருபவள் என்று அமுதாம்பிகையைக் குறிப்பிடுவார்.

நஞ்சுண்ட காலத்து இறைவனைக் காப்பதற்காககத் தன் வாயமுதம் தந்து உடனிருந்து காத்தவள் என்றும் உருவில் பாதி கலந்து அனுதினமும் பாதுகாத்து வருபவள் என்றும்,

' விடமுண்ட சோமேச னார்க்கினிய வாயமிழ்த
மெல்லெனப் பருக்குவித்து
விளியாத வண்ணமென் கொங்கையஞ் சஞ்சீவி
வெற்புங் கொடுத்து மற்றும்
உடனொன்றி மணிமிடற் றுலவா திருத்தலா
னொருகணப் பொழுதுமகலாது
உருப்பாதி யிற்கலந் தனுதினம் பாதுகாத்
தொண்குளத் தூரின் மருவும்'

என்ற பாடல் வரிகளால் குறிப்பிட்டு அம்மை இறைவனின் அருட்பணியினளே என்றவாறு குறித்தார்.

இறைவியானவள் தகரப்பெருவளி அமிழ்தாகவும் இருள் மருவாத சிந்தையினளாகவும் ஆன்மாக்களை ஆக்குபவளாகவும் ஆன்மாக்களின் குற்றத்தை அழிக்கும் அறக்கடலாகவும் உருவாயும், அருவாயும் நிறைந்த பொருள்களுக்கு வைப்பிடமாகவும் இருப்பவள் என்றும் அம்பிகையைச் சுட்டுகின்றார்.

இக பரப் பெருவாழ்வு விரும்பியவர்களுக்கு அருளும் இணையடியினாள் என்றும் அருள்மடை திறந்து ஊட்டுபவள் என்றும் கூறுவார்.

இருக்கு முதலான வேதங்கள் முறையிட்டும் அவைகளால் அறிதற்கு இயலாத வடிவினள் என்றும் அவளாகவே வந்து தன்னியல்பினைக் காட்டி அருள்பவள் என்றும்,

'இருக்காதி யான நான்கும்
இன்னங் கிடந்துமுறை யிட்டும்அறி வரியநின்
இயல்பினைக் காட்டியருளி'

என்ற வரிகளால் குறிப்பிடுகின்றார்.

மறைமுடிவு எட்டாத குணம்குறி கடந்த பேரானந்த வெள்ளமான அனுபவத்தை உயிர்களுக்குத் தருவதற்காக வள்ளன்மையுடன் முப்பத்திரண்டு அறங்களைச் செய்து காட்டியவள் என்று அம்பிகையைக் குறிப்பிடுகின்றார்.

இறைவியினுடைய செயல்பற்றி இறைவன் மகிழும் செயல் என்றே சுட்டி அவளுடைய செயலைப் பின்வருமாறு எடுத்துக் கூறுகின்றார்:

பேரண்டத்தையே சிற்றிலாகக் கொண்டு, வினையைச் சிறுசோறாகக் கொண்டு உயிர்கட்கு மலநோய்ப் பசி நீங்கப் பல்காலும் தந்து விளையாட்டுச் செய்து பூமேலேற்றிப் பரமானந்தப் பெருவீட்டில் குடியிருந்து பேரானந்தம் தருபவள் என்றும், அத்தகு செயலுடைய கருணைப் பெருக்காற்றினள் என்றும் குறிப்பிடுவார் முனிவர்.

உலகமெலாம் வாழ்வதும் உலகத்திலுள்ள உயிர்கள் பேரானந்தம் அனுபவிப்பதற்காகச் செய்ய வேண்டிய செயல்களும், உரிய பொருள்களும் வாழவும், இருந்து விளங்கும் அருள் என்பதாக அமுதாம்பிகையை விளக்கி, பிள்ளைத்தமிழில்,

' அண்டப் பரப்பெங்கு மண்டிப் படர்ந்தபே
    ரானந்த வெள்ளம் வாழ
அருட்சரியை கிரியைசிவ யோகமொடு ஞானமென
    மதிகசிவ தருமம் வாழக்
கண்டவர்க்கினியநஞ் சோமேசர் வாழநின்
    கட்கடைக் கருணை வாழக்
காசினி யொருங்குசிவ பத்திகுரு பக்திசங்
    கமபத்தி செய்து வாழ
வெண்டிருப் பூதியுய ரக்கமணி வாழமெய்
    விளைக்குமஞ் செழுத்து வாழ
வேதநெறி சைவநெறி வாழக் குளந்தைநகர்
    மேன்மேற் செழித்து வாழப்
புண்டர நுதற்றொண்டர் தங்குழாம் வாழநீ
    பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாசநீ
        பொன்னூச லாடியருளே'

என்ற பாடலை அமைத்துள்ளார்.

## கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

சென்னையை அடுத்த தொட்டிக்கலை என்னும் தலத்து விநாயகப்பெருமான்மீது பாடிய நூல் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்.

காப்புப் பருவம் தொடங்கிச் சிறுபறைப் பருவம் ஈறாக ஒன்பது பருவங்களிலும் பருவத்திற்கு ஐந்து பாடல்களாகப் பாடியுள்ளார் முனிவர். சிறுதேர்ப் பருவத்திற்கு மட்டும் ஆறு பாடல்கள் பாடியுள்ளார். நூலினுடைய காப்புச் செய்யுள் ஒன்றுமாக இரண்டு செய்யுட்கள் நூலின் முதற்கண் அமைந்துள்ளன. மொத்தம் ஐம்பத்து மூன்று பாடல்களாலாகிய இந்நூலில் தம்முடைய பரம்பொருட் கொள்கையைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறார்.

அமுதாம்பிகைமீதும் சோமேசர்மீதும் ஏகம்பர்மீதும் உருத்திரேசர்மீதும் அகிலாண்டேசுவரிமீதும் பாடல்களைப் பாடி, பல்வேறு கடவுள் வடிவங்களில் பரம்பொருட் கொள்கையைக் காட்டுந் தன்மையையும், அவ்வாறே விநாயகர் மீதும் பரம்பொருள் நிலை தெரிவிக்கும் அமைப்பிலும் பாடல் செய்யும் சிவஞான முனிவர் பல்வேறு கடவுளர் வடிவங்களில் பரம்பொருட் கருத்தின் அடிப்படையைப் பின்வருமாறு விளக்குவார்.

' அகளவடி வானபர மானந்த னேனுமெய்
யடியவர்கள் தம்மை யாள
அருளுரு வெடுத்தலால் அதனிளமை நோக்கிமுன்
னந்நலார் கூறு மொழி'

என்ற பாடல் வரியானது வாக்கு மனம் கடந்த அருவமான பரம்பொருள் பல்வேறு வடிங்களில் அருளுரு எடுத்து இருப்பது என்றும் அதனுடைய அருள் நலத்தை அனுபவிக்கிற தன்மையில் பல்வேறு வடிவக் கடவுளர் நிலைகளையும் தாம் அனுபவித்து மொழிவதாகக் காரணத்தை விளக்குகின்றார் முனிவர்.

இறைவன் பல்வேறு அருள்திருமேனிகளாகக் கூறப்பட்டிருப்பது மெய்யடியார்கள் அனுபவித்த அனுபவத்தின் உண்மை வடிவங்களே என்றும் சான்று காட்டுகின்றார் முனிவர்.

விநாயகப் பெருமானை விளக்கவந்த முனிவர் சிவபெருமானைப் போலவே சடையில் பிறைசூடியவன் என்றும் கூறுகின்றார்.

விநாயகப் பெருமானுடைய செய்கையைப் பக்குவம் முதிர்ந்த ஆன்மாக்களுக்கு மலபரிபாகம் பிறந்த அளவில் சத்தி பதித்து வினையொப்புப் பழுத்த அடிப்படையில் பந்தநோய் அறுக்கும் செயல் உடையவன் என்றும் அடியவர்கள் உயிர், பொருள், உடல் ஆகிய எல்லாவற்றையும் பந்தப்படாது அங்கீகரிக்கும் செய்கை

உடையவன் என்றும் பரம்பொருட் செய்கையில் விநாயகப் பெருமானைப்,

' பக்குவ முதிர்ந்துசிவ புண்ணிய நிரம்பிமல
பாகம் பிறந்து சத்தி
பதிந்துவினை யொப்புப் பழுத்தவர்கள் பந்தநோய்
பாற்றுமொரு செங்கை மலரும்
அக்கருணை யடிவர்க ளுயிருடன் பொருள்காய
மாமெவ் வகைப்பந் தமும்
அங்கீ கரிக்குமோர் கைம்மலரு மாறுபா
டாதரித் திடுசெய் கையான்'

என்றவாறு எடுத்துக்காட்டியுள்ளார்.

சுத்த ஒளியாகவும் சுத்த அறிவாகவும் கட்டுக்கு உட்படாத சுத்த நிறைவாகவும் இருந்து, அந்நிலைக்கு ஆன்மாவை எடுத்துச் சென்று ஆன்மாக்களைச் சுகாதீதவாரியில் அழுத்துவதற்காக அவன் எடுத்த திருமேனியினை,

' எம்போல் எடுத்த நின் திருமேனி'

என்றவாறு, வருகைப் பருவத்தில் எடுத்து விளக்குவார் முனிவர்.

இறைவன் வாக்கு மனம் எட்டாத தன்மையிலிருந்து நல் திருமேனி கொண்டு நின்ற குறிப்பை, உயிர்கள் தத்தம் குறிப்பிற்கேற்பக் கண்டு மகிழ்கின்றன. அவ்வாறு காணும் உயிர்களுக்குப் 'பொதுக்காட்சி'யில் நின்று மூலப்பொருளாகக் காணப்படும் தன்மையன் எனப் பரம்பொருளைப் பல்வேறு திருமேனிகளால் உணர்வதன் தன்மையினை,

'வாக்குமன மெட்டாத நீ
கொண்டநற் றிருமேனி யுண்மையைத் தத்தங்
குறிப்பினுக் கேற்ப மொழியுங்
கொள்கைபோற் சேயிடையி னின்வரவு கண்டுசிலர்
கூடும் பொதுக் காட்சியால்'

என்றவாறு குறித்தார்.

முருகவேளுக்கு முன் உதித்தவன் என்றும் தக்கன் வேள்வி அழித்த வீரபத்திரனைத் தம்பியாகக் கொண்டவன் என்றும் அருள் விளையாட்டு அடிப்படையிலான பல்வேறு செய்திகளைப் பல்வேறு கடவுள் செயல்கள் என்பதாக எடுத்துக் கூறினாலும், சைவ சித்தாந்தத்தின் பரம்பொருட் கொள்கை அடிப்படையிலேயே,

பரம்பொருள் ஒருமை அடிப்படையிலேயே அவற்றை எடுத்துக்கொண்டு விளக்குகிறார். அவ்வகையில், உலகத்தைத் தன்னுள் அடக்கிய வியாபகப் பொருளாகவும், முப்பொருள் இயல்பின் முதற்பொருளாகவும் வினையைச் செயல்படுத்தும் ஆணை உடையதாகவும் அருளுருக் கொண்டதாயும் நின்ற சிவ விளைவுப் பொருளே என்றவாறு பல்வேறு வடிவங்களில் பரம்பொருள் திருமேனி கொண்டதைக் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் பல்வேறு நிலைகளில் எடுத்துக்காட்டி விளக்கியும்,

‘ மலைவற முப்பொரு ளியல்பு தெளித்தரு
ளொரு முதலே
மலையென முற்படு வினைக ளறச்செயு
மெம துயிரே
அலையு மனத்தையு நிலையி னிறுத்திடும்
அரு ளுருவே
அமிழ்தி னினித்துட லிடனு முகிழ்த்தொளிர்
சிவ விளைவே
புலைவறு கற்பக மெனவருள் கொட்டிய
மழ களிறே
உலக மனைத்துநி னுடலி லடக்கிய
நிறை பொருளே’

என்ற பாடலில் முழுமையாக விளக்கியும் உள்ளார் முனிவர்.

திருமேனிகளுக்குள் உள்ள வேறுபாட்டை முனிவர் காப்புச் செய்யுளில்,

‘ தணிபூத்த தன்றந்தை போற்பிற குறித்ததூஉந்
தற்குறித் தேன்ற தொழிலுந்
தானே கடைக்கூட்ட வல்லசெங் கழுநீர்த்
தடங்களிறை யஞ்ச லிப்பாம்’

என்ற வரியில் மிக நுட்பமாக விளக்கியுள்ளார்.

சிவபெருமானே விநாயகர் போன்ற அருள் திருமேனிகளால் வெளிப்பட்டவன் என்ற கருத்தை உடைய முனிவர் அவ்வாறு பல்வேறு திருமேனிகளாக வெளிப்பட்ட கால்த்துச் சிவபெருமானாக இருந்து ஆற்றும் பொதுச்செயல்களோடு குறிப்பிட்ட ஒரு திருமேனியில் தனிப்பட்ட ஒரு செயல்குறிப்பு உடையவன் என்ற

நுட்பத்தை வெளிப்படுத்துகிறார் முனிவர். அவ்வகையிலேயே தந்தைபோல், பிற குறித்த தொழில் செய்வது என்றும் தன் குறித்த தொழில் செய்வது என்றும் திருமேனிச் செயல் தன்மையைத் தெளிவுபடுத்தினார் முனிவர், விநாயகப் பெருமான்மீது பாடிய பிள்ளைத்தமிழ் ஓவாத பேரருள் விளைத்திடும் என்றவாறு நூல் குறித்த கருத்தை ஆசிரியர் கருத்துப் பாடலில் வெளிப் படுத்தியுள்ளார்.

## இளசைப் பதிற்றுப்பத்தாந்தி

### இளங்காடு

இளங்காட்டு இறைவன் சேவடியில் சூட்டப் பாடிய பாடல்கள் என இளசைப் பதிற்றுப்பத்தந்தாதியின் காப்புச் செய்யுளில் குறிப்பிடுகின்றார்.

இளங்காட்டுறை அண்ணல் உலகமெங்கும் ஒரு வடிவாய் நின்று இலங்கும் பேரொளி எனவும் அண்ணிக்கும் கரும்பு எனவும், அமுதம் எனவும் கண்ணுக்கு உள்மணி எனவும் கனியின் சுவை எனவும் குறிப்பிட்டு, அவன் இளங்காட்டு உறைகின்ற உயர்ந்த பொருள் என்று கூறுகின்றார். அந்த உயர்ந்த பொருளை நினைத்தால் நெஞ்சு உருகும் என்று கூறி, நெஞ்சு உருகுவதால் இறைவனுடைய இன்பத்தை 'மொண்டு கொண்டு உண்டு' களிக்கலாம் என்று கூறுகின்றார்.

தெளிவில்லாதவனைத் தெளிவுபடுத்தித் தெளிவாக்கித் தாம் நிலைபெற்ற தன்மையைக் கூறி, குரு உருவாக வந்து தம்மை ஆட்கொண்டவன் என்று,

'தேறலேனைத் தெருட்டிச் சிவமெனக்
கூறி யாளக் குருவுருக் கொண்டவன்
நாறு பூம்பொழி னல்லிளங் காட்டுறை
பாறு நச்சும் படைமழு வாளனே'

என்ற பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவடி வாழ்த்தல், உயிர்க்குயிராய் நிறைந்தவனை மறவாமை முதலியவற்றைக் கூறிப் பிறவாத வரமும் கேட்கின்றார்.

இறைவன் வெளியே நின்று ஆடல் கொண்டான் என்ற அற்புதத்தை,

'உய்யலா நெறிகோடி யுலவாத இடும்பையினான்
மையலாம் பரசமயப் படுகுழியின் மாள்வேனைத்

ஹையலா ளொடும் போந்து தண்டலைசூ ழிளங்காட்டில்
ஐயர்தாம் வெளியேநின் றாட்கொண்ட தற்புதமே'
என்ற பாடலில் எடுத்துக் கூறுகிறார்.

இறைவன் வெளியே நின்று ஆடுவதை உலகப் படைப்பிற்காக ஆடுதல் என்று தத்துவம் ஏற்றுக் கொண்டாலும் ஆன்மாவில் ஆடுதல் என்பதே ஆன்ம அனுபவத்திற்குப் பேசப்படுகிறது. இங்கே ஆன்மாவானது பிற சமயத்தில் வீழாமைக்கும் இறைவன் வெளியே நின்று ஆடுகிறான் என்ற குறிப்பைச் சிவஞான முனிவர் காட்டுவது கருதுதலுக்குரியது.

இறைவனைப் பற்றிக் கூறும்போது வலிந்து அடிமை கொண்ட தலைவன் என்றும் ஆன்மாக்களை உயர்த்தும் நிலையில் அவைகளைச் சுதந்திரமாகத் திரியவிட்டவன் என்றும் கூறி அடியவனாக ஆன்மா இல்லாது உயர்ந்த தன்மைக்கு ஆக்கப்படுந் தன்மையைக்

' கோனே யென்னை வலிந்தடிமை கொண்டமுதலே
பெருங்கருணைத்
தேனே யிளசைப் பதிவாழுஞ் சிவனே-யடியார் தமக்கருளு
வானே தேவ ரான்கன்று போலத் திரிய வரமளித்தாய்
ஆனே றுயர்த்தா யிதற்கெவனோ அடியேன் உதவுங் கைம்மாறே'
என்ற பாட்டலில் குறிப்பிடுகிறார்.

ஆன்மாவானது உயர்த்தப்படுவதற்காக அடிமையாக அமைத்துக்கொண்டு எடுக்கிறானே அன்றி அவற்றை அடிமையாக வைத்துக் கொள்ளாமல் உயர்த்திவிடுகிறான் என்றும் கூறி, அவனுக்கு அடிமைத்தன்மையில் ஆன்மா கைம்மாறு செய்தல் என்ற நிறைவுப் பெருமையைச் சுட்டுகின்றார்.

ஆன்மாவின் செயல்களாகச் செய்யப்பட வேண்டியவற் றையும் இறைவன் ஆன்மாவை எடுத்துப் பலபடி நிலைகளில் உ்யிர்நிலைப் பேறுகளைத் தருவதையும் அந்தாதியில் பலபல விளக்குகின்றார். அவற்றைப் பொருள் நோக்கிச் சாதனம், பயன் முதலிய தலைப்புகளில் விளங்கக் காணலாம்.

ஆன்மாக்கள் பெறும் பல அனுபவங்களை இளசைப்பதிற்றுப் பத்தந்தாதியில் சுட்டிக்காட்டும் முனிவர், இறைவன் அனுபவம் பெற்ற அடியார் தன்மையைக் கூறி அந்தாதி நூலை முற்றுப்பெற நிறுத்துகிறார்.

## கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி

'சிவபெருமான் திருவடியில் சேர்க்க நல்கும் திருமாலை' என்பதாகச் சிவஞான முனிவர் கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதியைப் படைத்தமைபற்றிக் கூறியுள்ளார்.

சிவபெருமானை நான்கு தோள் உடையவனாகவும், திசைகள் எங்கிலும் காணப்படுபவனாகவும், முக்கண் உடையவனாகவும் கூறி உன்பால் சேர்தற்கு இயலாத அச்சத்தை நீக்கி அருள்சுரந்திடும் கலைசைவாணனாகிய நின்னடிகளைப் போற்றி செய்கிறேன் என்று,

' ஏங்கு நோக்கினு மங்கெ லாமெனக்
　　கிருண்ட கண்டமு நான்கு தோள்களுங்
கங்கை வேணியு முக்க ணுஞ்சிவ
　　காமி பாகமுங் கமல பாதமுஞ்
செங்கை மான்மழுப் படையு நீற்றொளி
　　சிறந்த மார்பமுங் காண வெய்திநின்று
அங்க ணச்சநீத் தருள்சு ரந்திடுங்
　　கலைசை வாணநின் னடிகள் போற்றியே'

என்ற பாடலை அமைக்கின்றார்.

இறைவனைப் போற்றி செய்து கருணையாளனே போற்றி என்றும், குருவும் ஆயினாய் போற்றி என்றும், முனிவர் 'பொய்யறுதம் பொய்யனே அடிபோற்றி' என்னும் ஓர் அடியை முன்வைக்கின்றார்.

பொய்ச்சேறினும் இறைவன் நின்ற தன்மையை எடுத்துக்காட்டிப் பாடலை அமைத்தது உளங்கொளத்தக்கது.

அடுத்து 'போற்றி மெய்யன்பர் சிந்தையில் பொங்கி ஊறு தீஞ்சுவை கரும்பனே போற்றி' என்றும் மெய்யிலிருந்து ஊறி வெளிப்பட்டு இறைவன் சுவைக்கப்படுந் தன்மையை மெய்த்தன்மையால் விவரித்தார். முன்னர்ப் பொய்த்தன்மையால் காணப்படாதானை நோக்கிப் 'பொய்யனே அடிபோற்றி' என்றார்.

முனிவர் மெய்கண்டாருடைய சிவஞானபோத முதல் நூற்பாவை எடுத்துக் கொண்டு, 'அவனவ ளதுவெனு மவைதொறும் விரவினை' என்று முன்னோர் மொழியினைப் பொன்னேபோல் போற்றியுள்ளார்.

உலக இன்பங்களை எடுத்துக்காட்டியும் அவைகளைக் கடந்த பேரானந்த அனுபவம் அடைய வேண்டும் என்ற அடிப்படையில் சில பாடல்களை அமைத்துள்ளார்.

குண இறைவர்களை எடுத்துக்காட்டி அவை கடந்த பரம்பொருளையும் பதிற்றுப் பத்தந்தாதியில்,

' தமோகு ணத்தினிற் றிருவுருத் தரித்தும்
சத்து வத்தொழில் பூண்டநா ரணற்கும்
தமோகு ணத்தொழி லழிப்பினைப் பூண்டு
சத்து வத்துருத் தரித்தசங் கரற்கும்
தமோகு ணத்துறா திராசதத் துருவம்
தாங்கி யக்குணத் தொழிலுறும் அயற்கும்
தமோம யத்தினிற் றமியனாங் கலைசைத்
தாணு நீயிறை யாயிருந்த தனையே'

' ஆயி ரஞ்சிர, மாயிர முடிக
ளாயி ரஞ்செவி யாயிரம் விழிக
ளாயி ரம்புய மாயிரஞ் சரண
மாயி ரங்குண மாயிரந் தொழில்க
ளாயி ரம்பெய ருடையநின் பெருமை
யைய வெண்மொழிக் கடங்கு மோபத்தி
யாயி ரந்தவர்க் காயென வுதவு
மங்க ணாதிருக் கலைசைமுக் கணனே'

' முக்கு ணங்களின் மூவரைத் தோற்றி
மூவ ருக்குமுத் தொழில்வகுத் தருளி
அக்கு ணங்களுக் கதீதமாய் நிறைவாய்
அத்து வாக்களைக் கடந்துமே லுலகில்
தக்க நற்கண நாதரேத் தெடுப்பச்
சத்தியம்பிகை யுடனரு ளுருவாய்த்
தொதுக்க கோடிசூ ரியருத யம்போற்
றோன்றி நின்றனை கலைசைவிண் ணவனே'

ஆகிய பாடல்களில் எடுத்துக்காட்டியுள்ளார்.

## குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

குளத்தூர் இறைவன் திருவடியில் புனைவதற்காகச் செய்யப்பட்ட தேமாலை எனக் குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதியைச் சிவஞான முனிவர் காப்புச் செய்யுளில் குறிப்பிடுகின்றார்.

'..... அருள் செறித்து நல்கு
மாமாயைத் தொடரறுத்துப் பசுபோதக் கவளம் உண்டு
காமாதி தறி பிடுங்கி வினைக் கடலை வழக்கி வடுகளபந்தானே'

என்று காப்புச் செய்யுளில் விநாயகர் அடிப்படையில் உயிர்களுக்கான செயல் அடிப்படையில் மாயைத் தொடர்பு அறுதலும் பசுவின் குற்றத்தை உண்டு ஞானத்தை ஏற்றுக்கொள்கிற நிலையில் காமம் முதலியவற்றைப் பிடுங்குகிற வினைமாற்றாகவும் அருள்நலம் செழிக்கிற அனுபவமும் அப்பாடல் வரிகளால் குறிக்கப்பெற்றன.

மெய்த்தவம், கட்டறுத்தல், தவப்பயன், வார்த்தை கலத்தல், முதலிய அனுபவங்களை விளக்குகின்றார். இறைவன் ஊன் உயிர் உணவு கலத்தலையும் கூறுகின்றார். பொருளாக்குதல், பெருவாழ்வு, ஆட்கொள்ளல், ஞானப்பெருவாழ்வு, வாதனை கழன்று வாழல், இன்பப்பெருங்கடல் குளித்தல், ஒளியாய்ப் பிறங்கல், முதலிய அனுபவங்களைச் சுட்டிச் செல்கிறார்.

இறைவனுடைய பணியையும் உயிர்கள் திருமேனி நீக்க வேண்டிய அனுபவத்திற்காக உயிர்களோடு இணைந்து கருணைச் செயல் மேற்கொண்ட இறைவன் செயலையும்,

'அருமேனி கொண்டும் உருமேனி கொண்டும் அருள்கூரிரண்டு மருவும்
திருமேனி கொண்டு மலநோய் துறந்து சிறியேங்க ளுய்யு முறையாற்
கருமேனி நீத்த கருணைப் பெருக்கை யளவிட்டு யாவரறிவார்
செருமேல் நிமிர்ந்த மதனற் கடந்த திருவார் குளத்தை முதல்...'

என்ற பாடலில் குறிக்கின்றார்.

மேன்மை உணரும் திறன், அடிவழுத்துதல் ஆகிய செயல்களை உயிர்களுக்கு என அறிவுறுத்துகின்றார். மறைகள் நான்கும் இறைவனைக் காணப்பெறாது கதறித் திரிந்திருக்க இறைவன் உயிர்களுக்காக எளிவந்தவனாக இருக்கின்றான் என்பதை,

'..... மறைநான்கும் நின்று
கதறித் திரிந்த லையவும்
இலமென் குளந்தை நகரா னெனக்கும்
எளிவந்த வாறி தெவனே'

என்றவாறு கூறுகிறார்.

இறைவனுக்கு அழகு என்பதாக ஒன்றைக் கூறுகின்றார். தான் வாழ்கின்ற வாழ்க்கையையே மெய் என்பதாக நம்பி இறைவன் திருவடியினை மறந்து தாழ்வான செயல்களைச் செய்வானை அதில் ஆழ்வுறாது எடுத்து ஆளவேண்டியது இறைவனுக்கு அழகு என்று குறிக்கிறார்.

இறைவன் இயல்பை எங்கும் படர்ந்த படரொளிப் பிழம்பு என்ற அடிப்படையில் இருக்கும் பொருளாக எடுத்துக்கூறி அவன் உள்ளதிலும் இல்லதிலும் அருவத்திலும் உருவத்திலும் கள்ளத்திலும் வெளியிலும் கருணையிலும் மறத்திலும் பள்ளத்திலும் உயரத்திலும் எங்குமாக இருக்கும் இறைவன் என்றார். மேலும், அவனை மருவினால் மருவுந் தன்மைக்கேற்ப வள்ளலாக அமைந்து அருள் செய்வன் என்பதை,

'உள்ளது மிலது மாகு முருவமு மருவு மாகுங்
கள்ளமும் வெளியு மாகுங் கருணையும் மறமுமாகும்
பள்ளமு மேலு மெங்கு படரொளிப் பிழம்பாய் நிற்கும்
வள்ளலுந் தானே யாகுங் குளந்தையின் மருவுந் தேவே'

என்னும் பாடலில் குறித்துள்ளார்.

எந்த முறையால் ஆராய்ந்து பார்த்தாலும் முப்புரங்களை அழித்த இறைவனே அல்லாமல் வேறு ஒரு தெய்வம் இல்லை என்றவாறும் கூறுகிறார்.

உயிர்களின் மலம் நீங்கவும் முத்தி ஆனந்த அனுபவத்தில் திளைக்கவும் உயிர்களுக்காகச் செயல்படத் தன்னை நிலைநாட்டிக் கொண்ட இறைவனின் பெயர் நமச்சிவாய என்பதாக,

'போற்றினோர் மலத்தொகை இரியப் புந்தியின்
மாற்றரு மானந்த வாரி நல்குமால்
ஏற்றவன் குளந்தையி னிளம்பி றைச்சடை
நாற்றிய பிரான்பெயர் நமச்சி வாயவே'

என்ற பாடலில் சுட்டுகின்றார்.

நெஞ்சிற்குக் கூறுவது போலத் தொண்ணூற்று நான்கு முதல் தொண்ணூற்று ஒன்பதாம் பாடல் வரை மையலை அறுக்க முயல் வாயாக; பெரும்பயன் அளிப்பவன் சிவபெருமான் ஒருவனே என நினைப்பாயாக எனவும் முடைஉடம்பு சுகம் என விரும்பாமை, உத்தமன் கருணை தெளிதல் பிறதுணைகள் நிலையில்லையென அறிந்து பிரான் திருவடித் துணையை உணர்த்தல் உயிர்க்கு உயிராய்

உடனிருந்து இறைவன் உணர்த்தும் உண்மை உணர்தல் முதலியனவும் நெஞ்சு நோக்கிக் கூறப்பெற்றன.

## வடதிருமுல்லை வாயிலந்தாதி

புலவர்கட்கு அமிழ்து என அருளடிப்படையில் சிவஞான முனிவரால் மொழியப்பட்டது. பொருள்துறை மலிந்த வடதிருமுல்லை வாயிலந்தாதி எனத் திருமுல்லைவாயிலந்தாதியின் சிறப்புப் பாயிரம் முல்லை அந்தாதிபற்றிக் கூறும். மேலும், முனிவருடைய அடிப்படையையும் சைவ சித்தாந்த அடிப்படையையும் அச்சிறப்புப்பாயிரம் விளக்குகிறது.

அருள் துறையின் தெளிவை விளக்கும் முனிவர் பொருள்துறையையும் அதனடிப்படையிலேயே செய்தார் என்றவாறு திருமுல்லை அந்தாதியின் அடிப்படை பற்றிச் சிறப்புப் பாயிரம்,

' பொருட்டுறை மலிந்த முல்லையந்தாதி
புலவர்கட் கமிழ்தெனப் பொழிந்தது
அருட்டுறை யடியவர் நிதியமாய்ப் போந்த
வண்ணான்மெய் கண்டமா தேவன்
மருட்டுறை யொழிப்பின் வார்த்திகப் பொழிப்பான்
வகுசிவ ஞானபோ தத்தின்
தெருட்டுறை பிறங்கப் பாடிய முறையிற்
செய்சிவ ஞானவான் முகிலே'

என்கிறது.

பாண்டித்துரைத்தேவர் முனிவரைப்பற்றி விளக்கவரும் காலத்து,

' கலைதேர் நமச்சி வாயகுரு
கருணைக் கடலில் திளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக்
காமத் தறியை அறவீழ்த்தி'

என்ற வரியில் காமத்தறியை அற வீழ்த்தியவர் என்று சுட்டினார்.

அவர் அகப்பொருள் அடிப்படையில் வடதிருமுல்லை வாயிலந்தாதியைப் பாடியதும் பொருளாவது அருள் அடிப்படையில் அனுபவிக்கப்பட வேண்டும் என்ற அடிப்படையில் ஆனது என்பதை விளக்குவதாகும்.

அக வாழ்க்கையானது, 'அகம்நைந்து' இறைவன்பால் உருகும் வாழ்க்கையாக வேண்டும் என்பதே, திருமுல்லைவாயில் அந்தாதியின் உட்கிடை என்னுமாறு, 'அக னைந்திறப் போர்க்கருள் சோதி' என்னும் காப்புச் செய்யுளை அமைத்துள்ளார் முனிவர். மேலும், 'ஆசை அறுதல்' என்ற அடிப்படையில் இறைவனிடம் வேண்டுகிற முறையில் திருமுல்லைவாயிலந்தாதியின் மெய்ப்பொருளை,

' சிந்தைத் திருக்கு மரமுங் களவுஞ் செறிந்தவஞ்ச
கந்தைத் திருக்கு மரநேர் விழியவர் காமங்களும்
முந்தைத் திருக்கு மரன்மாய முமுடித் தாளுமொரு
விந்தைத் திருக்கு மரபறி யாமுல்லை மெய்ப்பொருளே'

என்ற பாடலில், புலப்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

'தொண்டை நாடு புகழோங்கு முல்லை' எனவும், 'பாலி வடகரை முல்லை' எனவும் சிவஞான முனிவரால் திருமுல்லைவாயிலந்தாதி பாடப்பட்டுள்ளதால் சென்னையை அடுத்த வடதிருமுல்லை வாயிலைக் குறிக்கவே இவ்வந்தாதி தோன்றியது எனலாம்.

வாயில் அந்தாதியானது திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பின்கீழ், நற்றாய் இரங்கல், அலரறிவுறுத்தி வரைவு கடாவுதல் முதலாக அணைந்தவழிப் புலத்தல் ஈறாகப் பல துறைகளில் பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

நூலில், தலைவியின் செயல்களாகச் சிலவற்றைக் கூறினாலும் இறைவனுடைய (உயிர்களுக்கான) படைத்தல் முதலான செயல்களிலேயே இறைவனை விளக்கி நூலை அமைத்துள்ளார்.

இறைவனைக் கருணைசெய் என்றும், கருணை செய்வாயாக என்றும் வந்தருள்வாயாக என்றும் அமைத்துப் பாடியுள்ளார். இறைவனை அடைதற்குரிய செய்கைகளில் பெண்ணின் அடிப்படையில் பலவற்றை முனிவர் எடுத்துக்கொண்டு விளக்கினாலும், நட்பு அடிப்படையிலேயே இறைவனோடு ஒத்தல் உண்டு என்பதை வடதிருமுல்லை வாயிலந்தாதியின் இறுதியிலே,

' சொரி பாலொக்கும் நட்பு'

என்று சுட்டுவது இறைவனோடு கலத்தலில் பாலொப்பக் கலத்தற்கு உரியது நட்பே என விளக்குகின்றது.

ஆன்மாக்களின் செயல்நிலையானது பெண் தன்மையில் காட்டப்பட்டாலும், நாயக அடிப்படையிலன்றி நட்பு அடிப்படையிலேயே என்பது வடதிருமுல்லைவாயிலந்தாதியின் முடிவாக அமைந்ததை உணரலாம்.

## திருவேகம்பர் அந்தாதி

சிவஞான முனிவர் அந்தாதி நூல்களைக் காப்புச் செய்யுள் தவிர்த்து நூறு பாடல்களில் பாடியிருந்தாலும், திருவேகம்பர் அந்தாதி தொண்ணூற்று நான்கு பாக்களுடன்தான் கிடைக்கிறது.

அகப்பொருள் அடிப்படையில் தலைவன் பிரிவுக்குத் தலைவி இரங்கும் நிகழ்ச்சியை எடுத்துக்கொண்டு, பிரிந்துள்ள அந்தக் காலத்திலும் இறைவனை வழிபடுதலே புகழாகும் என்றவாறு,

' சேய் அரி அம்பக மானே பொருள் வயின் சென்றவர்·தாம்
சேயர் ஈயம்பக ஆர்த்திடும் கார் வரின் செய்வது என்ஆம்
சேய் அரியம் பகவர்க்கு ஈங்கு எனச் சிறுத்தொண்டர்தம்
சே அரி அம்ப கம்பா என்று என்றே ஏத்தும் திறம் அல்லதே'

என்ற பாடலை அமைக்கிறார் ·சிவஞான முனிவர்.

சிவந்த வரிபொருந்திய கண்களை உடைய பெண்ணே, பொருள் மேல் சென்ற தலைவரானவர் தூய தேயத்தர் ஆதலால் வாச்சியங்கள் பிளவுபட முழங்குகின்ற கார் காலம் வந்தால் யாம் செய்வது யாது எனக் கடவுள் பொருட்டுப் புதல்வனை அறுக்க மாட்டேன் இவ்விடத்து என்று மறுத்துக் கூறாத சிறுத்தொண்ட நாயனாரது பற்றுக்கோடாக உள்ளவரே விஷ்ணு மூர்த்தியாகிய பாணத்தை உடையவரே, திருவேகம்ப நாதரே என்று பலமுறை துதிக்கும் தகுதியன்றி வேறு புகழ் இன்று என்பது என்றவாறு பொருள் விளக்கப்படும்.

திருவேகம்பருக்கு அன்பு செய்யாத, திருவேகம்பரநாதனின் கருணைக்கு உரியவனாகாத புதல்வனைப் பெற்ற பேறைத் தாயொருத்தி எண்ணிப் புலம்புவதாகவும்,

' கச்சிக் கம்பர் அருட்குரியன்
அல்லாக் குமாரனை ஈன்பயன் ஈதுஎன்னும் ஆயுறையே'

என்றவாறு சுட்டினார்.

சிவம் என்பதையே ஆய்ந்து மற்ற எதையும் ஆராயாது இருக்கக் கச்சி இறைவன் அருள வேண்டும் என்று,

'.... சிவம் என்பது ஒன்றதை ஆய்ந்து மற்று ஒன்று
ஆயாது இருக்கச் சிதானந்தமாய் அமர் வண்ணம்

என்று கேட்கின்றார்.

திருவேகம்பர் அந்தாதியை இல்லற அடிப்படையிலும் பெறுகின்ற பேறுகளின் அடிப்படையிலும் சிவபெருமானை எண்ணி அடைகின்ற அடிப்படையில் அமைத்துப் பாடியுள்ளார் முனிவர்.

"..... ..... ..... கச்சி,
அநேக தங்கா வதனே அலையா வகை நன்னெறியே அருள்"

என்று நன்னெறி கேட்டுக் கம்பர் அந்தாதியை அமைக்கின்றார்.

சிவஞான முனிவர் காஞ்சிப் புராணத்தில் திருநெறிக் காரைக்காட்டுப் படலம் என்பதாக ஒரு படலத்தை அமைத்துள்ளார். அப்படலத்தின் நுட்பத்தை விளக்கும் வண்ணம் திருநெறிக்கு ஏகம்பனைக் காட்டி,

' நெறிக்காரைக் காட்டு குழலார்பின் சென்றுநிற் பீருயிர்போம்
நெறிக்காரைக் காட்டுவிர் கம்பனுக் காலையி னேர்ந்தநெறு
நெறிக்காரைக் காட்டுப்பள் ளிக்கோவுக் கன்பு நிகழ்த்திக்கச்சி
நெறிக்காரைக் காட்டுச்செல் லீர்துணை யாவரு நீர்மையரே'

என்ற பாடலைப் பாடியுள்ளார். திருக்காட்டுப் பள்ளியில் இருக்கின்ற இறைவனை ஏகம்பருடன் இணைத்துச் சிவபெருமானை உயிர்போகும் நெறிக்கு இலக்காக அப்பாடலில் கூறியுள்ளார்.

அடியவர்களைக் கண்டு அவர் மூலமாகச் சாதனததைக் கைக்கொண்டு உயிர்கள் பிழைக்கும் தன்மையை எடுத்துக்காட்டுவதாகத் திருவேகம்பர் அந்தாதியின் இறுதிப்பாடல் அமைந்துள்ளது.

## சோமேசர் முதுமொழி வெண்பா

திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு அதனுடைய விளக்க நிலையைப் புலப்படுத்தும் கருத்து வடிவங்களைக் கையாண்டு வெண்பா நூல்கள் பல வெளிவந்துள்ளன. இற்றைக் காலத்தில் 'தொன்மம்' என்பதாகக் கவிதைகளில் குறியீட்டு விளக்கங்கள் பயன்படுத்தப்படுகின்றன. பழங்காலத்திலே தொன்ம வடிவங்களை அறத்தின் அடிப்படையில் விளக்க

எடுத்துக்கொண்டு அமைக்கப்பெற்ற பாடல்களாக வெண்பா நூல்கள் திருக்குறளை ஒட்டிச் சிவநேச வெண்பா, ஊர்வெண்பா, கடிகை வெண்பா, சிலேடை வெண்பா, வருக்கச்சந்த வெண்பா, திருப்புலியூர் வெண்பா, தேவார சிவத்தல வெண்பா, சிதம்பர வெண்பா, அத்துவித வெண்பா (சிவப்பிரகாசர்), பெரியபுராணசார வெண்பா, குமரேசர் வெண்பா எனப் பல நூல்களைக் காண முடிகின்றது.

குளத்தூர்ச் சோமேசரை அடிப்படையாகக் கொண்டு திருக்குறள் விளக்கத்தைச் 'சோமேசர் முதுமொழி வெண்பா' என்ற நூலாக முனிவர் படைத்துத் தருகின்றார்.

திருக்குறளை ஒருபகுதியில் வைத்து, வரலாற்றை ஒரு பகுதியில் வைத்துச் சோமேசரை விளிக்கும் வண்ணம் 'சோமேசா' என்ற சொல்லை ஒவ்வொரு வெண்பாவிலும் அமைத்துச் சோமேசர் முதுமொழி வெண்பாவைப் பாடுகின்றார்.

சோமேசர் வெண்பா என்றுமட்டும் கூறாமல் முதுமொழி வெண்பா என்பதாக மூர்த்தஞானம் என்ற அடிப்படையில் திருக்குறளையும் வரலாற்றையும் இணைத்து அறம், பொருள், இன்பம் ஆகியவற்றை விளக்கினார். நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்கட்கும் ஒவ்வொரு திருக்குறளாக எடுத்துக்கொண்டு நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்களைப் பாடியுள்ளார். காப்புச் செய்யுள் தனிப்பட அமைக்கப்பட்டுள்ளது. முதுமொழி வெண்பாவால் 'மடம்' பிடுங்கிய அனுபவம் வாய்க்கும் என்ற கருத்தும் காப்புச் செய்யுளில் காட்டப்பெறுகிறது.

புராண வரலாறுகள் பலவும் எடுத்துக் கொள்ளப்பட்டாலும் பெரியபுராண் வரலாறுகளும், சைவசித்தாந்தசட்டம் கூறும் வரலாறுகளும் பெருமளவும் சோமேசர் முதுமொழி வெண்பாவில் திருக்குறள் இணைப்பில் விளக்கிக்காட்டப் பெறுகின்றன.

### திருத்தொண்டர் திருநாமக் கோவை

மார்கழிமாதத்தில் திருவெம்பாவை பயிலும் சைவர்க்கும் அடியார் என்னும் அகழ்வு படாமை கருதி அடியாரை எண்ணும் முகத்தான் சுருக்கித் தந்தநூல் திருத்தொண்டர் திருநாமக்கோவை.

இந்நூல் மெய்யன்பர் நாமத்தைப் போற்றிசெய்யும் அடிப்படையில் அமைந்தது என்று காப்புச் செய்யுளில் கூறுகின்றார்.

தில்லைவாழ் அந்தணர் தொடங்கி, வன்தொண்டர்வரை திருத்தொண்டர்களை இணைத்துக்காட்டி திருத்தொண்டர் திருநாமக் கோவையின் அனுபவத்தை,

' ..... ..... - அடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாகக் கொண்டு மயிர்சிலிர்த்து - நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு - மையலுந்தீர்ந்து
அத்துவிதா னந்த அகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார் நிசம்'

எனக் காட்டியுள்ளார்.

திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர்திருவந்தாதி, திருத்தொண்டர்புராணம் ஆகியவற்றின் பின் திருத்தொண்டர் வரலாற்றை இணைத்துப் போற்றிசெய்த அடிப்படையில் திருத்தொண்டர் திருநாமக் கோவையை முனிவர் போற்றி செய்கிற முறைமையை மெய்யன்பு அடிப்படையில் கூறுகிறார். அதனால் கைதவம், புல்லறிவு, கற்பனை, மையல் ஆகியன தீரும் எனவும் அத்துவித ஆனந்த அகண்ட பரிபூரண நித்திய வாழ்வு கிடைக்கும் எனவும் கூறுகின்றார்.

## திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு

கச்சி ருத்திரேசர், ஏகம்பர் ஆகிய இறைவர் பேர்களில் ஆனந்தத்தையே அடிப்படையாக வைத்து, ஏகம்பர் தரும் ஆனந்தத்தின் விளைவான களிப்பை விளக்கிய பாடல் திருவேகம்பர்ஆனந்தக்களிப்பு என்ற பெயரில் அமைந்தது.

' ஆனந்த மானந்தந் தோழி - கம்பர்
ஆடுந் திருவிளை யாட்டினைப் பார்க்கில்
ஆனந்த மானந்தந் தோழி'

என்று ஆட்டத்தின் அடிப்படையில் இறைவனை ஆனந்தந் தருபவனாக எடுத்துக்காட்டித் தொடங்கும் முனிவர் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து என எண்ணடிப்படையில் இறைவனுடைய செயற்குணங்களையும் ஆன்மாக்களின் குற்றங்களையும் எடுத்துக்காட்டி இருபது வரிகளில் பாடினார்.

ஒவ்வொரு எண்ணிற்கும் ஒரு தாழிசையாகப் பத்துத் தாழிசைகள் பாடி, மேலும் ஐந்து தாழிசைகள் பாடி மொத்தம் பதினாறு தாழிசைகளில் ஆனந்தக்களிப்பை அருளியுள்ளார்.

இறைவன் ஞானமாகியும் நேயப் பொருளாகியும் ஞாதாவுமாக பார்க்கப்படுபவர்க்கு எட்டாதவன் என்றும், பாம்பு அணிந்து நாடகம் ஆடியவன் என்றும், நடந்து நடந்து நடிக்கும் நடிப்புடையவன் என்றும், மெய்யில் நீறு அணிந்த அழகுடையவன் என்றும், காவி உடை உடுத்தியவன் என்றும், பிச்சை எடுத்தவன் என்றும், காமாட்சியைச் சேர்ந்தவன் என்றும் இறுதி ஐந்து தாழிசைகளில் எடுத்துக்காட்டினார்.

பத்துத் திசையாவன - எட்டுத்திசையுடன் மேல், கீழ் சேர்க்கப் பத்து. இப்பத்துத் திசையுமே சிவபெருமானுக்கு ஆடையாக விளங்குகின்றன.

திருநாமம் ஆயிரம் இதனைப் 'பேராயிரம் பரவி வானோ ரேத்தும் பெம்மானை, பேராயிரங்களேத்தும் பெரியவன் காண்' என வருந் தேவாரத் தொடர்களாலும் அறியலாம்.

பத்துத் தவம், அபுத்தி பூருவம், புத்தி பூருவம், உபாயச் சரியை, உபாயக் கிரியை, உபாய யோகம், உபாய ஞானம், உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மை யோகம், உண்மை ஞானம் என்பன.

தசகாரியம் இதனை ஒன்று பத்தாகச் செய்தல் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் எனவரும் ஒன்பது புண்ணியங்களையும் ஆன்மா தானாகச் செய்துமுடித்தப் பின்பு சிவபெருமான் ஞானாசாரியராக எழுந்தருளி வந்து உண்மை ஞானம் என்னும் சிவபுண்ணியத்தைக் கொடுப்பார்.

ஆறாவது பாடலில் அஞ்சுமலம், அஞ்சவத்தை, ஐம்பூதம், தன் மாத்திரை இந்திரியம், அஞ்சுதொழில் - இவற்றையெல்லாம் படைத்து இயக்குபவன் இறைவன். ஐந்தெழுத்தாகிய பஞ்சாக்கர மந்திரத்தை ஐந்து குறியிட்டுப் படைத்தவனும் அவனே (சி - சிவன், வ - அருள், ய - ஆன்மா, ந - திரோதாயி, ம - மலம்.)

ஐந்து மலம் - ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி. அஞ்சவத்தைகள் - சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

| | | |
|---|---|---|
| பூதம் ஐந்து | - | மண், நீர், தீ, வளி, வான் |
| தன்மாத்திரை ஐந்து | - | சுவை, ஒளி, உறு, ஓசை, நாற்றம் |
| இந்திரியம் ஐந்து | - | மெய், வாய், கண், மூக்கு, செவி |
| தொழில் ஐந்து | - | படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் |
| எழுத்து ஐந்து | - | சி, வ, ய, ந, ம. |

ஏழாவது பாடலில், முப்பத்தாறு தத்துவக் (6 x 6) கூட்டம், ஆறு அத்துவாக்கள், ஆறாதாரம், ஆறு குற்றங்கள் - இவையெல்லாம் உயிர்களை விட்டு நீங்கும்படியாக இரண்டாறின் முடிவான துவாதசாந்தப் பெருவெளியில் நடனஞ்செய்பவர் திருவேகம்பரரே.

முப்பத்தாறு தத்துவங்களின் கூறுகளும் செயல்பாடுமே தாத்துவிகம் எனப்படும். இதனை,

'ஒன்பது மொன்பது மொன்றும் - மற்றை
ஒன்பது முப்பது மொன்பது மொன்றும்,
ஒன்பது மொன்பது மொன்றும் - பின்னும்
ஒன்பது மானவைக் கப்புறத்தாராம்'

என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

இதற்கு 9+9+1+9+30+9+1+9+9+1+9 எனப் பிரித்தால் 96 வரும். இதனை மிக நயமாகக் காட்டித் தனது கணிதப் புலமையினையும் வெளிக்காட்டியுள்ளார் சிவஞான முனிவர்.

இவற்றுள் - தத்துவம் 36, இவற்றின் செயல்பாடு 60 ஆக தொண்ணூற்றாறு. அவை பின்வருமாறு:

| தத்துவம் | | தாத்துவிகங்கள் |
|---|---|---|
| 5 பிருதிவியின் கூறு | - | எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு |
| 5 அப்புவின் கூறு | - | சிறுநீர், இரத்தம், சிலேத்துமம், வியர்வை, சோணிதம் (அ) சுக்கிலம் |
| 5 தேயுவின் கூறு | - | இருதய வெப்பம், பசித் தீ, கண்ணில் வெப்பம், உடம்பில் வெப்பம், பைத்தியம் |

| | | |
|---|---|---|
| 10 வாயுவின் கூறு | - | உதானன், பிராணன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் |
| 10 ஆகாயத்தின் கூறு | - | அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிகுவை, புருடன், (நாடிகள் பத்து) |
| 5 ஞானேந்திரிய விடயங்கள் | - | சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் |
| 5 கன்மேந்திரிய விடயங்கள் | - | வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் |
| 3 அகங்காரத்தின் கூறு | - | தைசதம், வைகரி, பூதாதி |
| 3 குணத்தின் கூறு | - | சாத்துவிகம், இராசதம், தாமதம் |
| 5 குற்றம் ஐந்து | - | காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் |
| 4 வாக்கு | - | சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி |

தசகாரியம் தசம் என்றால் பத்து. காரியம் என்றால் செயல்.

இதனைப்,

'பத்துத் திசையுடை யாராம் - பத்துப்
பத்துப்பத் தாந்திருப் பேருடை யாராம்
பத்துக் கரமுடை யாராம் - தவம்
பத்தினி லொன்றுபத் தாகச்செய் வாரம்'

என்ற பாடலால் காட்டியுள்ளார் முனிவர். இப்பாடலில் பத்துத் திசை, பத்துப்பத்துப் பத்துப்பேரு 10 x 10 x 10 (அதாவது 1000) பத்துக்கரம், தவம்பத்து, தசகாரியம் - ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

### தத்துவம் முப்பத்தாறு

| | | |
|---|---|---|
| ஆன்ம தத்துவம் 24 | - | ஐம்பூதம், ஐம்பொறி, கன்மேந்திரியம், ஞானேந்திரியம், அந்தக்கரணம் |
| வித்யா தத்துவம் 7 | - | காலம், நியதி, கலை, அராகம், வித்தை, புருடன், மாயை |

| | | |
|---|---|---|
| சிவ தத்தவம் 5 | - | சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம் |
| அத்துவா ஆறு | - | மந்திரம், பதம், புவனம், வன்னம், தத்துவம், கலை |
| ஆதாரம் ஆறு | - | மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை |
| குற்றம் ஆறு | - | காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் (இவை யாவும் ஆணவத்தின் குணங்கள்) |

எட்டாவது பாடலில் உலகில் உள்ள அனைத்துப் பொருட்களையும் படைத்தவன் திருவேகம்பன் என்ற கருத்துக் கூறப்பட்டுள்ளது.

ஏழு புவனம் (மேல் உலகம் ஏழு - பூலோகம், புவலோகம், சுவலோகம், மதாலோகம், சனலோகம், கந்தர்வலோகம், சத்தியலோகம்);

கீழ் உலகம் ஏழு - (அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதலம்);

ஏழு கடல் - (உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்);

மலையேழு - (கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம்);

தீவு ஏழு - (நாவலந்தீவு, இறலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, புட்கரத்தீவு, இலவந்தீவு, தெங்கந்தீவு);

பிறவிகள் ஏழு - (தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்);

இசையேழு - (குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்)

இவை யாவற்றையும் படைத்து இயக்குபவன் திருவேகம்பநாதனே.

பத்தாவது பாடலில் தத்துவங்களையும், அவற்றின் கூறுகளுமான தாத்துவிகங்களையும் கடந்து விளங்குபவன் இறைவன் என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

பதினோராவது பாடலில் - பத்து என்ற எண்ணில் வருவனவற்றைத் தொகுத்துக் கூறியுள்ளார்.

பத்துத் திசையினை உடையவன், பத்துப் பத்துப்பத்தாந்திருப் பேருடையவன் (10 x 10 x 10 = 1000) (ஆயிரம் பேருடையவன்) பத்துக் கைகளை உடையவன், பத்துத் தவங்களுக்குரியவன், ஒன்று பத்தாகச் செய்யும் தசகாரியத்தில் சிவபோகத்தைச் செய்பவன் பத்துச் சிவபுண்ணியத்திற்கு உரியவன் என இறைவனின் பெருமைகள் கூறப்பட்டுள்ளன.

பன்னிரண்டாவது பாடலில் இறைவன் ஞானம், நேயம், ஞாத இவையில்லையென்பார்க்கு அறிய வொண்ணாதவன், அவனை ஞானமாகவும், நேயமாகவும், ஞாதாவாகவும் பார்ப்பார்க்கும் எட்டாதவன். அதாவது காட்சி, காட்சிப் பொருள் காண்பான் என்ற பகுப்பின்றி இம்மூன்றும் அவனே என்று காணுதல் வேண்டும் என்ற உண்மை காட்டப்பட்டுள்ளது.

இறுதியில் வரும் நான்கு பாடல்களில் இறைவனது அணிகலன், தோற்றப் பொலிவு, அவன் வைத்துள்ள பொருட்கள் போன்றன குறிப்பிடப்பட்டுள்ளன.

அணிகலன்கள் மேனியில் அணிந்திருக்கும் அணி பாம்பு, அவனிடத்திலுள்ள வில்லுக்கு நாண் பாம்பு, கையில் பிடித்திருப்பது பாம்பு, அவர் காட்டும் நாடகத்தைக் காண்பதும் பாம்பு (அதாவது பதஞ்சலி முனிவர்).

அவனிடத்தில் இருப்பது நாதம் (ஒலி), துடி (உடுக்கை), நுதல் (நெற்றி) இவற்றின் மூலம் உலகைப் படைக்கின்றான். அதுவும் மெல்ல மெல்ல மெல்ல நடந்து நடிக்கிறான். வேதம் படிக்கும் படிப்பு, நெற்றிமீது குறுவேர்ப்பொடியும் உடையவன் எனச் சுட்டியுள்ளார்.

### பஞ்சாக்கர தேசிகர் மாலை

பத்துப் பாடல்களால் தம்முடைய குரு முதல்வர்மீது மாலை பாடியுள்ளார். கருணைப் பிழம்பாகப் பஞ்சாக்கர தேசிகரை எடுத்துக்கொண்டு அவரை அறிவு, அருட்செல்வம், நிறைவு, அரசு, அடியார்வரவு, ஆருயிர்மணி, உருகாத நெஞ்சில் பிரிவு, துரியம் கடந்த சிவானந்தப் பேரமுதச் செறிவு என அனுபவமுறைகளின் படிநிலை வளர்ச்சியில் பேரமுதம் தருபவன் என்பதுவரை விரித்து முதல் பாடலில் குருவை முதன்மைப்படுத்திக் காட்டியுள்ளார்.

பொய், கவடு, கொடுமை, வஞ்சம் போன்ற செயலாளர்கள் அருளால் உண்மையாளனாக மாற்றி அன்பு செய்பவன் குருநாதன் என இரண்டாம் பாடலுள் குறிக்கிறார்.

குருதரிசனம் பற்றி மூன்றாம் பாடலிலும் மாயத் தொடக்கில் நலியாமைக்கு குருவின் தாள் முதற்பொருள் ஆவதை ஐந்தாம் பாடலிலும் கூறுகின்றார்.

பொற்றாளும் சின்முத்திரையும் நெஞ்சில் பொருத்தி வை என்பதாகக் குருநாதனைக் கேட்டு ஆறாம் பாடலை அமைக்கின்றார்.

தேவுடைய நெஞ்சும், இன்பம் ஊறும் கண்ணும், புகழ்கூறும் நாவும் பஞ்சாக்கர தேசிகனால் கூடும் என ஏழாம் பாடலில் எடுத்துக்காட்டுகிறார். ' அருள்நோக்கில் செந்நெறியாய் நின்றவன் பஞ்சாக்கரதேசிகன் என எட்டாம் பாடலில் கூறுகின்றார்.

உண்மை அன்பர் செறிவுக்குள் வாழும் மெய்த்தேவன் பஞ்சாக்கர தேசிகன் எனவும் அவன் பிறவித் துயரை ஆற்றுபவன் எனவும் ஒன்பதாம் பாடலில் கூறுகின்றார்.

### காஞ்சிப்புராணம்

தமிழில் தோன்றியுள்ள புராணங்களிலும், திருமுறைகளிலும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வது காஞ்சி மாநகரம். இந்நகரில் கடவுள் நெறியிலும் உலகியலிலும் கற்றுவல்ல சான்றோர்கள் பலர் வாழ்ந்தமையைச் சங்க இலக்கியங்கள் பகர்கின்றன. இந்நகரின் பெருமையினைப் புகழ்ந்து கச்சிக்கச்சாலை தேசிகர், காமாட்சி கலியாணம், சிவஞான சுவாமிகள், கச்சியப்பர், பெயர் தெரியாத ஒருவர் (காமக்கோட்டப்புராணம்) ஆக ஐவர் புராணம் இயற்றியுள்ளனர். இப்புராணங்களுள், வரலாறுகளை முறைப்பட விரித்து உரைத்து, இலக்கியச்சுவை மெய்ந்நூற் கருத்துக்கள் நிரம்பப்பெற்ற ம்ழு நூலாக விளங்குவது சிவஞான சுவாமிகள் இயற்றிய காஞ்சிப்புராணமாகும். இரண்டு காண்டங்களைக் கொண்டு திகழும் இந்நூலின் முதற் காண்டத்தினைச் சிவஞான முனிவரும், இரண்டாங் காண்டத்தைக் கச்சியப்பரும் இயற்றியுள்ளனர்.

இந்நூல் மொழி பெயர்ப்பு நூலாகும். இதனை, 'முத்தமிழ் அறிஞர் தேற மொழிபெயர்த் துரைப்பேன் உய்ந்தேன்' என்பதாலும், இப்புராணம் வடமொழி காந்தத்துச் சனற்குமார சங்கிதையிற் காளிகா

காண்டத்திலிருந்து காஞ்சிமான்மியம் நுதலுவது என்பதாலும் உணரலாம்.

நூல், பாயிரம், காப்பு, கடவுள் வாழ்த்து, நூல் செய்ததன் நோக்கம், அவையடக்கம், சிறப்புப் பாயிரம் எனத் தொடங்கி நாட்டுப் படலம், நகரப் படலம் முதலாக அறுபத்தைந்து படலங்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது. காஞ்சீபுரத்தைச் சூழ்ந்துள்ள தலங்களின் பெருமைகளைக் கூறுகிறது.

காஞ்சிப்புராணம் தலவரலாற்றுக் காப்பியம். எனினும், வரலாறு கூறும் போக்கிலேயே தாம் கற்ற உபநிடத, புராணங்களில் இடம்பெறும் அரிய கருத்துக்களையும், சிவாகமப் பொருளையும், சைவ சமய முறைமைகளையும் தெளிவாக விளக்கியுள்ளார் முனிவர்.

இந்நூலின் அருமையினைத், ''திருமுறைகளின் பொருளையறிதற்குப் பெரியபுராணம் இன்றியமையாதவாறு போல, மெய்கண்ட நூல்களின் பொருளை யாவரும் எளிதில் விளங்க அறிதற்கும் உபநிடதம் முதலிய வடநூல்களுக்கு உண்மைப் பொருள் காண்பதற்கும் இக்காஞ்சிப்புராணம் இன்றியமை யாததாகும்'' என்று கூறியுள்ளார் அருணைவேலு அவர்கள்.

முனிவரின் இலக்கியப் பணிக்குக் காஞ்சிப்புராணம் ஒப்பற்ற சான்றாக விளங்குகிறது. நூலுள் வருணனை, உவமை, ஓசை, என் சுவை மிளிர்கின்றன. நூலுள் சித்திரகவி இடம்பெற்று முனிவரின் கவிப்புலமையை வெளிப்படுத்துகிறது.

உயிர்களின் பொருட்டே இறைவன் போக, யோக வடிவம் கொள்ளுதல், உயிர்களுக்கு வினை நுகர்ச்சிக்கிடையில் சிவபுண்ணியம் நிகழுதல், இருவினைகள் மாயையிற் கிடந்து இறைவனது ஆணையால் உயிர்களுக்கு வருதல், மாயாகாரியப் பொருள்களும் இறைவன் திருவுருவாக அமைதல், அருளுருவ மாதல் போன்ற அரிய பல சைவ சித்தாந்தக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

புராணம் என்பது பரந்துபட்ட தன்மையுடையது. காண்டம், படலம் என்ற பகுப்புக்களோடு தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் எனப் பல பாத்திரங்களைப் பெற்றுத் திகழ்வது. அவ்வகையில் அமைந்துள்ளது அவர் பாடிய காஞ்சிப் புராணமும். இது காஞ்சியிலே எழுந்தருளியுள்ள இறைவனது பெருமைகளையும், காஞ்சி மாநகரின் பல்வேறு வகையான

சிறப்புக்களையும் கூறுவது. எனினும், எல்லாவற்றிற்கும் மேலாகக் காஞ்சியிலுள்ள 'ஏகம்பரநாத'னின் பெருமையினையே கூறுகிறது. எனவே, இவனது பெருமைகளையும் சைவ சித்தாந்த உண்மைகளையும் கூறப் பாத்திரங்களையே பயன்படுத்தியுள்ளார். அப்பாத்திரங்கள் முனிவர்கள், தேவர்கள், இறைவன், இறைவி, அரக்கர், வேதம் போன்றனவாகும்.

மேலும், மற்றைய தேவர்கள், உமை போன்றோரும் இறைவனைப் பூசித்துப் பெற்ற பேறுகளின் மூலம் வழிபாடு, முத்தி, பதியின் இயல்பு, அடையும் வழி போன்றனவற்றையும் விளக்கியுள்ளார்.

காஞ்சி மாநகர மதில்களில் தானே இயங்கும் பொறிகள் பதிக்கப்பட்டுள்ளன. இவற்றின் இயக்கத்தை விளக்க வந்த ஆசிரியர் ''இவ்வியக்கம் சிற்பிகளால் செய்யப்பட்டுத் தாமே இயங்கும் யந்திரக் கூட்டங்கள், பல உயிர்களின் உடம்புகளையும் படைத்து நடத்த நிமித்த காரணன் ஒருவன் இருக்கின்றான் என்று அறிதற்கு உவமையாக உள்ளது'' என்கிறார்.

மாட மாளிகையில் மகளிர் தங்கள் கணவன்மார்களோடு ஊடிய காலத்தில் பறித்தெறிந்த அணிகளிலிருந்து உதிர்ந்த மாணிக்கங்கள் அவர்கள் கால்களையே உறுத்துகின்றன. இக்காட்சி ''தாங்கள் செய்தவினை தங்களையே வருத்துவது போல்'' உள்ளது என வினைப்பயன் செய்தவனுக்கே வரும் என்ற உண்மை உவமை மூலம் விளக்கப்பட்டுள்ளது.

மாயையின் இயல்பினைச் ''செய்வினை அனைத்தும் தன்பால் சேர்த்து வைத்து பின்னர், அவ்விறை ஆணையாற்றலால் உயிர்க்கு அளித்திடு மாயையேபோல் எனக் கூறப்பட்டுள்ளதும் மாயை உயிர்கள் செய்கின்ற இருவினைகள் அனைத்தையும் தன்னிடத்தில் சேர்த்து வைத்திருந்து, பின் இறைவன் ஆணைப்படி உயிர்களுக்குக் கொடுக்கும். இச்செயல் சரக்கு வைக்கின்ற வீடுகள் பல பொருள்களையும் சேர்த்துவைத்துப் பின் வணிகர் மூலம் உலகிலுள்ள அனைவருக்கும் கொடுப்பதுபோல் உள்ளது என உவமை வாயிலாக விளக்கியுள்ளார் முனிவர்.

காஞ்சிப்புராணம் தலவிசேடப்படலத்தில், உமாதேவியார் இறைவனை நோக்கி விலங்கு, புட்கள் காஞ்சியில் உனைக்கண்டு முத்தியடைவது எங்ஙனம் என்று வினவுகிறார். இக்கேள்விக்கு இறைவன் ''பரவெளிப்பரப்பில் வைகும் பண்பினோம் யாம்

உலகம் எங்கும் விரவியே நிறைந்து நிற்போம். எம் நாலாம்பாதம் தரை முதல் உலகாம் மூன்றாம் பாதம் வான் தலத்து மேவும்'' என்கிறார். இதன்மூலம் இறைவனது•வியாபகத்தன்மை இறைவன் கூற்றாகவே உணர்த்தியுள்ளமை நோக்குதற்குரியதாம்.

காஞ்சிபுரத்தின் வளமையினைக் கூறும் பாங்கில் நாட்டுப் படலத்தில் பாலியாற்றில் வெள்ளம் வருவதைக் கூறவந்த ஆசிரியர் ''புவனந்தோறும் சிதறிய வினைகள் எல்லாம் ஓரிடத்து ஒருவனிடத்து ஒருங்கு சென்று சேர்வதுபோல மண்ணில் பல இடங்களில் பெய்த மழைத்துளிகள் வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஆற்றில் வருகின்றன'' எனக் குறிப்பிட்டுள்ளார். இங்கு உவமை வாயிலாக வினையின் இயல்பு கூறப்பட்டுள்ளது.

வயலில் நெல் முளை வந்ததும் மள்ளர்கள் வயலில் உள்ள நீர் முழுமையினையும் வடிக்கின்றார்கள். இது இயற்கையான செயல். ஏனெனில், முளையில் நீர் புகுந்தால் முளை அழுகிவிடும். இச்செயலுக்குச் சிவஞான முனிவர் ''உயிர்கள் சிவஞானம் விளைந்தபின் உடல் பொருள் ஆகிய பந்தங்களை இறைவனிடத்து ஒப்படைத்து நீங்குந் தன்மையினை'' உவமை காட்டியுள்ளார்.

இதில் நெல் முளைத்தல் சிவஞானம் விளங்குவதற்கும் நீரை வடித்தல் பந்தத்தை முற்றிலும் விடுதலுக்கும் உவமையாக அமைந்துள்ளன.

மள்ளர்கள் வயலில் விளைந்த நெற்கதிர்களைப் போட்டுப் பகட்டினங்களைப் பூட்டித் தாம்பு ஓட்டுகின்றனர். நெற்கதிர்களிலிருந்து நெல்மணிகள் விழுந்ததும் பகட்டினங்களின் பிணைப்பு அவிழ்த்து விடப்படுகின்றது. இக்காட்சியினை 'உடலில் ஆவி பிரிந்ததும் ஊழ்வினைத் தொடர்பு நீங்குதலோடு' ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

உடலிலிருந்து ஆவி பிரிதல் - நெற்கதிரிலிருந்து நெல்மணிகள் பிரிதல் உவமை. வினை நீங்குதல் - பகடுகள் பிணையிலிருந்து விடுபடுதலுக்கு உவமை.

''பரதவர்கள் உப்பங்கழியைக் கலக்குகின்றனர். உப்பங்கழியிலிருந்த மீன் அஞ்சி ஆய்ச்சியர் பால்குடத்துள் வீழ்கின்றது. பின் அவர்களது மத்தோசைக்கு அஞ்சி முயல் ஒடுங்கும் தாழையில் வீழ்கிறது. பின் அங்கு ஏற்பட்ட கடலொலி கேட்டு அலமந்து நிற்கிறது. இக்காட்சியின் மூலம் மீன் எங்குச் சென்றாலும் அச்சம் தொடர்கிறது என்பது விளங்கும்.

இக்காட்சியின் மூலம் சிவஞான முனிவர் ''வினைப்பயன் உயிர்கள் எங்குச் சென்றாலும் அவற்றை விடாது'' என்ற சைவ சித்தாந்த உண்மையினை விளக்கியுள்ளார். இக்கூற்றினை விளக்கும் தொடர், ''கருங்கருமத் தொடர் அந்தோ யாங்குறினும் விடாதென்னக் காட்டும் ஓர்பால்'' என்பதாகும்.

தான்தோன்றீசப் படலத்தில், உபமன்னியு முனிவராகிய குழந்தை தனது தாய் தனக்கூட்டிய நெல்லரிசிக் கஞ்சியைத் தீம்பால் அல்ல புனல் என நீக்கி அழுகின்றது. அது கண்ட தாய் முன்பிறப்பில் யாங்கள் தவம் செய்து சிவபெருமானை வழிபடவில்லை. அதனால் இப்பொழுது யாங்கள் வறுமையுற்றிருக்கிறோம். நல்ல பசுவின் பாலை எப்படிப் பெறுவோம் என்கிறாள். இக்கூற்றின் மூலம் ஆசிரியர் வறுமைக்கும், துன்பத்திற்கும் ஏதுவாக இருப்பது முன்சென்மத்தில் தவமும், வழிபாடும் செய்யாததால் வந்த கன்மத்தின் விளைவே என்பதை உணர்த்தியுள்ளார்.

பாலியாற்று நீரினை வீணாக்காமல் மள்ளர்கள் வயலில் பாய்ச்சுகின்றனர். இச்செயலுக்குப் ''பொறிகள் ஐந்தையும் புறஞ்செல்லாது அடக்கி ஓர்நெறிக்கே கொண்டுசெல்லும் குறிக்கோளுடையவர்கள்போல்'' என உவமை காட்டியுள்ளார். இவ்வுவமையின் மூலம் ஐம்பொறிகளை அடக்கி ஆளுதல் வேண்டும் என்ற உண்மை விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஐம்பொறி அடக்குதலின் பயனைத் திருவள்ளுவர்,

'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து'

என்கிறார்.

வயலில் விளைந்த நெல்லை அடித்தபின் நெல்மணிகளைத் தூற்றுகின்றார்கள் மள்ளர்கள். அப்பொழுது பயனற்ற பதர் நெல்கள் காற்றுப்பட்டவுடன் அப்புரத்து ஓடுகின்றன. இக்காட்சியினைப் ''பொய்யகன்றவரிடத்து ஐம்பொறி போதல்போல்'' உள்ளது என, ஐம்பொறியினால் வரும் ஆசை பொய்யகன்றவரிடத்து இல்லை என்பதை விளக்க உவமையாக்கியுள்ளார்.

காஞ்சிப்புராணம் கடவுள் வாழ்த்துப் பகுதியில் குருவின் பெருமைகளைக் காட்டியுள்ளார்.

எல்லாச் சமயத்தவரும் ஏற்றுக்கொள்ளுகின்ற பொருளையும் அஞ்செழுத்தில் அடக்கி அவற்றின் இயல்பினைக் காட்டி, இவ்வுயிர்

அஞ்சவத்தையில் நிற்கும் முறைமையினை ஓதும் முறையில் விளக்கி அதில் தேறச் செய்து அவ்வெழுத்தின் உட்பொருளையும் அறிவித்துச் சிவபோகத்தழுத்தி நாயேனது செய்வினையுங் கைக்கொண்ட பின் வேலப்ப தேசிகன்தாள் சென்னி வைப்பாம்'' எனக் குரு பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு உபதேசிக்கும் உபதேசப் பொருட்களைக் குறித்துள்ளார்.

காஞ்சிப்புராணம் சனற்குமாரப் படலத்தில், சனற்குமாரன் நந்தி தேவரிடத்துப் பெற்ற சாபம் தீர்ந்த வரலாறு கூறப்பட்டுள்ளது.

சாபம் நீங்கி நந்தியிடத்து மாணாக்கனான சனற்குமாரன் - நந்திதேவரிடத்துத் தீக்கை பெற்று வழிபாடாற்றிப் புராணம், நியாய நூல், கரும முதல் நூல், தரும நூல், சிற்கை, ஏழ்சந்தை (சந்தோவிதி), ஒன்பான் வியாகரணம், எண்ணூல் (சோதிடம்), முக்கர் (நிருத்தம்), முக்கந்தம் பலவும் முறையாக ஓதினான் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இதன்மூலம் எல்லாக் கலைகளும், வித்தைகளும் குருமூலமே கற்றல் வேண்டும் என்ற உண்மை விளக்கப்பட்டுள்ளது.

இதே கருத்தினைச் சிவஞான சித்தியார்,

' இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்
ஏந்திழையார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றும்முத்தி யைந்து கந்தம்
அறக்கெடுகை யென்றும்அட்ட குணமுத்தி யென்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பொறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே'

என்கிறது.

மங்கையர் இன்பமே முத்தி என்பவர் உலகாயதர், கந்தம் கெடுவதே முத்தி என்பவர் சவுத்ராந்திகர், குணம் கெடுவதே முத்தி என்பவர் ஆருகதர், பகுத்தறியும் அறிவே முத்தி என்பவர் சாங்கியர், பாடாணம் போற் கிடப்பதே முத்தி என்பவர் வைசேடிகர்.

காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்த படலத்தில், ''உலக உயிர்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் ஐவகைச் சத்திகளை வகுத்து, ஒன்பான் திருமேனி கொண்டு ஐந்தொழில் நடத்தி, இருவேறு மாயைகளின் காரியமாகிய தனு, கரண, புவன, போகங்களைப் படைத்து இருவினைக்குரியு பிறவிகளை

உயிர்களுக்குக் காட்டிப் பல பிறவிகளில் இடர்படச் செய்து பருவம் வந்த காலத்து மலபரிபாகம் வரச்செய்து குருவாய்த் தோன்றித் தீட்சை செய்வித்து சரியை, கிரியை, யோகங்களில் நிற்க வைத்து இறுதியில் ஞானத்தைக் கொடுத்து அவனோடு உடனாம் முத்தியைக் கொடுப்பான்'' என உலக உயிர்களுக்காக முத்தியினையும் நல்குவான் என முத்தி கிட்டும் தன்மையினையும் குறிப்பிட்டுள்ளார்.

இறைவனிடத்திலே அந்தத்தை அடைதல் கேசாந்த முத்தி எனப்படும். இறந்தவரின் தலைவழியாக உயிர் செல்லுதல், இம்முத்தியைப் பெறும் தலம் காஞ்சி மட்டுமே. இம்முத்தியின் சிறப்பினையும், இம்முத்தி கிட்டும் தலம் காஞ்சி என்பதையும் காஞ்சிப்புராணம் தழுவக் குழைந்த படலத்தில் (68 முதல் 72 வரை) ஐந்து பாடல்களில் கூறியுள்ளார். அப்பாடல்களின் கருத்துக்கள் உமையம்மைக்குக் காஞ்சியம்பதியின் பெருமைகளை இறைவன் கூறுவதாக அமைந்துள்ளது. அக்கருத்துக்கள் பின்வருமாறு:

கேசாந்த முத்தியை அடைதற்குரிய பக்குவம் வாய்ந்த உயிரானது அக்கினி மண்டபத்தில் பூ எனவும், வாயு மண்டலத்தில் புவ எனவும், சூரிய மண்டலத்தில் ஸ்வ எனவும், இந்திரலோகத்தில் மஹ எனவும் சென்று பரப்பிரமத்தினிடத்து ஒன்றாகும். பக்குவம் வாய்ந்து அரிதிலடையும் அக்கேசாந்த முத்தியினைக் காஞ்சியம்பதி எல்லா உயிர்க்கும் கொடுக்கும். 'கேசாந்த முத்தி' என்பது இறைவனிடத்தில் அந்தத்தை யடைதலாகிய முத்தியாம். அதாவது க + ஈசன் = கேசன், க - பிரமன், பிரமனுக்கு ஈசன் இறைவன், அவனிடத்திலே அந்தத்தையடைதல் கேசாந்தம்.

கம் + சயனம் = கேசம், சிரசின்மேல் இருப்பது. கம் + அஞ்சி = காஞ்சி, சிரசின்மேல் அஞ்சிப்பது. இதனால் கேசம், காஞ்சி என்பன ஒரு பொருட்சொற்களே. எனவே, காஞ்சியில் முத்தியடைதல் கேசாந்த முத்தியாம்.

முத்தி அடைதற்குரிய உயிர் உடலைவிட்டுப் போங்காலத்துக் கண் முதலிய உறுப்புக்கள் வழிகளாற் செல்லாமல் பிரமரந்திரத்தின் வழியாகச் செல்லுதல் இயல்பாகலானும், காஞ்சியில் இறக்கும் எல்லா உயிரும் முத்தியடையும் என்பதனாலும், காஞ்சியில் உயிர் போங்கால் தலை ஓடுவழியாக ஏகும்.

கண் முதலிய உறுப்புக்கள் வழியாய் உயிர் சென்ற உடலைச் சுடுங்கால் தலைவெடித்தல் இயல்பாதலாலும், காஞ்சியில் இறக்கும் உயிர் உடலை விட்டுப் பிரியும்பொழுது கபாலத்தை உடைத்துக் கொண்டு செல்லுதலால் அவ்வுயிர்களினது உடம்பிலுள்ள தலையோடு அனலில் வெடியாது.

கோவில் வழிபாட்டுக்குக் காரணமாயிருப்பது மூர்த்தமாகும். இம்மூர்த்தங்கள் பல கடவுளர்களுக்கும் பல வகையில் உள்ளன. ஒவ்வொரு மூர்த்தமும் எப்படிப் படைக்க வேண்டும், எந்தெந்த அளவுகளில் அமைய வேண்டும் என்பதைச் சிற்பக்கலை நூல்கள் விளக்குகின்றன.

காஞ்சிப்புராணம் சத்ததானப் படலத்தில் சிவலிங்கப் பதிட்டையின் பயன் கூறப்பட்டுள்ளது. சிவபுண்ணியப் படலத்தில் சிவனுக்குரிய இருபத்துநான்கு மூர்த்தங்களைக் குறிப்பிட்டு அவற்றின் அமைப்புக்களையும் அவற்றினை உருவாக்குவதால் ஏற்படும் பயன்களையும் குறிப்பிட்டுள்ளார்.

திருவேகம்பப் படலத்தில் பிரமன், திருமால், உருத்திரன் முதலியோர் அமைத்து வழிபட்ட லிங்கங்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்.

பிரமன் படைத்தல் தொழிலைச் செய்யத் தூய சிந்தையோடு லிங்கம் அமைத்துப் பூசித்தான். அதுவே 'வெள்ளக்கம்பம்'. இதனை வழிபட்டால் தூய்மை அடையலாம்.

திருமால் உலகை மயக்க லிங்கம் அமைத்துப் பூசித்தான். அதுவே 'கள்ளக்கம்பம்'. இதனை வழிபட்டால் மயக்கத்திலிருந்து விடுபடலாம்.

உருத்திரர் இறைவனோடு ஒன்றுபட இலிங்கம் அமைத்துப் பூசித்தது 'நல்லகம்பம்'. இதனை வழிபட்டால் இறைவன் திருவடி நிழலை அடையலாம் - என, முறையே வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், நல்லகம்பம் என மூன்று லிங்கங்களின் தோற்றத்தைக் கூறி இவற்றை வழிபட்டால் முறையே தூய்மை, மயக்கத்திலிருந்து விடுபடல், திருவடி நிழல் முதலியவற்றை அடையலாம் என்கிறார்.

இம்மூன்று லிங்கங்களாக் உள்ள் நல்லன், கள்ளன், வெள்ளனும், ஏகம்பனும், ஒருவனே ஆவான்.

### சிவலிங்கப் பதிட்டைப் பயன்

சிவலிங்கப் பதிட்டை செய்தால் பாவங்கள் போகும். வினைப் பகையையும், பிறவிப் பகையையும் நீக்கலாம். மீளா முத்தியைப் பெறலாம். தவம், தீர்த்த யாத்திரை, வேள்வி, துறவு, விரதம் - இவையெல்லாம் பத்திக்குரியன. எனினும், இவற்றிலெல்லாம்

சிறந்தது சிவலிங்கப் பதிட்டையாகும். சிவலிங்கத்தைப் பீடத்தோடு சிலையினால் அமைத்தால் எந்தப் பிறவியில் அமைத்தோமோ அந்தப் பிறவியிலேயே முத்தி கிடைக்கும் என்கிறார்.

திருக்கோயிலை ஐந்து ஆவரணங்கள் சூழ்ந்துள்ளன. இக்காட்சி உயிர்களை ஐவகைப் பாசங்கள் பந்தித்தது போல் உள்ளது எனக் கூறியுள்ளார்.

மதில், மதிலை அடுத்து இடபம், இடபத்தை அடுத்து இலிங்கம் எனக் கோயில் அமைப்பினைக் கூறியுள்ளார். இடபம் பசு, இலிங்கம் பதி எனக் கூறுவது உண்டு. அவ்வுண்மை இங்குக் காட்டப்பட்டுள்ளது. திருக்கோயிலின் உண்மை கூறுமிடத்து மதில்கள் பாசம், இடபம் பசு, இலிங்கம் பதி எனக் கூறுவது உண்டு. திருவேகம்பப் படலத்தில் இறைவன் கோயிலில் வீற்றிருக்கும் காரணம் கூறப்பட்டுள்ளது.

இறைவன் மகிழ்ந்து வீற்றிருக்கும் தலங்கள் பல கோடியாகும். அவற்றுள் ஆயிரத்தெட்டுச் சிறந்தன. அவற்றிலும் நூற்றெட்டுச் சிறந்தன. அவைகளிலும் அறுபத்தெட்டுச் சிறந்தன. அவைகளில் காசி, காஞ்சி இரண்டும் சிறந்தன. அவற்றுள்ளும் இனிய தலம் காஞ்சியே என்பது சிவஞான முனிவர் கருத்து.

## கோவில் கட்டும் உலோகங்கள்

(காஞ்சிப்புராணம் சிவ புண்ணியப் படலத்தில்) கோயில் கட்டுதற்குரிய பொருள்கள் இரத்தினம், பொன், செம்பு, சுண்ணாம்பு, செங்கல் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பொருள்களில் கோயிலமைத்தால் பொருள் நிலைக்கேற்பப் பயன்பெறலாம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், விளையாடும் பிள்ளைகள் தெருக்களில் மண்ணில் சிவாலயம் கட்டினும் சிவலோகத்தைப் பெறுவர்கள். இவ்வாறு மண்ணில் சிவாலயம் கட்டிப் பூசித்துப் பேறு பெற்றதைச் சேக்கிழார் சண்டீச நாயனார் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளமையாலும் உணரலாம்.

கோயிலின் உறுப்புக்களில் ஒன்று கோபுரம். இது கோயிலின் வாயிலின்மேல் அமைந்திருக்கும். இக்கோபுரத்துக்குரிய பெயர்களாக கந்தமாதனம், பனிவரை, நீலம், வான்கயிலை, ஏமகூடம், நிடதம், பொன்வரை போன்றவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு கோபுரங்களுக்கும், விமானங்களுக்கும் உரிய பெயர்களைப் படைப்பில் காட்டியிருப்பவர் இவரே எனலாம்.

இறைவன் தங்குதற்குரிய கோயில்களை அமைத்தல் என்பது பயன்களிலெல்லாம் பெரும் பயனாகிய வீடுபேற்றினை நல்கும். இந்நிலையில் வீடு பேற்றினைப் பெற வேறு வழியினைக் குறிப்பிட்டுள்ளார். அதாவது பழைய சிவன் கோயில்களைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபடுதல், தனது வயிற்றுப் பிழைப்புக்காக வேண்டி சிவாலயப் பணி செய்தல், இவையிரண்டினையும் செய்தல் கோயில் கட்டுதலுக்கு ஒத்த செயலாகும் என்கிறார்.

திருக்கோயிலின் உள்ளும், புறமும் அலகிடுதல் ''நூற்று நூறு சாந்திராயண கிரிச்சரம் நோக்கும்'' என்கிறார். அதாவது பதினாயிரம் சந்திராயணம்; கிரிச்சரம் விரதங்களை நோற்ற பயனைத்தரும்.

கபிலைப் பசுவின் ஆப்பீ கொண்டு கோயிலை மெழுகுதல், நெய் கலந்த குங்குலியத் தூபமிடுதல், தாமரை, கருங்குவளை மலர்களால் மாலைக் கட்டிச் சாத்துதல், வாசனை கலந்த நீரால் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்தல் போன்றனவற்றால் ஆயிரம் அசுவமேத யாகம் செய்த பயனைப் பெறலாம்.

எண்ணெய், பஞ்சாமிர்தம், பஞ்ச கௌவியம் போன்றவற்றால் இறைவனை நீராட்டுதல் சிறப்பினைத் தரும். கருப்பஞ்சாறு கொண்டு இறைவனை நீராட்டினால் வேள்வி செய்த பயனைப் பெறலாம்.

கற்பூரம், சந்தனக்கலவை இவற்றால் திருமுழுக்குச் செய்தான் இறைவனது திருவடி நிழலை அடைவார்கள் எனக் கூறியுள்ளார் சிவஞான முனிவர். இதன்மூலம் இறைவனது திருக்கோயிலில் செய்யற்குரிய உகந்த பணிகள் யாவை அவற்றினால் கிட்டும் பயன் என்ன என்பதைக் கூறி, சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனும் தன்னால் இயன்ற கோயிற் பணிகளைச் செய்ய வேண்டும் என்பதையும் விளக்கியுள்ளார்.

### விலக்குறு மும்மலம்

மும்மலங்களுள் என்றுமே உயிருடன் இருப்பது ஆணவம், இடையில் சேர்ந்தவை கன்மம், மாயை. இம்மூன்றினையும் விலக்க இயலாது. இது சைவ சித்தாந்தக் கோட்பாடாகும். இக்கருத்தினையே, 'விலக்குறு மும்மல மயங்கும்' என்கிறார் சிவஞான முனிவர்.

இவற்றின் பிடியிலிருந்து உயிரினைப் பிரித்து நீக்குபவன் இறைவன். இக்கருத்துப் பின்வருமாறு:

உமாதேவியிடம் ''தவம் செய்யும் தகுதியுடைய கோயில்கள் பல எனினும் யாம் விரும்பி உறையும் கோயில் காஞ்சியே எனக் கூறவந்த இறைவன் யாம் இவ்வாறு பல கோயில்களிலும் எழுந்தருளக் காரணம் கடுமையான இருள் மலத்தில் மூழ்கி இருவினையாற் பிணிப்புண்டு மாயையின் மயக்கத்தில் மூழ்கி உய்யும் வழி அறியாது இருக்கும் பசுக்களை அவற்றினோடு சேராது தடுக்கிறோம், அவற்றின்மேல் வைத்த கருணையினால்'' என்கிறார்.

இக்கூற்று மூலம் மும்மலங்களின் இயல்பும், ஐவகைச் சத்திகளையும் வகுத்து, அரு நான்கும், உரு நான்கும், அருவுருவாம் ஒன்றும் ஆக ஒன்பது திருமேனி கொண்டும் ஐந்தொழிலையுஞ் செய்ய நினைந்து இருவேறு மாயைகளினால் உடல், கருவி, இடம் அனைத்தும் ஈந்து என்பதால் இறைவன் திருமேனிக்குரிய காரணமும், மாயையிலிருந்தே உலகந்தோன்றியது என்ற கொள்கையும், ''மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கின் விகாரத்தால் வந்த இருவினை காரணமாக எடுத்த பிறவியினை உயிர்களுக்குக் காட்டி அவற்றை மண்ணுல்கம், (பள்ளம், நீர், நடு) கீழுலகம், மேலுலகம், எனச் சுழலச் செய்து, மெதுவாக வினைப்பயனை ஊட்டி, நஞ்சோடு அமிழ்தம் கலத்தல்போல் தீயதையும் நல்லதையும் ஊட்டித் தெரியாத தவம் முதலியவற்றைத் தெரிவித்துச் சிவபுண்ணியத்துள் சேரச் செய்வோம்'' என்பதால் இருவினை, அதற்குக் காரணம், அவற்றை நீக்கும் உபாயம் போன்றனவும் விளக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு தனித்தனியே விளக்கிப் பின்னும் மற்றொரு பாடலில் பொதுவான இயல்புகளும் விளக்கப்பட்டுள்ளன. அப்பாடல்,

' ஒன்றாகி அழிவின்றிப் பலஆற்றல் உடைத்தாய்ச்செம் புறுமா
சென்னத்
தொன்றாகி அருள்விளைவின் நீங்கும் இருள் மலத்துடன்
அத்தொடக்கு நீப்ப
மின்றாவும் உடலாதி நல்கும்இரு மாயைஇரு வினைகட் கேது
என்றோது கருமம் இவை நிகழ்த்துதிரோ தமும் எனும்ஐ
வகைப்பா சத்தை'

என்பதாகும்.

இப்பாடலில் முதல் இரண்டுவரிகளில் ஆணவ மலத்தின் இயல்பும் செயலும், மூன்றாவது வரியில் இரு மாயைகள்

அவற்றின் இயல்பும் செயலும், நான்காவது வரியில் கன்மம், மற்ற இரு மலங்களின் இயல்பும் செயலும் கூறப்பட்டுள்ளன.

அடுத்த பாடலில் இவற்றைப் பொதுவாக உணராது சிறப்பாக உணர்ந்து, சிந்தித்துப் பெரிய மலப்பிணியை அவிழ்த்துச் சிவானந்தப் பெரும்பேறு பெற்றவர்கள் இப்பாசம் நீங்குவதும் சேர்வதுமாகிய இரு தன்மையற்று ஒரு நிலையினைப் பெறுவார்கள் என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

சிவஞானமுனிவர் பாடிய இலக்கிய வகைகளுள் அதிக எண்ணிக்கை கொண்டது அந்தாதியே. அந்தாதி இலக்கியங்களுக்குப் பெரும்பாலும் பாடுபொருளாக இருப்பது பக்தியுணர்வே. எனவே, இவ்வந்தாதிகளின் படைப்பு மூலம் சிவஞான முனிவருக்குப் பக்தியுணர்வு அதிகம் என்பதையும் உணரலாம்.

அந்தாதிகள் இறைவன்மீதோ தலத்தின்மீதோதான் பாடப்படுவது மரபு. அம்மரபிற்கேற்பச் சிவஞான முனிவரும், கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, வடதிருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி என்ற நான்கினையும் தலத்தின்மீதும், திருவேகம்பர் அந்தாதியை இறைவன்மீதும் அருளியுள்ளார்.

சிவஞான முனிவர் பாடியுள்ள ஐந்தந்தாதிகளுள் பதிற்றுப் பத்தந்தாதி, திரிபு அந்தாதி, யமக அந்தாதி என மூன்று வகையான அந்தாதிகள் இடம் பெற்றுள்ளன.

வடதிருமுல்லைவாயிலந்தாதியில், தமது பிறவியை அறுத்து மலக்கூட்டில் வருந்தும் தமக்கு அருளைக் கொடுத்தான் என்று இறைவனே முத்தி நல்கும் இயல்பினைக் குறிப்பிட்டுள்ளார்.

இறைவனே முத்தியின் பொருளாக உள்ளான் என்பதை, "மானேர் நோக்கின் மடநல்லார் மாயவாழ்வின் மதிமயங்கி, ஆனா இடும்பைக் கடலழுந்து மடியேன் றனக்கோர் புணையாகு மூனே யுயிரே யுணர்வேயென் றொக்கக் கலந்து சிவானந்தத்தேனே யான திருக்குளத்தூ ரிறைவன் கமலச் சேவடியே'' என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார் சிவஞான முனிவர்.

இறைவன், ''மான் போன்ற நோக்குடைய மங்கையரால் வரும் மயக்க வாழ்வில் அறிவு மயங்கிக் குறைதலில்லாத துன்பக் கடலில் அழுந்தும், உயிர்களுக்கு நீந்தும் ஓர் புணையாகிய

ஊனாகவும், உயிராகவும், உணர்வாகவும் இருந்து அவற்றுடன் ஒக்கக் கலந்து சிவானந்தத் தேனேயாக உள்ளான்'' என்பதே இதன் பொருளாகும்.

மேலும் முறைபிறழாத ஆனந்த முத்தி நெறியைத் தந்தருளுவன் எனவும், (முத்திக்கு அமலாக முன்னவன்) எனவும் குறிப்பிட்டுள்ளார்.

முத்தியின் இயல்பினை, ''உள்ளத் துள்ளமு தூறி யுணர்தொறும் தெள்ளத்தேறித் தெளிந்த சிவானந்த வெள்ளத்தே திளைப்பார்க்கு விளங்குவான்'' எனவும், அதனைப் பெற வரமளித்தவன் அவனே என்பதையும், ''பெருகிக் கிடந்த நிராலம்பப் பேரானந்தப்பெருங்கடலும் பருகித் துளைந்து திளைத்தாடிப் பதைப்பற்றிருக்க வரமளித்தான்'' எனவும் குறிப்பிட்டுள்ளார்.

இங்கு முத்தியினைச் 'சிவானந்த வெள்ளம்' என்றும், 'பேரானந்தப் பெருங்கடல்' என்றும் அதில் துளைவார்க்கும் துளைவதற்கும் இறைவன் வரம் நல்குவான் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

முத்தித் தேனினை நுகர்ந்தவர்க்கே ''பசுவும் பாசமும் ஒன்றையொன்று பற்றிக் கிடக்கும் தன்மையை'' அகவிளக்காக இருந்து இறைவன் விளக்குவான் என்கிறார்.

### சுலோக பஞ்சகம்

பஞ்சரத்தின மாலிகா என்ற பெயரில் அரதத்த சிவாசாரியார் செய்த ஐந்து சுலோகங்களைச் சுலோக பஞ்சகம் என்பதாகச் சிவஞான முனிவர் தமிழ் மொழியில் மொழிபெயர்த்த பாடல் ஒன்று, காயத்ரி மந்திரம் சூரியனை நோக்கிச் சூரிய காயத்ரி (அ) பிரம்ம காயத்ரி என வேண்டுகோள் பொருளில் அமைவது போலவே சதாசிவ காயத்ரி, தட்சணாமூர்த்தி காயத்ரி, கணபதி காயத்ரி முதலியன உண்டு என்பர்.

வழிபடுவோன் கடவுளாக ஆக மாட்டான். வழிபடப்படுவோனே கடவுளாக ஆவான் என்பதை எடுத்துக்காட்டும் முகத்தான் சிவபெருமானும் கடவுள் என்பதை நிறுவி அமைந்தது சுலோக பஞ்சகம்.

பல கடவுளர்க்கும் காயத்ரி இருந்தாலும், சிவபெருமானே உயர்ந்தவன் என்பதை ஒருமையில் சுட்டும் எண்ணத்தின்

அடிப்படையில் அரதத்தரின் ஐந்து சுலோகத்தை ஒரே பாடலால் சிவஞான முனிவர் இணைத்துக் காட்டினார் என உளம் கொள இடமுணடு (நுட்பமாக அறியலாம்).

ஐந்து சுலோகங்களை மொழிபெயர்த்து ஐந்து பாடலாகச் சிவஞான முனிவர் மொழிபெயர்க்காது ஒரே அகவற்பாவாகப் பாடியதன் அடிப்படையில் சுலோக பஞ்சகத்தின் (பஞ்சரத்தின மாலிகா) மொழிபெயர்ப்பு அன்று எனக் கொள்ளவும் இடமுண்டு என அருணைவடிவேல் கருதுகிறார். மேலும் இதனை மொழிபெயர்ப்பு நூல் என்று சொல்லாமல் மேற்கோள் பாடல் எனக் கொள்ளலாம் என்றும் கூறுகின்றார். அதாவது சிவஞானபோத முதற்சூத்திர, இரண்டாம் அதிகரண உதாரண வெண்பாவிற்கு விளக்கமாக இந்த மேற்கோள் பாடலைச் செய்துமுடித்தார் எனக் கொள்ளலாம் எனக் கூறுகிறார்.

### சித்தாந்தப் பிரகாசிகை

சைவ சித்தாந்தத்தைக் கற்க முனைவோருக்காகக் கட்டளை நூல்கள் என்பதாக ஆதீனங்கள் நூல்களை வெளியிடுகின்றன. அவ்வாறு வரும் கட்டளை நூல்கள் மாணாக்கர்கள் நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டிய அடிப்படைப் பொருள்களை யெல்லாம் கூறுவனவாகும்.

வடமொழியில் சர்வாத்ம சம்பு சிவாசாரியாரால் செய்யப்பெற்ற சிந்தாந்தப் பிரகாசிகை என்ற நூலின் மொழிபெயர்ப்பாக உரைநடைச் செய்யுள் அமைப்பில் சிவஞான முனிவர் செய்தது என்பர். ஏழு பிரகரணங்களாகப் பிரிக்கப்பட்டு அமைந்தது இந்நூல். மூன்று காண்டங்களில் முப்பத்தாறு தத்துவங்க்ள் விளக்கப்பெறுகின்றன.

முதலாவதாகப் போக்கிய காண்டத்தில் இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களுடன் பிரகிருதி (மாயை) தத்துவமும் விளக்கப்படுகிறது (இருபத்தைந்து தத்துவங்கள்).

இரண்டாவதாக அமைந்த 'தத்துவப் பிரகரண'த்தில் மூன்று காண்டங்களும் விளக்கப்பெறுகின்றன. போக்கிய காண்டத்தில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்குடன் பிரகிருதி தத்துவமாகிய குணத்துவம் விளக்கப்பெற்றுள்ளது.

'போகசமாத்துரு' காண்டத்தில் ஆறு வித்தியாதத்துவங்கள் விளக்கப்படுகின்றன.

பிரேர காண்டத்துள் சுத்த வித்தை, ஈசுவர தத்துவம், சதாசிவத் தத்துவம், சக்தி தத்துவம், சிவதத்துவம் ஆகிய ஐந்து தத்துவங்களும் விளக்கப்படுகின்றன.

முதல் பிரகரணம், தேகப் பிரகரணம் என ஆன்மாவின் தூல, சூக்கும தேகங்களை விளக்குகின்றது.

அத்துவா பிரகரணம், ஆன்மப் பிரகரணம், பந்தப் பிரகரணம், சாத்திரப் பிரகரணம், தீட்சாப் பிரகரணம் ஆகியன முறையே மூன்று முதல் ஏழாக அமைந்துள்ளன.

## சிவதத்துவ விவேகம்

சிவஞான முனிவரின் மொழிபெயர்ப்பு நூலுள் ஒன்றாக அமைவது சிவதத்துவ விவேகம். அப்ப தீட்சிதர் (அப்பய்ய தீட்சிதர்) என்பார் வடமொழியில் இயற்றிய 'கிரிணிமாலை' என்ற நூலின் மொழிபெயர்ப்பு எனப்பெறும்.

சிவபெருமானுடைய உண்மையை அறிவதற்குக் கருவியாக உள்ள நூல் சிவதத்துவ விவேகம் எனப்பெறும். மேலும், சைவ மெய்யன்பர்கள் நாளும் இருவேளைகளில் பாராயணம் செய்து திருவருளும், குருவருளும் பெற்று உய்யலாம் எனவும் குறிப்பிடப் பெறும்.

சிவதத்துவ விவேகம் எழுபது செய்யுட்களைக் கொண்டது. பாயிரம் என்ற தலைப்பில் ஏழு பாடல்கள் உள்ளன. நூல் என்ற தலைப்பில் அறுபது பாடல்கள் உள்ளன. அதில் பூர்வபாகம் என்பதாக 33 பாடல்களும் 34 முதல் 60ஆம் பாடல்வரை உத்தரபாகம் என்பதாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. இறுதியாகப் பயன் என்ற தலைப்பில் மூன்று பாடல்கள் காணப்படுகின்றன.

சிவதத்துவ விவேக நூலுள் உபநிடதக் கருத்துக்களும் புராண இதிகாசக் கருத்துக்களும் வேதாந்த சூத்திர கீதை நூல்களின் கருத்துக்களும் ஆராயப்பெற்றுச் சிவபெருமானது பரத்துவம் விவரிக்கப்பட்டுள்ளது. அவனுடைய தாளை ஏத்துவது இந்த நூல்பயன் என்பதாக,

' இவ்வாறு முப்பா னிரட்டிப்படு செய்யு ளாலுன்
செவ்வா னடியிற் சிவதோத்திர மாலை சேர்த்தேன்
இவ்வாய் மையினித்த மொர்காலித னைப்ப டிப்போன்
உய்வா னுனதின் னருள்கூடுக வும்ப ரானே'

என்ற பாடலால் சிவஞான முனிவர் அந்நூலுள் கூறியுள்ளார்.

### தருக்க சங்கிரகம்

தருக்க நூல்களை அடிப்படையாகக் கொண்டு தருக்கவாதி எனப் பெயர் பெறும் நியாய வைசேடிகர்களின் நூல்களை அறிந்தவர் 'அன்னப்பட்டர்' என்ற பண்டிதர். அவர் இயற்றிய நூல் தருக்க சங்கிரகம். அதற்கு அவரே எழுதிய உரை தருக்க சங்கிரக தீபிகை என்பது. அந்த உரைக்கு வேறொரு பெயர் அன்னப்பட்டீயம் என்பது.

இந்த நூல் உரைநடை அமைப்பிலேயே காணப்பெறுகின்றது. தற்சிறப்புப் பாயிரப் பாக்கள் இரண்டு உள்ளன. இந்த நூல் 'தென்றமிழ்ச் சொல்லால் செய்யப்பட்ட'தெனச் சிவஞான முனிவரால் கூறப்பட்டுள்ளது.

திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் ஆகிய ஏழு பதார்த்தங்களையும் சிவஞான முனிவர் தமிழால் இனிமையாக விளக்கியிருக்கிறார்.

திரவியத்தையும், குணத்தையும் விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார்.

பிரத்தியட்சப் பிரமாணம், அநுமானப் பிரமாணம், உவமானப் பிரமாணம், சத்தப் பிரமாணம் ஆகியனவற்றையும் 'குணம்' என்ற தலைப்பினுள் அமைத்துக் காட்டியுள்ளார். பிற 'கருமம்' முதலாக 'அபாபம்' ஈறாக முறையே விளக்கியுள்ளார்.

### சிவஞான சித்தியார் பொழிப்புரை

சிவஞான போதத்தின் வழிநூல் சிவஞான சித்தியார். இந்நூலை இயற்றியவர் அருணந்தி சிவாசாரியார். இந்நூல் சுபக்கம், பரபக்கம் என இரண்டு பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இப்பிரிவுகளில் 'சுபக்கம்' என்ற பிரிவுக்கு மட்டும் முனிவர் பொழிப்புரை செய்துள்ளார். மேலும், இப்பிரிவுக்கு மறைஞான சம்பந்த தேசிகர், சிவாக்கிரயோகி தேசிகர், ஞானப்பிரகாச முனிவர், நிரம்பவழகிய தேசிகர், சுப்பிரமணிய தேசிகர் முதலியோரும் உரை வகுத்துள்ளனர். இவ்வுரைகளை அறுவர் உரை என்று சைவ சித்தாந்தச் சான்றோர் போற்றுவர்.

இவ்வாறு உரைகளிலும் சிறப்புடையது முனிவர் உரையே. இவ்வுரையின் சிறப்பினை, ''ஆசிரியர் சிவஞான யோகிகள் இயற்றிய சிவஞான சித்திப் பொழிப்புரை முதனூற் சூத்திர அதிகரணக் கூறுபாடு முறையாகத் தெரித்து மூலத்தின்

மெய்ப்பொருள் விளக்கி, ஏனோருரைகளை அளக்கும் அளவையாய் நிற்பது. சிவஞான சித்தியுரைகளுள் இஃதொன்றே மிக அரிதின் உணர்தற்பாலது'' என்று கூறியுள்ளார் சபாபதி நாவலர்.

சிவஞான முனிவரின் பொழிப்புரையைத் தழுவியே சுப்பிரமணிய தேசிகர் பதவுரை எழுதியுள்ளார்.

## சிவஞான போதப் பேருரை

சிவஞான முனிவர் ''ஞானவிளக்கத்தோடு செயல்நிலையிலும் காணப்படுகின்ற அனைத்துக் கூறுகளையும் இணைத்துப் பிற தத்துவங்களையும் எடுத்துக்காட்டிச் சைவ சித்தாந்தத்தைச் சிவஞான போதம் நிலைநாட்டியுள்ளது'' என்ற பாங்கில் சிவஞான போதப் பேருரையை அமைத்துள்ளார்.

வடமொழியில் 'பாஷ்யம்' - எனத் தத்துவ விளக்கநூல்கள் பல உள்ளன. தமிழில் - தத்துவ நூல்கள் வரிசையில் அமைந்தது சிவஞானபோதப் பேருரை எனப்படும் மாபாஷியம். இதற்குத் திராவிட மாபாடியம், சிவஞான மாபாடியம் என்னும் பெயர்களும் உண்டு.

இவ்வுரையினால் சிவஞான முனிவரும் 'மாபாடிய கர்த்தர்' என்னும் சிறப்புப் பெயரினையும் பெற்றார்.

இப்பேருரையினை உமாபதி சிவாசாரியாரின் சிவப்பிரகாசம் அடிப்படையில் பொது, உண்மையென இரண்டதிகாரங்களை வகுத்துக் கொண்டு பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் எனப் பகுத்து ஒவ்வொரு அதிகாரத்திற்கும் இரண்டு இயல் பகுப்பை இணைத்து வகுத்துள்ளார்.

'கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே '

எனவரும் சிவஞானபோத மங்கலவாழ்த்துப் பாடலை விரித்துக்காட்டி - பரம்பொருளின் இயல்பை விரித்துக் காட்டியுள்ளார்.

'தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை எமையிகழார் - தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்'

என்ற அவையடக்கப் பாடலில் வரும், 'உடங்கியைந்து', 'கேளாம் புறன்' என்பனவற்றை எடுத்துக்கொண்டு அகச் சமயங்கள், அகப்புறச் சமயங்கள், புறச் சமயங்கள், புறப்புறச் சமயங்கள் ஆகியவற்றை விளக்கி, பிற கொள்கைகளை உறவாக்கி உயர்ந்த கொள்கையாகச் சைவ சித்தாந்தம் நிற்றலை விளக்கிக் காட்டியுள்ளார்.

'அத்துவிதம்', 'சதசத்' - ஆகிய சொற்களுக்குத் தனித்தன்மையில் விளக்கந்தந்துள்ளார். நானெறியினையும் அதற்குரிய பயனையும் விளக்கியுள்ளார்.

உரையில் திருமுறைகள், பக்திப் பாடல்கள், வடமொழி நூல்கள் பண்டார சந்நிதானங்களின் பாடல்கள் ஆகமங்கள் ஆகியன வற்றையும் இணைத்துக் காட்டி - ஐம்பூதங்கள், ஐம்பூதங்களுக்குக் காரணமான தன்மாத்திரைகள், இந்திரியங்கள் முதலிய அனைத்தும் மாயா காரியங்கள் எனவும், மாயை என்பதற்கு - 'மா' என்பது ஒடுங்குதல், 'யா' என்பது வருதல் - ஆகலின் எல்லாக் காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குதற்கும் தன்னினின்றுந் தோன்றுதற்கும் காரணமாய் நின்றது மாயை எனவும் விளக்கந் தந்துள்ளார் சிவஞான முனிவர்.

## மாயையின் வகைகள்

மாயை, சுத்த மாயை, அசுத்த மாயை என இரு வகையாகவும், அசுத்த மாயை, சுத்த மாயை, பிரகிருதி மாயை என மூவகையாகவும் கூறும் மரபு உண்டு.

சுத்த மாயை என்பது ஆணவம், கன்மம் என்ற இரண்டோடும் கலவாது தூயதாய் நிற்பது ஆகும். அசுத்த மாயை என்பது ஆணவம், கன்மம் என்ற இரண்டோடும் கலந்து நிற்பதாகும். பிரகிருதி மாயை என்பது அசுத்த மாயையினின்றும் தோன்றுவது. ஆதலால் பிரகிருதி மாயையை அசுத்த மாயையில் அடக்கிச் சுத்த மாயை, அசுத்த மாயை என இரண்டாகவே கூறுவது மரபாக உள்ளது.

சிவஞான முனிவர், தமது பேருரையில், ''பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாய் நித்தமாய்ச் சடமாய் முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாய் முதல்வனின் வியாப்பியமாய், மெய்ப்பொருளாய், அருவாய் உள்ளதெனப் போந்த மாயை-சுத்த மாயை அசுத்த மாயையென்று இருவகைப்படும். சுத்த மாயை, மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்பன ஒரு பொருட்கிளவி. அசுத்த மாயை,

அதோமாயை, மோகினி என்பன ஒரு பொருட்கிளவி. இவற்றுள் சுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்த மாயை, அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்த மாயை என்று மாயையின் வகைகளுக்கு விளக்கந் தந்துள்ளார். இவரைப் பின்பற்றியே பெரும்பாலோர் சைவ சித்தாந்தத்தில் மாயை இரண்டு என்றே கூறுவர். அவர்களில் ஒருவரான கச்சியப்ப முனிவர் ''மாயை சுத்தமே அசுத்தமே என இருவகையாம்'' என்று இரு மாயைகளையே குறிப்பிட்டுள்ளார்.

## சிவஞானபோதச் சிற்றுரை

முனிவர் சிவஞான போதத்திற்குச் செய்த ஞான விளக்கமே சிற்றுரை எனலாம். இவ்வுரை சித் + உரை = என விரிந்து 'ஞான உரை' என்பதாகவே சூத்திரத்துட் பொருளைச் சுருக்கி விளக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

மெய்கண்டாரின் நூற்பா, ஏது, திட்டாந்தம், வெண்பா ஆகியவற்றை நேரிடை விளக்க அமைப்பில் விளக்குகிறது சிற்றுரை.

## சிவசமவாத உரை மறுப்பு

' என்னைஇப் பாவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண்டான் நூல்
சென்னியிற் கொண்டுசைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றாம்'

என்னும் சிவஞானசித்தியார் பாயிரப் பாடலுக்குப் பஞ்சாக்கர தேசிகர் மரபினரான ஞானப்பிரகாசர் எழுதிய உரையை மறுத்து எழுதிய உரை.

## சிவசமவாதக்.கண்டனமென்னும் சிவசமவாதவுரை மறுப்பு

சிவஞான சித்தியாருக்குப் பஞ்சாக்கர தேசிகர் வகுத்த உரையில் அமைந்துள்ள விளக்கத்தில் பொருட்குற்றம் கூறுவதாக எழுந்தது. ஏறத்தாழ முப்பது சொற்களுக்குக் கூறப்பட்ட விளக்கத்தில் பொருட்குற்றம் கூறியுள்ளது இந்நூல்.

## 'எடுத்து' என்னுஞ் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம்

சிவஞான சித்தியாரின் 'என்னை இப்பாவத்தில்' எனத் தொடங்கும் பாயிரப் பாடலில் இடம்பெறும் 'எடுத்து' என்னும் சொல்லுக்கு எழுந்த விளக்கமே 'வைரக் குப்பாயம்' என அழைக்கப்படுகிறது.

ஒரே ஒரு சொல்லுக்கு முனிவர் பதினான்கு பக்கங்களுக்கு உரை வகுத்துள்ளார். இவ்வுரையின் மூலம் முனிவரின் தத்துவப் புலமையினை நன்கு உணரமுடிகிறது.

தனிச் செய்யுளுரை

சிவஞான சுவாமிகளின் மொழிப் புலமை கண்டு செருக்குற்று, அழுக்காறு கொண்ட தமிழறிஞர்களுக்காக எழுதப்பட்ட நூல்.

சுவாமிகள் காஞ்சிபுரம் சென்ற காலத்துச் சிலபுலவர்கள்,

'அங்கோழி முட்டை யுறப்புவி யாண்டல ராலவிந்த
வெங்கோழி முட்டைமுன் சேரா வுருப்பவெல் வெம்மைபஞ்சே
ருங்கோழி முட்டை வரும்பாலை போல வுருக்குமந்தோ
செங்கோழி முட்டைக் கருப்போ லெழுந்த செழுந்திங்களே'

'எந்தனங்கள் பட்டுருவி யென்கணவன் போனவழி
கந்தமலர்ப் பூங்குழலீர் காணீரோ - நுங்கணவன்
வாழையிலே கண்டேன் வரப்பிலே கால்கண்டேன்
றாழையிலே கண்டேன் தலை'

இப்பாடல்கள் இரண்டுக்கும் உரை கூறுமாறு முனிவரை வேண்டினர். சுவாமிகளும் இவ்விரண்டு பாடல்களுக்கும் ஒரு விருத்தியுரை எழுதி அனுப்பினார். அவ்வுரையே பின் தனிச் செய்யுளுரை எனப்பட்டது. இது 'செந்தமிழ்' நான்காம் தொகுதி - இரண்டாம் பகுதியில் வெளிவந்துள்ளது.

சித்தாந்த மரபு
சித்தாந்தமரபு கண்டனம்
சித்தாந்த மரபு கண்டன கண்டனம்

இந்நூலின் வேறு பெயர் சிந்தாந்த மரபு மரபட்டவனை என்பதாகும்.

இது சிந்தாந்த மரபும் அதன் கண்டனமும், மற்றதன் கண்டனமுமென மூன்றாகும்.

அதாவது - சித்தாந்த மரபு, சித்தாந்த மரபு கண்டனம், சித்தாந்த மரபு கண்டன கண்டனம் என மூன்றாக அமைந்துள்ளது..

இம்மூன்றனுள் 'சித்தாந்த மரபு' எழுதியவர் துறைசை ஆதீனத்துள் வந்தவர் என்றும், 'மரபு கண்டனம்' எழுதியவர் தருமை ஞானசம்பந்த தேசிகர் மரபினருள் ஒருவரான சிதம்பரநாதத் தம்பிரான் என்றும் கூறுவர். சித்தாந்த மரபு கண்டண கண்டனத்தை அருளியவர் சிவஞான முனிவராவார்.

இந்நூலுள் அறுபது சித்தாந்த மரபுகள் இடம்பெற்றுள்ளன. சித்தாந்த மரபு கண்டனத்தில் விசேடமில்லையென்றால் சித்தாந்த மரபு கண்டன கண்டனம் இல்லை. அவ்வகையில், பன்னிரண்டு சித்தாந்த மரபுக்குக் கண்டன கண்டனம் இல்லை. நாற்பத்தெட்டு சித்தாந்த மரபுகளுக்குக் கண்டன கண்டனம் எழுதப்பட்டுள்ளது.

## கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி

சிவஞான சுவாமிகள் காஞ்சிபுரத்திற்குச் சென்ற காலத்தில் அங்கு வாழ்ந்த வைணவ அடியார்கள் ''கம்ப ராமாயணம் மட்டுமே தமிழில் குற்றமின்றி இயற்றப்பட்ட காப்பியம்'' என்க் கூறிச் செருக்குற்றனர். அப்பொழுது சுவாமிகள் 'நாடிய பொருள் கைகூடும்' என்ற செய்யுளுள் இடம்பெற்ற பல குற்றங்களை எடுத்துக்காட்டி வைணவ அடியார்களை விளக்கம் கூறுமாறு வேண்டினார். அவர்களால் விடையளிக்க இயலாமையால் சுவாமிகளை வணங்கிச் சுவாமிகளே விடையளித்துப் பொறுத்தருள வேண்டினர். முனிவரும் அவர்களை மன்னித்து அச்செய்யுளில் அமைந்துள்ள குறைகளை விளக்கி அதற்கு அமைதியுங் கூறினார். அவ்விளக்கமே 'கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி' என்ற நூலாக விளங்கியது.

' நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே'

- கம்பராமாயணப் பாடல்



# 3. முனிவரின் வாக்கில் பாடுபொருள் உத்தி

சமூகம் நோக்கிய கருத்துக்களைக் குறிக்கோள் அடிப்படையில் மெய்ப்பொருளியல் கருத்துக்களாக வழங்கும் அடிப்படையைத் தம்முடைய படைப்பிலக்கியங்களில் முனிவர் அமைத்துக்காட்டுகிறார். அவ்வகையில் சமூகத்தில் அமைந்த பல்வேறு கடவுள் வணக்க நிலைகளிலும் அடிப்படையாக அமைத்துக்கொள்ள வேண்டிய கொள்கை அமைப்பிலும் சைவ சித்தாந்தத்தைப் பாடுபொருள் அமைப்பில் எடுத்துக்கொண்டு இலக்கியங்களைப் படைத்துள்ளார் முனிவர்.

பாடுகிற பொருளும் பாடப்படுகிற பொருளும் என இரண்டையும் இணைக்க வேண்டும் என்று சொன்னால் - பாடுகிற பொருள் படைப்பாளன், பாடப்படுகிற பொருள் இலக்கியத்தால் வெளிப்படுத்தப்படுகிற கருத்துப் பொருள். அந்தக் கருத்துப் பொருளே குறிக்கோளையும் குறிக்கோளுக்கு உரிய பொருளையும் வகைப்படுத்தி விளக்குவதாக அமைய வேண்டும். அவ்வாறு பாடப்படுகிற பொருளுக்கு அடையாளமாக நின்ற குறியீட்டுப் பொருளும் ஒருவகைப் பாடுபொருளே. அவ்வாறு குறியீட்டுப் பொருளைப் பாடுபொருளாகக் கொண்ட இலக்கியப் படைப்பு, சமயமும் தத்துவமும் சார்ந்த படைப்புக்களாகவே அமையும் என்பது குறிப்பிடத்தக்கது.

பாடுபொருளும் பாடப்படுகிற பொருளுமாகச் சமய, தத்துவ இலக்கியங்கள் ஒவ்வொன்றும் அமைகின்றன. நேரிடையாகப் பாடு பொருள் அமைப்பு வெளிப்படும். அதனோடு இணைந்தும் அதனுள் மறைபொருளாகக் குறிக்கப்பட்டும் தத்துவக் கொள்கைகள் வெளிப்படுத்தப்படும். அவ்வாறு இலக்கிய அமைப்பாலும் எடுத்துக்கொண்ட பாடுபொருள் நிலையாலும்

சிவஞான முனிவர் சில உத்திகளை எடுத்துக்கொண்டு அதன்வழியாக அவர் சில உண்மைகளை விளக்கியுள்ளார்.

## பிள்ளைத்தமிழ்ப் பாட்டும் சித்தாந்தமும்

சிவஞான முனிவர் விநாயகர்மீதும் அமுதாம்பிகைமீதும் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளார். பிள்ளைத்தமிழ் நூல்கள் இறைவனை மகவாக்கிப் பாடுவது. அந்த அடிப்படையிலும் பரம்பொருளின் பல்வேறு திருமேனிகளை எங்ஙனம் உளங்கொள வேண்டும் என்ற அடிப்படையிலும் பிள்ளைத்தமிழ் நூல்களை அமைத்து யாத்துள்ளார்.

பிள்ளைத்தமிழ் நூல்களை அருளிச்செய்த சிவஞான முனிவர் தம் கருத்தை, பிள்ளைத்தமிழை விளங்கிக்கொள்ள வேண்டிய கருத்திலும் விளக்கி, பிள்ளைத்தமிழ் ஒவ்வொன்றிலும் ஆசிரியர் கருத்து என்பதாக ஒரு பாடல் பாடியுள்ளார்.

1. அகள வடிவான பரமானந்தப் பொருள் மெய்யடியவர்களை ஆள்வதற்காக அருள்உரு எடுப்பது. (செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்).
2. மனம் வாக்கிற்கு எட்டாத சிற்சக்திப் பரம்பொருள் உயிர்கள் உய்வதற்காகச் சிறுகுழந்தையிலிருந்து வளர்ந்து வந்து வாழும் நிலை. (மலையரையன் மகளாக உமை வளர்தல் - குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்).

ஆகிய இரண்டடிப்படையிலும், 'நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளினாலே' என்ற சிவஞானசித்தியார் சாத்திரக் கருத்தினால் விமலனாகிய பரம்பொருளே பல்வேறு திருமேனி கொண்டு நின்றதை அருளாளர்கள் அடிப்படையிலும், உயிர்களுக்கான அருள் விளையாட்டு வரலாற்று அடிப்படையிலும் விளங்கிக்கொள்ள வேண்டும் என்று பிள்ளைத்தமிழ் அடிப்படையைத் தெரிவிக்கின்றார்.

பிள்ளைத்தமிழில் பல்வேறு திருமேனிகளைப் பற்றிய இணைப்பு ஆராய்ச்சியை எடுத்துக்கொண்டு ஆற்றல் அடிப்படையில் இனம்நாட்டி வாழ்த்திடல் வேண்டும் என்று குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் கூறுகிறார். பொதுவாகப் பிள்ளைத்தமிழில் எடுத்துக்கொண்ட எவ்வகைத் திருவுருவையும் சைவசித்தாந்த அடிப்படையிலும் சிவபெருமான் செய்கைகளிலும் விளக்குதலையே மேற்கொண்டிருக்கிறார்.

அந்தாதி அரும்பொருள்

இறைவனுடைய ஆற்றல் படிநிலைகளில் உயிர்களை நோக்கி ஒன்பது வகையில் வேறுபட்டு வந்ததை 'நவந்தருபேதம்' என சைவ சித்தாந்தம் விளக்கும். இதனை,

' சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்திரன்தான் மால்அயன் ஒன்றினொன்றாய்ப்
பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபயமொன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்ப னென்பர்'

என்றவாறு சிவஞானசித்தியார் கூறுகிறது. நவந்தருபேதத்தைத் தனித்தன்மை அடிப்படையில் முனிவர் விளக்கும் பாடல் ஒன்று கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதியில்,

' புதியான் பழையான் புறத்தா னகத்தான்
முதியா னிளையான் முதலான் முடியான்
பதியாங் கலைசைப் பகவன் பெருமை
மதியா லெவர்தே றிடவல் லவரே'

என்றவாறு பயின்று வருகின்றது.

சிவம், சத்தி, ஈசுரன், சுத்தவித்தை, ஆகிய நான்கும் ஒருபடித்தாகவும், மகேசர், உருத்திரன், மால், பிரமன் ஆகிய நான்கும் ஒருபடித்தாகவும் இருக்க, முறையே அருவம் எனவும், உருவம் எனவும் அக்கடவுள் நிலைத் திருமேனிகள் விளக்கப்படும். அவற்றின் மேலாக அருவுருவத் திருமேனி சதாசிவம் என விளக்கப்பெறும். சதாசிவ அடிப்படையில் மேற்பாடலில் 'பகவன்' என்ற திருநாமத்தை இறைவனுக்கு அமைக்கிறார் முனிவர்.

'பகவன்' என்பது 'பகம்' என்ற இரு பிளவை அடிப்படையாகக் கொண்டது என்றவாறு அருவத் திருமேனிக்கும் உருவத் திருமேனிக்கும் அடிப்படையானது என்பதை விளக்கும் வண்ணம் 'பகவன்' எனும் பெயரால் குறித்தார்.

புதியான், பழையான், புறத்தான், அகத்தான் என அருவத் திருமேனிகளையும், முதியான், இளையான், முதலான், முடியான் என உருவத் திருமேனிகளையும் வகைப்படுத்தி அந்தத்தைச் செய்யும் 'மகாசங்காரகாரணனாகிய பரம்பொருளே 'ஆதி'. பொருளாக வந்தமையை, நவந்தரு பேதத்தைப் புதியான், எனத் தொடங்கி முடியான் என முடித்துக் காட்டினார். இடையில் இரண்டிற்கும் காரணமானவனைப் 'பகவன்' என்றார்.

சிவஞான போதத்தின் முதற்சூத்திரத்தில் பயிலும் அந்தம் ஆதி என்பதற்கு மாபாடியம் செய்த முனிவர், ''அந்தத்தைச் செய்யும் சங்காரகாரணப் பொருளே ஆதியாகிய படைத்தலைச் செய்யவல்லது'' என்றவாறு விளக்கம் கூறினார்.

இறைவன் படைத்தல் முதலாகிய ஆதித் தொழில்களை மேற்கொண்ட காலத்துப் பதிப்பொருளாக வந்து பணியாற்றினான். அவனுடைய பணியால் கேவல நிலையில் இருந்த உயிர்கள் சகலநிலை அனுபவம் பெற்றுச் சுத்த நிலைக்குச் செல்கின்றன. அவ்வகையில் இறைவனும் செய்யும் தொழில்தன்மை 'அந்தாதி' எனச் சுட்டிய மெய்கண்டார் வாக்கின் வண்ணம் அந்தாதிப் பாடல்களாக ஐந்து நூல்களைச் செய்தார் முனிவர்.

அத்தகு அந்தாதிப் பாடல்களில் சகலநிலை அனுபவங்களையும் சுத்தநிலை அனுபவங்களையும் பல்வேறு பாடல்களில் வைத்துக்காட்டி முழுமைப்படுத்திச் சிவஞான முனிவர் படைத்துள்ளார். இங்கு அந்தாதியின் அடிப்படை 'அந்தம் ஆதி' என நின்ற முழுமைப் பரம்பொருளின் உயிர்கள் நோக்கிய அனைத்து முழுமைச் . செயல்களையும் 'அந்தாதியாம்' இலக்கியமாக, அருளும் முன்னம் அவற்றை இறைவனுக்குரிய மாலையென்றும் இறைவன் திருவடிக்குச் சேர்க்கும் பாடல்கள் என்றும் (கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதிக் காப்புச் செய்யுள்) கூறுவார் முனிவர்.

அவ்வாறே 'மும்மலக்கந்து' பிடுங்கி, உயிர்ஞானத்தைப் பிடுங்கித் தன் ஞானத்தை இறைவன் நாட்டி அருளும் செயல் வண்ணம் அந்தாதிப் பாடல் விளக்குவதாக விநாயக வணக்க அமைப்பில் (இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி காப்புச் செய்யுள்) அந்தாதி அடிக்கருத்தைத் தெரிவிக்கின்றார்.

## பதிகப் பெருநெறி

பதிகப் பெருநெறி கண்ட பாலறாவாயரான திருஞான சம்பந்தர் குருமூர்த்தி அடிப்படையில் சைவ சமயத்திற்குப் பதிகப் பெருநெறி தந்தவராகக் கொள்ளப்படுவார். பதிகப் பெருநெறியைத் தோற்றுவித்தவர் காரைக்காலம்மையார். பெண் என நின்ற அடியாரும், ஆண் என நின்ற அடியாரும் அமைத்து ஆக்கித் தந்த பதிகப் பெருநெறியை அம்மைக்குப் பதிகமும், ஆனந்த ருத்திரேசருக்குப் பதிகமென இருபாலுக்கும் பதிகம் அமைத்துத் தந்தார் முனிவர்.

அம்மையைப் பதிகத்தில் வைத்துப் பாடும் முனிவர்,

' பாவியேன் செய்கின்ற பிழையெலாம்
குணமெனக் கருதி யெளிதாக்
கோலங்கள் காட்டியெனை யிவ்வள வெடுத்தாண்ட
குணமேரு வே,'

என்று, பதிகப் பெருநெறியின் முடிவை எடுத்து மொழிகின்றார்.

திருஞானசம்பந்தர் பதிகப் பெருநெறியில் மக்களுடைய வினையை மாற்றியும், வேண்டியன பெறலாம் என்றும், இறந்தவர்களை மீட்டும் ஆணை செய்தவர்.

பதிகப் பெருநெறியில் முன்னோர்கள் ஏத்தியதையே ஏத்தி உகக்கலாம் என்றும் அடியார்கள் அடி பேணியே உய்யலாம் என்றும் அறிவித்தது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கொள்கை. இதனை,

' குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்'

என்று கூறுவார்.

அத்தகு தேவார ஆசிரியர்களின் ஆணைகளை ஏற்றுப் பதிகப் பெருநெறியில் பிழையெலாம் குணமெனக் கருதிக் கோலங்கள் பல காட்டி இறைவன் அருளுபவன் என்று சித்தாந்தக் கொள்கையை வழிநடத்தி அகிலாண்டேசுவரி பதிகத்தைப் பாடியுள்ளார் சிவஞான முனிவர்.



கச்சிஆனந்தருத்திரேசர்பதிகம் என்பதாகப் பதிகம் பாடும் முனிவர், பதிகப் பெருநெறியால் செய்கைகளை முறைப்படுத்தி வணங்கி வாழ்தலையும் அன்பு செய்து ஆனந்த நிருத்தம் காணுதலையும் கூறிப் பதிகப் பெருநெறி முறையைச் சைவ சித்தாந்தக் கொள்கைக்கு உரிய பயிற்சியாக இணைத்துத் தந்துள்ளார்.

இறைவனுடைய ஆனந்தமாநடனத்தை மெய்கண்ட சாத்திரங்களில் உண்மை விளக்கம், திருவருட்பயன் போன்ற நூல்கள் விரிவாகக் காட்டும். அவற்றால் காட்டப்படும் உயிர்களுக்கு ஆனந்தம் தருதற்காக இறைவன் ஆடும் மாநடனத்தை இணைத்துச் சைவ சித்தாந்தக் கொள்கையைத் தம் படைப்பிலக்கியங்களில் விளக்கும் வண்ணம் கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகத்தில் ஆனந்த நிருத்தம் செய்யும் அமைப்பை நிலைநிறுத்தியுள்ளார். பதிகப் பெருநெறியிலேயே ஆனந்த நடனத்தை இணைத்துத் திருமுறை ஆசிரியர்கள் அனுபவத்தைச் சிவஞான முனிவரும் சித்தாந்தக் கொள்கைக்கு ஆனந்த நடனத்தை உரியதாக்கிப் படைப்பிலக்கியம் செய்துள்ளார்.

## மேல் கொள்கையும் வழி விளக்கமும்

முருகேசர் முதுமொழி வெண்பா, திருக்குறள் குமரேசர் வெண்பா, சிநேந்திர வெண்பா, சிவசிவ வெண்பா, முதுமொழிமேல்வைப்பு வெண்பாப் போன்ற மேல்வைப்பு நூல்கள் திருக்குறளை மேல்வைப்பாகக் கொண்டமைந்தன.

இவை திருக்குறளை மேல்வைப்பாகக் கொண்டு முன்னிரண்டு அடிகளில் விளக்கக் கருத்து நிகழ்ச்சிகளை எடுத்துக்கொண்டு பின்னிரண்டு அடிகளில் திருக்குறள் வெண்பாவை வைத்துப் பாடியவை மேல்வைப்பு நூல்களாகும்.

தமிழ்ச் சமுதாயத்தின் வாழ்வியல் கொள்கையாக வடித்தெடுக்கப்பட்டனவற்றை உலகச் சமுக வாழ்வியல் நெறியாக அமைத்துத் தந்த திருக்குறளை மேல்வைப்பு நூலாகக் கொண்டு சைவ சித்தாந்தச் செயல்முறையாம் வாழ்வியல் நிகழ்வுகளை இணைத்து விளக்கும் வண்ணம் முனிவர் சோமேசர் முதுமொழி வெண்பா என்ற நூலைச் செய்துள்ளார்.

## வரலாற்றுக் கொள்கை வகுத்தல்

புராணம் என்பதாகப் படைக்கப்படும் இலக்கிய வகையானது அதியற்புத அடிப்படையில் பேசப்பட்டாலும் புராணச் செய்திகளைக் குறியீடுகளாக வைத்து அதன் உண்மை உணர வேண்டும் என்பது ஒருவகைக் கருத்து.

சைவ சமயத்தில் இறைவன் அடியவர்களை முன்னிலைப் படுத்திக் கொண்டு செய்த அற்புதங்களாகப் பெரியபுராணம் கருதப்பட்டாலும் அடியவர்களுடைய வாழ்க்கையைக் கொள்கையாக விளக்குவதாக அமைந்தது. அந்த அடிப்படை யிலேயே அருளாளர்களுடைய வாழ்வியலை அடிப்படையாக

எடுத்துக்கொண்டு அவை மந்திரமாவனவாக விளக்கித் திருத்தொண்டர் திருநாமக்கோவை செய்தார் முனிவர். அடியவர்களை ஏற்றுக்கொண்டு அவர்கள் மூலமாக இறைவனை அனுபவிக்க வேண்டும் என்றும் அவர்கள் பெயரையே மந்திரமாகக் கொள்ளலாம் என்றும் அவர்களுக்குத் தொண்டு பேணி உய்யலாம் என்றும் வலியுறுத்தித் திருத்தொண்டர் திருநாமக் கோவையும் செய்தார்.

திருத்தொண்டர் புராணத்தைக் 'கோவை'யாக்கித் தந்து அடியவர்கள் வாழ்வியலைக் கொள்கையாக்கிய சிவஞான முனிவர் இறைவனுடைய கொள்கையைச் செயலாக்குகிறார். அதற்காகக் காஞ்சிப் புராணத்தைப் பாடுகிறார். முன்னது அடியவர் செயலைக் கொள்கையாக்கியது. பின்னது இறைவன் கொள்கையைச் செயலாக்கியது.

' பொருவில் கச்சியம் புராணம்வண் டமிழினிற் புகலென்
றிருநி லம்புகழ் மணிமதிற் கச்சிஏ கம்பர்
திருவ ருட்குரி யான்றவர் கூறிய சிறப்பால்
உரிமை யுற்றெழும் ஆசையான் உரைத்திட லுற்றேன்'

' மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆய வேல்அவை அருள்மய மாகும்மற் றதுபோல்
பேய னேன்பிதற் றுரையுமே கம்பர்தம் பெருமை
தூய காதையுள் ளுறுதலால் துகளறத் தோன்றும்'

என வரும் பாடல்களில் காஞ்சிப் புராணம் செய்தமைக்கு விளக்கம் சுட்டியுள்ளார் முனிவர்.

## குருநெறிக் கொள்கை

தம்முதல் குருவுமாய் ஆன்மாவின் உள்ளிருக்கிற இறைவனே வரலாற்று மூர்த்தத்தாலும் மானிடச் சட்டையாலும் வெளிவந்து அருளுவதும் உள்ளிருந்து விளக்குவதும், குருநெறிக்கு விளக்கமாகச் சைவ சித்தாந்தத்தில் கூறப்படும்.

நாயன்மார்களையும் சந்தானாச்சாரியர்களையும் குருமரபில் ஏற்று அனுபவம் பெறுதலும் சைவத்தில் குரு விளக்கத்தில் இணைப்புப் பெற்ற கொள்கையாக உள்ளது.

பண்டார சந்நிதானங்கள் குருமரபில் அனுபவத்திற்குத் தீட்சை முதலிய சாதனங்களாலும் இறைவனின் நேர்நிலை அனுபவத்தாலும் பல்வேறு அருளாளர்களைத் தந்துள்ளனர்.

அவர்களும் உலகுயிர்களுக்கு உரிய குருபரம்பரையினராகப் போற்றப் பெறுகின்றனர்.

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட தேசிகன் சந்தான மரபில் வந்த பஞ்சாக்கர தேசிகர் மீது, 'பஞ்சாக்கர தேசிகர் மாலை' என்பதாக மாலை பாடி, குருமரபுக் கொள்கை நாட்டுகிறார் முனிவர். இறைவனுக்கும் தேசிகருக்கும் பேதமிலா அபேத அடிப்படையில் தம் முதல் குருவாம் தனித்தன்மையில் குருநெறியை வைத்து அப்படைப்பைச் செய்துள்ளார் முனிவர்.

குருநெறியானது உயிர்க்கு உயிராக அமைந்த நெறி எனவும் துரியம் கடந்த சிவானந்தப் பேறமுத அனுபவம் தரும் நெறியென்றும், பொய் முதலியன நீக்கும் நெறி என்றும் குருநோக்கி உண்மையாளராக அன்பு செய்தல் வேண்டும் என்றும் குருநெறியை விளக்கிச் செல்லும் முனிவர் ஐந்தெழுத்து உபதேச அடிப்படையிலும் நூல் கொள்கையை அமைத்துக் காட்டியுள்ளார். குருநெறியால் செயல் தெளிவும் மும்மல நீக்கமும் உயிர் உண்மை அனுபவமும் வாய்த்து ஆனந்தம் தலைக்கெய்தும் அடிப்படை குருபரனால் கொள்ளப் பெறுவதாகும் என்று குருநெறி குறித்துப் பஞ்சாக்கர தேசிகர் மாலை பாடியுள்ளார் சிவஞான முனிவர்.

## களிப்பாம் பேற்று நிலை

குருநெறியால் பொருள் உண்மை தெளியும் ஞானநிலை வாய்த்தலைக் குறிக்கும் இவர் களிப்பு அனுபவப்படி முறையை அமைத்துக்காட்டும் வண்ணமும் இறைவன் நடனத்தால் அது அமையும் வண்ணமும் காட்டி திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு என்று ஒரு நூல் செய்துள்ளார். விடுதல், பற்றுதல், நல்வினை, தீவினை ஒப்பு, ஐந்தெழுத்து, உபசாரம், முப்பத்தாறு தத்துவம் கடத்தல், ஆறு குற்றம் நீங்கல், பிறவிகள் ஏழு கடத்தல், அட்டமானனை அனுபவித்தல், எண்குண ஏற்றம் பெறுதல், பொருள், காட்சி, ஞானம் ஆகியவற்றால் இறைவனை அனுபவித்தல் ஆகிய எல்லா வகையாலும் அனுபவம் தருபவனாக நடந்து நடந்து இறைவன் நடம் நடிக்கிறான் என்றும் அதனால் எல்லாவற்றாலும் ஆன்மாவின் அகத்தும் புறத்தும் ஆய களிப்புக் கிட்டும் எனவும் வைத்து திருவேகம்பர் ஆனந்தக் களிப்புச் செய்துள்ளார் இவர்.

## முரண்படா இணைப்புக் கொள்கை விளக்கம்

சைவசித்தாந்தத்தின் கொள்கை விளக்கத்திற்குத் தலையாய நூலாகிய சிவஞான போதத்தின் மங்கல வாழ்த்துப் பாடலுக்கு உரை

கூற வந்த முனிவர் அப்பாடல் நூலியல்பு கூறும் முகத்தான் எடுத்துக் கொண்டு சைவ சித்தாந்த முடிவு மலைவின்மை என்பது நூல்வழி பெறப்பட்டதாக விளக்கம் கூறி விரிவாக நிலைநாட்டுவார். வேறுபட்ட கொள்கைகளுக்கெல்லாம் முரண்படாமையின் 'மலைவு' தீர்த்த கொள்கையும் நூலும் உடையது என்ற வகையில் சைவசித்தாந்தத் தன்மையை உலக சமூகத்திற்கு எடுத்துக்காட்டினார் முனிவர்.

சிவஞான முனிவர் சித்தாந்த சைவத்தின் கொள்கையாக உலகத் தத்துவ அரங்குக்கு வழங்கும் அளவை இயல் நெறியானது மலைதல் இன்மை, ஒன்றுடன் ஒன்று எதிர்நின்று மோதுதல் என எதுவும் இல்லை. ஒன்றுடன் ஒன்று அடங்கியும் அடக்கியும் இணைந்து நின்றுவிடுதல், மலைதல் இன்மையாக நின்று விடுதல் என்பதே சித்தாந்த சைவத்தின் அளவையியற் கொள்கையாக அமைத்துக் காட்டுகின்றார்.

' சரண்பிறி தில்லை நீயே தஞ்சமென் றடைந்தோர் தம்மை
முரண்படா வுண்மைகாட்டி முத்திதந் தளிக்க வல்லோன்
அரண்பயில் குளத்தூர் மன்னு மண்ணலே யன்றி நீர்சூழ்
திரண்டசீ ருலகந் தன்னிற் றேரினும் யாரு ளாரே'

என்ற, அந்தாதிப் பாடலில் எடுத்துக்காட்டியுள்ளார் முனிவர்.

சென்று சேரக்கூடிய பொருள் அடிப்படையிலும் விளங்கிக் கொள்ளக்கூடிய மையல் இல்லாத உண்மை அடிப்படையிலும் அமைந்தகொள்கை சைவ சித்தாந்தக் கொள்கை என்பதைத் தம் படைப்பிலக்கியத்தாலும் தெளிவுபடுத்தியுள்ளார் முனிவர். மேலும், திருவேகம்பர் அந்தாதியில் சிவபெருமானுடைய கொள்கையை மலைவுதீர்த்தருளும் கொள்கை என்பதை விளக்கப்படுத்தியுள்ளார்.

வேறுபட்ட கொள்கையாளர்களுக்காக விளங்க நின்ற அனுபவம் மலைவின்மை என்பது வேறுபட்ட கொள்கையாளர்களைச் சுட்டும்போது நமக்கு 'கேள்ஆம் புறன்' என்றவாறு சுட்டும், சிவஞான போதம்.

வேறுபட்ட கொள்கையாளர்களைக் கேளாகக்கூடிய நிலையினராக முதற்கண் அவர்களை விளித்துக்கொண்டு அவர்களுடைய தன்மை புறம்போகிய நிலையில் இருக்கிறது என்பதைச் சுட்டி,

' கேளாம் புறன்'

என வரும், சிவஞானபோத அவையடக்கப் பாடலுக்கு விரிவான விளக்கம் அமைத்தார் சிவஞான முனிவர். அதில் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நால்வகை நிலைகளில், புறம் நின்றாரை வகைப்படுத்திக் 'கேளாகக் கூடியவர்கள் என்று மாபாடியத்தில் விளக்கினார் முனிவர்.

'..... ..... குடுமிப் பணியுலகம்
இதுவு மாலந் தனக்கிடமா
யிருக்குங் கொல்லோ மென்றமுக்கா
றெய்தித் தன்கீழ்ப் படத்தாழ்த்து
மியல்பை யறிந்தா லெனக்கரைக்கட்
பொதுளி யுறவு கொண்ட'

என்ற பாடல் வரிகளில் 'பொதுளி உறவு' கொண்டவன் என்று இறைவனைக் குறித்து அவன் அடிப்படையில் தாழ்ந்த இயல்புடையவர்களையும் 'பொதுளி' உறவால் இணைப்பவன் என்றவாறு சித்தாந்தக் கொள்கைக் குறிப்பை, மலைவின்மையைத் தெரிவிக்கிறார் என்ற இருவகையாலும் சமூகத்தின் பலதிறம் நோக்கி சமூகப் பொதுமையில் உயர்நிலைக் குறிக்கோளைக் காட்டிய நெறியாக மலர்ந்தமையை மாபாடிய வழி நின்று தம் படைப்பிலக்கியத்தாலும், தெளிவு பெற நிறுத்தினார் சிவஞான முனிவர் என்பதை அறிய முடிந்தது.



# 4. முனிவர் வாக்கில் சைவ சமய சாதனங்கள்

மெய்ப்பொருளியலை முப்பொருள்கள் அடிப்படையில் நிலைநிறுத்தியது சைவ சித்தாந்தம். பதி, பசு, பாசம் என இயல்பால் மூவகைப்படுத்தப்பட்ட உயிர்கள் இறை, உயிர், ஆணவம், கன்மம், மாயை என விரித்துக் காட்டப்பட்டன.

அப்பொருள்களை நிலைநாட்டி அவற்றின் இலக்கணங்களைச் சைவ சித்தாந்தத்திற்கு முதல் நூலாகிய சிவஞான போதத்தில் முதல் ஆறு சூத்திரங்கள் விளக்கும். அதனைப் பிரமாணவியல், இலக்கணவியல் என்ற இரண்டு இயல்களால் முன் ஆறு சூத்திரங்களில் மெய்கண்டார் விளக்குகிறார் என வகுத்துரைத்தவர் முனிவர். மேலும், பொதுவியல்பு என்பதாகப் பொருள்களின் இயல்பை அவற்றால் காட்டப்பட்டது எனவும் சிவஞான முனிவர் சிவப்பிரகாசம் செய்த உமாபதிசிவத்தின் பொது உண்மைக் கருத்தடிப்படையில் பிரித்துரைத்தார். உண்மை அதிகாரம் எனப் பின் ஆறு சூத்திரங்களில் சிவஞான போதம் அமைந்தது எனக்கூறி அவை, சாதனம், சாத்தியம் ஆகியவற்றைக் கூறுவன என்று பகுத்துரைத்தார் சிவஞானமுனிவர்.

சாத்திரக் கருத்துக்களை விரித்துரைப்பதற்குச் சிவஞான போதத்தைப் பொது உண்மை அடிப்படையில் பகுத்துரைத்துள்ளார் சிவஞானமுனிவர்.

உண்மைநிலையானது சாதனமுகத்தானும் பயன்முகத்தானும் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென நான்கு வகையான் உணரப்படும். சிறப்பியல்பானது அருளாளர்கள் (வழியளவை) வழி அனுபவத்தாலும் அனுபூதியாலும் தெளியப்படும் என்பதும் சிவஞான முனிவர் கருத்து. பயன் பெறுவதற்கு அடிப்படையாக அமைந்த செயல்களைக் கூறும் அதிகாரம் சாதனவியல் என்று பின்வருமாறு விளக்குவார் முனிவர்.

'மேற்பொதுவியல்பாற் பெறப்பட்ட முப்பொருள்களினுள்ளும் விள்ளற்பாலதனை விண்டு அதனான் வருந் துன்பத்தினீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனான் வரும் இன்பத்தை உறுதலுமாகிய் பயன்பெறுதற் கேதுவாகிய சாதனஞ் செய்யுமா றுணர்த்துதலின், சாதனவியல் என்னும் பெயர்த்து' என்ற சிவஞான போதப் பேருரையானது உண்மை அதிகாரத்தில் சாதனத்தைக் காரணமுகத்தான் காட்டியது. ஏழு, எட்டு, ஒன்பது ஆகிய சிவஞானபோத நூற்பாக்கள் சாதனங்களை விவரிப்பதாக அமைந்தவை.

## பொருள்தன்மை உணர்ந்து நிற்றல்

பொருள்களுடைய உண்மையை அளவையாலும் இலக்கணத்தாலும் தெரிந்துகொண்டாலும் அவைகளின் அனுபவ உண்மையை உறுதி செய்து அவ்வப்பொருளோடு தொடர்பு கொள்ள வேண்டிய முறைஅறிந்து பயிற்சியில் நிற்றலை அடிப்படையாகக் கொண்ட சாதன நிலையினதாகப் பொருள் தன்மை உணர்ந்து நிற்றல் வேண்டும் என்ற உண்மைநிலை நிறுத்தப்பட்டுள்ளது.

சத்துப்பொருள் தானே ஒளியுடைய பொருளாக விளங்குவது. அசத்துப் பொருளானது அறிவில்லாதது. அது சத்துப் பொருளையும் அறியாது. சத்துப் பொருளோடு இணைந்து நின்று உயிரானது சத்துப் பொருளை அறியும் இயல்புடையது. அசத்துப் பொருளோடு இணைந்து உயிரானது அனுபவப்பட்டாலும் குறை அனுபவத்தையே பெறுகிறது.

அசத்து, சத்து என நின்ற உலகப் பொருள்கள், இறைவன் ஆகிய பொருளுக்கு வேறாக அவற்றை அனுபவித்து நிற்கும் உயிரானது தனிப்பொருள் எனச் சாதனத்திற்கு அடிப்படையாகப் பொருள்களைத் தகுதி கண்டு பிரித்துப் பார்த்தல் வேண்டும். அவ்வாறு பிரிந்து நின்று ஒளியுடைய பொருளாகிய சத்துப் பொருளோடு சார்தல் வேண்டும் என்ற அடிப்படையில் சாதனத்திற்கு அடிப்படையாகச் சத்து, அசத்து, சதசத்து என மூவேறு பெரருள்களைப் பகுத்துணரும் நிலையில் ஏழாம் சூத்திரத்தை சிவஞானபோதத்தில் காணலாம்.

சிவஞான முனிவர் பொருளை மூவகையாகக் காணுதலை குரு காட்டக் காணுதல் என்பதாகப் பஞ்சாக்கர தேசிகர் மாலையில் கூறுகின்றார்.

அப்பாடலில் இருவினை, மும்மலம், சிவம், உயிருண்மை என்பனவற்றைக் குருபரன் காட்டுவதாகக் கூறினார். அதில் மும்மலத்தின் வேறாக இருவினை என்பதைச் சுட்டுகின்றார். அது சாதனத்தில் நின்ற காலத்து நன்மை, தீமை இணைப்பை முதற்கண் கூறிப் பின்னர்ப் பாசம், பதி, பசு ஆகியவற்றை உணர்த்துகிறார்.

சாதனத்திற்கு அடிப்படையாகப் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களைத் தகுதி அடிப்படையில் உணர்ந்தாலும் அடிப்படையில் துன்பத்தின் நீங்குதல், இன்பத்தை உறுதல் ஆகிய இரண்டிற்கு நீக்குதல், கொள்ளுதல் ஆகிய செயல்களின் மூலம் சாதனவியலை மாபாடியத்தில் விளக்கிய முனிவரின் குறிப்பு பஞ்சாக்கர தேசிகர்மாலை என்ற நூலில் வெளிப்படையாகத் தெரிகிறது. எனவேதான், அம்முறையில்தான் 'இருவினைதாம்' என்று முதலில் குருநாதன் சுட்டியதாகக் கூறிப் பின்னர் மும்மலம், சிவம், உயிர் உண்மை இது என்று காட்டினார் என்றார். சாதனத்திற்குப் பொருள் தன்மை தெளிதலாகிய அடிப்படையானது, நீக்குதலும் ஏற்றுக் கொள்ளுவதுமாகிய இருவினைச் செய்கைகளால் உறுதிப்படுவது என்பதை மாபாடியத்திலும் பஞ்சாக்கர தேசிகர்மாலையிலும் வலியுறுத்தியுள்ளார் சிவஞான முனிவர்.

## அரன் கழல் செலும் நன்னெறி

சாதன இயலின் இரண்டாம் பகுதியாகிய ஞானத்தினை உணரும் முறைமையைக் கூறும் சிவஞான போத எட்டாம் சூத்திரம்,

' ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த விட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே'

என்பதாகும்.

அந்நூற்பாவைப் பின்வருமாறு விளக்குகிறார் முனிவர்.

''மேலைச் சூத்திரத்தாற் சாதித்தற்குரிய அதிகாரந் தனக்குண்டென்றறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப்படும் பயன் இத என்பதூஉம், அதற்குச் சிறந்த சாதனமாவது இது என்பதூஉம், அது வருவாயும் உணர்த்துமுகத்தானே அவ்வான் மாவின் ஞானம் மேல் இருதிறனென்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பா லுளதாய் அசத்தினை அறிந்து நின்றவாறும், சத்தான் விளங்கிச் சத்தின்பாலுளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறும் தரிசிக்கும் முறைமையினை உணர்த்துதல் சாதனவியலின் இரண்டாம் பாதமாகிய இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்க''

என்பது அவரது விளக்கம். தகுதி அறிந்த ஆன்மாச் சாதிப்பதற்கு உரியது என்பதை உணர்ந்தது முன்னறியப்பெற்ற முதற்சாதனம் எனவும் அதனால் சாதிக்கப் போகிற பயனுக்கு அடிப்படையாக அமைந்த சிறந்த சாதனம் இன்னது எனவும் இந்நூற்பா விளக்குவதாக அமைந்தது.

ஆன்மாவினுடைய ஞானமானது அசத்தால் ஞானம் பெறுவதாயும் சத்தால் ஞானம் பெறுவதாயும் அமைந்து சத்தினைத் தரிசிக்கிற முறைமையில் சாதனம் இந்நூற்பாவில் கூறப்படுகிறது என்றார்.

சிவஞான முனிவர் மேலே காட்டப்பெற்ற குருபரன் காட்டிய அனுபவமாகிய பஞ்சாக்கர தேசிகர்மாலைப் பாடலின் அனுபவம் குருபரன் காட்டியதாகக் கூறியுள்ளார். அதில் குருபரனால் செயல்தன்மை அறிந்து முப்பொருள்களைக் கண்ட முறைமை கூறப்பெற்றது. இங்குக் குருபரன் தரிசனப்படுதற்கான அடிப்படை செயல்முறைமைகளில் ஒழுங்குபடுதல் என்ற அடிப்படையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நன்னெறிகள் சிவஞான முனிவரால் பாடியத்துள் விரித்துக் காட்டப்பட்டுள்ளன.

அவற்றை விளக்க வந்த சிவஞான முனிவர் சிவபுண்ணியத்தின் செயல்களாகச் சிவதீக்கை பெற்றும் சிவதீக்கை இன்றியும் செய்வதாகச் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கில் விளக்கப்படும். அவையே, சரியையில் சரியை, முதலாக ஞானத்தில் ஞானம் ஈறாகப் பதினாறாக விரிக்கப்படும். அவற்றைச் செய்யுங் காலத்துப் பக்தி காரணமாக உண்மையாகச் செய்வது, புகழ் முதலிய உலகப் பயன் நோக்கிச் செய்வது என இருவகை எண்ணங்கள் அமைந்தாலும் பொருள் தகுதி அடிப்படையில் செயல்படுவதற்கான நீக்க வேண்டியன கொள்ள வேண்டியனவாகிய செயல்களில் சத்து நோக்கிக் கொள்ள வேண்டியனவே சாதனத்திற்கு உண்மையானவை. எனவே, பதிப்பொருளை நோக்கிய சரியா கிரியா யோக ஞானமே சாதனத்தில் அனுபூதிப் பயன் நோக்கி விளங்கிக்கொள்ள வேண்டியன.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய செயல்களால் பெறுகிற பதங்களையும் சாலோகம், சாமீபம், சாருபம், சாயுச்சியம் என விளக்குவார். ஞானத்தின் பயனாக அவை கூறப்பெற்றாலும் சத்திநிபாதமும் மலபரிபாகமும் இருவினையொப்பும் பேரின்பப் பயனை அனுபவிப்பதற்கு அடிப்படைக் கூறுகளாக விளக்கப்படும்.

சரியை முதலியவற்றில் ஞானங்கள் இறுதியில் குருமூலமே வாய்க்கும் எனவும் முனிவர் விளக்குவார்.

சாதனமாகச் சரியை, கிரியை, யோக, ஞானங்களை உயிர்கள் நன்னெறியாகக் கடைப்பிடித்தலும் அவைகளின் முடிவில் குருமுதல்வனால் ஞானத்தைப் பெறுதலும் பயன் அனுபவத்திற்கு அடிப்படையான சிறந்த சாதனமாக எடுத்துக்காட்டப் பெற்றன.

சிவன் அனுபவம் ஆதற்கு மெய்ம்மைச் செயல்கள் என அவற்றைக் காட்டிப் பின்வரும் கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி பாடலைப் பாடுகிறார் முனிவர்.

'சைவத்தில் வந்து சரியாதி மூன்று தடையின்றி முற்று பருவ
மைவைத்த தீய மலபாக நோக்கி வினையொப் புறுத்தி வழியான்
மெய்வைத்த ஞானகுருவாகி வந்து கதியுய்க்க வல்ல விமலன்
செய்தற் றுடுத்த கலைசைக்குண் மேவு சிவனாக மெய்ம்மை யிதுவே'

என்ற பாடல், சரியை, கிரியை, யோகம், ஞானங்களின் அடிப்படையில் அவை முற்றியபின் மலபாகத்தை நோக்கி வினை ஒப்பு செய்து தான் ஞானகுருவாக வந்து கதி சேர்ப்பான் என்று கூறுகின்றார். இவற்றை மெய்ம்மைச் செயல்கள் என்றும் கூறுகின்றார்.

### ஞானக்கண்ணில் பொருந்தி அறிதல்

நீக்க வேண்டியன நீக்கித் துன்பத்திலிருந்து நீங்குதல், கொள்ள வேண்டியன கொண்டு இன்பத்தைப் பெறுதல் எனப்படும் வீடுபேற்றை அடைவதற்குச் சொல்லப்படும் சாதனக் கூறுகளில் நீக்க வேண்டிய பகைப்பொருள் இது எனவும் கொள்ள வேண்டிய நட்புப்பொருள் இது எனவும் குருவின் மூலமாக ஞானம் பெறுதல் முன்னர் அரன்கழல் செலும் நெறியாகும்.

குருமூலமாக அறியும் ஞானமானது பாசப்பற்று அற்றால் நிகழும் பாச ஞானத்தால் எய்த முடியாது என்பதை உணர்ந்து ஆன்மா சுத்தி பெறுவதற்குச் சாதிக்கும் உபாயமாகக் கூறப்படும் சாதனக்கூறுகள் ஒன்பதாம் சூத்திரத்தில் கூறப்பட்டது என்பார் முனிவர்.

பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறியப்படாத இறைவனை இறைவனது ஞானக்கண்ணால் அறிதலே முறைமையாகக் கூறப்படுகிறது. அவ்வாறு அறிந்து அனுபவித்தற்குத் திருவைந்தெழுத்து கணிக்கப்படுவதும் சாதனை முறைமையாக உணர்த்தப்பட்டுள்ளது.

' பரங்கிரி ஆவிகள் சூழ்முல்லை போல் பரிந்து என் உளம் ஆம்
அரங்கு இரியா விடையார் அருள் உம்மை அறிவின் நின்றுஅ
(அ)வர் அங்கிரி ஆவியின் உள்ளே அழுத்தும் வகை அறியேன்
சிரம் கிரியா விதி ஆற்றும் செல்லேன் உய்யும் செய்கை என்னே'

என்ற வடதிருமுல்லைவாயிலந்தாதிப் பாடலானது ஞானக்கண்ணில் பொருந்த வேண்டிய தன்மையைச் சாதனத்தின் இன்றியமையாக் கூறாக எடுத்துக்காட்டுகிறது. அது கிரியா நெறியின் அடிப்படையால் அமையும் அரும்பயன் சாதனமாக அமைந்தது என்னும் குறிப்பும் முனிவரால் உணர்த்தப்பட்டுள்ளது.

என்னுடைய உள்ளத்தில் நீங்காமல் பொருந்தியிருக்கிற இறைவனை உணர்தல், அவன் அருள் உருவமாக வந்த குருமூர்த்த உபதேசத்தை உணர்தல், அதன்வழி நின்று ஞானம் பெறுதல் ஆகிய அடிப்படைகளில் ஆவியாகிய ஆன்மாவின் உள்ளே இறைவனுடைய திருவடியை நிறுத்துதலாகிய இறைவன் ஞானக்கண்ணில் பொருந்தும் தன்மையை அப்பாடலில் விளக்குகிறார் முனிவர். அவ்வாறு அழுத்தும் ஞானக்கண்ணில் பொருந்துவதாகிய நிலை தெரியப்படாவிட்டாலும் கிரியா விதியையாவது செய்ய வேண்டும் என்று கூறுவதன் மூலம் கிரியா விதியானது சாதன மார்க்கத்தின் அடிப்படையில் அமைந்து ஞானக்கண்ணில் பொருந்துதற்கு குருஞானம் வாய்த்தற்கு அடிப்படையாக அமைந்தது எனக் குறித்துக் காட்டினார்.

ஞானக்கண்ணில்பொருந்திய அனுபவம் வாய்த்து ஐந்தெழுத்து அனுபவத்தால் சைவசித்தாந்த நெறி முழுமையும் அனுபவப்படும் என்ற அடிப்படையில் மேற்காட்டிய பாடலுக்கு அடுத்த பாடலையே ஐந்தெழுத்து விளக்கப் பாடலாக அமைத்துள்ளார்.

### சமயமும் சாதனமும்

பொருளியல்புகளை அறிந்து தலைமைப் பொருளைச் சார்ந்து அதன் மூலமான பேரின்பத்தை அனுபவிக்கச் செய்தற்குப் பயிற்சிக் களமாக அமைந்தது சமய நிறுவனமாகும். தத்துவத்தால் சைவமானது சைவசித்தாந்தம் எனவும் சமயத்தால் சைவ சமயம் எனவும் சுட்டப்பெறும். மக்கள் வாழ்வியலைக் குறிக்கோள் அமைப்பால் உயர்நிலைப் பொருள் நோக்கிச் செயல்படுத்துவதாக அமைந்ததே சமயம் என்பதாகும்.

' உத்திப் பணிபூண் டருளுந் தமனைப்
பத்திக் கெளிவந் தபரம் பொருளை

முத்திக் கமலா கரமுன் னவனை
எத்திக் கினுமேத் தியிறைஞ் சுதுமே'

என்ற பாடலில், சிவஞான முனிவர் இறைவனைப் பத்திக்கு எளிவந்த பரம்பொருள் என்று கூறுகின்றார். பக்தி நெறியானது செயல்களை ஒழுங்குமுறைப்படுத்திப் படிப்படியாக முன்னேறும் சமய வாழ்க்கையைச் சுட்டுவது. அதன்மூலமாக முத்திநெறி கிட்டும் என்பது மாணிக்கவாசகப் பெருமானை அடியொற்றிச் சிவஞான முனிவர் விளக்கும் கருத்தாகக் குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதியில் அமைந்துள்ள,

' இறையவனே குளத்தூரி லிருந்தருளும் பெம்மானே
முறைபிறழா ஆனந்த முத்திநெறி தந்தருளி
நிறைவுடைய மெய்யடியார் நீடுபெருந் திருக்கூட்டத்
துறையு ளெனைச் சேர்த்தாயை யென்சொல்லித் துதிப்பேனே'

என்ற பாடலில், முறை பிறழாத வகையில் செயலையும் அது ஆனந்தத்தை நோக்கிய முத்தி நெறிக்கு உகந்ததாக அமைந்ததையும் சுட்டுகின்றார். மேலும், அதனை அனுபவித்தற்கு நிறை அனுபவமாக உடைய மெய்யடியவர் கூட்டத்தில் சேர்ந்து அனுபவித்தலையும் விளக்குகிறார்.

மாணிக்கவாசகப் பெருமான்,

' முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பததிநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்'

என்று கூறும் அடிப்படையை முத்தி நெறியறியாத மூர்க்கரோடு பயில்தலைவிட்டு தொண்டரோடு பயில்தலை ஏற்று அவர்வழிப் பத்தி நெறியைச் சமய வாழ்வியலாக அறிவிப்பதைக் கொள்ளலாம். அவ்வடிப்படையினை முனிவர் சமய சாதனமாக அடியாருக்குப் பக்திநெறியாலும் மெய்யடியார் உள்சேர்தலாலும் அமைத்துக்காட்டினார்.

முறை செயல் என்ற வகையில் பக்தியை விளக்கி அதனால் சரியா கிரியா யோக ஞானங்களைக் காட்டித் தொண்டர்வழிச் செயல் மேற்கொள்ளலை இணைத்துச் சமய சாதனம் விளக்குமாற்றை உணரலாம்.

### சரியை நெறி

தூல வடிவம், சூக்கும வடிவம், அதிசூக்கும வடிவம் ஆகிய வடிவங்களால் உயிர்கள் உணர்ந்து உய்தற்பொருட்டுப்

படிமுறையில் இறைவன் தன்னைத் தோற்றுவித்துக்கொண் டுள்ளான். அவனை உயிர்கள் தம் பக்குவ முறைக்கேற்ப வழிபடும் நிலையில் உடம்பை முதன்மையாகக் கொண்டு தூல வடிவத் திருமேனியை நோக்கிச் செய்யும் செயல்கள் சரியை எனப்படும்.

## கிரியை நெறி

சரியைத் தொழிலின் பக்குவத்தால் சூக்கும வடிவத் திருமேனியே பொருள் என்று அகத்தொழிலால் வழிபடுவது கிரியை நெறியாகும்.

## ஞான நெறி

யோக நெறியின் பக்குவ முதிர்ச்சியால் அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பே இறைவன் என்று உணர்தல் - முன்னுணர்ந்த மூவகை வடிவங்களும் அதனை உணர்தலுக்கான திருமேனிகளே என உணர்தல் - அத்தகைய ஞானங்களால் கேட்டல், தெளிதல், சிந்தித்தல், நிட்டை கூடுதல் முதலிய அறிவுத் தொழிலால் வழிபடுவது ஞான நெறியாகும்.

## வழிபாடு

சாதன அமைப்பில் வழிபாடு என்பது கூறப்பட்டாலும் அது சரியா கிரியா யோக ஞான முறையால் விளக்கப்படுவது பொதுநிலை. அவற்றை விளக்கியே ஆகமங்கள் அமைந்தன என்பதும், சைவ சமயம் ஆகமங்களை ஏற்றுக்கொள்வதற்கான அடிப்படை என்பதுமாகும்.

வழிபாடு என்பது செயல் செய்வதற்கான வழிமுறையில் உயர்ந்ததைப் போற்றி வணங்குதல் என்பதாக அமைந்தாலும் அதற்கு உரிய கொள்கை வரையறையும் இணைந்த நிலை தேவை. அதன்மூலமே அப்பாலைப் பொருளாகிய பரம்பொருளை அனுபவித்தற்குச் செயல்முறைகள் வழிபாடாக ஆற்றப்படுதல் வேண்டும் என்பர்.

"வழிபாடு என்பது ஒரு தெய்வத்தையோ மனிதனையோ, பொருளையோ தன்னைவிட உயர்வுடையதாகப் போற்றி வணங்கும் முறை.

வழிபாடு என்பது மேலே குறிப்பிடப்பெற்ற ஒன்றன் கொள்கைகளை வரையறைப்படுத்திக் கோவையாக அமைத்துக்கொண்டு, அதனைப் போற்றுவது என்ற உரையானது கொள்கைத் தெளிவின் அடிப்படையில் வழிபாடாகிய செயல்முறை நிகழ்த்தப் பெறுதல் வேண்டும் என்று குறித்தது. மேலும், வழிபாடானது ஒரே பொருளை நோக்கியே - உயர்ந்த

பரம்பொருளை நோக்கியே - அடையும் அமைப்பில் செயல்முறையாக ஆக்கப் பெற வேண்டும் என்பதை, 'ஆன்மாவின் வழிப்பாட்டுக்கும்' வழிபாட்டுக்கும் உரிய பொருள் பரம ஆன்மா எனப்பெறும் கடவுளே. உருவமற்ற, எல்லையற்ற, பரம ஆன்மப் பொருளை அடைய வேண்டும் என்பதே வழிப்படுதல் முறை ஆன்மாவுக்கு. பரமஆன்மாவை உருவம், பெயர் முதலியவைகளுக்கு உட்படுத்தித்தான் கொள்கை விளக்கம் செய்து வழிப்படுதல் வேண்டும். வழிப்படுதல் என்ற கொள்கை உருவான பின்னர் வழிபடுதல் அமைய வேண்டும். அதுவே முறை'' என்று விளக்குகிறார் இரத்தினசபாபதி அவர்கள்.

சிவஞான முனிவர் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகியவற்றில் ஞானத்தால் இறுதிக்கண் அறியப்படும் அகண்டாகார பரிபூரணப் பொருள் சரியையில் உருவாயும், கிரியையில் அருஉருவாகவும் யோகத்தில் அருவாகவும் முறையே எண்ணப்படும்படி முறை நிலையில் குறிப்பிட்டார்.

சிவஞான முனிவர் குறிப்பிட்ட வழிபாட்டு விளக்கமானது பரம்பொருளை நோக்கிய கொள்கையாம். வழிபாட்டு அமைப்பில் குணம் குறிகளோடு வழிபடுதல் என்பதாக மாபாடியத்துள் விளக்கப்பட்டது.

அதனைக் கொள்கைத் தெளிவு என்பதாகக் கொண்டு வழிபடுவதோடு மெய்யன்பினால் வழிபடுதல் வேண்டும் என்ற தலையாய கருத்தை அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில்,

' தெளிக்கும்மெய் யன்பினால் வழிபட்ட நாளுனது
செல்லல்நோய் தவிர்த்தளித்த'

என்று குறிப்பிட்டார். மெய்யன்பினால் மட்டுமே தனிப்பட வழிபடுதலைக் குறிப்பிடாமல் தெளிவாக வழிபடுதல் மட்டுமே தனிப்படக் குறிப்பிடாமல், கொள்கைத் தெளிவுடன் மெய்யன்பால் வழிபடுதலைக் குறிப்பிட்டு அதன்மூலமே வாழ்நாள் செல்லாத இறப்புநோய் தவிர்க்கப்படும் என்று திடம் பெறத் தெரிவிக்கின்றார்.

### இனம் நாட்டி வாழ்த்தல்

திருமேனிகளின் அடிப்படையிலான வழிபாடு சரியா கிரியா யோக ஞானம் என்பனவாக அமைந்தாலும் பல்வேறு திருமேனிகளினுடைய அமைப்பில் மூலப் பரம்பொருளைக் காணுதலும் வேறுபட்ட திருமேனியாக வந்ததன் தன்மையை உணர்ந்து வழிபடுதலும் சாதனத்திற்குப் பரம்பொருளை நோக்கியே

வழிபாட்டில் மிகத் தேவையான அடிப்படையாக முனிவர் எடுத்துரைக்கிறார்.

மனம் வாக்கிற்கு எட்டாத சிற்சக்திப் பரம்பொருளை, பல்வேறு திருமேனி கொண்டு வந்தபோதும் ‘இனம்நாட்டி வாழ்த்திடுவர் பெரியோர்கள்’ என்று இனம் நாட்டி வாழ்த்த வேண்டிய வழிபாட்டு முறையை அறிவுறுத்துகிறார். அவ்வாறே, விநாயகர் பிள்ளைத்தமிழில், அகள வடிவான பரமானந்தப் பொருள் மெய்யடியவர்களை ஆள்வதற்காகப் பல்வேறு அருள்உரு எடுக்கிறது என்றும் குறிக்கிறார்.

பல்வேறு திருமேனிகளின் நோக்கத்தில் மூலப்பரம்பொருளின் ஆற்றல் முழுவதையும் காணுதல், தனிப்பட்ட திருமேனியின் தனித்துவத்தை உணர்தல் ஆகிய இரண்டாலும் சாதனை முறையான வழிபாடு அமைதல் வேண்டும் என்பதைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் விநாயகர் காப்புச் செய்யுளில் தெரிவிக்கின்றார். வழிபாட்டு முறைச் செயல்களாகப் பலவற்றைச் சுட்டிச் செல்வதைப் பின்னர்க் காணலாம்.

### ஒழுக்கச் சாதனம்

சாதனம் என்பது செயல்முறைக் கருவி என்பதாகப் பொதுவாகக் கொள்ளப்பட்டாலும் சமய அடிப்படையில் குறிக்கோளை நோக்கிய சாதனம் என்ற வகையில் ஒழுக்கமே பெரிதும் இன்றியமையா அடிப்படை ஆகிறது. சிவஞான சுவாமிகள் காஞ்சிப்புராணத்தை அருளிச் செய்வதற்கும், கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம், திருவேகம்பர் அந்தாதி, திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு ஆகியவற்றைக் காஞ்சித் தலத்தின் அடிப்படையில் விளக்கவரும் காலத்து அம்மை செய்த முப்பத்திரண்டு அறங்களையே பெரிதும் எடுத்துக்கொண்டு மகிழ்ந்து விளக்குகிறார்.

காஞ்சிப்புராணத்தில் ஒழுக்கப் படலம் என்பதாக ஒரு படலத்தை அமைத்து, அறுபத்தெட்டுப் பாடல்களில் ஒழுக்க முறைகளை விவரித்துள்ளார். காலையில் எழுந்து செய்ய வேண்டிய கடமைகள் தொடங்கி, பிறமகளிரை விரும்பாமை, தத்தம் கடமை செய்தல் உணவு உண்ணல் முதலானவற்றை விளக்கிப் பெருமானுக்குப் பூசனை செய்தல், இறைவனைக் குறித்த நூல்களைப் படித்தல் முதலானவற்றை விளக்கி விரிவாக ஒழுக்கப் படலத்தை அமைத்துள்ளார். திருநீறு, உருத்திராக்கம் முதலியன அணிதலையும் விளக்குகிறார்.

பரம்பொருளான முக்கட் பரம்பொருளே பரம்பொருள் என்று அவனை நோக்கியே வழிபாடு முதலான பணிகள் ஆற்ற வேண்டும் என்று கூறுகின்றார். மற்றைத் தெய்வங்கள் சேராமை வலியுறுத்துகின்றார்.

'பொறுமை கல்விமெய் தூய்மைஐம் பொறிதெறல் அடக்கம்
உறுதி நாண்வெகு ளாமைகள் ளாமைஒண் பூதி
மறுவில் சாதனஞ் சிவார்ச்சனை தியானம்வண் பதினான்கு
அறமும் நல்லறம் புரிபவர்க் கிலக்கண மாமால்'

என்ற பாடலில் பதினான்கு அறங்களை அறத்தின் இலக்கணங்களாகக் கூறி அவற்றை ஒழுக்க சாதனமாக விரிவுபடுத்திக் கூறுகிறார்.

பிற தெய்வம் சேராமையைக் காஞ்சிப்புராணத்துள்,

'மற்றைத் தெய்வங்கள் எவற்றையும் விடுத்துமா நீழற்
கற்றைச் செஞ்சடைப் பிரான்சரண் சரணெனுங் கருத்தே
பற்றிச் சாவினும் வாழ்வினுங் களிப்பிகல் படாமை
எற்றைப் போதும்ஒத் தொழுகலே துறந்தவர்க் கியல்பாம்'

என்று, வலியுறுத்தும் முனிவர் சிறுதெய்வம் சேர வேண்டாம் என்று,

'..... மாதே நீசர் வல்மொழியால் சிறுதெய்வம் வந்தித்து நின்மாது
ஏவன் நீ சதுர் வேதங்கள்'

என்று சிறுதெய்வ வழிபாட்டால் அலையாதே என்றும் சிறுதெய்வ வழிபாட்டைச் செய்பவர் நீசர் என்றும் கூறி சிவபெருமானாகிய பரம்பொருள் அடிப்படையிலேயே ஒழுக்கச் செயல்களை வலியுறுத்துகின்றார்.

### முதுமொழிச் சாதனம்

அறம், பொருள், இன்ப அடிப்படையில் ஒழுக்கவியலை நிறைவு பெற நிறுத்திய நூல் திருக்குறள் என்பதை ஏற்றுக்கொண்டு, அதனடிப்படையில் நூற்றுமுப்பத்துமூன்று பாடல்களில் சைவ சமய நாயன்மார்களுடைய வாழ்வியற் செயல்களையும் பிற புராணச் செய்திகளையும் இணைத்துச் சைவ சித்தாந்த வாழ்வியலை முதுமொழிச் சாதனத்தால் கைக்கொள்ளுமாறு 'சோமேசர் முதுமொழி வெண்பா' என்ற நூலை அமைத்தார் முனிவர். அதனடிப்படையில் அறக்கூறு, பொருட்கூறு, இன்பக்கூறு ஆகியவற்றைக் குறிக்கோள் அடிப்படையில் வாழ்வியல் நெறிக்குரிய சாதனங்களாகச் சிவஞான முனிவர் கருத்துக்களை உணரமுடிகிறது.

முதுமொழியாக முன்னோர் பொருள் விளக்கம் காணுதல் அதனைக் குறிக்கோள் அடிப்படையில் செயல்படுத்தல் என்றவாறு முதுமொழிச் சாதனத்தை விளக்கிய முனிவர் நாயன்மார்களுடைய பதிகங்களைப் பாடுவதை அப்படியே ஏற்றுக் கொள்கிறார். இதன் மூலம் முதுமொழி முழுமையுமே வாழ்வியலின் குறிக்கோள் உயர்வுக்குச் சாதனமாகச் சிவஞான முனிவரால் எடுத்துக்காட்டப் பெறுகிறது.

' ..... ..... மூவர் திருத்தமிழின்
சொல்லைப் பதிக மலத்துடையால் தன்துணை மலர்த்தாள்
ஒல்லை பதிக மனத்தே எமன் வரும்உம் பொழுதே'

என வரும் வடதிருமுல்லைவாயிலந்தாதிப் பாடலில் எந்தக் காலத்தில் எமன் வந்தாலும் அவன் வாராமல் இருக்கும் வண்ணம் செய்வது தேவாரத் திருப்பதிகங்கள் என்று கூறி, முதுமொழியாம் பதிக வழிபாட்டைச் சாதனமாக எடுத்துக்காட்டுகிறார்.

பூமியில் இருக்கிற பொருள்களை மதித்து அழிந்து போகாமல்,

' ..... பதிகம்தனை ஐய கொல்லோ புகழ்ஏழை நெஞ்சே'

என்று புகழ் அடைதற்குரிய சாதனமாகப் பதிகத்தைக் காட்டியுள்ளார் முனிவர்.

' பூவான் மலிமணநீர்ப் பொய்கைக் கரையினிற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு - நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் றண்டை
வெளித்தண் கமலமே வீடு'

என்ற பாடலில் சிவப்பிரகாச சுவாமிகள் திருஞான சம்பந்தருடைய திருமொழிகள் யாவும் இறைவன் தந்த அனுபவத்தை நாவால் குழைத்து மக்கள் செவிக்கு அமுதாக வார்க்கப்பட்டவை என்று கூறுகின்றார்.

திருஞானசம்பந்தர்க்குச் சிவபெருமான் அனுபவத்தையே தந்ததை, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில்,

' தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித்
தீட்டா நிலைமைத் தெனவுலகிற்
றெறிக்குங் காழித் திருஞானச்
செம்மற் குழவிக் கருண்ஞானம்
பெய்து'

என்று கூறி, திருஞானசம்பந்தருடைய பாடல் தெய்வச் சுருதி என்றும் அம்முதுமொழியே தெய்வமொழி என்றும் சான்று பகர்ந்தார்.

## மாலற நேயம் மலிந்தவர் வேடம்

பயனியலில் இறுதி நூற்பாவாகச் சிவஞான போதத்தில் அமைந்த பன்னிரண்டாம் சூத்திரம் மலம் கழிந்த அன்பரைக் குறித்த வழிபாடு செம்மலர் நோன்தாள் சேர ஒட்டும் என்றும், மலங்கழிக்கும் என்றும் கூறுகிறது. பயனை அனுபவித்தவர்கள் மூலமாகச் சாதனத்தைச் சுட்டுவது பயனை அப்படியே முழுதுமாக அனுபவித்தற்குரிய சாதனம் என்று விளங்கிக்கொள்ளலாம். எனவேதான், இறைவன் அடியவர்களே தத்துவம் என்பதாகச் சுந்தரரால் காட்டப்பட்டும், அடியவர்கள் திருப்பெயரே மந்திரமாக அப்பூதி அடிகளால் திருநாவுக்கரசர் எனும் பெயர் மந்திரமாக நாட்டப் பெற்றதும் சான்றாகும்.

அவ்வகையில் தொண்டர் வழிபாட்டைப் பலவாறு விரித்துக்காட்டும் சிவஞான முனிவர் திருவேகம்பர் அந்தாதியில் இறுதிப் பாடலில் செயல்முறை அடிப்படையில் விவரித்துக் காட்டுகிறார்.

' பணியாது அனந்தம் பரிசு அடியார் எதிர்ப்பட்டிடில் செய்
பணியாது அனந்தன் புகழ நிற்பீர் என்று பாடிப் புத்தி
பணி யாதனம் தந்து உபசரியாது கம்பா அரவப்
பணியா தனம் தஞ்சம் என்று அழிவேன் எப்படி உய்வன்'

என்று எதிர்மறையாக உய்வேன் என்பதை மறுத்து உய்நெறியை விளக்கியுள்ளார்.

தொண்டர்கள் எதிர்ப்பட்டால் அவர்களைப் பலமுறை வணங்குதல், அவர் பணிசெய்தல், அவர்தம்மைப் புகழ்ந்து உபசரித்தல், ஆசனம் தந்து வழிபடுதல் முதலியவற்றையும் கூறி முறையாக அனைத்து உபசாரங்களையும் அடியவர்கட்குத் தொண்டு செய்வதன் மூலம் வாழ்வியல் பற்றுக்கோடு நிலைத்தன்மை வாய்க்கும், அதுவே மெய்ப்பொருள் ஆக்கும் என்று விரிக்கிறார்.

பழவடியார் பத்திக்குக் கலந்திருந்து அருள்பவன் திருவேகம்பநாதன் என்றும், இறைவனை வழிபடும் அத்தொண்டர்களை வழிபடுவதே தொண்டு என்றும் கூறுகின்றார்.

அடியவர்களின் உள்ளே ஊறும் தேனாக இறைவன் இருக்கிறான் எனவும், அடியார் உள்ளத்தைத் திருக்கோயிலாகக் கொண்டு விரும்பி விளையாடுபவன் எனவும், அடியாரிடத்து இறைவன் நிலையை விளக்கித் தொண்டரொடு கூட்டுநிலையை விளக்கி அடியார் வழிபாட்டை வலியுறுத்தினார்.

மெய்யடியவர் தங்கள் பணிக்காகத் தம்மை அளித்துக்கொள்ள வேண்டும் என்றும் கூறுகிறார்.

அடியார் தொண்டு பரவுதலுக்கு அடிப்படையாகத் திருத்தொண்டர் திருநாமக்கோவை அருளிச்செய்த சிவஞான முனிவர் அடியவர் தொண்டினாலேயே, அடியவர் நாம மந்திரத்தாலேயே மெய்யன்பு செய்தால் கைதவம், புல்லறிவு, மையல், கற்பனை ஆகியன தீர்ந்து அத்துவித ஆனந்த அகண்ட பரிபூரண நித்திய வாழ்வு பெறலாம் என்றும் தெரிவித்துள்ளார்.

## முப்போதும் ஏத்தல்

இறைவனைக் காலையும், மாலையும், நண்பகலும் ஆகிய சந்திக்காலங்களில் ஏத்துதலை முப்போதும் ஏத்துதலாகப் பொதுவாகக் கூறுவர். முப்போதும் ஏத்தும் செயல்முறையைப் பின்வரும் இளசைப் பதிற்றுப்பத்தந்தாதிப் பாடலால் முனிவர் விளக்குவார்.

' மகிழ்ச்சிமிகு மன்பினனல் சேர்மெழுகு மான
நெகிழ்ச்சியுற நெக்குருகி நெஞ்சுகரை வெய்தி
முகிழ்த்தமலர் கொண்டுநினை முப்பொழுது மேத்த'

என்ற பாடல், மகிழ்ச்சிமிகும் அன்பினால் வழிபடுதல், நெகிழ்ச்சியுற நெக்குருகுதல், நெஞ்சுகரைவெய்தி நினைத்தல் ஆகிய மூன்றையும் மூன்று வகைச் செயல்களாகக் கூறி அவற்றையே முப்போதும் ஏத்தும் அனுபவமாக விளக்குகிறார்.

நெஞ்சு, உரை, செயல் ஆகிய மூன்றும் நேர்பட நின்று சேவடிக்குத் தொண்டு செய்தல் வேண்டும் என்று மூவகைச் செயல்நிலைகளில் வழிபாட்டை வலியுறுத்துகிறார்.

இறைவன் புகழை ஓம்புதல், மனத்தால் நினைத்தல், பூவால், நீரால் அனுதினமும் போற்றுதல் ஆகியவற்றை வாழ்த்தல், நினைத்தல், செயல்படல் என்ற முன்னிலைச் செயல்களாக வழிபாட்டுக்கு வழிப்படுத்தி அவைகளைச் செயல்படுத்துவதன் மூலமாகப் பிறவி அறும் என்ற கருத்தை,

' சேவார் பெருமான் றிருக்குளத்தூர் சேரப்பெற்றேன் றிருப்புகழை
நாவால் வாழ்த்தக் கைகுவிக்க மனத்தா னினைக்க நறுந்தேனார்
பூவா னீரா லனுதினமும் போற்றப் பெற்றே னாங்கவனும்
ஆவா வெனவந் தாண்டருளப் பெற்றேன் பிறவி யற்றேனே'

என்ற குளத்தூர் பதிற்றுப்பத்தந்தாதிப் பாடலில் விளக்கியுள்ளார்.

### எண்மலர் ஏத்தல்

இறைவனுக்கு அஷ்டபுட்பம் சாத்துதல் என்பதாக உயிர்களின் செயல்தன்மைகள் எட்டினை இறைவன்பால் எடுத்துவைக்கும் தன்மையில் எண்மலர் ஏத்தும் வழிபாடு தூய்மை வேண்டிப்பெறும் அடிப்படையில் சிவஞான முனிவர்,

' வாய்மை யொழுக்கந் தவஞ்சீலம் வணக்கம் பொறுமை யறிவடக்கந்
தூய்மை தவறா மெய்யடியார் தொழும்புக் கிரங்கி'

என்று சுட்டியுள்ளார்.

### சைவ சாதனங்கள்

சைவ சின்னங்கள் என்பதாக ஞான அடிப்படையிலான கூறுகளாக அடையாளம் காட்டி நிற்பன திருநீறு, அக்கமணி முதலியன. நீறுபூசுதலையும் அக்கமணி அணிதலையும் வலியுறுத்துகிறார் முனிவர். இறைவன் வெண்மையாகிய விபூதிப்பிரசாதத்தை உடைய தவள வண்ணன் என்று கூறி இறைவனுடைய அடையாளமாகவே திருநீற்றைக் காட்டி நாமும் அவனை அடையாளப்படுத்திக் கொள்ள நீறுபூசுதல் வேண்டும் என்கிறார்.

ஆசை வேரறுவதற்காக வெண்ணீறு பூசி அக்கமணிமாலை தரித்து அஞ்செழுத்து உச்சரித்து, புனிதராகிய அடியார்களோடு இணங்க வேண்டும் என்று சாதன முறைகளை வகைப்படுத்தி,

' ஆசைவே ரகழ்ந்து வெண்ணீ றஞ்செழுத் தக்கமாலை
பூசியுச் சரித்துப் பூண்ட புனிதரோ டிணங்க லாமால்'

என்று கச்சி ருத்திரேசர் பதிகத்தில் முனிவர் விளக்கியுள்ளார்.

அன்பொடு வழிபடுதலை வலியுறுத்தும் முனிவர் அறிவொடு வழிபடுதலையும் இளசைப் பதிற்றுப்பத்தந்தாதியில் எடுத்துரைத்துள்ளார்.

**சரண்புகும் சாதனம்**

இறைவனிடம் காவாய் என்றும், தேவா என்றும் ஆவா என்றும், தாவா என்றும் சரணம் புகுதலை நால்வகை நிலைகளில் நெறிப்படுத்துகிறார்.

' காவாய் சிவனே சரணங் கலைசைத்
தேவா சிவனே சரணஞ் சிறியேன்
ஆவா சிவனே சரண மருளே
தாவா சிவனே சரணஞ் சரணம்'

எனவரும் கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதிப் பாடலில், 'நால்வகைச் சரணநெறியைக் காக்கும் சிவன்' என்று சரணம் புகுதல் ஒருநிலை. இதில் தலைவன் என்ற வகையில் அவனிடம் சரண்புகுதல் அடிப்படையாக அறியப்பெறும்.

தேவா சிவன் என்று அவனிடம் சரண்புகுதல், 'தெவ்' எனப்படும் இனிமை நிறைவுத் தன்மையில் சரணம் புகுதல் உணரப்படும். மற்றைத் தெய்வங்கள் எல்லாம் சிறுமை இன்பமே தரும் என்றும், குறைவிலா நிறைவும் கோதிலா அமுதுமாகிய நிறைபேறின்பத்தைத் தருபவன் சிவனே என்று உணர்ந்து சரணம் கொள்ளுதலை விளக்கினார்.

ஆவா சிவனே என ஆக்கத்தன்மையில் எப்பொருளும் ஆக்குவோன் ஈசன் என்ற தன்மையில் சரணம் புகுந்தால் அத்தன்மையைத் தரும் ஆற்றலினனாகச் சிவனே அமைவன் என அவன்பாற் சரணம் கொள்ளுதலைச் சொன்னார்.

தாவாசிவனிடம் (குற்றமிலாத சிவன்) சரணம் புகுதலை எவ்வகைக் குற்றமும் மருவாத தன்மையில் ஆளாக்கும் அடிப்படையில் சிவன் ஒருவனே எனத் தெளிந்து அவனிடம் சரணம் கொள்ளுதலையே சாதனமாகத் தெளிவுபடுத்தினார்.



# 5. சிவஞான முனிவர் வாக்கில் வழிபாடும் பயனும்

பயன் - என்ற சொல்லானது விளைவையும் விளைவு ஏற்படுத்துகிற தாக்கத்தையும் உள்ளடக்கியது. ஒரே பொருள் ஒரு விளைவை நிகழ்த்தும்போது அந்த விளைவினால் வேறொரு தாக்கம் விளைய வேண்டும். அந்த விளைவுத் தாக்கமானது இன்னொரு பொருளை இன்னொரு பொருளோடு கொள்கிற தொடர்பினால் தாக்கப்படுத்தியது என்பதாக அமையும். ஒரே பொருள் விளைவை ஏற்படுத்தியது என்று சொன்னால் தாக்கப்படுதற்குரிய வேறொரு களம் இல்லாமல் கூறப்பட்டால் அதனைப் பயன் விளைத்தது என்பதாகக் கொள்ளுதற்கில்லை. ஒரு பொருள் ஏற்படுத்திய விளைவை இன்னொரு பொருள் அனுபவிக்க வேண்டும். அப்பொழுதுதான் விளைவும் தாக்கமுமாகப் பயன் என்பது முழுமை பெறும், அவ்வகையில் இறைவன், உயிர், ஆகிய இரண்டு பொருள்களில் நிறைவுப் பொருளாகிய இறைவன் விளைவை வேறொரு பொருளாகிய உயிர் அனுபவித்துக் கொள்ளும் விளைவுத் தாக்கமே பயன் நிறை எனத் தெளிவுபடுத்தியது சைவ சித்தாந்தம். இடையில் உலகப் பொருள் விளைவுகளைத் தாக்குண்ட உயிர் அனுபவம் குறைநிலைப் பயன் என விளக்கியது சைவ சித்தாந்தம். உலகப் பொருள்கள் அனுபவத்தால் குறைநிலைப் பயன்பெற்ற ஆன்மா நிறைநிலைப் பயனைப் பரம்பொருளால் பெறுகிறது என்ற வகையில் பயன்நிலைக் கொள்கையானது சைவசித்தாந்தத்தால் சிந்திக்கப்பெறும்.

### பயனியல் பகுப்பு

சிவஞான போதத்தின் பயனியலைப் பத்து, பதினொன்று, பன்னிரண்டாம் சூத்திரங்களில் மெய்கண்டார் விளக்குகிறார் எனச்

சிவஞான முனிவர் பகுத்தார். பயனை இருவகையாக எடுத்துக்கொண்டு பாசவீடு, சிவப்பேறு என விளக்குவார் முனிவர்.

பாசவீட்டின் பயனைப் பெறுமாறு உணர்த்துவதற்காகப் பஞ்சாக்கரத்தை உச்சரித்த வழி வாசனாமலம் போகும் நிலையை முதற்பயனாகப் பத்தாம் சூத்திரம்வழி விளக்கியுள்ளார்.

பாச நீக்கம் அமைந்தபின் சிவப்பேறு எய்தும் அடிப்படையில் பசுத்துவ நீக்கமும் சிவத்துவ விளக்கமுமாகச் சிவானந்தப் பூதியைத் தலைப்படுதலாம் 'பயன்' பதினொராம் சூத்திரத்தால் விளக்கப்பட்டதென விரிப்பார் முனிவர்.

வாக்கு மனம் கடந்த முதல்வனை வாக்குமனக்கோசரம் ஆகும்படி தெளியக்கண்டு வழிபடும் முறையில் பயனைப் பன்னிரண்டாம் சூத்திரத்தில் மெய்கண்டார் காட்டினாராகக் கருத்துரைப்பர் முனிவர்.

## சாதனத்திற்கும் பயனுக்கும் உள்ள தொடர்புநிலை

சாதனவியலையும் பயனியலையும் இணைத்து உண்மை அதிகாரமென விளக்குவார்.

சரியா, கிரியா யோகத்தின் பயன் ஞானம். அதன் முடிவில் குருநாதனால் ஞானம் பெறல். அதன்படி ஐந்தெழுத்து அமைதல் முதலியன சாதனமும் பயனுமாக மாறி மாறி வந்தாலும் அவை யாவும் வீடுபேற்றிற்குரிய சாதனங்களாக அமைந்தன.

வீடுபேற்றையும் சிவானந்தத்தையும் பயனாக விளக்க வருகிற காலத்து சிவானந்தப் பயன் எனக் கொண்டால் வீடுபேறு அதற்குரிய அடிப்படைச் சாதனமாகும். எனினும், வீடுபேறு முதல்நிலைப் பயனாயும் சிவானந்தம் முடிநிலைப் பயனாயும் அமையும்.

தசகாரியமென்ற பத்துவகைப் பயன் அனுபவப் படிநிலைகளை உண்மைநெறி விளக்கம், தத்துவரூபம் முதலாகத் தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஈறாக விளக்கும் அவ்வகைப் பத்துப் படிநிலைகளையே பலவாறாகவும் விரித்து அனுபவ நூல்கள் நிட்டை நூல்களாகவும், ஒழிவிலொடுக்கம், துகளறுபோதம் போன்ற நூல்களாகவும் வெளிவந்துள்ளன. துகளறுபோதம் அனுபவப் படிமுறைகளைப் பத்தின் விரிவாய் நூறாக விளக்குவது என்பர்.

பயனைப் பொறுத்தவரை மல நீக்கமும் சிவானந்த அனுபவம் எனப் பொதுவில் வைத்துப் பகுத்தார் முனிவர். மாபாடியத்தில் பகுத்த அக்கூறுகளை விரிவாகத் தம் இலக்கியங்களில் பல திறத்தில் காட்டியுள்ளார்.

## மலம் மாயையொடு வல்வினை இன்மை

இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகியன வினை ஆணவம் மாயை ஆகிய மூன்று மலங்களின் இணைப்பில் நின்ற நிலைப்பயன் அனுபவம் நோக்கி ஆன்மச் சார்புகளைச் செம்மைப்படுத்திய நிலையில் அமைந்தன எனலாம்.

இருவினையொப்பாகிற நல்வினையும் தீவினையும் சமமாதல் வினைச்செயலின் செம்மையாக இறைவனின் செயலை அனுபவிப்பதற்கு அடிப்படையாகக் காட்டப்பெறுவது.

மலபரிபாகமாக ஆணவ மலமானது வலிதேய்ந்த நிலையில் குறிப்பிடுவது. அதாவது, யான் எனது என்னும் தாக்கமின்றித் திருவருட்சார்பில் செயலை விளங்கிக்கொள்ளுதற்கான செம்மைநிலை.

திரோதானசத்தி எனப்பெறும் மறைப்புச்சத்தி நீங்கி அருள்காட்சியாக அனுபவப்படுவதற்கு மாய மாற்றத்தின் அணைந்த செம்மைநிலை சத்திநிபாதம்.

மேற்கண்ட மூவகை நிலைகளும் பயனை அனுபவித்தலுக்குரிய சாதனச் செம்மைகளாகச் சிவஞான முனிவரால் சிவஞான போதம் எட்டாம் சூத்திர உரையிலேயே விளக்கப்பட்டன. செம்மை பெற்ற உயிர்த்தன்மையில் சகலர் பிரளயாகலர் ஆதலும், பிரளயாகலர் விஞ்ஞானகலர் ஆதலும் கூறப்பெற்றுப் பின் குருவருளால் ஞானநிலை எய்துதலும் அதனால் ஐந்தெழுத்தைக் கைக்கொள்ளுதல் சாதனமும் பயனிலைச் சாதனமுமாகும்.

இறைவனுடைய ஞானக்கண்ணில் பொருந்தி நின்று உயிரானது மாயா, கன்ம, ஆணவச் சார்புகளால் காணாது இறை சார்பில் இறை மூலமாகக் காணுதல் என்ற அடிப்படையில் பாசவீட்டுப் பயன் முதற்கண் விளக்கப்பெறும். அப்பயன், மலமாயை தன்னொடு வல்வினை இல்லாத பயன் எனப்படும்.

அத்துவிதத் தொடர்பை ஒன்றாதல் வேறாதல் உடனாதல் என்றவாறு உயிரானது பாசங்களோடு கூடிச் சகலநிலை அனுபவம்

பெற்றது. உயிரானது இறைவனோடு ஏகனாகி அத்துவிதத் தொடர்பில் பாசவீடு பெற்று நிற்கும்நிலை சிவானந்தப் பேற்றிற்கு அடிப்படையாக விளக்கம் பெற்றது.

அதீதநிலை அனுபவமாக எல்லாவற்றையும் காணும் பொருள் காட்டும் பொருள் என்று இல்லாமல் இறைவனோடு கலந்து காணுகிற அனுபவமாக,

'காண்கின்ற கண்ணொளியுங் கதிரொளியு மெனக்கலந்து
பூண்கின்ற அதீதநிலை புலையேற்குங் கிட்டுவதே'

என்று கூறும் முனிவர் கண்ணொளி கதிரொளியொடு கலத்தலை விளக்குகிறார். கதிராகிய ஒற்றைச் சூரியனோடு, கண் கலந்துவிட்டால் ஒளிபரந்த எல்லாவற்றையும் கண் காணும் என்பதாகக் குறிப்பிடுகின்றார்.

'பெரும்பெயர்க் கடவுளைக் கண்டு
கண்ணிருள் தீர்வது'

என்பது, சிறப்புப் பாயிரத்தில் பயின்று வந்தது. அதன் நுட்பத்தை விளக்கும் வண்ணம் ஆன்மாவாகிய கண்ணொளி கதிரொ்ளியாகிய பரம்பொருளோடு சார்புறுதலைப் பாசவீட்டின் சாதனமாக எடுத்துக்காட்டினார் முனிவர்.

ஞாதிரு, ஞாதா, ஞானம், (காண்பவன், காட்சி, அறிவு) ஆகிய எல்லாமாய் இணைத்து நின்று ஆன்மாவானது ஏகனாகி நின்ற தன்மையில் வாய்க்கும் என்பதை,

'ஞேய மாயினை ஞாதிரு வானாய்
நிகழு ஞானமு மாயினை யெந்தாய்'

என இறைவன் பணியாக எல்லாவற்றிலும் காணும் பாசவீட்டின் பின் நின்ற பயனாகத் தெரிவிக்கின்றார் முனிவர்.

'வலமாய் அக்கரல கண்ட என்று ஏத்திடின் வல்வினை அ
(அ) வலம் மாயக் கண்டு அகத்தே குடி கொண்டு மா ந
வலமா யக்கண் தகத்தான் பானுவா நின்று வாழ்வித்திடும்
வலம் மாயக்கண்டகர் ஊர்ளித்து ஏகம்பம் வாழ்முதலே'

என்பது, திருவேகம்பர் அந்தாதிப் பாடல்.

அப்பாடலில் இறைவன் ம, ந ஆகிய மலங்களைக் கெடச் செய்து அகத்திலிருந்து குடிகொண்டு சூரியனைப் போல் இணைந்து ஞானம் தருகிறார் என்று குறித்தார் முனிவர்.

இவ்வந்தாதிப் பாடல் சிவஞான போதச் சிறப்புப் பாயிரத்தை விளக்கிய முனிவரின் கருத்தை வலுப்படக் காட்டுகின்றது.

### பசுத்துவ நீக்கமும் சிவத்துவ விளக்கமும்

இறைவன் உடங்கி உடனியங்கிப் பிரிப்பின்றி நின்று உதவி செய்துவரும் அத்துவித அனுபவத்தைக் கடைப்பிடித்து அவன் திருவடிக்கு அன்பு செய்து சிவானந்தப்பூதியை அனுபவித்தல் பாசவீட்டின் பயனாகப் 'பசுத்துவ நீக்கமும் சிவானந்தப்பேறும்' என உடனிகழ்ச்சிப் பயனாக விளக்கப்பெறும்.

' உள்ளத் துள்ளமு தூறி யுணர்தொறுந்
தெள்ளத் தேறித் தெளிந்த சிவானந்த
வெள்ளத் தேதுளை வார்க்கு விளங்குவான்
கள்ளத் தார்க்கரி யானிளங் காடனே'

என்று சிவானந்த வெள்ள அனுபவம் பற்றிக் கூறுவார் முனிவர். அந்த வெள்ளத்தைக் குடைந்து குடைந்து அனுபவித்தலாக ஆன்மா பெறுகிறது எனவும் கூறுவார்.

சிவானந்தவெள்ள அனுபவமானது ஆன்மாவாகிய உள்ளத்தின் உள்ளே இருக்கிற உள்ளமுதாம் இறைவன் அனுபவம் ஊறி உணர்ந்து வெளிப்படுவது எனவும் அதன் தெளிவைத் தேறித்தேறி அனுபவிக்கிற சிவானந்த அனுபவத்தை மேலேறி மேலேறி அனுபவிக்கலாம் எனவும் விளக்குகிறார் முனிவர்.

இறைவனோடு ஏகனாகி நின்று அனுபவிக்கிற சிவானந்தப் பேற்றை இரண்டறக் கலந்து வாழ் இன்பநிட்டை என்று குறிப்பிட்டுச் சுட்டுகிறார். மேலும்,

' காணு மாறுமற் றரிதரி தாமெனக் கணிப்பிலாப் பல -
கோணை மாமறை யாவையுந் தனித்தனி குழறுவ தல்லாமல்
மாணு மாறிது தானெனக் காட்டிட வல்லதே யிளங் காட்டிற்
பேணு நாயக னடியவர்க் கெளியவன் பெற்றியை முறையோடே'

என்ற பாடலில் வல்வினை கழிந்து பரமானந்த வெள்ளத்தில் சாதல் பிறத்தல் இன்றி நிலைத்தன்மையில் பராபரத்தோடு கலந்து நின்று வாழப்பெறுதலைப் பசுத்துவ நீக்கமும் சிவப்பேறாகவும் விளக்குவார்.

### வாக்கு மன கோசரப் பயன்

மல இயல்பினால் நின்ற கருவி கரணங்கள் இறைவனைக் காணா நிலையின. ஆன்மா தானே பரம்பொருளைக் காணாது

இறைஞானக் கண்ணோடு ஆன்மா பொருந்தி நின்று வாக்கு மனம் கடந்த பரம்பொருளைக் காணுகிறது. வாக்கு மனம் கடந்த பரம்பொருளை அனுபவிக்கும் கருவிகளை ஆன்மா முடிநிலைப் பயன் அனுபவத்திற் பெறுகிறது. அவ்வாறு பெறும் பசு கரணங்கள் மாற்றம் பெற்ற பதிகரணங்கள் என்பதாகக் கூறப்படும். பதிகரணங்களே வாக்கு மனம் ஆகியவற்றின் தொழில்களால் பயனைக் கண்டு அனுபவித்துக் காட்டுகிறது. அவ்வகையில் அடையாளப் பொருளாக நின்றன ஆலயங்கள் அனுபுவப் பொருளாக நடமாடுவன வாக்குமனம் கடந்த பரம்பொருளை வாக்கு மனத்தால் கோச்சரப்படுவதாக நாட்டி நிற்பன 'மாலற நேயம் மலிந்தவர் வேடம்' எனப் பயன்நிலைகளைக் காட்சிப்படுத்தி இரண்டாகச் சுட்டுவர்.

அடியார் பரம்பொருளை நிறுத்திக் காட்டுவதுடன் பரம்பொருளை உணருமாறு நின்ற உருவினராகப் பயன் அனுபவத்தை வெளிப்படுத்தும் காட்சியினராக மெய்கண்டார் பன்னிரண்டாம் சூத்திரத்தில் காட்டிய வண்ணம் அணைந்தோர் தன்மை விளக்கப்பெறும்.

அணைந்தோர் தன்மையை விளக்கவந்த உமாபதி சிவாசாரியார்,

' ஓங்குணர்வில் உள்ளடங்கி உள்ளத்தில் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்'

என்ற குறட்பாவை அளித்து இறை உணர்வில் அடங்கித் தம்முள் இன்பத்தை அடக்கிக் கொண்டு செயல்படுவோர்களாகக் கூறினார். அவர்கள் இறைவனுடைய கருணையை ஏற்றுச் செயல்படுபவர்களாக,

' கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக'

என்ற, குறட்பாவில் உயிர்களுக்காகக் கருணைச் செயல் மேற்கொண்ட பயன்நிலைச் செயலாளர்களாக விள்க்குவார்.

இறைவனுடைய எண்குணத்தை ஏற்று எண்குணச் செல்வர்களாக விளங்கிப் பரம்பொருள் அனுபவப் பயனாக நின்றவர்களாக அடியவர்களை விளக்குவார் முனிவர்.

' அண்டர்கோன் சோம நாயகன் வாழ்க
அவன்றிரு வடித்தொழிற் குரிய
தொண்டர்பார் மீதெண் செல்வராய் வாழ்ந்து
துதியொடும் பெறுகமெய்ச் சீரே'

என்ற, பாடல்வரிகளால் இறைவன் திருவடித் தொழிலையே செய்கிற செயலினராக அடியவர்களைத் தெரிவித்து அவர்கள் எண்குணச் செல்வராக வாழ்பவர்கள் என்றும் கூறுகின்றார்.

பரம்பொருள் தன்மையிலேயே பரம்பொருளை வாக்குமன அனுபவத்திற்கு உட்படுத்துபவர்களாக அடியவர்கள் மூலமாகப் பயன் அனுபவத்தை விளக்கினார். ஒவ்வொரு ஆன்மாவும் அவ்வகையில் மெய்ச்சீர் பெறும் என்பதையும் பயன் முடிவாக முடித்துக்காட்டினார்.

## முத்திப் பேறு

பல்வேறு சமயவாதிகளும் தங்கள் தங்கள் சமயத்தின் மூலம் பெறும் முடிநிலைப் பயனாக முத்திநிலையைச் சுட்டியுள்ளனர். அதன் தொகுப்பை சிவப்பிரகாசத்தில்,

' அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே'

என்ற பாடலில் உமாபதி சிவாசாரியார் விளக்கிச் சித்தாந்த முத்தி மும்மலம் அகன்று இறைவனுடைய அருளைச் சேருதலே முத்தி என்று விளக்குவார்.

சிவஞான முனிவர் அகிலாண்டேசுவரி பதிகத்தில்,

' மங்கையர்க ளின்[illegible] முத்தியென் றுங்கந்த
மடிவதே முத்தி யென்றும்
வருமுக் குணங்கெடுதன் முத்திவினை மாய்வதே
வளர்முத்தி மூன்று மலமும்
பங்கமுற லேமுத்தி யென்றுநித் தியதேகம்
பற்றுவது முத்தி யென்றும்
பலவும் பகுத்தறிதன் முத்தியுயிர் கெடுவதே
படர்முத்தி சித்தி களெலாம்
தங்குவது முத்திபா டாணமொத் திடுவதே
தருமுத்தி யென்று முயிர்கள்

தடுமாற மலமறுத் தகலாத திருவடித்
தாமரையென் முடியி லூன்றி
அங்கமுயிர் பொருளெலாங் கைக்கொண்டு நாயினேற்
காநந்த முத்தி தந்த
அருண்ஞான வாரியே'

என்ற பாடலில் முத்தியின் இயல்பைப் பாடியுள்ளார்.

1. மங்கையர்கள் இன்பமுத்தி.
2. கந்தம் அழியும் முத்தி
3. மூன்று குணங்கள் அடங்கும் முத்தி
4. வினைகெடும் முத்தி.
5. நித்திய பேதம் பற்றும் முத்தி.
6. பகுத்தறியும் உயிர் இயல்பு கெடும் முத்தி.
7. மூன்று மலம் கெடும் முத்தி.
8. சித்திகள் தங்கும் முத்தி.
9. பாடாண முத்தி

ஆகியவற்றை வரிசைப்படுத்தி அவற்றினும் மேலாக, உயிர்களைத் தடுமாறச் செய்யும் மலத்தை அறுத்துத் திருவடி சேர்ந்து உடல் உயிர் பொருள் எல்லாவற்றையும் திருவருள் அனுபவமாகக் கொண்டு ஆனந்தமுத்தி அனுபவத்தையே (சைவ) சித்தாந்த முத்தி என விளக்கினார் முனிவர்.

மூன்று மலத்தாக்கம் இல்லாமல், அருளைச் சார்ந்து உடம்பு, உயிர், பொருள்கள் எல்லாம் இருந்து அவைகள் எல்லாவற்றாலும் திருவருள் அனுபவத்தை வெளிப்படுத்தி ஆனந்தம் அனுபவித்தலே (சைவ) சித்தாந்த முத்தி என்றவாறு தெளிவுபடுத்தினார் முனிவர்.

பாசவீடாகிய முத்தி நிலையும் சிவப்பேறாகிய ஆனந்த நிலையும் சிவஞான முனிவரால் திருவருட் சார்பில் ஆன்மாப் பெற்று இருந்து வாழும் நிலையில் விளக்கப்பட்டன.

## தகர அனுபவம்

பாம்பன் சுவாமிகள் தகர ஆலய இரகசியம் என ஒருநூல் செய்தார். சிதாகாசப் பெருவெளி என்றும், துவாத சாந்தப் பெருவெளியென்றும், ஆதாரம் கடந்த ஆகாயப் பெருவெளி அனுபவமாகத் தகர அனுபவம் அருளாளர்களால் விரித்துக் காட்டப்படும்.

'ஆறாறு தத்துவக் கூட்டம் - உடன்
ஆறத்து வாக்களு மாதார மாறும்
ஆறுகுற் றங்களு நீங்க - இரண்
டாறின் முடிவின டனஞ்செய் வாராம்'

என்பதாக, இறைவன் நடனத்தை முப்பத்தாறு தத்துவம் கடந்து பன்னிரண்டு அங்குலப் பெருவெளியில் (துவாத சாந்தப் பெருவெளி) அனுபவமாக இறைவன் தரும் அனுபவத்தால் ஆறத்துவா நீக்கமும், ஆறு குற்றங்கள் நீக்கமும் அமையும் எனச் சிவஞான முனிவர் கூறுகிறார்.

அப்பெருவெளி பற்றி,

'உணர்ந்து ளோருளத் தகரபுண் டரிகமுந் துவாதசாந் தமுமும்பர்
வணங்கு மாதித்த மண்டல நடுவுநான் மறைகளின் முடிவுஞ்சீர்
இணங்கு சோமலோ கமுந்திரு வம்பலத் திடமுந்தென் குளத்தூர்வாழ்
குணங்க டந்தவர் சிறப்பிட மாமெனக் கூறிடு மறைநூலே'

என்ற குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதிப் பாடலில் விளக்குகிறார்.

தகரபுண்டரீகம் என இடத்தின் பெயரையும் அது துவாதசாந்தப் பெருவெளிக்கு மேலானது என்றும் அது குணம் கடந்தவர் அருளனுபவம் அனுபவித்து வாழும் சிறப்பிடம் எனவும் குறிக்கின்றார். அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில், 'மெய்வகை துவாதசாந்தத்தலத்து ஆனந்த வெள்ளப் பெருஞ்சோதியை' என்று தகர ஆகாயத்தில் இறைவன் ஆனந்தவெள்ளப் பெருஞ்சோதியாக அனுபவப்படுவன் என்று கூறுகின்றார்.

தகர ஆகாயத்தை 'நுண்குகை' என்பதாகச் சிவஞான முனிவர் கூறுகின்றார். தகர ஆகாய ஞானத்தைத் தகரவித்தை என்று கூறி அந்த அனுபவத்தால் ஈசனை ஒக்கும் அனுபவம் வாய்க்கும் என்பதை,

'ஏய்ந்தசீர்த் தகரவித்தை முறைப்படி இதயக் கஞ்சப்
பூந்தமற் சிகைமேல் ஈசற் போற்றுமா யவனை ஒக்கும்'

என்று காஞ்சிப்புராணப் பாடல் வரிகளால் குறித்துள்ளார்.

## அத்துவித ஆனந்த அகண்டாகார பரிபூரண நித்திய வாழ்வு

**அத்துவித அனுபவமும் அதனால் பெறும் ஆனந்தவாழ்வும் அகண்டமாயும், பரிபூரணமாயும், நித்தியமாயும் நிறைந்த பரம்பொருள் நிலையோடு இயைந்த வாழ்வு சைவ சித்தாந்த முடிநிலைப் பயன் என்று முனிவர் தெரிவிக்கின்றார்.**

இதனைத் திருத்தொண்டர் திருநாமக்கோவையில் தொண்டர்கள் பெற்ற அனுபவமாகவும், தொண்டர்கள் மூலம் பெறும் அனுபவமாகவும் வைத்து விளக்குகிறார் முனிவர்.

' மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு - மையலுந்தீர்ந்து
அத்துவிதா னந்த அகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார் நிசம்'

எனத் தீர்தலும் பெறுதலுமாக, வீட்டுப்பேற்றையும் சிவப்பேற்றையும் தெரிவித்தார் முனிவர். கைதவம், புல்லறிவு, கற்பனை, மயக்கம் ஆகியன விடற்குரியன. 'அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபிரான்', எனப் பரம்பொருளின் சொருப இலக்கணம் கூறும் சிவஞான முனிவர், அப்பரம்பொருளின் அனுபவமே பயனாகத் தந்து நிற்கும் எனப் பேருரையில் முனிவர் கூறியுள்ளார்.

அக்ண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தமாகிய பரம்பொருளின் அனுபவம் ஆனந்த அனுபவம் என்றும் அதன் செயல்முறை அத்துவித அமைப்பினது ஏன்றும் அமைத்து, அத்துவித ஆனந்த அகண்டாகார பரிபூரண நித்தவாழ்வு என விளக்கினார் முனிவர். ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்கும் அத்துவித உறவு விளக்கம், ஆன்மாவும் இறைவனுமே இணைந்து நின்று எல்லாப் பொருள்களையும் ஆன்மாவானது இறைவன் அனுபவமாகவே அனுபவிக்கும் செயல்முறை அத்துவித நிலை. அதன் அனுபவம் ஆனந்தம் என்பது.

அத்துவிதமாயும் ஆனந்தமாயும் செயலும் அனுபவப் பயன் விளைவாயும் பயன்தாக்கமாயும் ஆன்மாவுக்கு நின்றது அகண்டாகார நித்தவியாபகச் சச்சிதானந்தப் பரம்பொருள் என்றார்.

இறைவனுடைய வியாபகத்திலும் நித்தியத்தன்மையிலும் இணைந்து நின்று ஆன்மாவானது இறையோடு இயைந்த வாழ்வு அனுபவம் பெற்று நிற்றலே பயனிலை வாழ்வில் முடிநிலையாகக் கூறியுள்ளார் முனிவர்.



# 6. சிவஞான முனிவரின் வாக்கில் சமுதாயம்

இலக்கியம் என்பது இறையுணர்வைத் தூண்டுவதாகவும், மக்களின் சிந்தனையை வளர்ப்பதாகவும், மனத்திற்கு மகிழ்ச்சியையும் அமைதியையும் தருவதாக அமைய வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படக் கூடியதாக இருக்க வேண்டும். அவ்வகையில் சிவஞான முனிவர் இளமை முதலே பல ஆண்டுகள் பல நூல்களைப் பயின்று பல்வேறு வகையான படைப்புக்களைப் படைத்துள்ளனர். இவற்றின் நோக்கம் சமுதாயத்திற்கு உதவுதல், சமுதாயத்தினரை வழிநடத்துதல், தான் பயின்ற கருத்துக்களைச் சமுதாயத்திற்கு எடுத்துரைப்பதே ஆகும். அதாவது பயிலாதனவற்றைப் பயிற்றுவித்தலே எனலாம்.

சமுதாய உறுப்பினர்களாகிய மக்கள் பல துறைகளில் ஈடுபட்டுத் தம் வாழ்நாளைச் செலவிடும் பாங்கில் உள்ளனர். அந்நிலையில் எல்லோரும் எல்லாத் துறைக்குரிய நூல்களையும் தேடிப் பயில்வது இயலாத செயல். ஆனால், இவர்களுக்குத் தங்கள் துறையல்லாத பிற துறை அறிவு கட்டாயம் தேவை. ஆனால், பல துறைகளையும் பயிலக் காலம் போதாது. இவற்றையெல்லாம் சிந்தனை செய்த சிவஞான முனிவர் தம் படைப்புக்களில் மக்களுக்குப் பயன்படும் பல துறைகளையும் பாடி வைத்துள்ளார்.

இங்குச் சமுதாயம் என்பது உலகில் வாழும் மக்களின் வாழ்க்கையைக் குறிக்கிறது. படைப்பாளனுக்கு உலகில் நிகழும் நிகழ்ச்சிகள், அவன் காணும் காட்சிகள் இவை இரண்டு வகையான மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. அவையாவன. 1. புறமாற்றம்; 2. அகமாற்றம். புறமாற்றம் என்பது ஆடை, அணிகலன்,

அலங்காரம், உணவுவகைகள் போன்றன. இவை விரைவில் மாறும் இயல்புடையன. அகமாற்றம் என்பது மனத்தை மாற்றுவது. இது என்றும் மாறாதது. இம்மாறாத மாற்றமே இலக்கியங்களாக, நுண்கலைகளாக மாறுகின்றன.

சிவஞான முனிவருக்குத் தாம் பயின்ற சமயக் கல்வி, தம்மோடு பழகிய சமயச்சான்றோர், அவர் காலச் சாதி, மத வேறுபாடுகள், பிறநாட்டார் வருகையால் ஏற்பட்ட மாற்றங்கள் மக்களின் மாறும் மனநிலைகள் போன்றன இலக்கியங்களைப் படைக்க வாய்ப்பாக அமைந்தன.

இவ்விலக்கியங்களைக் கருவியாகக் கொண்டு சமுதாயத்திற்கு அவர் ஆற்றிய பணிகள் பல. அவற்றில் முதல் பணி சைவ சமுதாயப் பணியாகும்.

## சிவஞான முனிவரும் சைவ சமுதாயமும்

சைவ சமுதாயம் என்பது சிவனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டுப் பேறு பெற்ற மக்களைக் குறிக்கும். இச்சமுதாயத்தினர் பல நூறு ஆண்டுகளாகச் சிவனைப் போற்றி வாழ்ந்துள்ளனர். இதனைச் சங்க நூல்களிலும், திருமுறைப் பாடல்களிலும் காணலாம். இவர்களுக்கு மூல நூலாகத் திகழ்வன வேதங்களும் ஆகமங்களும் ஆகும். இவ்வேதாகமங்கள் சிவனை வழிபடும் முறை வழிபாட்டிற்குரிய பயன்கள் வழிபாட்டு நெறிகள், வாழ்க்கை நெறிமுறைகள் போன்றனவற்றை விளக்குகின்றன. அவ்வகையில் சிவனை எவ்வெவ் வடிவில் வழிபட்டால் எந்தெந்தப் பயனைப் பெறலாம் என்பதை உணர்த்தப் பல்வேறு வகையான மூர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. இம்மூர்த்தங்களின் எண்ணிக்கையை ஒரு வரையறைக்குள் கொண்டு வந்தவர் சிவஞான முனிவர் எனலாம். இதனை 'என்று மறைஆ கமம்வகுக்கும் இன்னோ ரன்ன திருவுருவுள் ஒன்று' எனவரும் காஞ்சிப்புராணப் பாடலடியால் உணரலாம்.

சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கு. இருபத்தைந்து என்ற பாகுபாடுகள் உண்டு. காஞ்சிப்புராணம் சிவபுண்ணியப் படலத்தில் சிவமூர்த்தங்களின் அமைப்பு, அவற்றைப் பிரதிட்டை செய்யும் முறை, அதனால் ஏற்படும் பயன் முதலானவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

வாதுளாகமத்தைப் பின்பற்றிச் சிவபராக்கிரமம் என்ற நூல் சிவனுக்குரிய மகேசுவர மூர்த்தங்கள் அறுபத்தைந்து எனக்

குறிப்பிட்டுள்ளது. இதைப் பின்பற்றி எழுந்த 'சிவமூர்த்தங்கள்' என்ற நூல் சிவமூர்த்தங்கள் இருபத்தைந்து எனக் குறித்துள்ளது. இவ்விரண்டு நூல்களும் சிவஞான முனிவரின் காலத்திற்குப் பின் எழுந்த நூல்களாகும்.

சிவஞான முனிவர் வடதிருமுல்லைவாயிலந்தாதியில் சிவலிங்க மூர்த்தத்தின் சிறப்பையும் அம்மூர்த்தத்தை வழிபட்டால் பெறும் பயனையும் குறிப்பிட்டுள்ளார்.

காஞ்சிப்புராணம் சிவபுண்ணியப் படலத்தில் சிவமூர்த்தங்களை இருபத்தைந்து என வரையறுத்து, அவற்றின் அமைப்பு அவற்றைப் பிரதிஷ்டை செய்தால் அடையும் பயன் முதலானவற்றைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு சிவமூர்த்தம் இருபத்தைந்து என்பதைச் சைவ சமய சமுதாயத்திற்கு அறிமுகப்படுத்தியவர் சிவஞான முனிவரே.

## சிவ மூர்த்தங்கள்

சிவமூர்த்தங்கள் இருபத்தைந்து. அவையாவன. சிவலிங்கம், சோமாஸ்கந்தர், ஏகபாதர், எச்சேச்சுரர், இடபாருடர், சந்திரசேகரர், நடராசர், உக்கிரர், அர்த்தநாரீஸ்வரர், இலகுளீசர், நீலகண்டர், சலந்தராரி, சக்கரதானர், அந்தகாரி, திரிபுராரி, கங்காதரர், ஆபற்சகாயர், சோதிலிங்கேச்சுரர், மச்ச சங்காரர், கூர்ம சங்காரர், வராக சங்காரர், நரசிங்க சங்காரர், கங்காளர், காலபைரவர், பிட்சாடனர் என்பனவாகும்.

இம்மூர்த்தங்களைப் பிரதிட்டை செய்தோர் சிவலோகப் பதவி, திருமால், பிரமன், இந்திரன் முதலியோரது பதவிகளைப் பெற்று, மீண்டும் பிறப்பில்லாத முத்தியைப் பெறுவார்கள் என்று பிரதிட்டைப் பயனைக் கூறியுள்ளார் சிவஞான முனிவர்.

இத்தெய்வ மூர்த்தங்களோடு நந்திஎம் பெருமான், வெள்ளேறு, வாயில்காவலர் இவற்றின் வடிவங்களைச் சிவபெருமான் கோயிலில் பிரதிட்டை செய்தவர்களும் வீடு பேற்றினைப் பெறுவார்கள் என்கிறார். மேலும், அங்குசம், பாசம், அபயம், வரதம் - பொருந்திய நான்கு கைகளை உடைய கலைமகள், திருமகள் கூடன் அம்பிகையின் திருவுருவை அமைத்தவர்களும், விநாயகர், முருகர், வீரபத்திரர், சேத்திரபால வயிரவர், துர்க்கை, மாயன், அயன் முதலானோரின் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்தோரும் இல்வாழ்வில் சிறக்க வாழ்ந்து இறுதியில் வீடுபேற்றினை அடைவார்கள் என்கிறார் சிவஞான முனிவர்.

மேற்கூறிய தெய்வத் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்ய இயலாதவர்கள் தங்களது பொருள் நிலைக்கேற்ப தெய்வத் திருவுருவங்களைச் சுவரில் திரைச்சீலை முதலியவற்றில் எழுதி வைக்கலாம். அவ்வாறு எழுதிவைத்தவர்கள், தங்களது தீவினை நீங்கி வீடுபேற்றினை அடைவார்கள் என்று வேதம், மிருதி, சிவாகமம், புராணம் அனைத்தும் கூறுகின்றன என்கிறார் சிவஞான முனிவர்.

இதனால் தெய்வத் திருவுருவங்களை எவ்வகையில் படைத்து வழிபட்டாலும் அதற்குப் பயன் உண்டு என்பது சமுதாயத்திற்குக் காட்டப்பட்டுள்ளது.

## சைவ சமயச் சமுதாயத்தினரின் ஒழுகலாறுகள்

சமுதாயத்தினரை இரண்டு வகையாகப் பாகுபாடு செய்துள்ளார் சிவஞான முனிவர். (நால்வருணத்தார், புனிதத் தன்மை இல்லாத அனுலோமர், பிரதிலோமர்) நால் வருணத்தார் உயர்ந்தோர் அனுலோமர், பிரதிலோமர் தாழ்ந்தோர்.

ஔவைப் பிராட்டியார் இட்டார், இடாதார் என இரண்டாகப் பகுத்து - இட்டார் உயர்ந்தார், இடாதார் தாழ்ந்தார் என்பர். அவ்வாறே சிவஞான முனிவரும் அறவழியில் நடந்து திருவைந்தெழுத்தினை ஆராய்ந்து விதிப்படி ஓதி, உருத்திராக்கம் பூண்டு, திருமேனி முழுவதும் திருநீறு பூசி, இறைவன் திருவடிக்கீழ் எழுபிறப்பினும் தொடர்ந்து அன்பு செலுத்துபவர்கள் நால்வருணத்தார் எனப்படும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் மற்றையோர் அதாவது மேற்கூறிய சிவச்செயல்களைச் செய்யாதோர் புனிதமில்லாத அனுலோமர், பிரதிலோமர் பிறராவர் என்கிறார் சிவஞான முனிவர். இங்கு இறைநெறியில் நின்றோர் உயர்ந்தோர், நில்லாதோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாட்டைக் காட்டி அனைவரும் வழிபாட்டு நெறியில் நிற்க வேண்டும் என்பது வலியுறுத்தப் பட்டுள்ளது.

பண்டைய தமிழ்நூல்கள் (தொல்காப்பியம் - சங்க நூல்கள்) தொழில் அடிப்படையில் மக்களைப் பகுத்துக் கூறியது. சிவஞான முனிவர் வழிபாட்டு அமைப்பில் மக்களைப் பகுத்துள்ளார்.

## சைவ சமயத்தோர் கொடைமாண்பு

சைவ சமய நெறியில் நிற்போர் பிரமச்சரியம் காத்தோர் இல்வாழ்க்கை மேற்கொண்டோர் வானப்பிரத்தம் உடையோர் இவர்களும் சிறப்பான வழிபாடு செய்யின், துறவிகளுக்கு வீடு,

பொன் முதலானவற்றைக் கொடுத்தால், துறவு நெறியினை மேற்கொண்டோரின் பாதங்களைப் போற்றி வழிபட்டால் தெய்வத் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்த பயனைப் பெறுவார்கள் எனக் கொடையின் சிறப்பினைக் கூறிப் பக்தி நெறியில் நிற்போர் யாரேயாயினும் அவர்களுக்கு உதவுதல் வேண்டும் என்ற தன்மையைச் சமுதாயத்திற்கு எடுத்துக் கூறியுள்ளார்.

## கோயிலும் பயனும்

''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்பது முதுமொழி. இதனால் கோவிலின் சிறப்புப் புலனாகிறது. இத்தகைய கோயிலைக் கட்டுதலினால் பயன் என்ன? இதனை எப்பொருள் கொண்டு கட்டுவது, எந்தெந்த வகையில் கட்டுவது போன்ற கருத்துக்களைச் சிவஞான முனிவர் சைவ சமய மக்களுக்கு எடுத்துரைக்கிறார்.

கோவில் கட்டுதலுக்குரிய பொருட்களாக மணி, பொன், செம்பு, வெள்ளி, சுண்ணாம்பு, செங்கல், மரம், மண் முதலியனவற்றைக் குறிப்பிட்டுள்ளார். இவற்றுள் தங்களது பொருளாதார நிலைக்கேற்ப ஒன்றினைக் கொண்டு கோவில் கட்டலாம் என்கிறார்.

கோயில் உறுப்புக்களில் சிறப்பாகப் போற்றப்படுவன கோபுரம், விமானம் என்பனவையாகும். இக்கோபுரங்களுக்கு உரிய பெயர்களாக கந்தமாதனம், இமாசலம், இந்திரநீலப்பருப்பதம், கயிலைமந்தரம், ஏமகூடம், நிடதம், மேரு முதலிய ஏழு பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வேழு பெயர்களும் மண்டபத்திற்குப் பொருந்தும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

சிவஞான முனிவர் வடமொழி தென்மொழி இரண்டின் கரைகண்டவர் எனக் கூறலாம். அதற்குச் சான்று அவரது மொழிபெயர்ப்பு நூல்களாகும். இவற்றோடு தெலுங்கு மொழியினையும் பயின்றவர் என்பதைக் கோவில் வகைகளைக் குறிப்பிடும்பொழுது நாகரம், திராவிடம், வேசரம் எனக் கூறியதோடு பிறமொழி நூல்கள் கூறும் விதிகளின்படியும் கோயில் அமைத்தல் வேண்டும் என்பதால் உணரலாம். நாகரம் - வடமொழி, திராவிடம் - தென்மொழி, வேசரம் - தெலுங்கு.

இச்சொற்கள் பிற்காலத்தில் கோயில் விமானங்களின் அமைப்புக்குப் பெயராக வழங்கப்படுகின்றன. நாகரம் - சதுர அமைப்புக் கொண்ட விமானம். திராவிடம் - எண்பட்டை அமைப்புக் கொண்ட விமானம். வேசரம் - வட்ட வடிவமான

விமானம். கோவில்உறுப்புக்கான கோபுரங்கள், விமானங்களுக்குப் பெயர் கூறியவர் சிவஞான முனிவரே.

கோவில் கட்டுதற்குரிய பொருட்களைக் கொண்டு ஏழு வகையான கோபுரங்களில் ஒருவகைக் கோபுரத்துடன் - வடமொழி, தென்மொழி, தெலுங்கு மொழியோடு பிறமொழிகள் கூறும் கோயில் வகைகளை அமைத்தோர் போகம் நுகர்ந்து வீடு பேற்றினை அடைவார்கள் என்பதைச் சிவஞான முனிவர் விளக்கியுள்ளார்.

கோவில் கட்டுதல் என்பது ஒருமுறை நிகழக்கூடிய பணி. ஆனால் இப்பணியில் காற்று, மழை, வெப்பம் போன்றவற்றால் சிறுசிறு இடிபாடுகள் ஏற்படும். இவற்றை அவ்வப்போது நீக்குதல் வேண்டும். இப்பணியினைப் 'புதுக்குதல்' என்பர். இவ்வாறு புதுக்குதல் எவற்றையென்பதை,

' முரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய
நெரிந்த வாகிய கோபுரம் நெடுமதில் பிறவுந்
தெரிந்து முன்னையிற் சீர்பெறப் புதுக்குவார் பண்டு
புரிந்து ளோர்பெறும் புண்ணியம் நான்மடங் குறுவார்'

என வரும் பாடலால் உணரலாம்.

முரிந்தும், வெடித்தும், உடைந்தும், பழமை உற்றும், நெளிந்தும் வேறுபட அழிந்தும் கிடக்கும் கோபுரம், பெருமதில் முதலானவற்றையும் பிறவற்றையும் முன்பு இருந்தது போன்று சிறப்புறப் புதுப்பித்தலைச் செய்தோர் கோவில் கட்டியதனால் கிடைக்கும் பயனைவிட நான் மடங்கு பயனைப் பெறுவார்கள் எனக் கூறிக் கோவில் கட்ட இயலாதவர் திருப்பணியைச் செய்யலாம் என்கிறார். இப்பணியினைத் தற்காலத்தில் குடமுழுக்குத் திருப்பணி, சீரணோத்தாரணம் என்று வழங்குகின்றனர்.

சிவஞான முனிவர் திருவடி வாழ்க!



வண்ணச் சரபம்

# தண்டபாணி சுவாமிகள்

## பொருளடக்கம்


1. இளமையும் ஏற்றமும் - 1
2. பன்முகப் படைப்புக்கள் - 30
3. சமய ஒற்றுமையும் நல்லிணைப்பும் - 38
4. கொல்லாமைக் கோட்பாடு - 47
5. சமூகச் சிந்தனையாளர் - 57
6. புதுமைக் களங்கள் - 67
7. வண்ணம் பாடிய வண்மை - 74
8. வியப்புக்குரியவை - 78

பின்னிணைப்புகள்

(i) பழகியோரும் பயின்றோரும் - 85

(ii) படைப்புகள் - 86

# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

## 1. இளமையும் ஏற்றமும்

**நுழைவாயில்**

"கடல்மடை திறந்தென் கவிக்கு உரை புகல்வோன்
மடமட எனக்கவி மழைசொரி மேகம்
புலக்குறும்பு அடக்கிய புனிதன் திரிவித
மலக்கட்டு அறுக்கும் வகையுணர் விவேகன்
.... .... .... .... .... .... .... .... .... .... .... .... ....
அழுக்கா றுடையபா வலர்க்குஇடி யேறுஅனான்
அருண கிரிஇவண் அவதரித் தான்எனும்
பெருமைசேர் புகழ்பெறு பேர்அரு ளாளன்
வருக தாசர்கள் எனவழி பார்த்தருள்
முருக தாச முனிமுழு மணியே"

(அறுவகை இலக்கணம், பக் 551-552)

என்று முத்துவீரக் கவிராயர் என்பார் வண்ணச்சரபரைப் பாராட்டுவார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் *இலக்கிய, இலக்கண இமயமாகத் திகழ்ந்தவர்* வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். அவர் இயற்றியவற்றுள் ஏறத்தாழ ஐம்பதாயிரம் பாடல்கள்மட்டுமே நமக்குக் கிடைத்துள்ளன. கிடைக்காமற்போன பாடல்களின் எண்ணிக்கையும்கூட ஐம்பதாயிரத்தைத் தாண்டும் எனலாம். சுவாமிகள் இவ்வாறு தமிழ் வளர்ச்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் முகமலர்ச்சியுடன் வாழ்நாள் முழுவதும் இறைப்பணியுடன் இணைந்து இலக்கியப் பணி செய்த பைந்தமிழ்த் தொண்டராவர்.

அன்னாரின் தூய சமயப்பணியையும், சமுதாயப் பணியையும் இலக்கியப் பணியையும் விரித்துக் காணுதல் சிறப்பாகும்.

## பிறப்பும் வளர்ப்பும்

"செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி உறை
செல்வர்தாமே" (திருஞானசம்பந்தர் தேவாரம்.3788)

என்னும் சிறப்பிற்குரிய திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி நகரத்தில் கலியுகம் 4941, விகாரியாண்டு கார்த்திகைத் திங்கள் 16-ஆம் நாள் அத்த நட்சத்திரத்தில் தண்டபாணி சுவாமிகள் (22.11.1839) தோன்றினார்.

" ஆறினில்கேது ஏழிடத்தினில் உடுபதி எட்டில்
வாதிடும் குரவர் இருவரும், நவத்தில் மால்சனிஎல்ல வன்குளிகன்
தீதில் அத்தம் தினம்திரம் தேதியன்ன வாறே"

(குருபரதத்துவம், பிரயோக விநோதச் சுருக்கம்,6)



சைவ வேளாளர் மரபினரான செந்தினாயகம் பிள்ளைக்கும் பேச்சிமுத்தம்மைக்கும் இவர் மகனாகத் தோன்றினார். இவருடைய தந்தையார் அந்நாளில் நெற்கட்டுஞ்செவல் பகுதியை ஆண்ட சிற்றரசரிடம் தானாதிபதியாகப் பணியாற்றிவந்தார். சுவாமிகளுக்கு அவர்தம் பெற்றோர் இட்டு வழங்கிய பெயர் *சங்கரலிங்கம்* என்பதாகும். இவர்தம் ஐந்தாவது வயதிலே ஏட்டுக்கல்வி கற்கத் தொடங்கினார். அந்நாளில் பனையேட்டிலே எழுத்தாணி கொண்டு எழுதிப் பயிலும் கல்வியில் சுவாமிகள் மிகுந்த ஆர்வத்தோடு கற்று

வரலானார். இவருக்கு ஆறரை வயதிருக்கும். அப்போது இவர் தம்முடைய தந்தையாரை இழக்க நேரிட்டது. இதன் விளைவு சங்கரலிங்கத்தின் கல்வியும் தடைப்பட்டது.

வாழையடி வாழை

தென்காசிக்கு அருகில் உள்ள சுரண்டை என்ற ஊரிலே வாழ்ந்த சிதம்பரம் பிள்ளை என்னும் பெயரினரான இவருடைய பெரியதந்தையார் சங்கரலிங்கத்தைத் தம்முடன் அழைத்துச் சென்றார். சுரண்டையிலுள்ள பள்ளியில் கல்வி பயிலுமாறு செய்தார். சித்திரா நதியின் கரையில் அமைந்த சுரண்டையில் ஓர் அம்மன் கோவில் இருந்தது. அந்த அம்மனின் பெயர் பூமிகாத்தாள் என்பதாகும். ஒருநாள் சங்கரலிங்கம் அந்தக் கோவில் வளாகத்திலே விளையாடிக்கொண் டிருந்தார். அப்போது அங்குச் சுற்றுலா வந்த சில அன்பர்கள் கோவிலில் இருந்த பெரியவர்களிடம் 'பூமி காத்தாள்' என்ற பெயருக்குரிய விளக்கத்தைக் கேட்டனர். எவரும் அதற்கு விளக்கம் கூறவில்லை. இந்நிலையில் அங்கே விளையாடிக் கொண்டிருந்த சங்கரலிங்கம்.

> "அமுதம் கடையுநாள் ஆலம் வெடித்துத்
> திமுதிமெனத் தீயெரித்துச் சென்றது-அமுதமெனத்
> தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்
> காத்ததனாற் பூமிகாத் தாள்" *(தனிப்பாடல் திரட்டு, 1)*

என்று நேரிசை வெண்பாவிலே முறையான விளக்கத்தைப் புராண மரபுக்கதைச் செறிவுடன் விளக்கினாராம். இவ்விளக்கத்தைக் கேட்ட பெருமக்கள் வியந்து போற்றினர். அப்போது சுவாமிகளுக்கு வயது எட்டரைதான். மூன்று வயதிலே திருஞானசம்பந்தர் "தோடுடைய செவியன்..." எனப் பாடினார். "திருஓங்கு புண்ணியச் செயல்ஓங்கி அன்பருள் திறலோங்கு செல்வம் ஓங்க..." எனத் தொடங்கும் தெய்வமணிமாலைப் பாடலை வள்ளலார் தம்முடைய ஏழாவது வயதிலே பாடினாராம். திருச்செந்தூர் முருகப் பெருமானுடைய அருட் பார்வையினால் வாய் பேசாத ஐந்து வயதுப் பிள்ளையாக இருந்த குமரகுருபர அடிகள் கந்தர் கலிவெண்பாவைப் பாடியதும் வரலாறு. இவ்வாறு பிஞ்சு வயதிலேயே கொஞ்சு தமிழ்ப் பாடல்கள் பாடும் பேராற்றல் பெற்ற அருளாளர்களின் மரபிலே வந்தவர்தாம் நம் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை!

## குருவருள் நோக்கம்

சுவாமிகளின் அருமைத் தந்தையாரின் நண்பர் சீதாராம நாயுடு என்பார் மந்திர சித்தியில் வல்லமை பெற்று விளங்கினார். அன்னாரிடம் சுவாமிகளுக்கு அளவிறந்த மதிப்பு இருந்தது. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' அல்லவா! இதனை உணர்ந்த சீதாராம நாயுடு சுவாமிகளின் எட்டரை வயதுடைய இளமைப் பருவத்திலேயே விநாயக மந்திரம், இலக்குமி மந்திரம், முருகப் பெருமானுக்குரிய ஆறெழுத்து மந்திரம் ஆகிய இவற்றை உபதேசித்துப் பூசை நிகழ்த்தும் வழிமுறைகளையும் மந்திரங்களைச் செபிக்கும் நெறிகளையும் அழுத்தமாய்க் கற்பித்தார். அவரே தண்டபாணி சுவாமிகளின் குரு ஆவார். குருவின் அருள் நோக்கம் சுவாமிகளுக்கு இளம் வயதிலேயே கிட்டியமை முன்னை வினைத்தொடர்பு என்பதில் ஐயமின்று.

> "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதற் குருவுமாய் தவத்தினில் உணர்த்தவிட்டு
> அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"
>
> (சிவஞானபோதம், 8)

என்னும் மெய்கண்டார் திருவாக்கு இங்கே நினையத்தகும்.

## கனவில் தோன்றிய முருகன்

இளமையிலேயே இனிய தமிழ்ப் பாடல்கள் இயற்றுகின்ற புலமையைப் பெற்றிருந்த தண்டபாணி சுவாமிகள் தம்முடைய வழிபடு கடவுளாகிய ஆறுமுகப் பெருமானை உள்ளத்தில் ஆழமாக நினைந்து போற்றுவார். முருகப் பெருமானுடைய அருட்கோலத்தை எப்போதும் மனத்திலே எண்ணித் துயில் கொள்வார். இப்படி இவர் வாழ்ந்துவரும் நாளில் ஒரு நாள் இரவிலே ஒரு கனவுக்காட்சியைக் கண்டார்.அக்கனவிலே மாந்திரீகன் ஒருவன் மந்திர வித்தைகள் காட்டித் தன்னை வெல்வதற்கு யாரும் உலகில் இல்லை என்று இறுமாந்து கூறிக் கொக்கரித்தான். இளம் பருவத்தினராகிய சங்கரலிங்கம் ஆறுமுகப் பெருமானையும் அவன்றன் பன்னிரு திருக்கரங்களையும் மனத்தில் ஆழமாக எண்ணி வழிபட்டு, அந்த மாந்திரீகனுடன் மோதுவதற்கு முனைந்தார். இறுதியில் அவன் தோற்று ஓடுமாறு செய்தாராம். இப்படி நிகழ்ந்த கனவுக் காட்சிகளை யெல்லாம் சுவாமிகள் தாம் இயற்றியுள்ள 'குருபர தத்துவம்' என்ற நூலிலே குறிப்பிட்டுச் சொல்லக் காண்கின்றோம்.

இதனை வலிமை செய்கிற வகையில் சுவாமிகளின் திருமகனாராம் செந்தினாயக சுவாமிகள் தாம் இயற்றியுள்ள 'தண்டபாணி விஜயம்' பூருவ பாகத்தில் (பாடல்கள் : 30-33) பின்வருமாறு குறிப்பிடுவர்.

" அந்தக்காட்சிகண் டுடன்விழித் துவகைபூத் தருட்டிருநீறிட்டுக்
கந்தநாயகன் கருணையை வியந்தனர் கழறுநாள் வயதொன்பான்
பிந்தநெல்லையம் பதியடைந் தநுபவப் பெருக்கெலாந் தமதாசான்
செந்தகைக்கருத் துவப்புறச் செப்பவத் தேசிகன் றிருவாயால்"

" மருவுநல்விதி காரனென் றோர்பெயர் வகுத்தனன்..."
(தண்டபாணி விஜயம்,32-33)

இப்படிப் பற்பல வித்தைகளை இளமையிலேயே கற்றுத்தேர்ந்த கவிக்கொண்டலாகத் தண்டபாணி சுவாமிகள் மிளிர்ந்தார். இவருக்கு இவர்தம் குரு சீதாராமர் 'நல்விதிகாரன்' என்றும், 'ஓயா மாரி' என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்தார் என்பது சுவாமிகளின் கூற்று.

## துறவு மேற்கொள்ளுதல்

இயற்பெயராகிய சங்கரலிங்கம் என்பது இவருக்கு நெடுநாள் நிலைக்கவில்லை. முருகப் பெருமானை வழிபடும் இவர் திறம் அறிந்த மக்கள் இவரை 'முருகதாசர்' என்றே சிறப்புடன் அழைக்கலாயினர். இல்லறத்திலிருந்து முத்தி பெறுவதே முறை என்று கூறிய தம் குருவிடம் துறவு பூண்டு முத்திபெறுவதே சிறப்பாகும் என்று சுவாமிகள் அழுத்தமாகக் கூறினர்.

முருகதாசர் வள்ளியூர் மலைக்குச் சென்று அங்கு முருகப் பெருமானை வணங்கிக் கல்லாடை, கௌபீனம் இவற்றை முருகன் திருமுன்னர் வைத்து வழிபட்டுப் பின் அவற்றை எடுத்து அணிந்து கொண்டனர். கொல்லா நோன்புடையவரே உயர்ந்தோர், பெரியோர் என்ற கொள்கையுடையவராகச் சுவாமிகள் விளங்கினார். இதுவே அவர்தம் உயிர்க்கொள்கையாகவும் உயர்கொள்கையாகவும் விளங்கிற்று. தொன்றுதொட்டு வரும் அருளாளர்தம் மரபை அவர் நன்கு உணர்ந்திருந்தார். 'கொல்லாவிரதம் குறிக்கொண்டார் நல்லோர்' என்னும் தாயுமான அடிகளின் வாக்கையும்,

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை (திருக்குறள்,327)

என்னும் குறள் நெறியையும் சுவாமிகள் வாழ்வியல் நெறியாகக் கொண்டு வாழ்ந்தார். வள்ளுவநெறி நம் முன்னோரின் வாழ்க்கை நெறியாக வேண்டும் என்பதில் சுவாமிகளுக்கு ஆழ்ந்த நம்பிக்கை

இருந்தது. அதன் விளைவாகப் பல திருக்கோயில்களில் நிகழ்ந்து வந்த உயிர்ப்பலி இடும் கொடுஞ்செயலைத் தம் அன்பான அறிவுரையால் இவர் மாற்றியுள்ளார் என்பது அறியத்தக்க செய்தியாகும்.

பழனி மலையில் உள்ள இடும்பனுக்கு மக்கள் உயிர்ப் பலி இட்டு வந்தனர். இதனைக் கண்ட சுவாமிகள் ' ஒன்றாக நல்லது கொல்லாமை' என்பதனைத் தம் உள்ளத்திற் கருதி ஒரு வெண்பாப் பாடி அவ்விடும்பன் கோயிலில் நிகழ்ந்துவந்த இச்செயலை நிறுத்தினார். அப்பாட்டை இப்போது காண்போம்.

"பாடுமன்பர் போற்றும் பழனிமலைப் பதியில்நின்
றாடும் இடும்பா! அறையக்கேள்! - நீடும்
கொலைகண்டு மாமிசம்உட் கொண்டுவக்க வேண்டாம்
நிலைகண்டு மெய்யருளில் நில்"

(தனிப்பாடல் திரட்டு , *195*)

எல்லாச் சமயங்களும் உயிர்க்கொலையைக் கடிந்து சொல்கின்றன. சைவ சமயச் சான்றோர் இதற்கு நனி அழுத்தம் தந்து பேசினர். இவ்வழியில் வாழையடி வாழையென வந்த தண்டபாணி சுவாமிகளும் உயிர்ப்பலி இடுதலைத் தடுத்து நிறுத்த முயன்றமை பெறப்படும்.

வள்ளியூர் மலையில் கல்லாடை புனைந்து துறவு மேற்கொண்ட சுவாமிகள் திருச்செந்தூர் சென்று பின் திருநெல்வேலியை அடைந்தார். மாடன், சுடலை, அனுமார், வயிரவர் இனைய கடவுள்களை வழிபட்டு வந்த நிலையில் இவ்வெல்லாத் தெய்வங்களும் 'உண்மையான பிரம்ம சொரூபத்திற்கு வேறல்ல' என்று கூறிவிட்டுத் தாம் மறைந்தன. பின் முருகனே தாம் வழிபடவேண்டிய முழுமுதற் கடவுள் என்று இவர் உள்ளம் தெளிந்து கௌமார முறைமைக்கு முதன்மை தர முயன்றார் என்பது வரலாறு.

## திருமலையினின்றும் உருளல்

முருகதாசர் கடல்மடை திறந்த வெள்ளம் போல் கவிதை பாடும் திறம் இனிதே கைவரப் பெற்றார். இந்நிலையில் நெல்லைத் தண்பொருநை ஆற்றின் நடுவே அமைந்துள்ள ஆற்றிடைக் குறையாகிய திருவுருமாமலை என்னும் குறுக்குத்துறை முருகன் கோவிலில் ஏட்டிலே பல பாக்களை இயற்றி ஒரு பெட்டியிலே வைத்துவிட்டுத் திருத்தலப் பயணம் மேற்கொண்டார். தென்காசிக்கு

அண்மையில் உள்ள திருமலை என்ற முருகன் திருத்தலத்திலே பெருமானுடைய அருட்காட்சி வேண்டினார். முருகனோ



*குறுக்குத் துறை முருகன் கோவில்*

சுவாமிகளின் மனவெளியில் காட்சி நல்கவில்லை. இது கருதி உள்ளம் சோர்ந்த சுவாமிகள் அம்மலைக் கோயிலின் நேர்கிழக்குத் திசையில் நின்று புதுப் பாக்கள் பல புனைந்துவிட்டு வடக்கிலே தம் தலை அமையுமாறு செய்து இறையுணர்வோடு அந்த மலையிலே இருந்து கீழே உருண்டார். மலைக்குக் கீழே மண்தரையில் வீழ்ந்து மயங்கிக் கிடந்தார். உடன் வந்த சுவாமிகளின் மாணவராகிய சரவணதாசர் என்னும் அருணாசலத் தொண்டைமான் சுவாமிகளைக் கண்டு அவருக்கு ஆறுதல் கூறினார். பின்னர்ச் செங்கோட்டை சென்று அங்கு யோகநிலையில் அமர்ந்திருந்த போது முருகப்பெருமான் அவர்தம் மனவெளியில் தோன்றி 'ஏன் உருண்டனை? உன் உடலுக்குப் பெருங்கேடு ஏதும் நேராமல் காத்தவன் நானன்றோ' என்று கூறி மறைந்தனராம். (தண்டபானி விஜயம், பூருவபாகம், 41-44)

"வடதிசையிற் றலைவைத்து மறலிதிசைக் கால்நீட்டி
உடலையந்தத் திருமலையின் உச்சியின்நின் றுருட்டிவிட்டேன்
விடலையிடுந் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனச் சென்றங்கோர் மண்தரையில் வீழ்ந்ததுவே"

(குருபர தத்துவம்,ப.50)

என்று வரும் சுவாமிகள் திருவாக்கால் இதனை அறிய ஒண்ணும்.

தென்பாண்டி நாட்டில் உள்ள பல்வேறு திருத்தலங்களுக்கும் சென்று இறைவனை வழிபட்டுவிட்டு அவர் நெல்லைக்குத்

திரும்பினார். அவ்வாறு திரும்பியபோது குறுக்குத்துறைக் கோவிலில் பெட்டியில் அவர் எழுதி வைத்துச் சென்ற ஏடுகள் யாவும் பொருநை ஆற்றில் வந்த பெருவெள்ளம் அடித்துச் சென்றிருந்தது. சுவாமிகள் பெரிதும் மனம் வருந்தினார். அவர் பாடல்கள் வெள்ளத்தில் சென்றமையினால் தமிழுலகுக்கப் பேரிழப்பே ஆகும் என்பதில் ஐயமில்லை!

தண்டபாணி சுவாமிகளின் தோற்றப்பொலிவு ஏனைய சமயநெறியினரிலிருந்து முழுக்க முழுக்க மாறுபட்டது. சடைமுடி, உருத்திராக்க மாலை கழுத்தில், கையில் வேல், காலில் பாதக்குறடு, இடுப்பிலே கௌபீனம், நெற்றியில் திருநீறு, குங்குமம், இடக்கையில் வடகலைத் திருநாமம், வலக்கையில் தென்கலைத் திருநாமமும் இட்டு முரண்பாட்டில் ஓர் ஒற்றுமை விளங்குமாறு காட்சியளிப்பார். அறுசமய நல்லிணக்கத்தை அவர் தோற்றத்தின்வழி வெளிப்படுத்தினார்.

## முருகன் பழம் பிறப்புணர்த்தல்

பொருநை ஆற்று மணல் மேட்டிலே ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்தவாறே நிட்டையில் ஒருநாள் சுவாமிகள் அமர்ந்திருந்தார். அப்போது முருகப் பெருமான் வெண்ணீறு பூசிய அழகுத் திருமேனியுடன் வீரவாகு தேவருடன் சுவாமிகள் முன்பு காட்சி தந்தான்-சுவாமிகள் தம் வணக்கத்தைத் தெரிவிக்கவும். முருகன் அவருடைய மடியிலே அமர்ந்து சுவாமிகளின் தோளில் கையைக் கோத்துக் கொண்டு அமர்ந்தான். முருகனிடம் இவர் 'முற்பிறப்பில் தாம் யார்?' என்று வினவினார். அதற்கு முருகனோ, ' நீ நமது அருணகிரியே' என்றானாம். அருணகிரிநாதர் முத்தியடைந்து விட்டாரே என்று சுவாமிகள் வினவியதற்கு முருகப் பெருமான் 'அது அப்படித்தான்' என்று அறுதியிட்டுக் கூறி மறைந்துவிட்டான். நிட்டை கலைந்த பின் சுவாமிகள் இந்நிகழ்ச்சியை ஒரு பாடல்வழி வெளிப்படுத்தியுள்ளார். அப்பாடல் வருமாறு.

> " வல்லைவந் தன்பரைக் காக்கும்செவ் வேற்கை வரதனைக் கண்டு
> எல்லையில் லாக்களிப் பாய்மடி மீதில் இருக்கு மென்னைத்
> தொல்லை அருண கிரிதான்என் றன்னவன் சொன்ன துண்மை
> இல்லையென் றாற்குமுக்கென்றுவெங் கோடை இடிவிழுமே"
>
> (தனிப்பாடல் திரட்டு,*180*)

அருணகிரிநாதரின் மறுபிறப்பே தண்டபாணி சுவாமிகள் ஆவார் என்பது ஆய்வுக்குட்பட்டது என்பர் அறிஞர்.

வடதிசைத் தலவழிபாடு

சுவாமிகள் தமிழ்நாட்டில் வடபால் உள்ள திருவண்ணாமலைத் திருத்தலத்திற்குச் சென்று அங்குள்ள ஈசானியத் திருமடத்தில் தங்கியிருந்தார். முருகன் இவருடைய மனவெளியில் தோன்றி, 'நீ 'நமது கோபுரத்திற்கு வருக' என ஆணையிட்டான். அதன்படி சுவாமிகள் அண்ணாமலையார் திருக்கோயில் முன் இரண்டாவதாக உள்ள வல்லாளன் திருக்கோபுரத்திற்குச் சென்றார். அங்கே அருணகிரிநாதருக்குக் காட்சி நல்கி அருள் பாலித்த கம்பத்து இளையனாராகிய முருகனின் சந்நிதியின் நேர்வாயிலின் முன், சுவர் எழுப்பப்பட்டுப் பூசனை தடைப்பட்டு நின்றது. இச்செயல் கண்டு மனம் வருந்திய சுவாமிகள், இறையன்பர்கள் பலரின் துணையினால் சுவரை நீக்கிப் புனிதப்படுத்தித் தம்முடைய வேலையும் ஆங்கே சாத்தி வழிபாடுகள் தடையேதுமின்றி நாடோறும் நடைபெற வழி ஏற்படுத்தினார். பின்னர்ச் சகத்திர தீபம் (திருவிளக்கு ஆயிரம்) என்ற நூலையும் இவர் இயற்றினார். திருநாவுக்கரசரின் உழவாரத் தொண்டினைப் போல் சுவாமிகள் கம்பத்து இளையனார் திருக்கோவிலுள் இருந்த வௌவால்களைப் போக்கி விளக்கிட்டு ஒளி ஏற்றினார். அங்குச் சுவாமிகள் அணிவித்த வேலாயுதம் இன்றும் உள்ளது என்பது அறியத்தகும்.

"சோறிட்ட கையினர் வாழ்அரு ணாபுரித் தொல்சிகிரிக்
கூறிட்ட தான வடபாதிக் கோயிற் குருப்ரனே
சீறிட்ட வாவற் குலம்ஒட ஆயிரம் தீபம் வைப்பான்
நீறிட்ட மேனியும் தண்டமும் தோன்றமுன் நின்றருளே"

(திருவிளக்காயிரம், II, திருப்புகழ் நூல், 2)

என்பது அவர் செய்த தொண்டினைத் துலக்கும் பாடல்.

சுவாமிகள் இயற்றுகின்ற பாடல்களை முருகப்பெருமானே பாடியதாக மயிலலங்காரம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

"என்பாட லேயென யான்பாடும்
பாத்தொகை யாவையும்சேய்
தன்பாட லேயெனச் சாற்றுகின்
றான்எந்தத் தன்மை கொண்டோ?"

(மயிலலங்காரம், 39)

திருஞானசம்பந்தர் அருளிய பாடல்களைச் சிவபெருமானே உரைத்ததாக அவரே கூறுவார்.

"திருமலர்க் கொன்றையான் நின்றியூர் மேயான்
தேவர்கள் தலைமகன் திருக்கழிப்பாலை
நிருமலன் எனதுரை தனதுரையாக நீறணிந்
தேறுகந் தேறிய நிமலன்" (தேவாரம், 821)

என்பது ஆளுடையபிள்ளையின் அருள்வாக்காகும்.

"ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் - மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணர்ந்து
என்செயலே காண்கிலே னே" (சிவபோகசாரம், 45)

என்னும் குருஞானசம்பந்தர் கூற்றிற்கு இலக்கியமாக வாழ்ந்தவர் இவர் என்பது அறியத்தகும். சுவாமிகள் தாம் ஒன்று நினைக்க இவர்தம் கை மற்றொரு வண்ணம் எழுதுமாறு செய்யுமாம் திருவருள் என்பார்.

## வண்ணச்சரபர் நூலை அரங்கேற்றல்

இவர் தலவழிபாடு செய்யச் சென்னைக்குச் சென்றார். வழியில் திருப்பரங்குன்றம், மதுரை, சிதம்பரம், திருமயிலை ஆகிய திருத்தலங்களை வழிபட்டுவிட்டுச் சில நாட்கள் சென்னையில் திருச்சிற்றம்பல ஞானியாருடன் நட்புக் கொண்டார். அவ்வமயம் அங்கு யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாசர் வழிவந்த ஆறுமுகநாவலரை நேரில் கண்டு உரையாடி மகிழ்ந்தார். அப்போது சுவாமிகள் சென்னைக் கந்த கோட்டத்து முருகப்பெருமான்மீது பிள்ளைத்தமிழ், கந்தப் பெருமான் வெண்பா அந்தாதி இனைய நூல்களை இயற்றி அங்கேயே அரங்கேற்றமும் செய்தனர்.

அரங்கேற்றம் என்பது பண்டைக்காலத் தமிழகத்தில் நிகழ்ந்த ஒன்று. நூலரங்கேற்றம் என்பது ஒரு பொருளுக்கு ISI முத்திரை பெறுவது போன்றதாகும். "பழங்காலத்தில் புது நூல்களை அவற்றின் ஆசிரியர், புலவர் கூடிய அவைக்களத்தில் படித்தலும், உரை கூறுங்கால் சமயம் நேர்ந்துழிப் புலவர்கள் கடாக்கள் விடுத்தலும், நூலாசிரியர் அக்கடாக்களுக்குத் தக்க விடையிறுத்தலும் போன்ற நிகழ்ச்சிகள் நிகழும். அவைப் புலவோர் ஏற்றுக்கொண்ட நூல்கள் அன்னாரின் சாற்றுக் கொண்ட நூல்களேயாம். அத்தகைய நூல்களே சிறந்தனவெனப் பலராலும் கொண்டாடப்படும். இங்ஙனம் புலவர் கூட்டத்தில் வடிகட்டப்பெற்று வெளிவந்த நூல்களே நீடுநின்று நிலவின" என்று அறிஞர் வி.நா. மருதாசலக் கவுண்டர் தம்முடைய 'புலமைநூலில்' (ப.217) கூறுவது இவன்

எண்ணத்தகும். மேற்கண்ட முறையில் சுவாமிகள் சென்னைக் கந்தகோட்டத்து முருகன் பிள்ளைத்தமிழை அரங்கேற்றிய நிகழ்ச்சியின் போது காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் என்பார், சுவாமிகளிடம் சில வினாக்களை எழுப்பினார். பிள்ளைத்தமிழில் தாலப்பருவம் 9 - ஆவது பாடலில்,

"செக்கரும் ஒஞ்சிய செம்மைநிறம் பெறு
சேயே தாலேலோ"

என்ற அடியில் வரும் 'ஒஞ்சல் என்பது கடுஞ்சொல், அதற்கு என்ன பொருள்' என வினவினார். "இச்சொல் பாண்டி நாட்டில் வழங்கும் வெண்சொல். நாணுதல் என்னும் பொருள் உடையது; பாண்டி நாட்டுப் பெண்மக்கள் பேசும்போது பயன்படுத்தும் சொல் இது" என்று சுவாமிகள் அவ்வினாவிற்கு அமைதி கூறினார். அதனை முதலியார் ஏற்றுக்கொள்ளவில்லை. அப்போது சுவாமிகள் "நமது பாண்டிநாட்டைச் சார்ந்த ஒருவரும் இங்கு இலரோ?" என்று வினவ, "இதோ உள்ளேன். இம்மொழி நமது பாண்டிநாட்டில் உண்டு; அறிவேன்!" என்று ஒரு சைவ அன்பர் சான்று கூறினார்.

இதேபோன்று சப்பாணிப் பருவத்தில் இறுதிப்பாடலில் "சென்னையில் வைகினை கொட்டுக சப்பாணி" என்று வரும் பகுதியைப் படித்தனர். 'வைகி' என்ற சொல்லின் சந்தம் யாது? என்று முதலியார் வினவவே, 'தய்ய' என்ற சந்தம் என்றார். அதனை அப்புலவர் ஏற்கவில்லை. அப்போது சுவாமிகள், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் குமரகுருபரர் "வைதிகப் பாட்டினர் " என்று கூறியது போன்று "வைகினை" என்பதனைத் "தய்யன்" என்னும் சந்தத்தில் இசைத்தேன் என இவர் அமைதி கூறித் தம் நூலை அரங்கேற்றினாராம்.

கந்தகோட்ட முருகன் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றத்தைப் போன்றே 'அறுவகையிலக்கண' நூலைச் சுவாமிகள் திருநெல்வேலியில் உள்ள திருவுருமாமலை முருகன் கோவில் முகப்பு மண்டபத்தில் அரங்கேற்றம் செய்ய எண்ணினார். உள்ளூர்ப் புலவர்கள் சிலர் 'சபையில் வரும் வினாக்களுக்கு உரிய விடைகூறும் தீரத்துடன் செல்க' என்று அழுக்காறு கொண்டு அவரிடம் கூறினர். இதனைச் செவிமடுத்த சுவாமிகள்,

"ஓதுவார் கவிராயர் எனும் பெயரே மலையிலக்கென்
றுன்னி வாழ்வீர்!
வாதுபா டத்துணிந்து வரவேண்டாம்; வருவீரேல்
வண்ணப் பாட்டுக்

காதுதான் வேண்டுமென்று கடிக்கவரும் இதுபழமை
கண்டீர் எங்கள்
மோதும்வேற் குருபரன்றான் முழுதுணர்ந்த புலவனெனு
மொழிபொய் யாதே" (தனிப்பாடல் திரட்டு, 259)

என்று பாடினார். சுவாமிகளின் இவ்வீறு கொண்ட பாடலைக் கேட்ட அழுக்காறு கொண்ட புலவர்கள் மனம் மாறி அறுவகை இலக்கண நூலின் அரங்கேற்றத்தை முழுவதும் கேட்டுச் சிறப்பித்தனர். மேலும் தத்த, தாந்த, தந்த, தாந்த எனவரும் திருப்புகழ்ச் சந்தங்களுக்குரிய இலக்கணத்தை நூறு நூற்பாக்களில் 'வண்ணத்தியல்பு' என்ற பெயரால் நூல் இயற்றித் திருப்பரங்கிரிச் சந்நிதியில் அரங்கேற்றம் செய்தனர். இதன் விளைவாகச் சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள் வண்ணச்சரபருடன் நட்புக் கொண்டனர்.

## பல்வேறு பெயர்கள்

முருக வழிபாட்டை (கௌமார சமயத்தை)த் தமிழகமெங்கும் சென்று பரப்பிய காரணம் கருதி இவரை முருகதாச சுவாமிகள் என்றும், உச்சி முதல் உள்ளங்கால் வரை திருநீறு பூசிக் கையில் தண்டாயுதம் கைக் கொண்டும், தலையின் முடியை விரிய அவிழ்த்துத் தொங்கவிட்டும் தோன்றும் கோலத்தைக் கண்டோர் தண்டபாணி சுவாமிகள் என்றும், திருப்புகழ்ப் பாக்கள் பல ப்பாடியுள்ளமையால் திருப்புகழ்ச் சுவாமிகள் என்றும், வண்ணப்பாடல்கள் பல பாடிப் பைந்தமிழுக்குத் தொண்டு செய்தமையால் வண்ணச்சரபம் என்றும் இவர் வாழ்ந்த காலத்தில் மக்களும் கவிமழை பொழியும் கவிஞர்களும் இவரைப் போற்றிப் பாராட்டினர்.

## பிரபந்தங்களைக் கிழித்தெறிதல்

இவர் நெல்லையில் இருந்தபோது முருகப் பெருமான் இவருக்குக் காட்சி தந்து. "நீ என் மீது பதினாறு பனுவல் பாடுக! பன்னிரண்டு எனக்கு; வள்ளி, தெய்வயானைக்கு ஒவ்வொன்று; வீரவாகுவுக்கு இரண்டு என்றும் பாடுக. பதினொன்றாம் பனுவல் பாடும்போது நமது கந்தலோகத்திலிருந்து திருநீறும், உருத்திராக்கமும் உனக்குத் தருவோம் என்று கட்டளையிட்டான். அதனை ஏற்றுச் சுவாமிகள் முருகன் மீது பிரபந்தங்கள் பாடலாயினர். முருகனின் கட்டளைப்படி இவர் பத்தினை முடித்துப் பதினொன்றாம் பிரபந்தம் 'கந்தமாலை' பாடி முடித்தார். ஆயினும், முருகன் அருளியவாறு திருநீற்றுப் பிரசாதம் வரவில்லை. இது கருதிச் சுவாமிகள் பெருமானுடன் ஊடல் கொண்டதோடு தாம் இயற்றியிருந்த

பதினொரு பிரபந்தங்களையும் பொருநையாற்றிலே கிழித்து எறிந்தார். அதுமுதல் பாடல்களை இயற்றாமல் தியான நிலையில் இருந்தனராம். இப்படி அவசரப்பட்டுச் செய்தமைக்காகப் பின்னர் வருந்திய தண்டபாணி சுவாமிகள் பதினாறு பிரபந்தங்களையும் பாடி அரங்கேற்றம் செய்யத் திருச்செந்தூர் சென்றார். பதினாறு வகையான நூல்களைப் புனைந்து கற்றவர்களும் இறையன்பர்களும் கூடியிருந்த அவையிலே சுவாமிகள் அரங்கேற்றினார். வெண்பா அந்தாதி, சிலேடை வெண்பா, திரிபந்தாதி, யமக அந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, செந்நினாயக சதகம், உலா, நவரசமஞ்சரி, அகப்பொருட்கோவை, தசாங்க வகுப்பு, கௌமார விசயம், சந்தமாலிகைத் திருப்புகழ், குஞ்சரிமாலை, வள்ளிநாயகி பிள்ளைத் தமிழ், வீரவாகு வாளலங்காரம், வீரவாகு வண்ணப்பதிகம் என்னும் பதினாறு பனுவல்களே அவை. அரங்கேற்ற முடிவில் முருக பக்தியில் அமுத்திய பற்றுடை அருச்சகர் ஒருவர் இலைத்திருநீற்றுப் பிரசாதம் வழங்கினார். சுவாமிகளும் முருகப் பெருமானுடன் கொண்ட ஊடல் நீங்கிப் பின் திருநெல்வேலிக்குத் திரும்பினார். கௌமார நெறியையும் குமரப் பெருமானையும் போற்றும் இவர்,

> "சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை
> சுப்பிரமணியனுக்கு மேலான தெய்வமில்லை"

என்று உணர்ந்து செயல்பட்டவர்.

### மரபுவழி வந்த மனத்துணிவு

நெல்லையிலிருந்து சுவாமிகள் கேரளத்தை ஆண்டு வந்த ஆயிலியச் சேரனை அணுகிப் பொருள் பெறச் சென்றார். திருவனந்தபுரத்தில் ஓர் அரண்மனைப் புலவர் வாயிலாக மன்னருக்கு ஒரு மடல் அனுப்பினர். அரசனோ அதனைப் பொருட்படுத்தவில்லை. மேலும் அரசனைக் காணச்செல்லும் போது வாய்புதைத்துக் கைகட்டிப் பேசவேண்டும் என்று சுவாமிகளிடம் சிலர் அறிவுறுத்தினர். இதனைக் கேட்ட சுவாமிகள், 'நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்' என்னுமாறு அமைதியாக ஒரு வெண்பாவைப் பாடிவிட்டுப் பதுமநாமப் பெருமானை வணங்கச் சென்றனர். அவர் பாடிய தமிழ்ப்பாவின் ஆற்றலை வீறுடன் சாற்றுவதாக அமைந்துள்ளது.

> "எங்கும் புதையா திலங்குதமிழ்ப் பாடலென்னும்
> பொங்கு மதுரம் பொழியும்வாய் - நங்குகவேள்
> இன்னருள் செய்யான் எனினுமெழிற் கேரளத்து
> மன்னிடம் போய்ப்புதைக்கு மா" (தனிப்பாடல் திரட்டு, 271)

என்று பாடுவதிலிருந்து தமிழ் பிறருக்குத் தலைவணங்கக் கூடாது என்னும் அழுத்தமான கொள்கை சுவாமிகளுக்கு இருந்தமை யினைக் காண முடிகிறது. இவர்,

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் - இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" (தமிழ் விடுதூது)

என்னும் மரபுவழியில் வந்தவர் என்பது இந்நிகழ்ச்சியினால் தெளிவாகப் புலனாகின்றது.

ஔவைப் பெருமாட்டிக்குப் பொருள் கொடாது அதியமான் நெடுமானஞ்சி காலம் தாழ்த்தினான். அதனை எண்ணிய ஔவையார் வாயிலோனைப் பார்த்துப் பாடுவதாக வரும் புறப்பாட்டில், "மரத்தைத் துணிக்கும் தச்சன் பயந்த மழுவையுடைய கைத்தொழில் வல்ல மக்கள், காட்டிடத்துச் சென்றால் மரங்கள் பல உளவாகும். அது போன்று எங்கே சென்றாலும் என்னை ஆதரிப்பார் அங்கே இலர் என்று உன் மன்னன் எண்ணினானோ?" என்று துணிவுடன் வினவுவார். இத்தகைய புலமைத் துணிவும் தமிழ்த்துணிவும் ஔவையாரை,

"மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே" (புறம், 206)

என்று பாடும் வண்ணம் தூண்டியது! அத்தகைய புலமைத் துணிவும் தமிழ்த் துணிவும் சுவாமிகள் உள்ளத்தில் ஓங்கி நின்றமையால்,

"உன்றனது கேரளநா டொன்றுமே இங்கிலகும்
என்றனது நாடுலகம் எங்குமே - பொன்தரநீ
மாட்டாயோ சேர மகராச னேமதுரப்
பாட்டாசை யின்றே பகர்" (தனிப்பாடல் திரட்டு, 272)

"ஆயிலியச் சேரன் அநியாயக் காரன்மனை
வாயிலிற்போய்ப் பிச்சையின்றி வந்தேனே - நீயிலையோ
வேலாயு தக்குகனே வெள்ளிமைல மேற்குலவும்
காலாயு தக்கைமுரு கா" (மேலது, 273)

என்று பாடித் திருவனந்தபுரத்தை விட்டுப் புறப்பட்டார். இப்படிச் சுவாமிகள் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பல. இவர் தமிழையும் தன்மானத்தையும் எதற்காகவும் விட்டுக் கொடுக்காத மனப்பாங்குடையவராகத் திகழ்ந்தார்.

சுவாமிகள் திருவனந்தபுரத்திலிருந்து திரும்பும் வழியில் கொங்கு நாட்டில் உள்ள ஊற்றுக்குழிக்கு வந்து சேர்ந்தார். அங்கே அப்போது வாழ்ந்துவந்த ஒரு சிற்றரசரைக் கண்டுவரச் சுவாமிகள் எண்ணித் தக்க ஒருவர்வழிக் கடிதம் அனுப்பினார். ஆனால் அச்சிற்றரசனோ மறுமொழி ஏதும் கூறவில்லை. அங்குள்ள கணக்கப்பிள்ளை சுவாமிகளை வரவேற்று நன்கு மதித்தார்; விருந்து பேணினார். இதனை இவர்தம் பாடல்வழிப் புலப்படுத்துவர். அப்பாடல் வருமாறு:

"ஊற்றுக் குழியில் ஒருகணக்கப் பிள்ளைசெய்த
ஆற்றல் அளவும் அரண்மனையார் செய்யவில்லை;
ஏற்ற மிகுபழனிக் கேகென்று இரவிசொல்லத்
தோற்றியது வேலனருள் செய்யும்விதம் தேர்ந்திலனே"

(தனிப்பாடல் திரட்டு, 37)

ஆமாம்! சுவாமிகளின் தன்மானத் துறவுள்ளம் எதற்கும் தலை தாழ்ந்தது கிடையாது என்பதனையே இது சுட்டுகின்றது. இத்துணிவு,

"பெரிதே உலகம் பேணுநர் பலரே" (புறம், 207)

என்ற பழந்தமிழ்ப் புலவர்தம் மரபுவழி வந்த துணிவன்றோ!

### பழனித்திருவாயிரம் பாடி மகிழ்தல்

திருவருட்பாங்கின்படி சுவாமிகள் ஊத்துக்குழியிலிருந்து ஆவினன்குடியில் அமர்ந்திருக்கும் முருகப் பெருமானை வழிபட வந்து சேர்ந்தார். பழனி மலையின் நடுவில் இடும்பன் கோவில் இருப்பதாகவும் அங்கு உயிர்ப்பலி இடுவதாகவும் அன்பர்கள் பலர் கூறினர். இது கேட்டுச் சுவாமிகள் மிகவும் மனம் வருந்தினார். இடும்பனைக் கண்டு அறிவுறுத்தும் வகையில் உயிர்க் கொலையைத் தவிர்க்குமாறு ஒரு வெண்பாப் பாடினர். பின்பு தண்டபாணிக் கடவுளைத் தரிசித்துவிட்டுச் சில காலம் பழனி அடிவாரத்தில் தங்கியிருந்து 'பழனித் திருவாயிரம்'என்ற நூலைப் படைத்தருளினார். அப்போது அங்குச் சிறந்த புலவரென விளங்கியிருந்த மாம்பழக் கவிச்சிங்கநாவலருடன் நட்புக் கொண்டிருந்தார். பின் இராமநாதபுரம் சென்று சேதுபதி மன்னரைக் காண விழைந்தார். ஆனால், அச்சந்திப்பு நிகழவில்லை. அப்போது மன்னரிடமிருந்து வெண்பாவின் ஈற்றடி கொடுத்துப் பாடுமாறு ஓர் ஓலை வந்தது. அழுக்காறுடைய புலவர்கள் சிலர் ஈற்றடி தமக்குத்

தரப்பட்டது என்று பொய் கூறிச் சுவாமிகளை மன்னரைக் காணவிடாமல் தடுக்க முயன்றனர். ஆனால், சுவாமிகளோ 'வண்ணம் பாடும் எனக்கு இது மிக எளிதாகும்' என்று அப்புலவர்களுக்கு அறிவுறுத்திவிட்டு, 'இதோ ஒருகலை பாடித்தருகின்றேன். நீங்களோ அரசரோ அதனை முடித்துப் பாடுங்கள்' என்று அறைகூவலும் விடுத்தார். ஈற்றடியில் வந்த ஆறு சொற்களுக்கு முறைப்படி முருகனுக்கே பொருள் பொருந்தும் வண்ணம் ஒரு வெண்பாவும் பாடினார் இவர். "கண்விண்பெண் பொன்பண் கவி" என்பது மன்னர் விடுத்த ஈற்றடி, இதோ சுவாமிகள் அருளிய அவ்வெண்பா:

" முருகனுக்கு மூவாறு, முன்புதொட்டுக் காத்தல்,
உருகுமயல் ஈதல், உறுபூண் - பெருகுசெவி,
உண்மகழ்ச்சி சேர்ப்ப(து), உலகதனைச் சூழவிடல்
கண்விண்பெண் பொன்பண் கவி"

என்று நிரல்நிரைப் பொருள்கோளில் அமைத்துப் பாடிய பின்னும் அரசருடன் சந்திப்பு நேரவில்லை.

## வள்ளலாருடன் சந்திப்பு

சுவாமிகள் பழனியிலிருந்து கூடலூர் சென்று அங்கு ஒரு செட்டியார் வீட்டிலே தங்கியிருந்தார். அவர் வீட்டு வேலியில் இருந்த முள் சுவாமிகளின் காலைத் தைக்க, அது கண்ட செட்டியார் அவருக்குப் பாதுகை உதவினார். சுவாமிகள் கூடலூரில் இருந்தபோது வடலூர் இராமலிங்க சுவாமிகள் அன்பர் ஒருவருடைய இல்லத்தில் தங்கியிருப்பதனை அறிந்தார்; அவரைக் காணவும் சென்றார். இருவரும் தங்களின் உணர்வுகளைப் பரிமாறி நட்பைப் புலப்படுத்திக்கொண்டார்கள், அப்போது சுவாமிகள் வடலூர் வள்ளலிடம், "தாங்கள் பண்டைத் தாயுமானவராக முற்பிறப்பில் இருந்தவர்" என்றுணர்த்தினார். அவர் "இருக்கலாம்" என்றார்.

" அருமைத் தமிழ்த்தாயு மானபிள்ளை தாமே
பெருமை இராமலிங்கம் பிள்ளை - பொருவிலதாக்
கூறும் உரையாற் குலவுநச்சி னார்க்கினியர்
ஆறு முகநா வலர்" (தனிப்பாடல் திரட்டு, 282)

என்பதே அவ்வெண்பா. இப்படி வடலூர் அடிகளுடன் தாம் மூன்று முறை கண்டு அளவளாவியமை குறித்து,

"அவனுடன், மூனறு காலம்
அளவளாய்ப் பேசி யுள்ளேன்
எவளவும் பேத மின்றி
என்கருத் திசைந்தே சொன்னான்" (குருபரதத்துவம்)

## செட்டிநாட்டில் சிந்தைகுளிர்தல்

தேவகோட்டைக்குச் சென்ற சுவாமிகள் வேதாந்தம் கறுப்பன் செட்டியார் என்பவரின் தவச்சாலையில் தங்கினார். மேலும் அங்கு மேலவீடு சிதம்பரம் செட்டியாரின் வேண்டுகோளை ஏற்று அருளினார். செட்டியார் தமக்கு மகப்பேறில்லாக் குறையைத் தீர்த்தருளச் சுவாமிகளிடம் வேண்டினார். சுவாமிகள், 'எனக்கு இப்போதுள்ள பொருட்கடன் தீர உதவினால், முருகன் உமது மனைவியின் வயிற்றில் ஆண்மகவு உதிக்கச் செய்வான்' என்று மொழிந்து திருநீறு வழங்கினார். உடன் செட்டியாரும் ஆயிரம் ரூபாயைத் திருநெல்வேலிக்கு அனுப்பிச் சுவாமிகளின் தீராக் கடனை அடைத்தார். பின்னர்ச் சுவாமிகள் தேவகோட்டைச் சிவன் கோவிலில் உள்ள தண்டபாணிக் கடவுளின்மேல் பிள்ளைத் தமிழ், திரிபந்தாதி, திருப்புகழ், பதிகம் ஆகியன பாடி ஆறுமுகன் திருவருள் செட்டியாருக்குக் கிட்டுமாறு முறையிட்டார். சிலநாட் கழித்துச் சிதம்பரம் செட்டியார் ஆண்மகவைப் பெற்று மகிழ்ந்தார்; வண்ணச்சரபரின் வாக்கு வன்மையை எண்ணிச் செட்டியார் இறும்பூது கொண்டார்.

பின்னர்க் குன்றக்குடிப் பெருமான்மீது ஒரு கலம்பகம் பாடினார். காரைக்குடி நகரில் அவர் சிலநாள் தங்கியிருந்த போது அந்நகர் முருகன்மீது முப்பத்தாறு திருப்புகழ்ப் பாடல்கள் பாடி அரங்கேற்றினார். அப்போது ஒரு வேதியர் வீட்டுத் திண்ணையில், ஒரு பெரியவர் அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல் ஒன்றை ஒரு சிறுவனுக்குப் பயிற்றுவித்துக்கொண் டிருந்தார். அதனைக் கண்ட சுவாமிகள் அவரிடம் சென்று, 'இச்சிறுவனுக்கு இப்பாடலைப் பயிற்றுவது பிரயாசை' என்று கூறினார். பாடம் சொல்லிக் கொடுத்தவர் அட்டாவதானம் பாலசுப்பிரமணிய ஐயர் என்பவராவர். பின் இருவரும் உரையாடியிருந்தனர். ஐயர் அவர்கள் வண்ணப்பாடல் பாடும் அளவிற்குப் புலமை வளம் பெறுமாறு தேர்ச்சியடையச் செய்தார் சுவாமிகள்.

## காரைக்குடியில் நிகழ்ந்த அதிசயம்

குன்றக்குடி முருகன்மீது சுவாமிகள் ஆறு வகுப்புகளும் வண்ணமும் பாடி அரங்கேற்றினார். இதனையறிந்த அவ்வூர்

வணிகர்கள் சுவாமிகளுக்கு ஐந்நூறு ரூபாய் வழங்கிச் சிறப்பித்தனர். அப்போது காரைக்குடியில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. செட்டியாரைப் போன்று உருவெடுத்து வந்து முருகப் பெருமான் சுவாமிகளிடம் பேசியிருந்து மறைந்தான். இதனைச் சுவாமிகள், "காரைநகர்ச் செட்டியுருக் காட்டினானே" என்று பதிகம் பாடி வெளிப்படுத்தினார். தம்முடைய பொருட்கடன் தீர்ப்பாரைக் காணவேண்டி ஊர் ஊராய்த் தாம் அலைந்தமையை எண்ணி அப்பதிகத்தைப் பாடினார். இவ்வுண்மையை அவர்.

"துட்டேமெய்த் தெய்வமெனச் சுழல்வேனைச்
சீடனெனச் சொன்னாய் கொல்லோ?
மட்டேயும் பொழிற் குன்றக் குடியானே
எனப்பதிகம் வரைந்தேன்"

(குருபரதத்துவம், குன்றக்குடிச்சருக்கம், 18)

என வெளிப்படுத்தியுள்ளார். அங்கிருந்து பல்வேறு தலங்களுக்கும் சென்றுவிட்டுச் சுவாமிகள் வேம்பத்தூரில் அந்தணப் புலவரும் ஆசுகவியுமாகிய வெண்பாப்புலிப் பிச்சுவையரைக் கண்டு மகிழ்ந்தனர்.

இடைக்காலத்தில் வாழ்ந்த இரட்டைப் புலவர்களுள் ஒருவர் முன்னிரண்டடிகளைப் பாட மற்றவர் பின்னிரண்டு அடிகளைப் பாடி முடித்து வைப்பார். இதே போன்று ஒரு நிகழ்ச்சி அங்கே நடந்தது. வெண்பாப்புலி வேம்பத்தூர்ப் பிச்சுவையர்,

"பூமிக்குள் மிக்க புகழ்முருக தாசரெனும்
சாமிக்கு நைவே தனமெங்கே"

என்று வினவி வெண்பாவைத் தொடங்கினார் உடனே வண்ணச்சரபர்,

"................. .......... ............. தேமிக்க
செந்தமிழின் சீரும் திருக்கைவேல் ஏந்திவரும்
கந்தனன்பும் உள்ளமனைக் கண்"

என்று விடைகூறி வெண்பாவை நிறைவு செய்தாராம்.

## நெடுங்குளத்தில் நிகழ்ந்தது

நெடுங்குளம் என்ற ஊருக்குச் சுவாமிகள் சென்றார். அப்போது நண்பகலாயிற்று; சுவாமிகளுக்கோ கடும்பசி. பசி வந்திடப் பத்தும் பறந்து போகுமல்லவா? அவ்வீதியில் உள்ள

நான்கு வீடுகளில மூன்றை விட்டு விட்டு நான்காவது வீட்டை நோக்கி அவர் நடந்தார். அந்நேரம் அவ்வீட்டிலிருந்து ஓர் அம்மையார் 'சுவாமி! என்ன பார்க்கிறீர்கள்?' என்றார். அவரும், "இவ்வேளைக்கு வேண்டிய உணவு குறித்து வந்தேன்" என்றார். அந்த அம்மையாரும் நல்ல உள்ளத்தோடு வரவேற்றுச் சுவாமிகளுக்கு உணவு பரிமாறினார். அவரும் உண்டபின் உண்ட இடத்தைத் தூய்மைப்படுத்தி அதற்குரிய பணத்தைக் கொடுக்க முயன்றார். அப்போது அந்த அம்மையார் "என் கணவரின் கட்டளைப் படியே உணவு கொடுத்தேன்; பணத்துக்காக இல்லை" என்று கூறினார்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" (குறள். 322)

அல்லவா! சுவாமிகளிடம் அந்த அம்மையார் "இரண்டு ஐயங்கள் அவற்றைத் தீர்த்து வைக்க வேண்டும்"என்று வேண்டினார். (1) "தருமம் என்பதன் உண்மையான வடிவம் யாது? (2) உயிர்கள் இறைவனிடம் பெறும் பயன்களுள் மேலானது எது?" என வினவினார். சுவாமிகளும், (1) "தன்னைப் போன்ற உயிர்களிடத்துப் பதில் உதவியை விரும்பாமல் உதவுவதே உயர்ந்த தருமம் (2) மற்றொரு தாய் வயிற்றில் பிறவாமல் ஒன்றுபடுகின்ற பரமுத்தியே தெய்வத்தால் பெறப்படும் பயனில் மேலானது" என்று தக்க விடை கூறினார். அந்த அம்மையாரை வாழ்த்திப் பின் சுவாமிகள் திருநெல்வேலிக்குத் திரும்பினார்.

## அருணகிரிநாத சுவாமிகள் புராணமும் புலவர் புராணமும் அரங்கேற்றுதல்

சுவாமிகள் நெல்லையில் தங்கியிருந்த பொழுது முருகப்பெருமான் அருளின்படி அருணகிரிநாத சுவாமிகளின் புராணத்தை 450 விருத்தப் பாக்களில் இலக்கிய நயங்கள் யாவும் பொருந்தப் பாடி அரங்கேற்றினார். தெய்வ அருள் பெற்ற புலவர்களின் வரலாற்றை 72 சருக்கங்கள் அமையுமாறு 'புலவர் புராணம்' எனப் பெயரிய நூலை 3000 பாடல்களில் பாடினார். சேக்கிழார் பெரியபுராணத்துள் 63 நாயன்மார்கள் 9தொகையடியார்கள் பற்றி நூலியற்றித் தமிழுக்கு அணி செய்தார். அதே வழியில் சுவாமிகள் தொல்காப்பியர் முதலாகத் தாம் வாழ்ந்த காலம் வரை இறையருள் பெற்ற புலவர்களின் வரலாற்றை 72 சருக்கங்கள் (63+9) அமையப் பாடினார். பின்னர்த் திருவாமாத்தூர்த் தலபுராணத்தை வடமொழியிலிருந்து 1000 பாடல்களாக

மொழியாக்கம் செய்து பாடினார். சுவாமிகள் தம் வரலாற்றையும் இறையனுபவத்தையும் 'குருபர தத்துவம்' என்னும் பெயரில் செய்யுளிலேயே பாடி மகிழ்ந்தனர்.

இப்படிப் பல்வேறு நூல்களையும் பனையோலை ஏட்டில் சுவாமிகள் தாமே 'சர்வசாதாரணி' என்ற எழுத்தாணி கொண்டு எழுதியுள்ளார். இந்நூல்கள் யாவும் இவர்தம் இறைப்பற்றையும் இலக்கியம் படைக்கும் வற்றாத புலமை வளத்தையும் வெளிப்படுத்தி நிற்கின்றன.

## தலை தப்பியது

சுவாமிகள் கொங்குநாட்டுத் தலங்களை வணங்கிவிட்டுச் சேலம் சென்றார். அங்குள்ள சிவன் கோவிலில் இரண்டொருநாள் தங்கிப் பாடல்கள் பல இயற்றினார். பின்னர்ச் சுவாமிகளும் சோழவந்தான் கந்தசாமி சுவாமிகளும் சென்னைக்குச் செல்லும் புகையூர்தியைப் பிடிக்கச் சிவன் கோவிலிலிருந்து புறப்பட்டு வீதியிலே நடந்து வந்து கொண்டிருந்தனர். அப்போது மண்டபத்தின் மேலிருந்த ஒருவன் இவர்களின் வருகையை அறியாமல் பெரிய கருங்கல்லைக் கீழே எறிந்தான். தொடர்ந்து பின்னால் வந்துகொண் டிருந்த கந்தசாமி சுவாமிகள் கருங்கல் வருவது கண்டு அச்சமுற்று, "சுவாமி!" என்று பதறி அலறினார்! மயக்கமுற்று வீழ்ந்தார்! அந்தக் கல் சுவாமிகளின் தலைமேல் போட்டிருந்த துண்டின்மீது பட்டுக் கீழே வீழ்ந்தது. ஆமாம்! 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' தான்! தலையில் கல் விழாமற் காத்தவன் அந்தக் குமரன் அல்லவா! அத்திருவருளை எண்ணிச் சுவாமிகள் மகிழ்ந்தார்.

இருவரும் புகைவண்டியில் ஏறி அமர்ந்த பின்பு சுவாமிகள், "கல் விழுந்திடாதபடி காத்த தெய்வம் துணையே" என ஈற்றடி அமையுமாறு ஒரு பதிகம் பாடினார். அப்பதிகப் பாடலில் ஒன்று இதோ:

"சேலநகர்ச் சிவன்கோவில் மண்டபத்துற் றொருவன்
தெரியாமை யால்எறிந்த திரள்கருங்கல், தலைமேல்
காலமிருத் தாகிவிழா தணுவளவில் விலக்கிக்
காத்ததெய்வந் தனைநாடிக் களித்துநெல்லை யூரான்
மாலனையார் மலிசென்னை நகர்க்கேகும் வழியில்
மருவுபுகை வண்டியிடை வரைதருமிப் பாடல்
சாலநலம் எனக்கொண்டு படிக்கின்றோர்க் கெல்லாம்
சற்றேனும் அவமிருந்து சாராது நிசமே"

(தெய்வத்துணைப் பதிகம், *11*)

"வானம் இடிந்து தலையில் விழும்படி
வம்பு வந்தாலும் என்னை - அந்தக்
கானமயில் முருகையன் திருவருள்
கைவிட மாட்டாதே" (பாம்பன் சுவாமிகள்)

என்று பாம்பன் சுவாமிகள் கூறுவது வண்ணச்சரபர் வாழ்வில் நிகழ்ந்து விட்டது.

## மணவாழ்க்கையை மகிழ்ந்து ஏற்றல்

அந்நாளில் மயிலம் முருகன் திருமுன்பு சுவாமிகள் ஆறுமுகப் பெருமானின் அருளாணையின்படி தெய்வச் செயல் எனத் தாமரை இலைமேல் நிற்கும் தண்ணீர் போன்று வேலாயுதம் பிள்ளை, திருமலையம்மை ஆகியோரின் மகள் சுந்தரத்தம்மையை மணவாட்டியாக ஏற்றுக்கொண்டார். சுவாமிகள் தெய்வசாட்சியாக உருத்திராக்கத்தையே மங்கல நாணாக அணிந்து அன்னாரைத் தம்முடைய மனைவியாக ஏற்றுக்கொண்டார். அடியவர் பசித்துன்பத்தை இன்னுணவினாலும், பிறவித் துன்பத்தைச் செவியுணவினாலும் போக்குதற்குரிய முறையில் வண்ணச்சரபர் திருமணத்தை ஏற்றுக் கொண்டார்.

"அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை" (குறள். 49)

என்னும் குறள் வழியைச் சுவாமிகள் ஏற்று வாழத் தொடங்கினார் எனலாம்.

## தில்லைத் திருவாயிர அரங்கேற்றம்

பின்னர்ச் சுவாமிகள் தில்லை சென்றார். அங்குச் சுவாமிகளிடம் சிவநேயச் செல்வராகிய அம்பலவாண சுவாமிகள் "முருகனையே நாளும் பாடிப் பரவும் தாங்கள், எங்களப்பன் தில்லைக் கூத்தனையும் பாடக் கூடாதா?" என வேண்டினர். சுவாமிகளோ, "உங்களப்பன் இவன் விரும்புமாறு சிற்றுண்டியை எவ்வித முயற்சியுமின்றிக் கொடுப்பானேயானால் ஆயிரம் பாடல்கள் பாடுகின்றேன்" என்று உறுதி கூறினார். அதன் படியே நிவேதனப் பிரசாதம் சுவாமிகளுக்குக் கிடைத்தது. பிரசாதத்தைப் பலருக்கும் பகிர்ந்தளித்தார். சிலகாலம் சென்ற பின்பு சுவாமிகள் "தில்லைத் திருவாயிரம்" நூலைப் பாடி அரங்கேற்றினார்.

## உவப்பத் தலைக்கூடல்

தில்லைத் திருவாயிரத்தைச் சென்னையில் காசி விசுவநாதர் திருக்கோயிலில் அரங்கேற்றிய போது, ஒருநாள் சுவாமிகளுடன்

பூவை கலியாணசுந்தர முதலியார் தம்முடைய மாணாக்கர்களோடு வீதியில் சென்று கொண்டிருந்தார். எதிரே வந்த பெருந்தகை பூண்டி அரங்கநாத முதலியார், சுவாமிகளின் திருப்பாதங்களில் வீழ்ந்து வணங்கினார். அவருடன் வந்த காஞ்சி நாகலிங்க முதலியார் சுவாமிகளிடம் ஆறெழுத்து மந்திர உபதேசம் பெற்றதோடு, 'வண்ணக்களஞ்சியம்' என்ற சிறப்பு விருதினையும் பெற்றுச் சிறந்தார். இவர்கள் உவப்பத் தலைக்கூடிய புலவர்கள் ஆயினர்.

## கொழும்புச் செலவு

சுவாமிகள் நெல்லையில் தங்கியிருந்தபோது தமது பெயரால் ஒரு தவச்சாலை நிறுவ எண்ணினார். கடன் பெற்றுத் தவச்சாலை உருவாக்குவது இயலாதெனக் கருதிக் கலக்கமுற்றிருந்தார். அன்றிரவு அறுபடை வீட்டு அண்ணல் இவர்தம் கனவில் தோன்றிக் "கப்பல் ஏறிக் கொழும்பிற்குச் செல்லுமாறும் உடன் பயணம் செய்யும் செட்டிமார்கள் சிலர் உதவுவர்" என்றும் அருளினான். அத்தெய்வ வாக்கைத் தலைமேற் கொண்டு சுவாமிகள் தூத்துக்குடியிலிருந்து கடல் வழியே கொழும்பு நகரைச் சென்றடைந்தார். அந்நகரிலே செட்டியார்கள் கட்டியிருந்த முருகன் கோவிலில் தங்கிப் பல பாடல்கள் இயற்றினார். அங்குச் சமயச் சொற்பொழிவுகள் பலவும் நிகழ்த்தினார். கண்டி, கதிர்காமம் ஆகிய இடங்களுக்கும் சென்று வழிபாடியற்றித் திரும்பும்போது குப்பன் செட்டியார் என்பாரும் பிற பெருமக்களும் இவரை மதித்துப் போற்றினர். 1050 ரூபாய் தந்து இவர்தம் எண்ணத்தையும் ஈடேற்றினர். அப்பணத்தைப் பெற்றுக்கொண்ட அடிகள் தூத்துக்குடி வழியே நெல்லையை அடைந்தார்.

## கிணறு வெட்டப் பூதம் கிளம்பியது

தவச்சாலை அமைக்க எண்ணிய தண்டபாணி சுவாமிகள் தம் வயலைச் சீர்திருத்தம் செய்து செப்பனிட்டுக் கிணறு தோண்ட ஏற்பாடு செய்தனர். வெடி வைத்துத் தகர்த்து அறுபது சாண் வரையிலும் (ஏறக்குறைய 30 அடி ஆழம்) வெட்டியும் தண்ணீர் வரவேயில்லை! புண்ணியம் மிக்க வண்ணப்புலவர்க்கு வற்றாத புலமைவளம் இருப்பதுபோல் வளம் சுரக்க நீர் பெருகும் என எண்ணிய போது, அது வெறும் பாறையாகப் பாழும் கிணறாகப் போனமை 'தலையிலே இடி வீழ்ந்தது போல்' இருந்தது. பாறைக் கிணற்றை எண்ணி எண்ணிச் சுவாமிகள் பலகாலும் உள்ளம் சோர்ந்தார். "கிணறு வெட்டப் பூதம் கிளம்பியது" என்பது இதுதான் போலும்! இது குறித்துத் தாம் இயற்றியுள்ள பலநூல்களிலும்

சுவாமிகள் மனம் உருகிப் பாடியுள்ளார். தம் வாழ்க்கை வெளிப்பாடாக வரும் பாடலைக் காண்போம்:

"என்னது கற்கிணற் றின்புனலாறு உதித்து
ஒன்னலர் ஒல்கு மொருதினம் ஓதுவாய்"

(கணபதிஆயிரம், 286)

என்றும்,

"ஊரில் யாவரும் உணருமென் கற்கிண றுலவா
நீரினால் உயர் உறும்படி அணுத்துணை நிற்பாய்!"

(கணபதிஆயிரம், 268)

என்றும் சுவாமிகள் கணபதி ஆயிரத்துள் கவலையுடன் கழறுவன எண்ணத்தகும்.

## அறுசுவை நீர் ஊர அகத்தியரை வேண்டுதல்

மனம் நொந்துபோன சுவாமிகள் பொதிகைமலை அடிவாரத்தில் அகத்தியரின் அருள் வேண்டித் தவமியற்ற முனைந்தார். உடன் அகத்திய ஐயர் என்ற சிறுவனும் துணையிருந்தான். சிறிது நேரம் கழித்துச் சுவாமிகள் வெளியே வந்த போது, மன்னார்கோவிலைச் சார்ந்த அண்ணன் தம்பியர் இருவர் எதிர்ப்பட்டனர். எதிரே வந்தவர்களிடம் சுவாமிகள் அவர்களுக்கு இடையில் நிகழ்ந்த வாக்குவாதம் பற்றி வினவினார். இளையவர் சுவாமிகளிடம், "அதை ஏன் நீர் கேட்கிறீர்?" எனச் சினந்தார். மூத்தவர் தம்பியைத் தக்கவாறு அமைதி கூறிவிட்டுச் சுவாமிகளிடம், "திருமாலை மனதார வேண்டி எங்கள் வறுமை போகும் வண்ணம் இறைவனின் கருணையைக் கருதி இம்மலையில் தவம் செய்தோம். நாங்கள் உணவு உட்கொண்டு நான்கு நாட்கள் ஆயின. இந்நிலையில் தம்பியின் மனவெளியில் திருமால் தோன்றிச் சில செய்திகளைக் கூறினார். ஆனால் 'வாய்க்கு எட்டியது கைக்கு எட்டவில்லை' என்ற கதையாயிற்று" என்றார். பின் தன் தம்பியிடம் "சுவாமிகளிடம், நீ கண்ட காட்சியைச் சொல்" என்றார். "யாரோ முருகனடியவன் ஒருவன் இருக்கின்றானாம். கிணறோ குளமோ வெட்டி அதில் நீர்ப்பெருக்கம் வேண்டி விரும்பியுள்ளானாம். அவனைக் கண்டால் எங்கள் துன்பம் நீங்குமாம். இவ்வளவும் சொன்ன தெய்வம் அவனிருக்குமிடத்தைக் கூறவில்லை. இன்னும் மலைமேற் சென்று தவம் செய்து விளக்கம் பெறவேண்டும்; விளக்கம் கிடைக்கவில்லை எனில் மலையிலிருந்து உயிரை விடத் துணிந்து விட்டோம்!" என்று கூறினான். இது கேட்ட சுவாமிகள் வியப்பில் ஆழ்ந்தார். "அந்தப் பாவி அடியேன் நான்தான்! தங்களுக்கு உதவ முழுவிருப்பம்

உடையேன். ஆனால், தவச்சாலையில் கிணறு தோண்டுவதில் பணம் செலவாகிக் கடன்பட்டு இப்போது துன்பத்தில் இருக்கிறேன்" என்று முருகதாசர் துணிவுடன் அவர்களிடம் கூறினார். அவ்விருவரும், "தாங்கள்செய்த தவம் நிறைவேறியது" என்று கூறி மகிழ்ந்தனர். பிறகு முருகதாசர் அவர்களை விருந்து பேணிப் பொருளும் கொடுத்தனுப்பினார். சங்கப் புலவர் பெருஞ்சித்திரனார் முதிரமலைக் குமணன் தந்த பெரும்பொருளை எல்லாருக்கும் வாரி வழங்குமாறு தம் மனைவியிடம் கூறிய பெருந்தன்மை இங்கே நினைத்துப் பார்க்கத்தகும். ஆம்! 'வறுமையிற் செம்மை' என்பது வண்ணச்சரபர் வாழ்விலும் நிகழ்ந்தது.

சுவாமிகள் திருவருளை எண்ணிக் 'கங்கையந்தாதி', 'பாறைக் கிணற்றந்தாதி' முதலிய நூல்கள் இயற்றித் திருவருளை வேண்டி நின்றார். இருப்பினும் அந்தக் கிணற்றில் தண்ணீர் ஊறவே இல்லை! இதனால் பலரும் இவரை ஏளனம் செய்தனர். பொதிய மலையிலிருந்து நெல்லைக்கு வந்த வண்ணச்சரபர் திருவரங்கம், திண்டுக்கல் ஆகிய ஊர்களுக்குச் சென்றுவிட்டுப் பழனிக்கு வரும் வழியில் துமிசம்பட்டி என்ற சிற்றூரை வந்தடைந்தார். தீராத வயிற்று வலியுள்ள ஒருவனுக்காக ஓர் ஆட்டைச் சந்நியாசியப்பனுக்குப் பலியிட இழுத்து வருதல் கண்டு இவர் அவர்களுக்கு அறிவு புகட்டினார். முருகனுடைய அருளை வேண்டித் திருநீற்றை அளித்து அவனுடைய வயிற்று வலியையும் சுவாமிகள் ஒருவெண்பாப் பாடிப் போக்கினார்; உயிர்ப் பலியிட இருந்த ஆட்டையும் காப்பற்றினார்.

## ஆவினன்குடியில் திருமடம்

பழனி அடிவாரத்தில் ஆவினன்குடியில் சரவணப் பொய்கைக்கு அண்மையில் சுவாமிகள் ஒரு திருமடம் அமைத்தார். அம்மடத்தில் அவர் தங்கியிருந்த போது மாந்திரீக வழியில் மக்களைப் பெருந்துன்பத்திற்கு ஆளாக்கி வந்த ஒரு மந்திரவாதியின் கொலைச் செயல் அற்றுப்போகவும், கறுப்பன் சிலை நொறுங்கவும், அதற்கு ஆதரவாயிருந்த பனைமரம் ஒடிந்து சாயவும் சுவாமிகள் முருகனை வேண்டிப் பாடினார். 'வேண்டத்தக்கது அறிவோனாகிய' பெருமான் அவர் வேண்டி வண்ணம் அருள் பாலித்தான்.

## இராமானந்தர் முதன்மை மாணவராதல்

சுவாமிகள் ஆவினன்குடியில் திருமடம் அமைத்துத் தங்கியிருந்த போது சரவணம்பட்டிக்கு வடக்கேயுள்ள சாமக்குளம் வேங்கடரமணதாசருக்கு அவருடன் அரிய தொடர்பு ஏற்பட்டது.

கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய சாமக்குளம் வேங்கடரமணர் இன்னிசைச் சொற்பொழிவாளராகவும் விளங்கினார். முன்பு ஒரு சமயம் இவர் சுவாமிகளை நெல்லையில் சந்தித்து மகிழ்ந்தார். ஆம்! "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" அன்றோ! அதற்கு ஏற்பச் சாமக்குளத்தாருக்கு வண்ணச்சரபர் தாம் இயற்றியிருந்த 'தியானாநுபூதி' நூலை வழங்கினார். இதனைப் பெற்றுக் கொண்டு ஊர் திரும்பிய வேங்கடரமணதாசர் நூலை இராமானந்தரிடம் கொடுத்தார். அவரும் அதனை ஊன்றிக் கற்று அப்பனுவலை இயற்றிய தண்டபாணி சுவாமிகளையே தம் குருவாகக் கொள்ளவேண்டும் என்ற ஆராத வேட்கையில் தவித்தார்.

சுவாமிகள் பழனிக்குத் தலப்பயணம் வரும் தகவலைச் சாமக்குளத்தாருக்குத் தெரிவித்தார். இந்நிலையில் அவரும் இராமானந்தருக்குச் சுவாமிகள் பழனிக்கு வருவதனைக் கூறினார். உடனே இராமானந்தரும் வண்ணச்சரபரைப் பழனியம்பதி சென்று கண்டு அவரை வணங்கித் தம் விருப்பத்தையும் வெளியிட்டார். பக்குவம் அடைந்த இராமானந்தரின் தகுதிப்பாட்டைப் பார்த்த அளவிலேயே சுவாமிகள் அறிந்து கொண்டார். அகத்தின் அழகு இராமானந்தரின் முகத்தில் தெரிந்தது போலும்!.

## ஆறெழுத்து மகாமந்திரம் உபதேசித்தல்

"ஆசாரியன் மாணாக்கனை மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டு என்னும் ஆண்டுகள் வரை சோதித்துப் பின்பு தீக்கை பண்ணவேண்டும் என்பது பொது விதி. இவ்விதியை இகந்து தீவிர பக்குவ சீடனுக்கும் அதிகாரியான ஆசிரியனுக்கும் கண்ட கணமே அனுக்கிரகம் பண்ணுதல் முறை என்ற சிறப்பு விதிக்கு இலக்கியமாய்" (இராமானந்த விஜயம், கையெழுத்துப்படி, ப.65) இராமானந்தருக்கு உபதேசிக்க விரும்பினராம் (தவத்திரு. இராமானந்த அடிகளார் வரலாறு. ப.வெ.நாகராசன்.பக்.28--29)

தண்டபாணி சுவாமிகள் இராமானந்தரின் வலது செவியில் ஆறெழுத்து மந்திரத்தை உபதேசித்துத் தலையின்மீது தம் வலக்கரத்தை வைத்துக் கண்களால் அருள் சொட்டப் பார்த்து, மேற்குத்திசையை நோக்கி நின்று கொண்டு தண்டாயுதத்தையும் சின்முத்திரையையும் உடைய கைகளை உடையவராய்க் காட்சி தந்தருளினார்.

கௌமாரத்தின் ஆறு பேதங்களையும், சமய சமரசத்தையும், சமயாதீதத்தையும், எல்லாச் சமயங்களும் கௌமாரத்திற்கு உடன்பாடே என்றெல்லாம் நடைமுறைகளை விளக்கி வாழையடி

வாழையெனக் கௌமார நெறியைப் பரப்புமாறு வண்ணச்சரபர் தம் சீடரான இராமானந்தருக்கு அருளினார்.

"திருப்புகழ் முழக்கிச் சேந்தனின் புயத்தில்
திகழ்ந்தருள் கிள்ளையாம் அருண
கிரிப்புல வோனின் கலையென வந்து
கிளரெழில் நெல்லையில் தோன்றிக்
கருப்புயல் நாணக் கலைத்தமிழ் பொழிந்தோன்
கருதிரா மானந்தன் கொண்ட
குருப்புணை வண்ணச் சரபராம் சிரவைக்
குரவரின் திருதியன் வாழி"

(சிரவையாதீனக் குருமரபு வாழ்த்து,3)

எனப் புலவர் ப.வெ.நாகராசன் பாடுவதும் இவண் கருதத்தகும்.

## திருவரங்கத்தில் நிகழ்த்திய அதிசயம்

பழனியில் ஏற்பட்ட சில நிகழ்ச்சிகளால் காயப்பட்டுப்போன தண்டபாணி சுவாமிகள், குமரக்கடவுளோடு ஊடல் கொண்டு ஆறுமுகனின் தாய்மாமனாம் திருவரங்கனைக் காணப் புறப்பட்டார். அங்கே 'திருவரங்கத் திருவாயிரம்' என்ற தம் நூலைத் தக்க வைணவப் புலவர்கள் கூடிய அவையில் முருகதாசர் அரங்கேற்றம் செய்தார். ஆயிரக்கால் மண்டபத்தில் கருடனுக்கு முன்னே சுவாமிகளின் மாணவருள் ஒருவரான ஊற்றுமலைச் சமத்தானப் புலவரான கந்தசாமிப் புலவர் கையேடு படித்தனர். அப்போது பெருமாள் உத்தரவு பெற்ற வேதியரின் மகள் நல்லபாம்பு தீண்டி விடம் தலைக்கேறப் பெற்று இறந்தாள். இச் செய்திகேட்ட வேதியர் துணுக்குற்றார். இச்சூழலை உணர்ந்த சுவாமிகள் நூலரங்கேற்றத்தை நிறுத்திவிட்டுக் கருடனிடம் அந்தப் பெண்ணின் பொருட்டு வேண்டி முறையிட்டார். முடிவில் அப்பெண் விடம் இறங்கப்பெற்று உயிர் பெற்றாள். மறுநாள் தொடர்ந்து அரங்கேற்றம் நிகழ்ந்தது.

## அல்லிக்கேணி அரங்கேற்றத்தில் அதிசயம்

சென்னையில் வண்ணச்சரபர் திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதி கோயில் பெருமாள் சந்நிதியில் எழுகூற்றிருக்கைப் பாடலைப் புனைந்து அரங்கேற்றம் செய்தனர். அவ்வரங்கேற்றத்தின் போது பாகவதர் வடிவிலே அந்தப் பள்ளிகொண்ட பெருமானே வந்தாராம். பெருமான் ஒரு சீட்டைக் கொடுத்து எழுகூற்றிருக்கைப் பாட்டுக்காக எழுநூறு பொன் கொடுக்கக் கடமைப்பட்டுள்ளேன் என்று கடன் சீட்டெழுதிக் கொடுத்தாராம்.

## ஆமாத்தூரிலே வரவேற்பு

குமாரபுரி போன்ற பல தலங்களுக்கும் சென்று வந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் மதுரப்பாக்கம் வந்துற்றார். அங்கிருந்து விழுப்புரத்திற்கு வடமேற்கே ஏறத்தாழ மூன்று கல் தொலைவில் உள்ள திருவாமாத்தூருக்கு அன்பர்கள் புடைசூழ வந்துற்றார். ஆமாத்தூருக்கு வரும் முன்பே அவ்வூரில் உள்ள அரிகரபுத்திர முதலியார் என்பாரின் கனவில் முருகப் பெருமான் தோன்றித் தம் அன்பரை வரவேற்றுப் பணிசெய்யுமாறு ஆணையிட்டான்; இதே போன்று முருகப் பெருமான் ஒருத்தூரைச் சேர்ந்த சின்னுரெட்டியாருக்கும் கனவில் தோன்றி ஆணையிட்டான். இருவருமே சுவாமிகளை எதிர்கொண்டழைத்துக் கூரை வேய்ந்த ஒரு மடத்தில் தங்குமாறு செய்தனர்.

பம்பை ஆற்றின் கரையில் அமைந்தது ஆமாத்தூர். பழங்காலத்தில் ஆவினங்களுக்குக் கொம்புகள் இல்லையாம். அவை இங்குள்ள இறைவனை வழிபட்டுத் தற்காப்புக்குரிய கொம்புகளைப் பெற்றன என்பது புராணக்கூற்று. தேவார மூவரும் பாடிச் சிறப்பித்த பழம் பெருமையுடையது திருஆமாத்தூர்.

"குராமன்னும் குழலாள் ஒரு கூறானார்
அராமன்னும் சடையான் திருஆமாத்தூர்
இராமனும் வழிபாடு செய்ஈசனை
நிராமயன் தனைநாளும் நினைமினே" (தேவாரம், 5668)

எனத் திருநாவுக்கரசர் போற்றி வழிபட்ட திருத்தலம் இது.

"பசுக்களுக்குத் தாய்வீடு என்று பெயர் பெற்ற இத்தலத்தில் எழுந்தருளியுள்ள ஈசனே! உம் மீது ஆயிரம் பாடல்கள் பாடுவேன். பசுக்களின் துயர் நீங்க அருள் செய்யவேண்டும்! சமய குரவர்களுக்கு வழங்கிய திருவருளை அடியேனுக்கும் கொடுத்தருள வேண்டும்" எனத் தண்டபாணி சுவாமிகள் வேண்டினார். இறைவனோ இவர்தம் நிட்டையில் தோன்றிக் "கவிபாடுவதனைப் பின்னால் பார்க்கலாம். அருளைப் பெறும் முயற்சியில் முதற்கண் ஈடுபடுக" என்று அருளினான். சுவாமிகளும் "உனதருளைப் பெறுகின்ற வரையிலும் இவ்வூர் எல்லையைத் தாண்ட மாட்டேன்" என்ற நெஞ்சுரத்துடன் ஆறெழுத்து மந்திரத்தை ஒரு கோடிமுறை சொல்ல முனைந்தார். மந்திரம் சொல்லும்போது ஜபமாலையைக் கழற்றி விரல்களினால் எண்ணுவர். அவ்வாறு எண்ணுவதற்கு ஜபமாலை எடுத்தபோது சுவாமிகளின் கையிலே ஒரு கருந்தேள் கொட்டியது. அதனால் ஆறுமுகனின் அடியவராகிய இவருக்குத் தெளிவு ஏற்பட்டு, மனத்திலேயே எண்ணுவது என்று முடிவு செய்து ஆறெழுத்து மந்திரத்தைச் செபிக்கத் தொடங்கினார்.

## வயிற்றுவலி நீக்கமும் திருமடத்திற்குக் காலி மனை கிடைத்தலும்

அப்போது விழுப்புரத்தில் வட்டாட்சியராகப் பணியாற்றி வந்த சண்முகம் பிள்ளைக்குக் கடுமையான வயிற்றுவலி கண்டது. அரசுப் பணியில் இருந்த அவருக்கு அப்பகுதியில் மதிப்பும் அதிகாரமும் நிரம்பவே இருந்தன. தண்டபாணி சுவாமிகளிடம் வந்து தம் வயிற்றுவலியைத் தீர்த்து வாழ்வளிக்குமாறு அவர் முறையிட்டார். சுவாமிகளும் 'விநாயகர் வழிபாட்டை நாடோறும் வீட்டில் செய்து பிள்ளையார் கோவிலுக்குச் சென்று வருக' என்று பணித்ததோடு தாமே ஒருபாடலை இயற்றி அவரிடம்கொடுத்துப் பாராயணம் செய்யுமாறும் சொன்னார். விளைவு அவருக்கு வயிற்றுவலி நீங்கியது.

இதனால் மனம் மகிழ்ந்த சண்முகம்பிள்ளை திருவாமாத்தூரில் புறம்போக்கு வெற்றிட நிலங்களை இனாமாக வழங்க ஏற்பாடு செய்தார். அவ்விடத்தில் திருமடம் அமைத்துச் சேவை செய்யுமாறு அன்பர்கள் அனைவரும் வேண்டினர். சுவாமிகளும் "திருவருள் அதுவாயின் அப்படியே செய்யுங்கள்" என்றார். வண்ணச்சரபரின்பால் மாறாத அன்பும் மதிப்பும் கொண்டிருந்த வீரகேரளம்புதூர் சமீன்தார் இருதயாலய மருதப்பத் தேவர் பொருளுதவ முன்வந்தார். பலருடைய ஒத்துழைப்பால் திருவாமாத்தூரிலே கௌமார மடாலயம் வீறு கொண்டெழுந்தது. 'கொடுக்கும் தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்' என்பது இதுதான்!

விளம்பி ஆண்டு பிறந்தது. சுவாமிகள் 'ஐயாயிரப் பிரபந்தம்' என்னும் பெயரிய நூலை இயற்றத் தொடங்கினார். அந்த ஆண்டு முடிவில் ஐயாயிரத்தையும் முடித்துவிட வேண்டும் என்ற விருப்பத்துடன் ஒரு நாளைக்குப் பதினான்கு வீதம் பாடத் திட்டமிட்டார். சுவாமிகள் முற்பகற் பொழுதில் கவிபாடுவார்; உச்சிப்பொழுதில் மந்திரஜபம்; பிற்பகலில் நீராடித் திருநீறு, திருமண், குங்குமம் அணிந்து கொள்வார். எந்நேரமும் சுவாமிகள் இறைச் சிந்தனையிலேயே காலம் கழித்துவந்தார். பாடல் பாடுவதும் இறைவழிபாடியற்றலும் நாளுக்கு நாள் மிகுந்து கொண்டு போயின. சுவாமிகளின் உடற் சூடும் அதற்கேற்ப மிகுந்தது; உடல் தளர்ந்தது. உயிர்க்கொலை கூடாது என்றும், எல்லாச் சமயமும் ஒன்றே என்றும், பல்லாயிரம் பாடல்களை ஓயாத மாரிபோல் பாடியும் தொண்டு செய்த புண்ணிய முனிவர் விளம்பி ஆண்டு ஆனித் திங்கள் 23 - ஆம் நாள் (1898) செவ்வாய்கிழமை துவிதியைத் திதித்

திருவோண விண்மீன் கூடிய நாளில் வீடுபேறடைந்தார். அப்போது சுவாமிகளுக்கு 59 வயதாகும்.



சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் தலைவர் தவத்திரு இராமானந்த சுவாமிகள், தம் குருநாதரின் பிரிவுக்கு மிகவும் வருந்தி, அவர்தம் உடல் நல்லடக்கம் செய்யப்பட்ட இடத்தில் தண்டபாணிக் கடவுள் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்தார். நாள் வழிபாடுகளும் தடையின்றி நடைபெற ஏற்பாடு செய்தார். இவ்வழிபாடுகள் தொடர்ந்து நடைபெறச் செந்தினாயக சுவாமிகளும் அவருக்குப் பின் தவத்திரு. முருகதாச ஐயாவும், இப்போது தண்டபாணி ஐயாவும் உரிய நடவடிக்கைகள் எடுத்துள்ளனர். பல்லாயிரம் அருட்பாடல்கள் பாடிப் பைந்தமிழுக்கும் இறைநெறி வளர்ச்சிக்கும் பாடுபட்ட இலக்கண இலக்கிய இமயமாகிய வண்ணச்சரபரின் எண்ணங்கள் நிலைக்கப் பாடுபடுவோம்!



"எந்தப் புராண சரிதமும் தேறும் இயல்புடையோர்
சொந்தக் குழுவில் தமியேனுன் மேன்மை சொலப்புரிவாய்
கந்தப் பொழில் செறி மாதைப் பதியிற் கவிக்கரசாம்
சந்தத் தமிழ்த்தண்ட பாணியென் றோங்கிய சற்குருவே"



# 2. பன்முகப் படைப்புகள்

## புதுமைகள் படைத்த முதல்வர்

"எண்ணற்ற கவிதைகள் படைத்தவர் என்ற நிலையிலும் பல புதுமைகளைப் படைத்தவர் என்பதிலும் முதல்வராகத் திகழ்கிறார். இவர். முருகதாசர், திருப்புகழ்ச் சாமியார், வண்ணச்சரபம் எனப் பலவாறாகப் போற்றப்படுகின்றார். இவருடைய பெருமை யாராலும் சரிவரப் புலப்படுத்தப்படவில்லை. இறையருளால் பாடல்கள் பாடிய (பழனித் திருவாயிரம், பிள்ளைத் தமிழ், 48) இவரின் பாடல்களாக இன்று நமக்குக் கிடைப்பன 49 ஆயிரங்களுக்கும் மேற்பட்டனவாகும். முருகன்மீது கொண்ட ஊடலால் இவரே தம் படைப்புகள் பலவற்றை அனலிலும் புனலிலும் அழித்துள்ளார். எவ்வகை இலக்கியத்தையும் தன்னால் பாடமுடியும் என்று பாடிக் காட்டியவராகத் திகழ்கின்றார்." எனப் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம் (ப.62) என்ற நூலில் ஆய்வாளர் ச.சிவகாமி கூறுவார்.

"அன்றுரைத்த பனுவல்களை அனலாலும்
புனலாலும் அழித்த உன்னை
இன்றும்ஒரு காரணத்தால் துதிக்கின்றேன்
இரங்காமல் இருக்க லாமோ" (திருவிளக்காயிரம், 89)

என்பது சுவாமிகள் கூற்று.

தமிழ் இலக்கிய வகைமைகளுள் (genre) பல்வேறு வகைமைகளைப் பாடிய பெரும்புலவர் இவர் என்பதில் ஐயமில்லை. இதனை நிறுவும் வண்ணம் அமைகின்றது 'ஊர்ப்பெயரும் நூற்றொகையும்' (நூற்பட்டியல்) என்ற நூல். இவர்தம் படைப்புகள் குறித்த பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது. இவர் படைத்த இலக்கியங்களுள் பல இன்னும்

ஏட்டுச் சுவடிகளாகவே உள்ளன. அவையும் அச்சேற்றப்பட்டு வெளிவருமானால் வண்ணச்சரபரின் இலக்கியப் படைப்பின் ஆழமும் அகலமும், எல்லையும் ஏற்றமும், புலமைவளமும் நயமும், பாடியுள்ள களமும் தளமும் நன்கு வெளிப்படும்.

"கருத்தூற்று மலையூற்றாய்ப் பெருக்கெடுக்க வேண்டும்"
(பாரதிதாசன் கவிதைகள், ப. 224)

என்ற எண்ணத்தைச் சுவாமிகளிடம் நாம் நிறையவே காணமுடிகின்றது.

### கடல் மடை திறந்த வெள்ளம்

எட்டரை வயதிலே இனிய வெண்பாவைக் கூறத் தொடங்கி, இன்றமிழுக்கு ஒருலட்சம் பாடல்களுக்கும் மேற் பாடியவர். கடல்மடை திறந்த வெள்ளம் போல் கவிதை பொழிகின்ற கார்மேகமெனச் சுவாமிகள் விளங்கினார். "இம்மென்னுமுன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதோ" என்ற காளமேகப் புலவரின் கருத்திற்குத் தண்டபாணி சுவாமிகள் ஒரு சான்றாகத் திகழ்கின்றார். இவர்தம் புலமைச் செழுமை குறித்துச் சமகாலப் புலவராம் அழகிய சொக்கநாதபிள்ளை (காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் பாடியவர்) வாக்கில் காண்பதே சிறப்பாகும்.

"அடிக்கும் முன்னோர் விதிக்கும் இன்சொற் சுவைக்கும் ஒரு
குறைவு வராது அமைத்தோர் பாட்டு
முடிக்கு முன்னே தாய் கொடுத்த சேனையெலாம்
வாங்குதையோ! முதிரக்கல்வி
படிக்கு முன்னே தொடுத்தடுத்துக் கேட்போர்கள்
பிரமிக்கும் படிக்கும் ஒவ்வோர்
நொடிக்கு முன்னர் இனியகவி முருகதாச
னைப்போல வல்லார் யாரே?"
(அழகிய சொக்கநாதபிள்ளை)

### பாடற் பொருண்மை

முருகதாசர் முருகன், சிவன், சக்தி, விநாயகர், திருமால், கதிரவன் ஆகிய தெய்வங்களைக் குறித்தும், அவ்வச் சமய உண்மைகள் குறித்தும் பாடியுள்ளார். தலப் பயணம் செய்தபோது அவ்வவ்வூர்களில் உள்ள தெய்வங்களின்மேல் பாடல்கள் பாடியுள்ளார். பழனித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம் எனப் பல ஆயிரங்கள் பாடியுள்ளார். மேலும் அந்தாதி, பிள்ளைத்தமிழ், மும்மணிக்கோவை, வண்ணம், அலங்காரம், எழுகூற்றிருக்கை, ஏகபாதம், கலம்பகம் எனப் பல

சிற்றிலக்கிய நூல்களையும் இவர் படைத்துள்ளார். தம்முடைய தமிழ்ப் பற்றை உணர்த்தும் பாங்கிலே தமிழலங்காரம் என்ற நூலை யாத்துள்ளார். முசுகுந்த நாடகம் என்ற நாடகத் தமிழ் நூலையும், முத்தமிழ்ப் பாமாலை என்ற இசைத்தமிழ் நூலையும் இயற்றியுள்ளார். சுவாமிகள் தம்முடைய வரலாற்றைக் கூறும் குருபரத்துவ நூலையும், பிறர் வரலாற்றை எடுத்துமொழியும் வகையில் அருணகிரிநாத சுவாமிகள் புராணமும், புலவர் புராணமும் பாடியுள்ளார்.

## புலமையறம் போற்றியவர்

இறையுணர்வுடன் இலக்கியம் படைக்க வேண்டும் என்றும், உயிர் இரக்கம் பாடுவோரின் உயர் முதன்மைக் கொள்கையாக விளங்கவேண்டும் என்றும் முருகதாசர் விரும்பினார். இவர் தமிழையும் ஒழுக்கத்தையும் உயிர் எனப் போற்றியுள்ளார். தமிழ் மொழியின்மீது இவருக்கு அளவிறந்த பற்று. "தமிழ்தழுவாச் சுவடிகளைத் தணல் தழுவா திராதினிமேல்" (தமிழியக்கம், ப.12) என்று பாரதிதாசன் பின்னாளில் அறைகூவல் விடுத்தார். அவர் கூற்றுக்கு அடித்தளம் அமைத்தவர் அடிகள் எனறு துணிய இடமுண்டு.

"தமிழ்மொழிக் குயர்மொழி தரணியில் உளதெனில்
வெகுளியற் றிருப்போன் வெறும் புலவோனே!"

(அறுவகையிலக்கணம், புலமை, *63*)

என்ற தமிழை மதியாத் தமிழப்புலவனை இவர் இகழ்ந்துரைப்பார்.

புலவர்களுக்கு இவர்போலும் சாட்டையடி கொடுத்தோர் இலரென்று கூறலாம். நேர்மை, துணிவு, தெய்வ பக்தி, புலமையில் முழுமை, ஒழுக்கம், புலமையறம் - இப்படிப பற்பல புலமை அறங்களைச் சுவாமிகள் தாம் பாடியுள்ள அறுவகை இலக்கண நூலில் கூறியுள்ளார். அதோடு நில்லாமல் தாம் இயற்றியுள்ள ஏனைய நூல்களிலும் இவ்வறங்களை அழுத்தம் தந்து பதிவு செய்துள்ளார்.

"அருள்வலிப் புலவ ராமென விளங்கியும்
பொருளுடைச் சிலர்பாற் போவ திழிவே" (மேலது, *28*)

"தமிழுணர் பாவலன் போல்வான் ஒருவன் தனதுகலை
அமிழ்தினும் ஏற்றமென் றேமாப் புறாமல் அயற்கலையால்
உமிழ்வதென் றொப்பிடில் மற்றோர் மடந்தைக் குரியகொண்கன்
குமிழ்மலர் நாசியி னால்மணந் தான்நிகர் கோதினனே"

(தமிழலங்காரம், *97*)

பிறமொழியினின்றும் தமிழ் பிறந்தது என்று பிதற்றும் புலவன் வேறோர் பெண்ணின் கணவனை நுகரத் துடிக்கும் பெண் போல்வான் என்று கூறிச் சீறிப் பாய்வது போல் இவரைத்தவிர வேறு எவர் பாய்வர்?

## புதுமை படைக்கும் புலமை

சுவாமிகளின் பழந்தமிழ் மரபு வழியில் பல்வேறு தோத்திரப் பாடல்கள் இயற்றினரேனும், புதுமைகளையும் பாடிச் 'செந்தமிழைச் செழுந்தமிழாக்க' வேண்டும் என எண்ணினார். இவர் 'கடல் போலச் செந்தமிழைப் பெருக்கத்' தம் காலம் முழுவதும் பாடுபட்டார். முத்துலுக்கப் புலவர் சருக்கத்தில் சையது மொய்தீன், உமறுப் புலவர், சவ்வாதுப் புலவர் என்னும் மூன்று முகமதியப் புலவர்களையும்கூட ஏற்றுப் புலவர் புராணத்தில் பாடியுள்ளார் எனில், இவர்தம் சமயப் பொதுமை நோக்கம் புலப்படும் ஆங்கிலேயரை அழிக்கவேண்டி அருச்சுனன் போலும் ஒரு வீரனை அந்த மலரவன் படைக்கவில்லையே என்று தம்முடைய 'ஆங்கிலர் அந்தாதி' யில் குறை நயப்பித்து இறைவனிடம் வேண்டுவார்.

"மகனாக வாழ்க வளர்தமிழ்க் கன்னிக்கு
எமனாக வாழல் இழிவு" (மாணிக்கக்குறள், 14)

என்று முதறிஞர் வ.சுப. மாணிக்கம் கூறுவதற்கு ஒப்ப வாழ்ந்தவர் நம் வண்ணச்சரபர் எனலாம்.

"பாடாத தேனீக்கள், உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு பார்த்த துண்டோ?"
(பாரதிதாசன் கவிதைகள் தொகுதி I, ப.82)

எனப் பாரதிதாசன் கேட்பது போல்,

"பாடாத துறையுண்டோ பழுத்த தமிழ்ப்
பாவலராம் தண்டபாணிப் புலவர் போல்!"

என்று மகுடம் சூட்டத் தோன்றுகின்றது. பலாப்பழம் தொட்ட இடமெங்கும் இன்சுவை பயப்பதுபோல் இவர்தம் தமிழ்ப் பாடற்சுவை அமைந்தள்ளது.

## இலக்கணத்தில் ஏற்றம்

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"
(திருவெம்பாவை, 9)

என்று மணிவாசகப் பெருந்தகை சிவபெருமானை வாழ்த்துவர். அதே பண்புகள் தமிழுக்கும் பொருந்தும்! அத்தகைய பழமைக்கும்

புதுமைக்கும் இடம் தரும் தமிழில் சுவாமிகள் அறுவகை இலக்கணம், வண்ணத்தியல்பு, ஏழாமிலக்கணம் என மூன்று இலக்கண நூல்களையும் இயற்றியுள்ளார். காலத்திற்கு ஏற்ற புது மரபுகளைச் சுவாமிகள் உருவாக்கித் தமிழ் மொழியின் இலக்கண வளர்ச்சியைப் பதிவு செய்துள்ளார்.

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனிஎதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந்தருளப் பெற்றபே றிதனால்
என்றைக்கும் திருவரு ளுடையோம்"
(பெரியபு. திருஞானசம்பந்தர் புராணம், 659)

எனச் சேக்கிழார் கூறுமாப் போல் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் இலக்கணப் புலமை அமைந்துள்ளது.

"புதுநூற்கள் புதுக்கருத்தால் பொதுவகையால்
தரவேண்டும் புலவ ரெல்லாம்" (தமிழியக்கம், 44)

என்று பின்னாளில் பாவேந்தர் பாரதிதாசன் கூறுவதற்குத் தண்டபாணி சுவாமிகளே நல்ல களம் அமைத்துத் தூண்டினார் என்று கருதலாம்.

திருக்குறட் கருத்துகளை விளக்கும் வண்ணம் மனுநெறித் திருநூலும், அரிச்சுவடி வரிசைக்கு வருக்கக் குறளும் இவர் இயற்றியன. இவை காலத்திற்கு ஏற்ற அறநெறிகளைக் கற்பிக்க எழுந்த நூல்கள் ஆகும்.

### யாப்பியற் புலமை

செய்யுள் இயற்றுதற்கான இலக்கணம் குறித்துச் சுவாமிகள் அறுவகை இலக்கணத்துள்ளும். புறநடை இலக்கண நூலாகிய ஏழாமிலக்கணத்துள்ளும், வழிமுறைகள் பல கூறியுள்ளார். இருப்பினும் புலவர்கள் எவ்வகைப் பாக்களும் இயற்றும் திறம் வரப்பெற்றவர்களாக விளங்குதல் வேண்டும் என்று இவர் வலியுறுத்தியுள்ளார். இதற்குத் தாமே ஒரு தக்க எடுத்துக்காட்டாக விளங்குதல் வேண்டும் என்று கருதினார். இதனைச் செயற்படுத்தும் வகையில் தண்டபாணிசுவாமிகள் சக்தி வண்ணப்பாமாலை, வண்ணத்துறை, முருகன் வண்ணப் பதிகம், விநாயக அகவல், அம்பிகை வெண்பா, முருகன் மும்மணிக்கோவை, புவனாம்பிகை பஞ்சரத்னம், வள்ளியூர் இரட்டையாசிரியப்பா, மருதப்பன் விருத்தம். இன்னிசைப் பஃறொடை வெண்பா, தெய்வக் கண்ணி வருக்கக் குறள், கட்டளைக் கலித்துறை போன்ற பலவகைப் பாக்களிலும் பாவினங்களிலும் பாடல்கள் பாடியுள்ளார்.

சிற்றிலக்கியங்கள்

தொல்காப்பியர் புதியனவாக எழும் இலக்கிய வகைகளை 'விருந்து' என்னும் வனப்பிற்குள் அடக்குவார்.

" விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"

(தொல் செய்யுளியல், 239)

என்பது அந்நூற்பா. சிற்றிலக்கியங்கள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகக் குறிப்பிட்ட பொருளமைதியோடு எழுந்தன. "சிற்றிலக்கியங்கள் அனைத்தும் சிற்றின்பப் பொருளை விளக்குவதாக அமைந்திருப்பினும் அவற்றுள் சில பேரின்பப் பொருளை விளக்கும் தத்துவக் குழையலாகவும் அமைந்துள்ளன" (சிற்றிலக்கியச் செல்வம், ப. 25) என முனைவர் ந.வீ. செயராமன் என்பார் கூறுவதுபோன்று தண்டபாணி சுவாமிகளின் படைப்புகளாகிய சிற்றிலக்கியங்கள் பெரும்பான்மையும் பேரின்பப் பொருளைப் பாடுபொருளாகக் கொண்டன. சுவாமிகளின் சிற்றிலக்கியங்கள் யாவும் "தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான முத்திக் கனியாக" விளங்குகின்றன எனல் சாலும்! "நறைபழுத்த துறைத்தமிழின் ஒழுகு நறுஞ்சுவை" யின் களஞ்சியமாய்ச் சுவாமிகளின் படைப்புகள் துலங்குகின்றன.

வண்ணச்சரபர் தாம் இயற்றியுள்ள நூல்களைப் பற்றி அவரே கூறிக்கொள்வது இங்கே இணைத்துக் காணத்தகும்.

" மும்மணிக் கோவைபல, மாலைபல, அந்தாதி
மூவகைய பல, இன் னவா
முதுநெறிப் பனுவல்பல, புதுநெறிப் பனுவல்பல
முத்தமிழ்ச் சுவை வழாமல்
இம்மணிற் புலவர்பலர் மகிழ்வுறக் கொடுத்துளேன்
இப்போதும் நுவல்கின் றேன்
இன்னமும் பகருவேன் நின்னருள் உரித்தெனக்கு."

படைவீட்டுப் பதிகங்கள், குமரவேள் சட்கம், வடிவேலர் மகுட ஆசிரியப் பதிகம் முருகன் மும்மணிக்கோவை, நடராசர் வகுப்பு, இலக்குமி வெண்பா, கணபதி வகுப்பு, சிவகாமி பஞ்சரத்னம், இதழகலந்தாதி, தில்லைபாதி நெல்லைபாதி, பாண்டிநாயகன் பிள்ளைத்தமிழ் கந்தசாமி பிள்ளைத் தமிழ், முருகேசன் வகுப்பு, சிலேடை வெண்பா, வாழி விருத்தம், சக்தி தாழிசை மாலை, யமக அந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி, முத்தம்ம பஞ்சகம், நவநீத கிருஷ்ணன் கலம்பகம், அம்பிகை எழுகூற்றிருக்கை, சூரிய மாலை,

திருமாலந்தாதி, பேரொலியலந்தாதி, தெய்வக்கண்ணி, ஆங்கிலியர் அந்தாதி இப்படிப் பலவகையான சிற்றிலக்கியங்களைப் படைத்துக் கடல் போலச் செந்தமிழைப் பெருக்கியுள்ளார்.

## பாடுபொருளும் பைந்தமிழ்ப் பற்றும்

இறை வழிபாட்டில் இவர் அழுத்தமான பற்றுடையவர் என்பதனால்,

"உண்டாட்டுக் களியும் விரித்து உணர்வழியும் ஒண்புலவீர்
திண்டாட்டுப் படவேண்டாம் திருப்பழனிச் செல்வேளை
வண்டாட்டுக் கடம்புறம்சீர் மலிதமிழால் வாழ்த்துமினோ
பண்டாட்டுப் பொருளாய்ப் பரஞ்சோதி அடைவீரே!"

(பழனித்திருவாயிரம், நவ., 58)

என்று இவர் பாடுவதும் பண்டைததமிழ் அருளாளர்களின் வழியைத் தழுவியே ஆகும்.

"என்னாவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்கள்!
மன்னா மனிதரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்
மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்
தன்னாகவே கொண்டு சன்மமும் செய்யாமையும் கொள்ளுமே"

(நாலாயிரத். 3312)

என்று நம்மாழ்வார் கூறுவதற்கு ஏற்பவும்,

"மிடுக்கிலா தானை வீமனே விறல்விசயனே வில்லுக்கிவன் என்று
கொடுக்கிலாதனைப் பாரியே யென்று கூறினும் கொடுப்பாரிலை
பொடிக்கொள் மேனியெம் புண்ணியன் புகலூரைப்
பாடுமின் புலவீர்காள்!
அடுக்குமேல் அமருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே!"

(தேவாரம், 7565)

என்று சுந்தரமூர்த்தி நாயனார் வலியுறுத்துவதற்கு ஒப்பவும் பாடுபொருளைத் தெரிவு செய்து தீந்தமிழ்ப் புலவராக ஒளிர்ந்தார்.

"பாவுக்கழகு பொருட் சுவை சொற்சுவை பன்மலர்ப்பூங்
காவுக்கழகு மயிலுங் குயிலுங் கண்டாள்..."

(கோவிந்த சதகம், 27)

என்பதற்கு இலக்கியமாய்த் தண்டபாணி சுவாமிகளின் படைப்புகள் அமைந்துள்ளன. மேலும்,

"சொல்நோக்கும் பொருள் நோக்கும்
தொடைநோக்கும் நடைநோக்கும்
எந்நோக்கும் காண இலக்கியமாவது"

*(சிறப்புப்பாயிரம், திருவரங்கக்கலம்பகம்)*

என்ற திறனுரைக்குக் களம் அமைத்துத் தருவன சுவாமிகளின் பாடல்கள் ஆகும்.

சுவாமிகளின் தமிழ்ப்பற்றின் எல்லையைக் கணித்து மொழிவது கடினம். சுருங்கச் சொல்வதெனில், அது.

"விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்" *(புறம், 53)*

எனலாம். இதற்கு இங்கு ஒரு சோறு பதம் காண்போம்.

"தமிழருமை அறியாதார் வாயில் தோறும்
தனமிரந்து பரதவிக்கும் தவறு நீங்கிக்
குமிழனைய நாசியுள்ளார் ஆசைப் பேயும்
குலைந்தோடக் கண்டுநின்நூல் கூறும் பேற்றில்
அமிழ்வதற்கே விழைகின்றேன் என்செய் வாயோ
அடியேனைத் தடுத்தாளா தகற்றவேண்டாம்
இமிழ்புனற்றெண் ணீர்ப் பொருநைத் தென்பாற் றோன்றும்
எழிற்குருகூர்த் திருக்கோயில் இடத்துற் றோனே"

*(சடகோபர் சதகத்தந்தாதி, 102)*



# 3. சமய ஒற்றுமையும் நல்லிணைப்பும்

## சுவாமிகள் காலச்சூழல்

"மதம் என்பது மூன்று அத்தியாவசிய அமிசங்களைக் கொண்டது. முதலாவது நம்பிக்கை (faith). இரண்டாவது சடங்குகள் (rituals), இந்தச் சடங்குகளுக்கு அத்தியாவசியமான ஐதீகங்கள் (myths), இதற்குள்ளே அடங்கும். மூன்றாவது இவை இரண்டும் வளர்க்கும் அல்லது இவையிரண்டினடியாக வளர்த்தெடுக்கப் பெறும் சமூகக் கண்ணோட்டம் அல்லது உலகநோக்கு. இம்மூன்றும் ஒருங்கிணையும் பொழுதே மதம் தொழிற்படும். இம்மூன்றினையும் பண்பாட்டிலிருந்தும் இலக்கியத்திலிருந்தும் பிரித்து நோக்க முடியாது..... சமய இலக்கியங்கள் என நாம் கொள்வனவற்றில் இம்மூன்றும் விறகில் தீயாகவும், பாலிற்படு நெய்யாகவும் கிடப்பதை அவதானிக்கத் தவற முடியாது" (தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், பக். 1516) என்ற அறிஞர் கா. சிவத்தம்பியின் கருத்தின் அடிப்படையில் தண்டபாணி சுவாமிகளின் சமய ஒற்றுமை குறித்துக் காணலாம்.

சுவாமிகள் வாழ்ந்த காலம் ஆங்கில ஆட்சி நிலவிய காலம். தமிழகத்து மக்கள் வெளிநாட்டிலிருந்து இங்கு வந்து பரவிய வெளிநாட்டுச் சமயங்களுக்கு மாறத் தொடங்கிய காலம். மேலும் அகச் சமயங்கள் எனப்படும் சைவம், வைணவம், சாக்தம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம் என்னும் இவற்றுள் பிணக்குகளும் வேற்றுமைகளும் மனப்பூசல்களும் நிலவியிருந்த காலம். இவற்றை ஒருங்கிணைக்க வேண்டும் என்ற முன் முயற்சியில் வண்ணச்சரபர் முயற்சி மேற்கொண்டார். அம்முயற்சியின் அடையாளம்தான் அவருடைய தோற்றப் பொலிவு எனலாம். அதாவது 'வேற்றுமையுள் ஒற்றுமை' காணும் பாங்கிலே இவர் எண்ணிச் செயலாற்றியுள்ளார்.

## தமிழ் மரபும் வழிபாடுகளும்

*சங்க இலக்கியங்களில் சிவன், திருமால், சக்தி, முருகன் பற்றிய செய்திகள் பரவிக் கிடக்கக் காண்கின்றோம். இதனை,*

"நான்மறை முதுநூன் முக்கட் செல்வன்" (அகம், 181)

"பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி" (புறம், 91)

"மணிவரை யன்ன மாஅ யோனே" (புறம், 229)

"பாடிமிழ் பரப்பத் தரவனை அசைஇய
ஆடுகொள் நேமியான் பரவுதும்" (முல்லைக்கலி, 5)

"மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே"(தொல். புறத். 4)

"ஆலமர் செல்வன் அணிசால் மகன்" (மருதக்கலி, 18)

"கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்
சூர்நவை முருகன் சுற்றத் தன்ன" (புறம். 23)

என வரும் பாடலடிகள் உறுதிப்படுத்துகின்றன.

"விரிகதிர் மண்டிலம் வியல்விசும்பு ஊர்தர" (பதிற். 6)

"செங்கதிர்ச் செல்வன் தெறுதலின்" (நற். 164)

என வருவன கொண்டு கதிரவனைப் பண்டைத்தமிழர் போற்றி வணங்கிய தன்மையை அறியலாம்.

"தமிழக மரபில் சக்தி வழிபாடு ஒரு வகையில் விநோதமானது. சங்ககாலத்தில் சில பாடல்கள் சக்தியைப் போற்றுகின்றன. நாயன்மார்கள் சக்தியைத் தனிப்பெரும் தெய்வமாகப் பாடாவிட்டாலும் சிவனைச் சக்தியின் கணவனாக அடிக்கடி குறிப்பிட்டதன் மூலம் சக்தியைப் போற்றினார்கள்" என்று முனைவர் கோ. சுந்தரமூர்த்தி (சைவசமயம், ப.128) கூறுவதும் இங்கே எண்ணத்தகும். ஞாயிற்றைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பரந்து கிடக்கக் காண்கிறோம். கணபதி வழிபாடு தமிழ் நாட்டில் பிற்காலத்தில் தோன்றிப் பரவியது என்பது வரலாற்றுண்மை. " விநாயகரைப் பற்றிய தமிழ்க் குறிப்பு சம்பந்தர், அப்பர் பாடல்களிலேயே முதலில் காணப்படுகிறது. இக் குறிப்பிலிருந்து அவர்கள் காலத்தில் விநாயகர் முக்கியத்துவம் பெற்ற கடவுள் போன்று தோன்றவில்லை. பிற்காலச் சோழர் காலத்தில் விநாயகர் மக்களால் பெரிதும் விரும்பப்பட்ட கடவுளாயிருக்க வேண்டும்" (சைவசமயம், ப. 126) என்னும் ஆய்வுரை இவண்

இணைத்துப் பார்க்கத் தகும். இவற்றின் அடிப்படையில் பக்தி இயக்கம் தோன்றி வளர்ந்தது. இவ்விடைக் காலத்தில் ஆறு சமயங்கள் என்ற கொள்கை தமிழகத்தில் வளர்ந்து செழிக்கத் தொடங்கியது.

## சமயம் என்ற சொல்லாட்சி

சமயம் என்பதற்கு வழி அல்லது நெறி என்று பொருள் கூறுவர். இச்சொல்லாட்சியை முதன்முதலில் மணிமேகலையில் நாம் காண்கிறோம். இதனை,

"அவ்வவர் சமயத்து அறிபொருள் கேட்டு" (மணிமே. 26:64)

"ஐவகைச் சமயமும் அறிந்தனள்" (மணிமே. 27:289)

என வரும் அடிகள் கொண்டு உறுதிப்படுத்தலாம். "தம்மையும் தம்மை இயக்கி நிற்கும் பேராற்றலையும் (இறைவன்) தக்கவாறு உணர்த்தலும் உணர்ந்ததன் பயனாக அப்பேராற்றலோடு இயைந்து வாழத் தம்மை ஆளாக்கிக் கொள்வதுமே சமயம் எனலாம். சமயம் சமைக்கப்படுவது; அதாவது பக்குவப்படுத்திக்கொள்வது என அமையும்" (சங்க இலக்கியங்களில் சமயநோக்கு, ப.4) என்று விளக்கம் தருவார் முனைவர் கு. சுந்தரமூர்த்தி. பக்குவப்படுத்தி நெறிப்படுத்த வந்த சமயத்தில் பிற்காலத்தில் சமயநெறி தலைதூக்கத் தொடங்கியது. இச் சூழலில் தண்டபாணி சுவாமிகள் அகச் சமயங்கள் ஆறையும் பாடி ஒருங்கிணைப்புச் செய்ய முனைந்தார். சுவாமிகள் அறுசமயக் கடவுளர்க்கும் இலக்கியம் படைத்துச் சமய ஒற்றுமையையும் ஒருங்கிணைப்பையும் வலியுறுத்தினார். "சமயத்திற்கும் இலக்கியத்திற்கும் தொடர்பு நிரம்ப உண்டு. இரண்டுமே மனிதனிடம் உள்ள உணர்வை அடிப்படையாகக் கொண்டு தோன்றுபவை. மனிதனுடைய உணர்வில் தோன்றி அந்த உணர்வைத் திருத்தி நல்வழிப்படுத்தவே சமயம், இலக்கியம் என்ற இரண்டும் பயன்பட்டு வருகின்றன" (முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் மணிவிழா மலர், 1991, ப.105) என்னும் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தனார் கூற்றுக்குச் சான்றாக விளங்குவது தண்டபாணி சுவாமிகளின் சமயக் கோட்பாடு எனலாம்.

## அறுவகைச் சமயம் என்ற சொல்லாட்சி

ஐவகைச் சமயம் என்னும் சொல்லாட்சியை மணிமேகலையும் அறுவகைச் சமயம் என்ற சொல்லாட்சியைப் பெருங்கதையும் பயன்படுத்தியுள்ளன. இச் சொல்வழக்குத் திருமந்திரத்தில் முதன்முதல் பயன்படுத்தப் பெற்றுள்ளது என்பது,

"ஆறுசமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறுசமயம் பொருளும் அவனலன்"(திருமந்திரம், 1533)

என்பதால் தெரியவருகிறது. இவ்வாறும் முன்னர்க் கூறிய சமயங்கள் அல்ல என்பர். கி.பி. 10-ஆம் நூற்றாண்டினதான பிங்கலந்தை 'உட்சமயம், புறச்சமயம்' என்ற பாகுபாட்டைச் சுட்டும்.

"தொண்டர்க்கங்கே ஆறுசமயமாகி நின்ற திக்கினை யென்
திருமுதுகுன் றுடையான் தன்னை" (தேவாரம், 6928)

என்று திருநாவுக்கரசரும்,

"அறுவகைச் சமயத்தறு வகையோர்க்கும்
வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி"
(திருவாசகம், திருவண்டப்பகுதி, 17-18)

என்று மணிவாசகரும் கூறுவன மேற்கண்ட அகச்சமயங்கள் ஆறினையும் சுட்டுவதாகக் கொள்ளலாம். ஆறு சமயங்களையும் இணைக்கும் முயற்சியில் ஆதிசங்கரர் ஈடுபட்டார். எனவே, இவரை "ஷண்மத ஸ்தாபனாசாரியர்" என்று போற்றினர். இக்கால கட்டத்தில் இவ் ஆறு சமயங்களுக்குள் ஒரு சமரச உணர்வை வளர்க்க முனைந்தனர் சான்றோர். இதனைக் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை அரசாண்ட மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி,

"நால்வகை வேதமும் நவின்றுடன் வளர
ஐவகை வேள்வியும் செய்வினை இயற்ற
அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ..."

என்று கூறுவதாக அமைகின்றது.

"ஆறுசமயங்கள் தோறும் வேறுவேறாகி
விளையாடும் உனையாவரறிவார்"
(தாயுமானவர் பாடல்கள்)

என்று கி.பி. 17 - ஆம் நூற்றாண்டினரான தாயுமான சுவாமிகள் பாடுவார். இவ்வாறு ஆறு சமயங்களையும் இணைத்துச் சமயப் பொதுமையுணர்வு தமிழகத்தில் தழைக்கச் செய்ய வேண்டுமென்று அருளாளர்கள் விழைந்தனர். இந்நிலையில் தமிழகத்தில் ஆங்கில ஆட்சி தலைதூக்கிற்று. இதன் விளைவால் சமய ஒற்றுமைக்கு ஊறு நேர்ந்திடக் கூடாது என்று அறுசமய இணைப்பை ஏற்படுத்த

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் விரும்பினார். சமய சமரச உணர்வை ஆதிசங்கரர் அமைத்த வழித்தடத்தில் புத்துணர்வோடு இவர் பரப்ப முனைந்தார்.

### வண்ணச்சரபரின் பொதுமையுணர்வு

வண்ணச்சரபர் சமயச் சின்னங்களைத் தம்முடைய உடலில் அணிந்துகொள்வதன் வாயிலாக அறுசமய இணைப்புக்கு வழிவகுத்தார். வாய்மொழியாகச் சகிப்புத் தன்மையையும் இணைப்பையும் கூறுவதோடு, செயல் வடிவில் தம் வாழ்க்கையில் தாமே பின்பற்றி நடந்து காட்டவும் எண்ணினார். இவ்வெண்ணத்தின் விளைவால் சுவாமிகள் தமிழகத்தில் உள்ள எல்லாத் திருக்கோயில்களுக்கும் சென்று அறுசமயத் தெய்வங் களையும் வழிபட்டு வேற்றுமையில் ஒற்றுமை காணுமாறு பிறருக்குத் தாமே வழிகாட்டினார். அவ்வளவில் நின்றுவிடாமல் சுவாமிகள் ஆறு சமயக் கடவுளர்க்கும் பல்லாயிரம் பாடல்களைப் பாடிப் பரவியுள்ளார். கௌமார முறைமையைப் பரப்புவதில் இவருக்குப் பேரீடுபாடு இருந்தது. இதனை வலியுறுத்துவது போன்று அமைகின்றது. தவத்திரு. முருகதாச ஐயாவின் கருத்து,"இந்நூலாசிரியரான சுவாமிகள் எல்லாச் சமயமூர்த்திகளும் பரம்பொருள் ஒன்றினின்றும் தோன்றிய வடிவங்கள் என்ற உண்மையை அநுபவமாக அறிந்திருப்பினும், முன்னைய தொடர்பிற்கேற்ப முருகப் பெருமானையே இளமை முதற்கொண்டு உபாசனை வழிபாடு செய்து, அவனருளால் பல காட்சிகள் பெற்று, பல அருளுரைகள் வினவி, சமரச ஞானம் கைவரப் பெற்றவர். ஆகவே முருகனை முதற்பொருளாகக் கொண்டு மற்றவற்றை அதன் அங்கமாகத் தழுவினர்" (கௌமார முறைமை, தி.செ. முருகதாச ஐயா முன்னுரை). இவ்வாறு முருகதாசர் கருதுவதற்கு அடிப்படையாக அமைகிறது சுவாமிகளின் பாடல் ஒன்று. அது வருமாறு:

"சூரியனே பிரமம்எனச் சொல்லல் ஒன்று
    சுடர்மழுவான் கடவுளெனத் துதிப்ப தொன்று
விரிசயத் தியைப்பெரிதா விளம்பல் ஒன்று
    விட்டுணுவே யாகுமென விள்ளல் ஒன்று
சீரியக ணேசன்எனத் திகழ்வ தொன்று
    செவ்வேற்கைச் சேந்தனெனச் செப்ப லொன்று
ஆரியநூற் றலைவர்புகழ் சமய பேதம்
    ஆறும்எங்கள் கவுமாரத்துள் அணித்தாம் அன்றே"

(கௌமார முறைமை, கருமகாண்டம், 21)

## கிழமைகள் ஏழிற்கு விளக்கம்

சத்திய சூத்திரம் என்ற நூலில் வண்ணச்சரபர் ஒரு வாரத்தில் உள்ள ஏழு நாட்களும் ஏழு சமயங்களையும் வழிபடற்பொருட்டே என்று காரணம் கூறுவர். இது புதுமையான விளக்கம் ஆகும்.

"அநந்த பேதத்து அறுவகைச் சமயமும்
அவைமுழு தொருவலும் தழுவலு மாகும்
அதீதம் ஒன்றும் ஆன ஏழும்
வழிபடற் பொருட்டே வாரம்ஏ ழாயவே" (சத்தியசூத்திரம், 34)

| கிழமை | | தெய்வம் | | சமயம் |
|---|---|---|---|---|
| ஞாயிறு | - | சூரியன் | - | சௌரம் |
| திங்கள் | - | சிவன் | - | சைவம் |
| செவ்வாய் | - | சக்தி | - | சாக்தம் |
| புதன் | - | விஷ்ணு | - | வைணவம் |
| வியாழன் | - | கணபதி | - | காணாபத்தியம் |
| வெள்ளி | - | குமரன் | - | கௌமாரம் |
| சனி | - | குரு | - | சமயாதீதம் |

## சமயாதீதம் என்னும் பொதுநிலை

திருமாலாயிரம், கணபதியாயிரம், ஞாயிறாயிரம் என்று ஆயிரம் ஆயிரம் பாடல்கள் பாடி இவர் அறுவகைச் சமய நல்லிணைப்பை ஏற்படுத்த முனைந்தார். ஏழாவதான குருவைத் தெய்வமாய்க் கொண்டு வழிபாடியற்ற வேண்டும் என்று வலியுறுத்துவர். "குரு என்றும் தெய்வமென்றும் பொதுப்படச் சொல்லும் நிலையே சமயாதீதம் எனத்தகும். குருவும் தெய்வமும் இல்லாத சமயம் இன்மையால் எல்லாச் சமயங்களும் சமயாதீதம் என்றே ஞானவான்கள் ஒப்புகின்றார்கள்" என்று சுவாமிகள் தாம் இயற்றியுள்ள ஒரே உரைநடை நூலாகிய சத்தியவாசகத்துள் (97,98) கூறுவது இங்கே ஒப்புநோக்கத்தகும்.

"தாயுமானவர் தம் கால இந்துமதப் பிரிவுகளுட் சமரசநிலை காண முயன்றவராதலால், மனதற்ற நிலை ஏனைய இந்துமதப் பிரிவுகளுக்கும் பொதுவானதென்றே கொள்ளலாம்" (தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 178) என முனைவர் கா.சிவத்தம்பி கருத்துரைப்பது சுவாமிகள் அறுசமயச் சமரச

நிலையை - சமய நல்லிணைப்பை ஏற்படுத்த முனைந்தமைக்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது.

கௌமார முறைமை என்ற நூலில் சுவாமிகள் கரும காண்டம், பக்தி காண்டம், ஞான காண்டம் என மூன்று காண்டங்களில் நூறுநூறு பாடல்கள் வீதம் முந்நூறு பாடல்கள் இயற்றியுள்ளார். தம்முடைய சமயக் கருத்துக்களைக் கௌமார வினோதம், கௌமார லகிரி, கௌமார தீபம் இனைய நூல்களிலும் எடுத்து விளக்கியுள்ளார். ஆறுசமயக் கடவுள்களுக்கும் பல்லாயிரம் பாடல்கள் பாடித் தம் சமயக் கோட்பாட்டைச் சுவாமிகள் வலியுறுத்தியுள்ளார். சமயாதீதம் குறித்து ஏழாயிரம் பாடல்கள் அடங்கிய ஏழாயிரப் பிரபந்தம் என ஒன்றும் பாடியுள்ளார்.

## குருவே பெரிய தெய்வம்

கதிரவனைக் குறித்து வட மொழியில் ஆதித்தஸ்தோத்திர ரத்தினம், ஆதித்த இருதயம் போன்ற நூல்கள் உள. தமிழில் சுவாமிகளின் இயற்றியுள்ள 'ஞாயிறு ஆயிரம்' ஒன்று மட்டுமே உள்ளது என்பது குறிப்பிடத் தக்க ஒன்று. சிவபெருமானுக்குத் தில்லைத் திருவாயிரமும், நூறுபதிகங்கள் அடங்கிய 'சக்தி கவசம்' சக்திக்கும், திருமாலுக்குத் 'திருவரங்கத் திருவாயிரமும்', விநாயகருக்குக் 'கணபதி ஆயிரமும்', முருகப் பெருமானுக்குப் 'பழனித் திருவாயிரமும்' இவர் பாடியுள்ளார்.

பெரிய தெய்வம் 'குரு' என்பதே சுவாமிகளின் கொள்கையாகும்.

" குருவடிவம் அன்றியொரு தஞ்ச மில்லை
கூறிடினும் அவனுளத்தின் குறிப்பென் றோர்ந்து
திருவருளை நாடிநிற்கும் சமயா தீதச்
செல்வருக்கும் பூசையது சிறப்பே யாகும்"

(கௌமார முறைமை, ப.23)

பொதுவாயுள்ள பரம்பொருளே குருவடிவம் என்பதே சமயாதீத இயல்பு. இவ்வாறு சுவாமிகள் கருத்துரைக்க அடிப்படைச் சான்றாக அமைந்தது திருமந்திரத்தின்,

" தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே" (திருமந்திரம், 139)

என்ற பாடலாகும். இவ்வாறு ஆறு சமயங்களையும் கடவுளர்களையும் சுவாமிகள் எவ்வகையான வேறுபாடும் இன்றிப் பாடிப்பரவிப் போற்றியுள்ளார். இத்தகைய இணைப்பை உணர்த்தச் சுவாமிகளுக்கு ஆதிசங்கரர் தூண்டுகோலாக விளங்கியுள்ளார் என்பதனை அவரே ஒத்துக்கொண்டுள்ளார்.

"சட்சமய நெறிகளி லொன்றைப் பற்றிச்
சமரசநிச் சயமடைந்தோர் சகத்திற் பல்லோர்
பட்சமின்றிச் சங்கரன்போல் பொதுவாய் யாரும்
பகரவில்லை ........ ........ ........." (நானிலைச் சதகம்)

எனவும்,

"சமயமெலாம் ஒருநிலையே எனநன் குஓர்ந்த
சங்கர மாமுனி............." (நானிலைச் சதகம்)

எனவும் கூறுவதும் இங்கே எண்ணத்தகும்.

ஆறு சமயங்களையும் இணைக்கும் முயற்சியை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், ஆதிசங்கரர் வழியில் ஒரு பொதுநோக்குடன் தொடங்கிய நல்லெண்ணம் நமக்குப் புலப்படுகின்றது. இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர் மக்களைப் பிரித்து மதம் மாற்றம் செய்தனர். எனவே, இதனைத் தடுத்து நிறுத்தும் முயற்சியில் சுவாமிகள் ஈடுபட்டிருக்கவேண்டும். மேலும் அப்போதைய பாளையக்காரர் ஆட்சியின்கீழ் வாழ்ந்த மக்கள் எத்தெய்வத்தை வணங்குவது என்று தங்களுக்குள் குழம்பியதால் அவர்களுக்கு வழிகாட்டச் சுவாமிகள் அறிவுரை கூற முனைந்தார். இன்னும் சிலர் தங்கள் தங்கள் சமயமே உயர்ந்தது, சிறந்தது என்று தமக்குள் பூசலிட்டிருக்க வேண்டும். இத்தகையவர்க்கு உண்மையை அறிவுறுத்த வேண்டிச் சுவாமிகள் தம்முடைய அறுசமயக் கோட்பாட்டைப் பல நூல்கள் வாயிலாக அறிவுறுத்த முனைந்தார் எனக் கருதலாம். மேலும் வெளிநாட்டுச் சமயங்கள் இங்கே பரவுதலால் அறுவகைச் சமயங்களும் அழிந்துவிடக் கூடாது; சமய உணர்வு மக்களிடம் நன்கு வேரூன்றித் தழைக்க வேண்டும் என்று எண்ணியும் சுவாமிகள் சமய ஒற்றுமைக்கும் நல்லிணைப்பிற்கும் முழுமூச்சாக உழைத்தார் எனலாம்.

### சமரச உணர்வே சமயக்கோட்பாடு

கௌமார முறைமையில் தண்டபாணி சுவாமிகள் தம் சமயக் கொள்கையைப் பின்வருமாறு தெளிவுபடுத்தியுள்ளார்.

நிலையை - சமய நல்லிணைப்பை ஏற்படுத்த முனைந்தமைக்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது.

கௌமார முறைமை என்ற நூலில் சுவாமிகள் கரும காண்டம், பக்தி காண்டம், ஞான காண்டம் என மூன்று காண்டங்களில் நூறுநூறு பாடல்கள் வீதம் முந்நூறு பாடல்கள் இயற்றியுள்ளார். தம்முடைய சமயக் கருத்துக்களைக் கௌமார விநோதம், கௌமார லகிரி, கௌமார தீபம் இனைய நூல்களிலும் எடுத்து விளக்கியுள்ளார். ஆறுசமயக் கடவுள்களுக்கும் பல்லாயிரம் பாடல்கள் பாடித் தம் சமயக் கோட்பாட்டைச் சுவாமிகள் வலியுறுத்தியுள்ளார். சமயாதீதம் குறித்து ஏழாயிரம் பாடல்கள் அடங்கிய ஏழாயிரப் பிரபந்தம் என ஒன்றும் பாடியுள்ளார்.

## குருவே பெரிய தெய்வம்

கதிரவனைக் குறித்து வட மொழியில் ஆதித்தஹோத்திர ரத்தினம், ஆதித்த இருதயம் போன்ற நூல்கள் உள. தமிழில் சுவாமிகளின் இயற்றியுள்ள 'ஞாயிறு ஆயிரம்' ஒன்று மட்டுமே உள்ளது என்பது குறிப்பிடத் தக்க ஒன்று. சிவபெருமானுக்குத் தில்லைத் திருவாயிரமும், நூறுபதிகங்கள் அடங்கிய 'சக்தி கவசம்' சக்திக்கும், திருமாலுக்குத் 'திருவரங்கத் திருவாயிரமும்', விநாயகருக்குக் 'கணபதி ஆயிரமும்', முருகப் பெருமானுக்குப் 'பழனித் திருவாயிரமும்' இவர் பாடியுள்ளார்.

பெரிய தெய்வம் 'குரு' என்பதே சுவாமிகளின் கொள்கையாகும்.

"குருவடிவம் அன்றியொரு தஞ்ச மில்லை
கூறிடினும் அவனுளத்தின் குறிப்பென் றோர்ந்து
திருவருளை நாடிநிற்கும் சமயா தீதச்
செல்வருக்கும் பூசையது சிறப்பே யாகும்"

(கௌமார முறைமை, ப.23)

பொதுவாயுள்ள பரம்பொருளே குருவடிவம் என்பதே சமயாதீத இயல்பு. இவ்வாறு சுவாமிகள் கருத்துரைக்க அடிப்படைச் சான்றாக அமைந்தது திருமந்திரத்தின்,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே" (திருமந்திரம், 139)

என்ற பாடலாகும். இவ்வாறு ஆறு சமயங்களையும் கடவுளர்களையும் சுவாமிகள் எவ்வகையான வேறுபாடும் இன்றிப் பாடிப்பரவிப் போற்றியுள்ளார். இத்தகைய இணைப்பை உணர்த்தச் சுவாமிகளுக்கு ஆதிசங்கரர் தூண்டுகோலாக விளங்கியுள்ளார் என்பதனை அவரே ஒத்துக்கொண்டுள்ளார்.

"சட்சமய நெறிகளி லொன்றைப் பற்றிச்
சமரசநிச் சயமடைந்தோர் சகத்திற் பல்லோர்
பட்சமின்றிச் சங்கரன்போல் பொதுவாய் யாரும்
பகரவில்லை ........ ........ ........." (நானிலைச் சதகம்)

எனவும்,

"சமயமெலாம் ஒருநிலையே எனநன் குஓர்ந்த
சங்கர மாமுனி............." (நானிலைச் சதகம்)

எனவும் கூறுவதும் இங்கே எண்ணத்தகும்.

ஆறு சமயங்களையும் இணைக்கும் முயற்சியை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், ஆதிசங்கரர் வழியில் ஒரு பொதுநோக்குடன் தொடங்கிய நல்லெண்ணம் நமக்குப் புலப்படுகின்றது. இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர் மக்களைப் பிரித்து மதம் மாற்றம் செய்தனர். எனவே, இதனைத் தடுத்து நிறுத்தும் முயற்சியில் சுவாமிகள் ஈடுபட்டிருக்கவேண்டும். மேலும் அப்போதைய பாளையக்காரர் ஆட்சியின்கீழ் வாழ்ந்த மக்கள் எத்தெய்வத்தை வணங்குவது என்று தங்களுக்குள் குழம்பியதால் அவர்களுக்கு வழிகாட்டச் சுவாமிகள் அறிவுரை கூற முனைந்தார். இன்னும் சிலர் தங்கள் தங்கள் சமயமே உயர்ந்தது, சிறந்தது என்று தமக்குள் பூசலிட்டிருக்க வேண்டும். இத்தகையவர்க்கு உண்மையை அறிவுறுத்த வேண்டிச் சுவாமிகள் தம்முடைய அறுசமயக் கோட்பாட்டைப் பல நூல்கள் வாயிலாக அறிவுறுத்த முனைந்தார் எனக் கருதலாம். மேலும் வெளிநாட்டுச் சமயங்கள் இங்கே பரவுதலால் அறுவகைச் சமயங்களும் அழிந்துவிடக் கூடாது; சமய உணர்வு மக்களிடம் நன்கு வேரூன்றித் தழைக்க வேண்டும் என்று எண்ணியும் சுவாமிகள் சமய ஒற்றுமைக்கும் நல்லிணைப்பிற்கும் முழுமூச்சாக உழைத்தார் எனலாம்.

## சமரச உணர்வே சமயக்கோட்பாடு

கௌமார முறைமையில் தண்டபாணி சுவாமிகள் தம் சமயக் கொள்கையைப் பின்வருமாறு தெளிவுபடுத்தியுள்ளார்.

"ஒருசமய நிலையில்நின்று சாதித் தப்பால்
ஊறுதவிர் சமரசத்தில் உறுதல் மேலாம்"

(கௌமார முறைமை, கருமகாண்டம், 46)

வண்ணச்சரபர் காலத்தில் வாழ்ந்த சமயவாதிகள் எப்படியிருந்தனர் என்பதைப் பின்வரும் 'சத்தியவாசக'த் தொடரிலிருந்து நாம் அறிந்துணர ஒண்ணும்.

"அபிமானத்தால் பொய்யும் மெய்யும் கலந்து பேசுவது சமயவாதிகளுக்குச் சுபாவமாகும்" (சத்தியவாசகம், 8)

"தெய்வம் ஒன்றேயென்றும், தெய்வம் இகமேல் என்றும் ஔவையார் முதலானோர் சொன்ன சொற்களை விரும்பும் பக்குவமே ஞானத்தின் அடிப்படையாகும்" (மேலது, 87)

தாங்கள் பின்பற்ற வேண்டிய சமயநெறி எது என்பதனை மக்களுக்கு அறிவுறுத்தவும், அவற்றால் மக்களுக்குள் பிரிவும் வேற்றுமையும் ஏற்படலாகாது என்பதனைத் தெளிவுறுத்தவும் தண்டபாணி சுவாமிகள் விழைந்தார். இதனால் வேற்றுமையில் ஒற்றுமை காணும் நன்முயற்சியில் வண்ணச்சரபர் முழுமுச்சாய் ஈடுபட்டுச் சமய ஒற்றுமையை ஏற்படுத்தப் பாடுபட்டார். ஆறு சமயங்களுக்குள் ஒரு நல்லிணைப்புத் தன்மையை ஏற்படுத்த முனைந்த சமய சமரசமே சுவாமிகளின் சமயக் கோட்பாடு எனலாம்.



# 4. கொல்லாமைக் கோட்பாடு

## அறநெறி என்னும் அடித்தளம்

வெண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வள்ளுவநெறியில் வந்தவர் என்பதனை நிலைநாட்டுவது இவர்தம் கொல்லாமைக் கோட்பாடாகும்.

"அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும்" (குறள், 321)

எனவும்,

"கொன்றூன் நுகரும் கொடுமையை உள்நினைந்து
அன்றே ஒழிய விடுவானேல்" (அறிநெறிச்சாரம், 101)

எனவும்,

" நன்குணர்ந்தார் என்பெறினும் கொல்லார் இயைந்து "
(சிறுபஞ்சமூலம், 47)

எனவும், முன்னோர் மொழிந்த அறவழியில் சுவாமிகள் தம் கொல்லாமைக் கோட்பாட்டை வலியுறுத்திச் சென்றுள்ளார். ஆறு சமயங்களையும் இணைத்து ஓர் ஒற்றுமைத் தன்மையை உருவாக்கப் பாடுபட்ட அருளாளராகிய சுவாமிகள் அறநெறி என்னும் அடித்தளத்தில் தம்முடைய கொல்லாமைக் கோட்பாட்டை உருவாக்கியுள்ளார். "சமயங்கள் வாழ்க்கையைச் சீர்திருத்தியமைக்க முயன்றன எனலாம். வாழ்க்கைச் சுகங்களில் அளவிறந்த பற்று வைப்பதனால் ஏற்படும் அநர்த்தங்களை அவதானித்து வாழ்க்கையில் ஓர் ஒழுங்கை, நீதியை நிலை நாட்டச் சமயங்கள் முயன்றன. ஒழுங்காக வாழ்ந்து உலகியல் இன்பங்களைத் துய்க்க வேண்டும் என்றே சமயங்கள் கூற விரும்பின போலத் தெரிகிறது" (தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.56) என்று பேராசிரியர்

ஆ. வேலுப்பிள்ளை கூறுவார். இத்தகைய ஒழுங்கை மையமாகக் கொண்டு எழுந்ததே வண்ணச்சரபரின் கொல்லாமைக் கோட்பாடு. படைப்பிலக்கியத்தில் - அறநூல்களில் கொல்லாமையை - உயிர் இரக்கத்தை - ஒரு பாடுபொருளாய்ப் புலவர்கள் பாடுவதுண்டு. ஆனால், தண்டபாணி சுவாமிகள் உயிர் இரக்கத்தை ஒரு கோட்பாடாகவே கொண்டு தம் படைப்புகள் எல்லாவற்றிலுமே வலியுறுத்தக் காண்கின்றோம். இது இவருடைய வாழ்நாட் கொள்கை என்பதோடு உயிர்க் கொள்கையாகவும் விளங்கிற்று.

### கொல்லாமைக் கோட்பாட்டின் அடித்தளம்

தண்டபாணி சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பின்வரும் அடித்தளத்தில் உருவாகியுள்ளது எனக் கருதலாம்.




### குறள் அடிப்படையில்

திருக்குறள் குறிப்பிடும் அறநெறிகளின் அடிப்படையில் 'மனுநெறித் திருநூல்', 'வருக்கக் குறள்' ஆகிய அறநூல்களை இவர் இயற்றிக் கொல்லாமையை வலியுறுத்தினார்.

"அறத்தில் அறம் கொல்லாமை ஆமென் றுணரும்
திறத்தினர்க்கே உண்மைத் திரு" (மனுநெறித்திருநூல்: *5:1*)

"இரக்கமிலா மாந்தர்க் கியலுணர்ந்தோர் கூடி
அரக்கர்எனப் பேரிட் டனர்" (மேலது: *5:2*)

எனவரும் மனுநெறித் திருநூலின்கண் அமையும் குறள் வெண்பாக்களும்,

"கொல்லும் தொழிற்போல் கொடும்பாவ மில்லையெனச்
சொல்லும்சொல் பன்னூல் துணிவு" (வருக்கக். *41*)

"ஊனருந்தல் தீதென்று உறுத்தாதார் உற்றஉண்மை
ஞானமுற்றும் தேரில் நகை" (வருககக். *6*)

எனவரும் வருக்கக்குறள் வலியுறுத்துவனவும் வள்ளுவம் வகுத்த 'புலால் மறுத்தல்' அதிகாரம் கூறும் நெறியில் வண்ணச்சரபர்

வழங்கிச் சென்ற கொல்லாமைக் கோட்பாடாகும். திருவள்ளுவர் எடுத்துரைக்கும்

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிரும் தொழும்" (குறள், 260)

என்னும் இரக்கவுணர்வே சுவாமிகளைக் கொல்லாமையுணர்வைப் பாடுமாறு தூண்டியிருக்க வேண்டும்.

## இறையுணர்வு அடிப்படையில்

இறையுணர்வு அடிப்படையில் சுவாமிகள் பாடியுள்ள திருத்தணிகைப் பதிகம், வெண்பாமாலை போன்ற பன்னூல்களில் உயிரிரக்கக் கோட்பாட்டை அருளாளர்களும் - இறையன்பர்களும் - சமயவாதிகளும் பின்பற்ற வேண்டிய வாழ்வியல் அறமாகவே சுவாமிகள் வலியுறுத்தியுள்ளார்.

"நன்றருந்தும் கனிவாயால் நரர்தாமும் நான்குயிரும்
கொன்றருந்தும் கொடுமையறக் கொல்லாமை நாட்டுதியே"
(திருத்தணிகைப் பதிகம், ப.197)

என்றும்,

"என்றும் இதயத் திரக்கமில ராய்உயிர்கள்
கொன்று தின்பார்க் கஞ்சிக் குலைவேனோ"
(வெண்பாமாலை, 16)

என்றும்,

"பசுக்கொலை செய்யும் வம்பர்" (ஆங்கிலியர் அந்தாதி, 83)

என்றும்,

"கற்றாவுண்டு உவப்பார் மேற்சினங்கொண்டுள்ளம்
கலங்குகின்றேன் சிறிதுகடைக் கணித்தென்றாள்வாய்"
(சடகோபர் சதகத்தந்தாதி, 103)

என்றும்,

"மறிஅறுத் துண்கின்ற பொல்லார்க்கும்
செம்பொன் வழங்கிடும் நீ
அறிவில்நிற் கும்தமி யேற்கிரங்
காமை அதிசயமே" (திருமகளந்தாதி, 4)

என்றும் இவர், தாம் இயற்றியுள்ள இறைநெறிப் பாடல்களில் பல்வேறு தெய்வங்களிடமும் உருகி உருகி வேண்டுவார். முன்னைய அருளாளர்கள் கொல்லாமையை வலியுறுத்திப்

போயினமையையும் இவண் நினையத்தகும். உயிர்க்கொலை செய்வோர்க்கு இப்பிறவியிலேயே தண்டனை வரும்; அதற்கு வழிதேடும் வண்ணம் சுந்தரமூர்த்தி நாயனார்,

"கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்றபாவ வினை தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றினோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே" (தேவாரம், 8046)

என வேண்டுகின்றார்.

"கொல்லா விரதம் குவலயமெல் லாம்ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை பராபரமே"

(பராபரக்கண்ணி,54)

என்று தாயுமானவரும்,

"துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்" (திருவருட்பா)

என்று திருவருட்பிரகாச வள்ளலாரும் எடுத்துரைத்த இறையுணர்வு அடிப்படையில் சுவாமிகள் விரிவாக இக் கொல்லாமைக் கோட்பாட்டை நூறு விழுக்காடு அழுத்தம் தந்து வலியுறுத்தியமை தெளிவாகின்றது. "ஆதலால் வடலூரார்க்கும் அடியேன் தனக்கும் இந்தப் பூதலத்தினர் ஊன் உண்ணாப் புதுமை செய்திடலே மேலாம்" என்று இவர் புலவர் புராணத்துள் கண்கண்ட புலவர் சருக்கத்தில் கூறுவது இக்கோட்பாட்டிற்கு மேலும் அரண் சேர்ப்பதாக அமைகின்றது.

"முழுமதியந் தோற்றும் எழிற் பருவ நாளில்
முனிவர்களும் சித்தர்களும் முந்நீர் சூழும்
விழுமியபே ருலகினிற்பல் பெரியோர் தாமும்
விதிமுறையிற் பூசிப்பார்; வீணர் சில்லோர்
கழுகருந்தும் மாமிசமும் ஈனர் வேண்டும்
கள்அரக்கும் படைத்தறிவிற் கடையர் ஆவார்"

(கௌமார முறைமை, கருமகாண்டம், 32)

என்று சுவாமிகள் வேறுபடுத்திக் கூறுவது இங்கே ஒப்பிட்டுக்காணத்தகும். இவ்வாறு இறையுணர்வு அடிப்படையில் சுவாமிகள் கொல்லாமைக் கோட்பாட்டை வலியுறுத்தியுள்ளார்.

## யாகத்தில் ஊன் இடுதலை எதிர்த்தல்

இறைவனுக்கு நேர்த்திக்கடன் செய்யும்போது உயிர்களைப் பலியிடும் வழக்கம் இருந்துவந்துள்ளது. இறைவனின் பெயரால் வேள்வியில் உயிர்களைப் பலியிடுதல் வேதகாலத்திலும் இருந்து வந்துள்ளது. இடும்பன், காளி, இசக்கி, இனைய சிறு தெய்வங்களை வேண்டி ஆடுகளையும் ஆவினங்களையும் வெட்டிப் பலியிடுவர். இப்படிப்பட்ட இரக்கமற்ற கொடுஞ்செயல்கள் சுவாமிகள் காலத்தில் பெருகியிருக்க வேண்டும். இதனைக் கண்ணுற்ற வண்ணச்சரபர் மனம் மிக வருந்தினார். பழமை வழக்கெனினும் இதனை மாற்றியமைக்க வேண்டும் என்று இவர் முன்முயற்சி எடுக்க முன்வந்தார். ஆகவேதான்,

"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று" (குறள். 259)

என்றும் வள்ளுவ நெறிக்கு முதன்மை தந்த சுவாமிகள்,

"கொல்லா விரதக் குணமே தவமாகும்
அல்லாமற் றெல்லாம் அவமாகும்" (அருளாட்சி, 32)

என்றும்,

"புல்லருந்தும் பசுவின்றிரள் யாவிற்கும்
பூம்புக லூர்வளர் புன்னையின் சோலைக்கும்
கொல்லத் துணிவது வேள்வியி லாயினும்
கொடுமையென் றோதுநர் கும்பிடும் கோவிற்கும்"
(கீர்த்தனைப் பாடல் திரட்டு, 34)

என்றும்,

"வேதம் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடா தன்றோ"
(சத்தியசூத்திரம், 8:10)

என்றும் உரத்த குரல் கொடுப்பது இவர்தம் மனத்திண்மையைப் பறை சாற்றுகின்றது. இதன் உச்சகட்டமாக அமைவது இவர் கலைமகளைக்கூட மதிக்க மாட்டேன் என்று கூறுவதாகும். வேதத்தின் முதற்பகுதியான கருமகாண்டத்தில் வேள்வியிற் கொலை செய்யப்படுவது பற்றிக் கூறப்பெறுவதனை எண்ணி மனம் நொந்த சுவாமிகள்,

"நூன்முகப்பில் வேள்விநுவன்ற கொடுமையெண்ணி
நான்முகத்தோன் நாவினளை நான்மதியேன் - ஊன்முகக்க
ஒண்ணாதென் முப்பால் உரைத்தோன் ஒருநாவின்
பெண்ணாள் உயர்ச்சிகண்ட பின்" (அருளாட்சி, ப.1)

என்று பாடுவார் எனில் இவருடைய மனஉறுதியும் கொல்லாமைக் கோட்பாட்டில் இவருக்கிருந்த ஆழமான உணர்வும் தெளிவாகப் புலப்படுகின்றது. வேள்வியில் செய்யப்படும் உயிர்ப்பலியின் அடிப்படையில் இவ்வாறு கொல்லாமைக் கோட்பாடுபற்றிச் சுவாமிகள் பேசியுள்ளார்.

## ஆங்கில அரசின் செயல்கள்

சுவாமிகள் ஆங்கில அரசு ஆட்சி செய்த நாளில் அவர் கண் முன்னாலே உயிர்க்கொலையையும், ஊன் உண்ணுதலையும், மதுவருந்துதலையும் கண்டு பதைபதைத்தார். இவர் 'கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக' என்று பாடிய வள்ளலாரின் சமகாலத்தவர் ஆவார். ஆங்கில ஆட்சியினரின் வரிக்கொடுமையை எதிர்த்தும் சுவாமிகள் கருத்துரைத்துள்ளார் என்பது இவண் எண்ணத்தகும். இத்தகைய கொடுமைகள் நிகழ்வதற்குக் காரணம் ஆங்கில அரசின் தவறான ஆட்சி முறைமையை ஆகும் என எண்ணிய வண்ணச்சரபர்,

"பொய்புலை கோரம் பொருள்நசை ஆகிய
எய்தும்மன் உலகோர்க்கு எமன்அனை யானே"
(சத்திய சூத்திரம், 41)

என ஒரு நூற்பா வகுத்துரைப்பார். மேலும் இவர்,

"கொன்று புலையருந்திக் கொக்கரிக்கும் கோலுடையார்
என்றுமுய்ய மாட்டார்க ளே" (அருளாட்சி, 15)

என்றும்,

"பெய்யும் கனமுகில் ஒரேழும் ஒல்கப் பிறங்கல் எடுத்து
உய்யும் படிபல் பசுக்காத்த நாதனின்று ஊன்விழைந்து
கொய்யும் புலையர்க்கு அரசாளும் ஆர்வம் கொடுத்தது என்னே
நெய்யுந்து செங்கம லப்பொகுட் டேவளர் நேரிழையே"
(திருமகளந்தாதி, 45)

என்றும் வேண்டுவன ஆங்கிலேயர் ஆட்சியில் நிகழ்ந்த உயிர்க் கொலைகளின் வெளிப்பாடே ஆகும். மேலைநாட்டினர் வரவால் நன்மைகள் விளைந்தனவேனும் இத்தகைய கொடுமைகளும் நிகழ்ந்துள்ளன என்பதும் உண்மை.

"பசுக்கொலை செய்யும் வம்பர்"

(ஆங்கிலியர் அந்தாதி, 83)

"கன்று டன்பசு வுங்கொல் பாதகர்
கரிய புன்குடை நீழலில்
துன்று மென்னிடை வந்து வந்து சொலுஞ் சொல்
முற்றுமெ யல்லவோ" (திருத்தணிகைப் பதிகம், ப.46)

என்றும் சுவாமிகள் தாமியற்றியுள்ள பல்வேறு இலக்கியங்களிலும் வாய்ப்பு நேரும் இடங்களிலெல்லாம் ஆங்கில அரசு கொலை புலையை ஆதரித்தமைக்கு எதிராக உரத்த குரல் கொடுத்துள்ளார்.

### மக்களின் அறியாமை

"எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி" வாழ வேண்டிய மக்கள் மூடநம்பிக்கைகளுக்கு ஆட்பட்டு உயிர்ப்பலி இட்டு வந்தனர். பிற உயிர்களிடத்து அன்பு கொள்வதே இறைவனை வணங்குவதன் நோக்கமாகும்; அதுவே இறைவனுக்குச் செய்யும் திருத்தொண்டாகும்; அதுவே ஒருவனுக்கு வீடுபேறளிக்கும் வழியாகும். இதனை அறியாத மக்கள் அறியாமையால் செய்யும் உயிர்க்கொலையை எண்ணிச் சுவாமிகள் மனம் வருந்தினார்; ஊன் உண்ணலின் கொடுமைகளை உணர்த்தவும் முற்பட்டார்.

"கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முத்திபதம் தந்தாலும் - மேவற்கு
இசையேன்காண் என்னையின்னம் ஈடழிக்க வேண்டாம்
திசைதேர் பழனியர சே" (வெண்பாமாலை, 3)

எனப் பழனித் திருவாயிரத்திலும்,

"ஊனை விரும்பியுண்ணும் கானவர்கள் போல்வர்
ஈனர்களே........ .......... .........." (தில்லைபாதி நெல்லைபாதி, 4)

எனவும் இவர் இடித்துரைப்பன இவண் எண்ணிப் பார்ப்பதற்கு உரியன.

"நன்னாக ரீகமெய்தி நாய்நரிபோன் றூனெலும்பு
தின்னாதார் வேண்டுமெழிற் றில்லையே" (மேலது, 20)

என இரக்கவுணர்வுடையராக மக்கள் வாழவேண்டுமென இவர் அறிவுறுத்துவார்.

"கொல்லா நெறியே குணம்" (அருளாட்சி, 48)

"எல்லா வடிவும் இறைவனே" (அருளாட்சி, 51)

"ஊன் உண்பார்க்கு நரகமே உண்டு" (அருளாட்சி, 88)

என அருளாட்சி என்ற நூலில் எளிமையாக எடுத்துச்சொல்லி அறியாமையில் அழுந்தியிருக்கும் மக்களுக்கு அறிவுறுத்தித் தெளிவுபடுத்துவார். மக்களின் அறியாமையைப் பயன்படுத்திப் புலவர்கள் உயிர்ப்பலியிடுதலைப் போற்றியுள்ளமையினைக் கண்டும் கேட்டும் சுவாமிகள் மனம் புண்பட்டு வருந்தியுள்ளார். அவ்வருத்த வுணர்வின் வெளிப்பாடாக அறுவகையிலக்கணப் புலமையிலக்கணப் பிரிவில்,

"கொல்லல் ஊன்சமைந்த லாதிய விரித்துக்
கழறுந் துணிவுடைக் கவிப்புல வோர்ரைப்
பேயரென் றுலகம் பெரிதிகழ்ந் திடுமே"
(புலமையிலக்கணம், தவறியல்பு, 14)

என்று நூற்பா ஒன்றும் இயற்றியுள்ளார். மக்களை நெறிப்படுத்த வேண்டிய புலவர்களுக்கு மேற்கண்டவாறு வழிகாட்டுகின்றார் வண்ணச்சரபர். புறம் கூறும்,

"நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்" (புறம் 195)

என்னும் அறவழி இங்கே நினையத்தகும்.

## உயிரிரக்கமே உயரிய கோட்பாடு

தண்டபாணி சுவாமிகளின் உயிரிரக்கம் என்னும் கொல்லாமைக் கோட்பாடு திருக்குறள் வலியுறுத்தும் அறங்களின் அடிப்படையில் உருவாயிற்று. நம் முன்னைய இறைநெறிச் சான்றோர்களின் எண்ணங்களைச் சுவாமிகள் உள்வாங்கிக் கொண்டு அறுசமயக் கடவுளிடத்தும் கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் உலகில் நிலைக்க வைக்க வேண்டும் என மனமுருகி வேண் டினார். வேதத்தின் கரும காண்டம் வேள்வியில் உயிர்ப்பலி இடுவதனை ஏற்றுக்கொள்கிறது. இதனை மறுத்துச் சுவாமிகள் கொல்லா நெறியைத் தம்முடைய நூல்கள் வாயிலாக மீண்டும் மீண்டும் வலியுறுத்தி விரித்துப் பேசினார். ஆங்கிலேயர் வருகையினால் உயிர்க் கொலை புரிதலும், ஊன் உண்ணுதலும் நாட்டில் தங்குதடையின்றிப் பெருகின. இவற்றைக் கண்ட சுவாமிகள் மனம் நொந்து 'ஆங்கிலியர் அந்தாதி' வாயிலாகவும், ஏனைய நூல்கள் வழியும் தம் உயிர்க் கொள்கையான கொல்லாமையுணர்வை வெளிப்படுத்தினார். மக்களின்

அறியாமையைப் போக்கிப் பிற உயிர்க்குத் தீங்கு செய்தலும், புலால் அருந்தும் புன்மைச் செயலும் இறைவனுக்கு உகந்தவை அல்ல என்று மக்களிடம் கூறும் அடித்தளங்களிலிருந்து சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு உருவாகி வளர்ந்துள்ளது.

## கொல்லாமைக் கோட்பாட்டைச் செயற்படுத்தல்

இக்கொல்லாமைக் கோட்பாட்டைச் சுவாமிகள் தம் காலத்திலே பல இடங்களில் செயற்படுத்தி ஆடு, பசுக்களைப் பலி இடுதலைத் தாமே நேரிற் சென்று தடுத்துள்ளார். இதனை வலியுறுத்தும் வண்ணம் ஒற்றியூர்க் காளி கோயிலில் நடைபெற்று வந்த கொலையை நீக்கவேண்டி,

"ஒற்றியூர்க் காளீ! உனக்கேனோ ஊன் விருப்பம்?
வெற்றிமழு வோன்விருப்பு வேண்டாமோ? - சிற்றுயிரைக்
கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவன்கண்டாய்!
நல்வார்த்தை சொன்னேன்இந் நாள்"

(தனிப்பாடல் திரட்டு, 193)

என்று பாடியுள்ளார். இதே போன்று இவர் கோலியனூர் மாரியம்மன் கோவிலில் நடைபெற்றுவந்த கொலையையும் நிறுத்தப் பாடி வெற்றி கண்டுள்ளார். பழனிமலை இடும்பன் கோவிலிலும் கருப்பண்ணசாமி கோவிலிலும் நிகழ்ந்துவந்த உயிர்க்கொலையை நிறுத்துமாறு பாடல் பாடிச் செயற்படுத்தியுள்ளார்.

ஒட்டன் சத்திரத்தில் ஒரு சிறுவன் குடரொடு துடக்கி முடக்கியிடத் துன்புறுத்திய வயிற்று வலியால் துடித்தான். அச் சிறுவனின் வயிற்று வலி நீங்க வேண்டுமென இவர் தென்பழனியப்பனிடம் விண்ணப்பம் செய்வார். ஆட்டை வெட்டிப் பலியிட்டால் வயிற்றுவலி போய்விடும் என்ற தவறான எண்ணத்தைக் கொண்ட அவ்வூர் மக்களுக்குச் அறிவுரை கூறி, அதனை நிறுத்தினார்.

"அயிற்றலைவா! தென்பழனி யப்பா!இச் சேய்தன்
வயிற்றுவலி முற்றுமற மாற்றி - வெயிற்புழுப்போன்று
ஏழைகள்வா டப்படுத்தும் இப்பேய் உயிர்க்குடித்திட்
டூழைவென்றோர் உண்டென் றுணர்த்து"

(தனிப்பாடல் திரட்டு, 197)

என்பதே அப்பாடல். பிற உயிர்படும் துன்பத்திற்கு இரங்கி அருளாளர்கள் இறைவனிடம் வேண்டினர். இது நம் நாயன்மார்

வாழ்வில் நிகழ்ந்த செயல் ஆகும். திருஞானசம்பந்தர் திருமயிலையில் எலும்பாய்க் குடத்துள் கிடந்த பூம்பாவையை,

"மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை
கட்டிட்ட டங்கொண்டான் கபாலீச்சர மமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்"

(தேவாரம், 1971)

எனப் பதிகம் பாடிப் பூம்பாவையை உயிர் பெற்றெழுமாறு செய்தார். இத்தகைய உயிர் இரக்கக் கோட்பாட்டு வழியிலேயே தண்டபாணி சுவாமிகளும் கொலை, புலை தவிர்க்கப் பாடி வெற்றிகண்டார்.

ஒருமுறை வண்ணச்சரபரின் மைந்தன் செந்தினாயகம் ஓர் அவரைக் கொடியை ஒடித்துவிடவே, அதுகண்டு வருந்தினார் சுவாமிகள்.

"கொத்த வரைச்செடியைக் கொண்டையள வாய்முறித்த
கைத்தலமே என்சொல் கருதிக்கேள்! - பத்தர்க்கு
அருள்புரியும் ஆனைமுகத் தம்மானைக் கும்பிட்டு
இருள்வினைகள் செய்யா திரு" (தனிப்பாடல் திரட்டு, 201)

என வெண்பாப் பாடித் தம் மைந்தர்க்கு அறிவுறுத்தினாராம். முல்லைக்கொடி வாடுமே என்று கருதி அது படரத் தன் தேரையே பாரி வழங்கியமை சங்க நூல்களால் அறியப் பெறும் செய்தி. 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடிய' வள்ளலார் வாழ்ந்த சமகாலப் புலவர் வண்ணச்சரபர். அன்னோர்தம் அன்புவழியில்,

"ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்" (குறள். 214)

என்ற குறள்நெறியில் கொல்லாமையைப் போற்றிப் புரந்த பெருமைக்குரியவர் ஆவார்.



## 5. சமூகச் சிந்தனையாளர்

### சமூகக் கொடுமைகளைச் சாடல்

சமயநெறியில் தலைப்பட்டோர் சமுதாயத்தை விட்டு விலகிப் போக இயலாது. நம் சைவ, வைணவச் சான்றோர்கள் அவர்கள் வாழ்ந்த நாளில் மக்கள் நலன் கருதி மனித நேயத்துடன் தொண்டு புரிந்துள்ளனர் என்பது நாம் அறிந்த ஒன்று. "உலகநிலை, நாட்டுநிலை, சமூக அரசியல் பிரச்சினைகள் இவையாவும் மக்களிடையே ஒரு விழிப்புணர்வை உண்டாக்கிவிட்டன. .....இலக்கியம் இன்று வாழ்க்கையை விமர்சனம் செய்வதோடு நின்றுவிடுவதில்லை. அது புது உலகிற்கும் புது வாழ்விற்கும் வழிகாட்டியாய் நிற்கின்றது. அது இன்று எளிய மக்களின் வாழ்க்கையையும் படம் பிடித்துக் காட்டுகின்றது. சமூக வாழ்க்கையின் உட்பொருளை விளக்கி இலட்சிய வாழ்க்கையை வகுத்துக் காட்டுகிறது. சமூக அநீதிகளையும் கொடுமைகளையும் அம்பலப்படுத்திச் சமதருமத்தைப் போதிக்கிறது.' (இலக்கியமும் திறனாய்வும், ப.36) எனத் திரு. ப. கோதண்டராமன் என்பார் கூறுவது இங்கே இணைத்துக் காணத்தக்கதாகும். மேற்கண்ட கருத்திற்கு ஏற்ப வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் சிந்தனைகளும் படைப்புகளும் விளங்குகின்றன.

சமுதாயச் சீர்திருத்தவாதிகள் உயிர்களை இறைவனுக்குப் பலியிடுதலை எதிர்த்து வந்துள்ளனர். ஆனால், சமயச் சான்றோர்கள் பக்தி இலக்கியக் காலத்தில் இக் கொடுஞ்செயலை எதிர்த்தமைக்குச் சான்றுகள் இல்லை.

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து"

(திருமுருகாற்றுப்படை, 218)

"மலைவான் கொள்கென உயிர்ப்பலி தூஉய்" (புறம், 143)

இறைவழிபாட்டில் பலியிடும் பழக்கம் இருந்தமையினை மேற்கண்ட சங்க இலக்கியச் சான்றுகளைக் கொண்டு அறிந்துணர முடிகிறது. ஆனால், சமய நெறியினராகிய தண்டபாணி சுவாமிகள் ஆன்மீக நிலையினராய் இருந்ததும் மூடப்பழக்க வழக்கத்தால் நிகழ்ந்துவந்த உயிர்ப்பலியிடும் கொடுஞ்செயலைக் கடிந்து சாடினார்.

"வேதஞ் சொல்லினும் விரிஞன் ஆதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடா தன்றோ"

(சத்தியசூத்திரம், 81)

என்பது சுவாமிகளின் வாக்கு. 'வேலியே பயிரை மேய்ந்து கெடுத்தல் போல' என்ற பழமொழிக்கு ஏற்ப அமைகின்ற செயல் ஒன்றினை எண்ணிச் சுவாமிகள் சாடுவதும் அவருடைய சீர்திருத்த எண்ணத்தைப் பறைசாற்றும். சிறுத்தொண்டர் வாழ்விலே சிவபெருமான் சீராளனையே பிள்ளைக்கறியாகக் கேட்ட செய்தியைச் சுவாமிகள் கடுமையாகச் சாடிப் பேசுவதனை.

"சிறுத்தொண்டன் வீட்டில்வரும் ஈசனையும்
தானா இகழத் தலைப்பட்டார்" (அருளாட்சி, 21)

என வரும் அடிகள்வாயிலாக உணரமுடிகின்றது. உயிர்ப்பலி கேட்கும் தெய்வம் பேயே ஆகும் என்று ஒருபடி மேலே சென்று சாடுவது.

"சுத்த பூசை தோய்தரு மாயிற்
பேயும் தெய்வமாம் இனப்பலி ஏற்கிற்
தெய்வமும் பேயாம்" (சத்தியசூத்திரம், 81)

என்பதனால் உறுதியாகின்றது. இவற்றால் ஆன்மிக நெறியில் ஆழ்ந்த பற்றுடைய தண்டபாணி சுவாமிகள் புரட்சி எண்ணம் கொண்டிருந்தவர் என்பது நன்கு புலனாகின்றது.

### கலப்புமணம்

பெண்களின் கல்வி வளர்ச்சிக்குக் கருத்துரைத்தனர் பாரதியும் பாரதிதாசனும் என்பது நமக்குத் தெரியும். உறவு முறையிலும் ஒரே சாதியிலும் திருமணம் செய்வது தொன்று தொட்டு நிகழ்ந்து வரும் சமுதாயப் பழக்கம்.

"மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்"

(தொல். மரபியல், 1591)

என்றாலும் பண்டை அகத்திணை மரபில் காதல் வாழ்வு மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இதனடிப்படையில் கலப்பு மணம் நிகழுமாயின் சாதியை ஒழிப்பதற்கு உரியவழியுண்டாகும் என்று சுவாமிகள் உறுதியாக நம்பினார்.

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமுங் கொண்டு என்செய்வீர்"

(தேவாரம், 5832)

என்ற திருநாவுக்கரசர் வினவுவது நம் செவிகளில் விழத்தான் செய்கின்றது.மேலும் சித்தர்கள் சாதி, சடங்கு முதலியவற்றைக் கடிந்து பாடியுள்ளமையும் கண்கூடு.

"தொல்லுலகில் நாற்சாதி, அநேகம் சாதி
தொகுத்தார்கள் அவரவர்கள் பிழைக்கத் தானே"

(வான்மீகர் சூத்திரஞானம், 8)

என்பது சித்தர் பாடல்.

"சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்..." (நல்வழி, 2)

என்று ஔவையாரும் சாதிகள் பற்றிச் சாடியுள்ளனர். ஆனால் தண்டபாணி சுவாமிகளின் சாடுகின்ற நோக்கம் கலப்பு மணத்தை ஏற்றுக்கொள்ளும் பாங்கில் அமைகின்றது. முன்னையோர் கலப்பு மணம்பற்றிப் பேசியதாகத் தெரியவில்லை. இது சமூக விழிப் புணர்ச்சிக்கு ஆன்மிக நெறியினரான சுவாமிகள் வழிமொழிவது புதுமையான சிந்தனையே. சாதி ஒழிப்புக்குச் சமய உலகிலிருந்து ஆதரவு தருவது புதிய சிந்தனையாகும்.

"தவமும் சமயமும் சாதியும் பொருளும்
அங்கசன் தொடுங்கணைக் காற்றாதலமரும்
மயலாற் கழிவது மாநிலத் தியல்பே"

(அறுவகை இலக்கணம், பொருளிலக்கணம், 45)

என்பது சாதியை உடைத்தெரியக் காதல் களம் அமைத்து உதவுகிறது. கலப்புத் திருமணத்திற்குச் சுவாமிகள் ஆதரவு தந்துள்ளார் என்பது இதனாற் புலப்படும். சமூகச் சிந்தனையாளர் இவர் என்பது மேலே கூறிய நூற்பாவினால் உறுதியாகிறது.

"வள்ளலார் பிரிட்டிஷ் பேரரசால் மக்களுற்ற அல்லல்களை அறிந்திருப்பினும் அதுபற்றி அவர் ஆத்திரம் காட்டவில்லை. காரணம் அதைவிடப் பெரும் கொடுமைகளைச் சாதி மத வருணங்களின் பெயர்களால் மக்கள் அனுபவித்ததைப் பார்த்து வருந்தியதுதான்" என்பதும் இங்கே எண்ணிப் பார்க்கத்தகும். இச்சூழலைத் தண்டபாணி சுவாமிகள் உணர்ந்து செயல்பட் டிருக்க வேண்டும்.

## விதவை மறுமணம்

இளமைத் திருமணங்களால் சென்ற நூற்றாண்டில் மகளிர் பெரும் துன்பங்களுக்கு ஆளாயினர். சமுதாயம் அவர்களை வேறுபட்ட எண்ணத்துடனேயே பார்த்தது. இளம் பருவத்திலேயே கணவனை இழந்து வறுமையில் வாடியும், பிறரால் துன்புறுத்தபட்டும் பெண்கள் அலைக்கழிக்கப்பட்டனர். சமூகச் சீர்த்திருத்த எண்ணம் கொண்ட பாரதிதாசன்,

"கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே - அங்கு
வேரிற் பழுத்த பலா.....
காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே கெட்ட
கைம்மையைத் தூர்க்கா தீர்! ஒரு
கட்டழகன்திருத் தோளினைச் சேர்ந்திடச்
சாத்திரம் பார்க்கா தீர்"

(பாரதிதாசன் கவிதைகள், முதல்தொகுதி, கைம்மைப்பழி)

எனவும்,

"கைம்மை எனக்கூறி - அப்பெரும்
கையினிற் கூர்வேலால்
நம்மினப் பெண்குலத்தின் - இதய
நடுவிற் பாய்ச்சுகின்றோம்"

(மேலது, கைம்மைக் கொடுமை)

என்றும் பாடுவன சீர்திருத்த நோக்கிலேயே! ஆயின் இறைநெறியாளராக விளங்கிய தண்டபாணி சுவாமிகள் பாரதிதாசனுக்கு முன்னோடியாய் (19-ஆம் நூற்றாண்டில்) விதவையர் மறுமணம் குறித்துத் துணிந்து பேசுவது அவர்தம் சமுதாய மறுமலர்ச்சி எண்ணத்தைத் தெளிவு படுத்துகின்றது. அச்சிந்தனை வருமாறு:

"நூலிழந்ததும் கேளிச்சை நூறாதாள் மற்றுமொரு
தாலிகட்டிக் கொள்ளத் தகும்." (வருக்கக் குறள், 121)

ஈ.வே.ரா.பெரியாரின் சுயமரியாதைக் கொள்கை நம் தமிழகத்தில் தொடங்குவதற்கு முன்பே கணவனை இழந்த இளம்பெண் மறுமணம் செய்துகொள்வது நியாயமானது என்று சுவாமிகள் கூறுவதற்கு எத்தனை இடையூறுகள், ஏச்சுகள் அவர் வாழ்ந்த நாளில் எழுந்திருக்கும் என்று எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

கௌமார முறைமை என்ற நூலில் சுவாமிகள் கணவனை இழந்த பெண் காம வேட்கையால் கெட்டுப் போவதனை விடவும் மறுமணம் செய்துகொளலே நன்று என்பார். அச்சீர்த்திருத்த எண்ணம் அமைந்த பாடல் வருமாறு:

"மகப்பேறு மணம்சாவு முதல வாய
வகைகளுக்கும் விதிகள்பல வகுத்தார் முன்னோர்
அகத்தோங்கும் பொருளளவிற் செயலே நன்றாம்
அதுகிடக்க; நூலிழந்திட்டு அனங்கன் அம்பால்
மிகச்சோரு மடநல்லாள் கலவி வேட்டு
மேவுகருப் பங்கெடுக்கும் வினையை எண்ணில்
சகத்தோர்கள் அறியமற்றோர் கொழுநன் தன்னைச்
சார்ந்திருக்கச் சொன்னமுறை தவறா காதே"
(கௌமாரமுறைமை, கருமகாண்டம், 23)

## மாத்தமிழை மதித்த பாங்கு

தமிழையும் தமிழ் இலக்கியங்களையும் போற்றி வளர்க்க வேண்டும் என்ற எண்ணம் வண்ணச்சரபரின் வாழ்நாள் எண்ணமாக விளங்கிற்று.

"இருந்தமிழே உன்னால இருந்தேன் - இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" (தமிழ் விடுதூது)

எனபதற்கு ஏற்பச் சுவாமிகள் தமிழுக்குத் தலைமையும் முதன்மையும் தந்து போற்றிய புண்ணியர்.

"மங்கை யொருத்தி சுகமும் எங்கள்
மாத்தமிழுக்கு ஈடில்லை"
(பாவேந்தர் பன்மணித்திரள், ப.85)

என்ற பாவேந்தர் பாரதிதாசனாரின் கூற்றுக்கு முன்னோடியாக விளங்குகிறது தண்டபாணி சுவாமிகளின் பின்வரும் கூற்று.

"சுண்ணந் திமிர்ந்த முலைத் தோகையர்சொற் கைப்போரும்
வண்ணத் தமிழ்க்குருகு வார்." (வருக்கக் குறள், 60)

இவ்வளவோடு இவர் நிற்கவில்லை. தம்முடைய அறுவகையிலக்கணத்துள்ளும் தமிழின் இனிமையை அழுத்தம் தந்து ஆணித்தரமாகக் கூறுவார்:

"கோங்கரும் பன்ன குவிமுலைக் கோதையர்
தீஞ்சுவைச் சொல்லினும் செந்தமிழ் இனிதென
மனமும் தெய்வமும் அறிய வாழ்த்தும்..."
(புலமையிலக்கணம், 67)

இவர் தமிழ் அறிந்தாலே தெய்வங்களுக்கும் பெருமையுண்டு: 'தமிழ் அறியாத் தெய்வம் பேய்' என்று அடித்துச் சொல்லுவார்.

"தமிழ்ச் சுவையறியாத் தெய்வம் உளதெனில்
அஃதுணர் அலகையில் தாழ்வெனல் அறமே"
(புலமையிலக்கணம், 30)

தமிழ் மொழியின்மீது இவருக்கு இருந்த ஆழ்ந்தகன்ற நுண்ணிய வேட்கை நம்மை வியக்குமாறு செய்கின்றது.

## ஆங்கில ஆட்சியின் அவலங்கள்

தண்டபாணி சுவாமிகள் ஆங்கிலேயர் ஆண்ட காலத்தில் வாழ்ந்தவர் என்பதோடு அவர்கள் செய்த கொடுமைகளையும் நேரிற் கண்டவர். அருளாளராக விளங்கிய சுவாமிகள் அன்னோர் மக்களுக்கு - சமுதாயத்திற்கு இழைத்த கொடுமைகளை எண்ணி வருந்தியுள்ளார். அக்கொடுமைகளைத் தம்முடைய பாடல்களிலும் பதிவு செய்துள்ளார். இதற்குக் காரணம் சுவாமிகளுக்கு இருந்த சமூகச் சிந்தனையே ஆகும். ஏகாதிபத்திய ஆட்சியில் கிராமப் பொருளாதாரம் சீர்கெட்டுப் போனது. இதனை,

"ஊரான் உரான் தோட்டத்திலே
ஒருவன் போட்டானாம் வெள்ளிரிக்காய்
காசுக்கு ரெண்டு விற்கச் சொல்லி
காயிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்.

வெள்ளைக்காரன் பணம் சின்னப்பணம் - அது
வேடிக்கை செய்யுதாம் வெள்ளிப்பணம்
வெள்ளிப் பணத்துக்கு ஆசைப்பட்டு - நீ
வேஷங் குலைந்தாயே வீராயி"

என்ற நாட்டுப்புறப் பாடல் ஒன்று நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றது. இதே போன்று வண்ணச்சரபர் நம் தமிழகப் பொருளாதாரமும், ஒழுக்கமும், அரசியல் ஆட்சியும் சீரழிந்து

போனதனைச் சித்திரித்துக் காட்டியுள்ளார். இதோ அவருடைய பாடல்கள்:

"ஈன மலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு
மானம் அனுவளவேனும்இல் லாக்கொடு வஞ்சகரை"
(ஆங்கிலியர் அந்தாதி, 76)

பல்லவி

"இங்கிலிசுக்காரர் அநியாயக் கொடுமையை
என்னென்று சொல்வேன் அம்மா!" (இங்கி.)

அனுபல்லவி

பங்குங்குத் தகப்பன்பால் மகன்சண்டை செய்வதும்
பாரிக்கு நாயகன் பயப்படு கின்றதும்
எங்கும் பசுக்கள் மேய்தற் கிடமற்றுப் போனதும்
எளியவர் வழக்கிழந்த திடுவதும் முதலாக (இங்கி.)

சரணம்

சப்பாத்திக் கள்ளிக்கும் தரிசுக்கும் தீருவை
தடையறக் கொடுத்திடத் தண்டங்கள் செய்வதும்
மெய்ப்பார்ப் பார் வீட்டினிற் பிறந்த பிள்ளைகளும்
வேதங்கள் படியாமல் வேலை கேட்டலைவதும்
துப்பாக்கி எனும்திருட்டாயுதம் வாள்முதற்
சொல்லும்நல் ஆயுதத் தொகைகளை வெல்வதும்
பொய்ப்பாட்டுக் கவிஞர்க்குப் புகழ்ச்சியும் மெய்ப்பாடற்
புலவருக் கிகழ்ச்சியும் பொலிவதும் போலுள்ள ..." (இங்கி.)
(கீர்த்தனைப்பாடல் திரட்டு, 14)

எனவரும் கீர்த்தனையில் வரும் - காலச் சூழலை எதிர்த்து முன்வைக்கும் தகவல்கள் சுவாமிகளின் சமூகச் சிந்தனையை வெளிப்படுத்தும் சான்றுகளாகும்.

"ஆறிலொரு பங்குவரி யன்றிமேற் கொள்ளுமன்னன்
வீறழிந்து வேறாய் விழும்" (மனுநெறித்திருநூல், 83:1)

என வரிவசூலிப்பது பற்றி இவர் கூறுவார்.

அன்று வாழ்ந்த மக்களில் சிலர் கள், சாராயம் போன்றவற்றை அருந்தித் தம் வீட்டுப் பொருளாதார நிலையையும் குடும்பத்தின் அமைதியையும் சீரழித்தனர். இது 'யானை தன் தலையிலே மண்ணை வாரிப் போட்டுக்கொண்ட கதை!' இதனைப் பார்த்த

சுவாமிகள் சமூகச் சிந்தனையால் உள்ளம் மிக வருந்தி அப்படிப்பட்டவர்களையும் திருத்த முனைந்துள்ளார்.

" போன கம், கள் அரக்கு ஊன்விற் றிடுவாரும்
எய்துறப் பொருளால் நாயேன்
ஈனமுறக் கண்டிருந்தாய், இரக்கமொரு
சிறிதும் உனக் கின்றோ?"

(திருத்தணிகைப்பதிகம், ப. 110)

" செயிர்க்கு வித்தாகிய கள்ளும் சாராயமும்
தேனுக்கு மேலாயச் சிறப்புற்று விளங்கலும்" (மேலது, ப.14)

" கள் அரக்கூன் உண்பார்கன வேடம் காட்டிடினும்
எள்ளளவும் ஈய வொண்ணாதே"

(மனுநெறித் திருநூல், 41:3)

என்று இவர் கூறுவன அவர்தம் சமுதாயச் சிந்தனையை வெளிப்படுத்தும். ஆங்கில அரசு செய்யும் அவலங்களை - கொடுமைகளை எண்ணித் திருமகளிடம் சுவாமிகள் வேண்டுவதும் சமூகச் சிந்தனை என்பதிலே எள்ளளவும் ஐயமில்லை! அவர் வேண்டுதல் இதோ:

" பொய்யும் கனமுகில் ஓரேழும் ஒல்கப் பிறங்கல் எழுத்து
உய்யும் படிபல் பசுக்காத்த நாதனின்று ஊன்விழைந்து
கொய்யும் புலையர்க்கு அரசாளும் ஆர்வம் கொடுத்தது என்னே!
நெய்யுந்து செங்க மலப்பொகுட் டேவளர் நேரிழையே!"

(திருமகளந்தாதி, 45)

## பெண் கல்வி

அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்ற சூழ்நிலை சுவாமிகள் காலத்திலும் இருந்தது. எனவே, சுவாமிகள் தமிழ்ச் சமுதாயம் முன்னேற வேண்டுமானால் பெண்கள் கல்விபெற வேண்டும் என்று எண்ணினார். இவ்வெண்ணத்தை,

" கடக மதியனையாள் கண்ணருட்சீர்க் கல்வி
மடமை அகற்றும் மருந்து" (மனுநெறித்திருநூல், 26:8)

என்ற குறள் வெண்பாவின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். இதே கருத்தையே,

" இற்றைநாள் பெண்கல்வி யாலே - முன்
னேற வேண்டும் வைய மேலே"

(இசையமுது II, பெண்கல்வி)

எனப் பாரதிதாசனும் அண்மைக்காலத்தில் வலியுறுத்தியுள்ளார்.

"கல்வி அழகமையாக் காளையும் கன்னியரும்
வல்விருகத் தாண்பெண் வகை" (மனுநெறித்திருநூல், *16:10*)

என் இருபாலரின் கல்வியையும் சுவாமிகள் வலியுறுத்திக் குறிப்பிடுவார்.

"பற்றிழந்த மேலோர் பகர்ந்த பலநூல்கள்
கற்றிடலும் மின்னார் கடன்" (மனுநெறித்திருநூல், *11:8*)

என்று இவர் கூறுவதன் வாயிலாகப் பெண்கள், சான்றோர்கள், அருளாளர்களின் நூல்களைக் கற்றுத் தேற வேண்டும் என வலியுறுத்தியுள்ளார். இவ்வாறு சமயநெறியில் தலைநின்ற ஒருவர் பெண் கல்வி குறித்து விதந்து பேசுவதுகூட அக்காலச் சூழலில் ஒரு சமூகச் சிந்தனையே!

## சிலைத் திருட்டு

ஆங்கில ஆட்சியில் திருக்கோயில்களில் இருந்த பொன், செப்புச் சிலைகள் ஆகியன களவாடப்பட்டன. இதுவும் ஒருவகையில் சமூகக் கொடுமைதான்! இறையுணர்வு உடையவர்களின் உள்ளத்தைத் துன்புறுத்தும் செயல்தான் என இவர் எண்ணி,

"ஆலயத்துப் பொன்திருடி ஆர்வமுறுவார் பலரும்
காலபடர் கைத்தொழில்நீங் கார்"

(மனுநெறித்திருநூல், *10:8*)

எனவும்,

"உம்முடைய தேவியரை ஊரிலுமில் லாதொழித்த
வெம்முரடர் தாம்பல்லிடர் மேவிடுதல் வேண்டாமோ?
நம்முருக வேளே! நளிர்திருவா மாத்தூர்வாழ்
ஐம்முகனார் ஈன்ற அயில்வேற் பெருமாளே"

(தனிப்பாடல்திரட்டு, 140)

எனவும் பாடுவன எண்ணத்தகும். 'எரிகிற வீட்டிலே அகப்பட்டது ஆதாயம்' என்று சிலர் பொன் திருடினர். இதனையும் சமுதாயத்திலிருந்து ஒழிக்க வேண்டும் என எண்ணினார் சுவாமிகள்.

## சமுதாய அவலம்

தாழ்ந்த குலத்தில் தோன்றிய ஒருவன் தன் உழைப்பால் உயர்ந்தான் எனில், பிறர் அதனைப் பார்த்துப் பொறாமை

கொள்வர். இது இன்றுமட்டு மல்ல-சுவாமிகள் வாழ்நாளிலும் இருந்தது. இதற்குச் சுவாமிகள் மனம் வெதும்பிச் சமுதாயச் சிந்தனை உணர்வுடன்,

"தீயகுலத் தார்தம்மில் சீர்த்தொருவன் வாழல்கண்டால்*
நேயங் கொதிப்பார் நெடிது"

(மனுநெறித்திருநூல், 48:7)

என்று கூறுவார்.

தனிமனித உணர்வுகளையும் சமுதாய உணர்வுகளையும் நன்கு அறிந்து, தொன்றுதொட்டு வருகின்ற மரபுகள் மாறாதவாறு இருக்க வேண்டித் தண்டபாணி சுவாமிகள் தம்முடைய சமுதாயச் சிந்தனைகளை எடுத்துக் கூறியுள்ளார். தம் காலச்சூழலைக் கண்டு சமூகச் சிந்தனையுடன் கொதிப்படைந்தவர் வண்ணச்சரபர் என்பது அவர் பாடியுள்ள பாடல்களினின்றும் நமக்குப் புலனாகின்றது.

---

* வாழல்கண்டால் என்ற சீரைக் காய்ச்சீராகக் கொள்ளவேண்டும். வாழல் கண்டால் லகர ஒற்றை ஒலியற்றதாய் அலகிடுதல் வேண்டும் ஒரோவழி இப்படி வெண்பாவில் வருதலுண்டு.



# 6. புதுமைக் களங்கள்

## மொழிவளர்ச்சியில் மாற்றங்கள்

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே" (நன்னூல், 462)

என்ற இலக்கண வழக்கிற்கு ஏற்பக் காலந்தோறும் தமிழ் மொழி வளர்ச்சியில், இலக்கிய வளர்ச்சியில் மாற்றங்கள் நிகழ்ந்து வந்துள்ளமை கண்கூடு. அதற்கு ஏற்பப் புதிய புதிய களங்களும் உண்டாகும். இஃது உலகியற்கை, இஃது இலக்கிய உலகிற்கும் பொருந்துவதாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த பைந்தமிழ்ப் பாவலர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இலக்கணம் படைப்பதில், இலக்கியம் உருவாக்குவதில் புதுமைகள் படைத்துள்ளார். இறைநெறியினராக விளங்கிய வண்ணச்சரபர்க்கு இச்சீர்திருத்த எண்ணம் வந்தமை நினைத்தற்குரிய ஒன்றாகும்.

## குறள்நெறி போற்றியவர்

திருக்குறளைப் பெரிதும் மதிப்பவர் தண்டபாணி சுவாமிகள். குறள் கூறும் அறநெறிகளைப் போன்று காலத்திற்கு ஏற்றவண்ணம் பொருந்தி வருமாறு அறக் கருத்துக்களைச் சுவாமிகள் படைத்தளிக்க விரும்பினார். முன்னைத் தமிழ் மரபை மீட்டுருவாக்கம் செய்யும் வகையில் சுவாமிகள் 'வருக்கக் குறள்' என்றொரு புதுவகை நூலைப் படைத்துத் தந்துள்ளார். ஔவையின் ஒரடி யாப்பில் அமைந்த 'ஆத்திசூடி' போன்று இவர் 'வருக்கக் குறள்' நூலைப் படைத்தளித்துள்ளார். மேலை நாட்டவர்தம் அகர வரிசைகளைப் (Dictionary) பற்றிச் சுவாமிகள் கேள்விப்பட்டிருக்க வேண்டும். அதே போன்று ஆங்கிலத்தில் உள்ள குழந்தைகளுக்கான ஓசைநயப்

பாடல்களைப் (Nursery Rhyms) பற்றியும் அவர் அறிந்திருக்க வேண்டும். இவ்வுத்திகளை அடிப்படையாகக் கொண்டு இவர் வருக்கக் குறள் நூலை இயற்றி ஒரு முன்முயற்சி செய்துள்ளார்.

தமிழில் மொழிக்கு முதலில் வரும் எழுத்துகள் 95 என்றும், 152 எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வர மாட்டா என்றும் குறிப்பிடுவர். தண்டபாணி சுவாமிகள் ஔவையாரின் அடிச்சுவட்டில் மொழிக்கு முதலில் வரும் எழுத்துகள் வருமாறு இந்நூலில் குறட்பாக்களை யாத்துள்ளார். பின்னர் மொழிக்கு முதலில் வராத சில எழுத்துகளுக்கு அவை எதுவையாக வருமாறு குறட்பாக்களைப் படைத்துள்ளார். இவர்தம் மொழிப்பற்றே இவ்வாறு புதுமைக்களம் படைக்கத் தூண்டுகோலாய் இருந்தது எனலாம்.

"அருள்வழியிற் சோர்வடையா ஆர்வமுளார் எல்லாம்
இருள்வழியிற் சேர்வார்க் கிகல்"

(வருக்கக் குறள், 1)

இது மொழி முதல் வரும் எழுத்திற்குச் சான்று. மொழி முதல் வாராத 'க்' எழுத்து என்ற எதுகையாக வரும் குறள் ஒன்று.

"இக்கன்ன சொல்லார் இணைத்தும் புருடரினும்
மிக்கவர் உண் டென்றுரைக்கை மெய்."

(வருக்கக் குறள், 14)

உயிர்மெய் வருக்கம் ஆகிய எழுத்துக்களுக்கும் இவர் இலக்கியம் படைத்துப் புதுமைக் களத்தை உருவாக்கியுள்ளார்.

## புதுமையிலக்கணம்

'அறுவகை இலக்கணம்', 'ஏழாமிலக்கணம்' எனப் புதுவகை இலக்கண நூல்களை இயற்றியதோடு தான, தன்ன, தய்ய எனவரும் சந்தங்களுக்கும் அவற்றின் இணைவால் உருவாகும் வண்ணப்பாக்களுக்கும் இலக்கணம் கூறும் 'வண்ணத்தியல்பு' என்ற நூலையும் இவர் ஆக்கியுள்ளார். மரபு வழியான இலக்கணம் ஐந்திலக்கணம் ஆகும். இவர் ஆறாவதாகப் புலமைக்குப் புதுமையான இலக்கணம் (144 நூற்பாக்கள்) வகுத்துள்ளார். இது

"எழுத்துச் சொற்பொருள் யாப்பணி எனத்திகழ்
இவற்றுடன் இவைதம்மாற்
பழுத்து மாமணம் கமழ்தரு புலமையும்
பகர்வது குறித்துள் ளேன்"

(அறுவகை இலக்கணம், பாயிரம், 4)

எனக் கூறும் பாடல் அடிகளிலிருந்து தெளிவாகும்.

"எழுத்துமுத லாமைந் திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித் - தொழுக்கமுடன்"

(கந்தர்கலிவெண்பா: 118-119)

என்று மொழிவர் குமரகுருபரர். இவர் குறிப்பிடும் ஐந்திலக்கணத்தைச் சுவாமிகள் மேலும் வளர்த்து ஆறாக்கியமை புதுமைக்களமாகும்: மேலும் தவத்தின் இயல்புகளைக் குறித்து ஏழாமிலக்கணத்துள் விரித்துக் கூறினார். வண்ணப் பாக்களுக்குத் தமிழில் தொல்காப்பியர் கூறும் 20 வண்ணங்களிலிருந்தும், காரிகை ஒழிபியல் உரை கூறும் 100 வண்ணங்களிலிருந்தும் முற்றிலும் மாறுபட்டதாக அமைவது 'வண்ணத்தியல்பு' (100 நூற்பாக்கள்) ஆகும். இவ்வகையில் தண்டபாணி சுவாமிகள் இலக்கணப் படைப்பிலும் புதுமைக்களம் கண்டு புதுவழி வகுத்தவர் என்பது உறுதிப்படுகிறது. இவ்வாறு காலந்தோறும் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்கள் வழியில் சுவாமிகள் தமிழ் மொழிக்குப் புதுமையான படைப்புகளை வழங்கிச் 'செந்தமிழைச் செழுந்தமிழாக்கி' யவராகின்றார். இதற்கு அரண் செய்யும் வகையில் அமைந்துள்ளது,

"தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா; இன்று
தோன்றிய நூல்எனும்எவையும் தீதுஆகா"

(சிவப்பிரகாசம், 12)

என்பது கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியாரின் கருத்து. இக்கருத்திற்கு ஒப்பப் புதுமை இலக்கணம் படைத்தவர் வண்ணச்சரபர் ஆவார். வெண்பாப் பாடுவதனை விடவும் கடுமையானது வண்ணப்பாடல் பாடுவதாகும். அத்தகைய சிக்கல் நிறைந்த வண்ணப்பாடலை வான்மழை போன்று வழங்கியமையால் இவரை 'வண்ணச்சரபம்' என்று புலவர்கள் போற்றினர். சிங்கத்தையும் வெல்லும் ஆற்றலுடையது சரபப் பறவை; அதனை ஒத்த ஆற்றல் வண்ணப்பாடல் பாடுவார்க்குத் தேவை என்பதனால் இவரை வண்ணச்சரபம் என்று அக்காலச் சான்றோர் பாராட்டிப் புகழ்ந்தனர்.

பழந்தமிழ் எண்களுக்கும் கூட இவர் வரிவடிவம் கூறியுள்ளார். பண்டைய இலக்கண நூல்களில் சில எழுத்துகளுக்கு மட்டுமே வரிவடிவம் கூறப்பட்டுள்ளது. அறுவகை இலக்கணத்தின் எழுத்திலக்கணத்துள் சுவாமிகள் தமிழ் நெடுங்கணக்கில் உள்ள 247 எழுத்துகளுக்கும் வரிவடிவம் கூறியுள்ளார். இதுவும் பழமையில் பூத்த புதுமை!

## ஆங்கிலியர் அந்தாதி பாடிய புதுமை

"அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி" (யாப்பருங்கலக் காரிகை, 17) என அமிதசாகரர் விளக்கம் தருவார். இத்தகைய அந்தாதித் தொடையில் நூல் இயற்றுவது புதுமையன்று. "அந்தாதி என்னும் சிற்றிலக்கியத்தில் பொருட் சிறப்பினை விட யாப்புச் சிறப்பே மிகுதியாகும். எனவே, அந்தாதி இலக்கிய வகையை யாப்பமைப்பால் பெயர் பெற்ற சிற்றிலக்கியம் என்று கூறுதல் பிழையாகாது" (சிற்றிலக்கியச் செல்வம், ப.47) என்று முனைவர் ந.வீ. செயராமன் குறிப்பிடுவது இங்கே எண்ணிப் பார்ப்பதற்கு உரிய ஒன்று. அழகர் அந்தாதி, அபிராமி அந்தாதி, திருச்செந்தில் திரிபந்தாதி என இவற்றின் பெயரமைப்புக்கு ஏற்ப இறைவன், இறைவி, ஞானக்குரவர், அடியார்கள் ஆகியோரைப் பாட்டுடைத் தலைவர்களாக வைத்துப் பாடப்பெற்றுள்ளன. சுவாமிகளும் மேற்கண்டவை போன்று அந்தாதிகள் பல பாடியுள்ளார். எனினும், இம்மரபுக்கு மாறாக இவர் 'ஆங்கிலியர் அந்தாதி' என்றோர் புதுவகை அந்தாதி ஒன்றைப் படைத்துள்ளார். "அந்தாதி இலக்கியங்களில் பொருளமைதிக்கு வரையறை இல்லை. எனினும், பெரும்பாலானவை இறைவனையோ இறைவியையோ பாட்டுடைத் தலைவர் யாராயினும் அவரைத் துதித்துப் போற்றுதலைப் பொருளமைதியாகக் கொண்டுள்ளன" (மேலது, ப. 58) என்பதற்கு மாறாக ஆங்கிலேயரின் அடக்குமுறையையும், உயிர்க்கொலை புரிதலையும், இங்கே விளையும் பொருள்களுக்கு வரியிடுதலையும் சாடிக் கண்டித்துப் பாடியுள்ளார்.

"ஈன் மலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு
மானம் அணுவளவேனும்இல் லாக்கொடு வஞ்சகரை..."

(ஆங்கிலியர் அந்தாதி, 76)

என்றும்,

"உதிரங்குடித்து நிணந்தின்னு மூடர்" (மேலது, 97)

என்றும் கடிந்துரைப்பது கருதத்தகும். இத்தகையோரை வெல்வதற்குச் சுவாமிகள் பல்வேறு தெய்வங்களை விளித்து வேண்டுவதும் புதுமை. மேலும் இவர்,

"எம்மத மேனும் கொன்றுண்ணாத தாகில் எனக்கினிதே"

(மேலது, 50)

என்று கூறுவதும் புதுமை. தத்தம் சமயமே உயர்ந்தது என்று சார்ந்து பேசும் இவ்வுலகில் இவ்வாறு பொதுமையுணர்வுடன் இவர் கருத்துரைப்பது புதுமையாகவே அமைந்தள்ளது.

## பொதுமையறம் போற்றல்

திருக்குறள் வழியில் 'மனுநெறித் திருநூல்' என்ற பெயரில் ஓர் அறநூலைச் சுவாமிகள் யாத்துள்ளார். உடன் பிறந்தோர், வாணிபம், சிற்பம், பரதம், வேதி, வயித்தியம், வரி, உலோபம் என இப்படிப் பல்வேறு புத்தறங்களைச் சுவாமிகள் இந்நூலில் கூறியுள்ளார். திருக்குறளை விஞ்சிய புலமை கிடையாது என்பது இவர் கருத்து. இதனால் *133* அதிகாரங்களுக்குக் குறைவாக *130* அதிகாரங்கள் மட்டும் இந்நூலில் வகுத்துள்ளார். பிறசமய உணர்வுகளையும் போற்றும் சுவாமிகள் தம் நூலுள் ஒரு குறள் வெண்பாவில் ஏதேனும் ஒரு தெய்வத்தை நம்பி வணங்கினால்தான் மண்ணில் பிறந்த உயிர் உய்தி பெறும் என்ற நோக்கில்,

> " தெய்வமே தேனுமொன்று சித்திக்கி னன்றிஉயிர்
> உய்வதில்லை நம்புமின் அந்தோ"

(மனுநெறித்திருநூல், *1140*)

எனப்பொதுவாக எடுத்துரைப்பது புதுமையான எண்ணமாகும். இந்த எண்ணம்தான் வண்ணச்சரபரை ஆறுசமயங்களையும், ஆறுசமயக் கடவுளரையும்பற்றிப் பாடுமாறு தூண்டிற்று எனக் கருதலாம். சமயப் பொதுமை, சமயப் பொறையுணர்வு ஆகிய இவற்றின் முற்றிய நிலையிலேதான் மனுநெறித் திருநூலை இவர் இயற்றியிருத்தல் வேண்டும்.

## மரபிலே மாற்றம் செய்த புதுமை

பழந்தமிழ் இலக்கண மரபுகளை மதித்துப் போற்றும் இயல்பு சுவாமிகளிடம் நிரம்பவுண்டு. ஏனெனில் இவர்,

> " மரபு நிலைதிரியின் பிறிதுபிறி தாகும்"

(தொல். மரபியல், *1591*)

என்னும் தொல்காப்பிய இலக்கண மரபை நன்குணர்ந்திருந்தார். இருப்பினும் இவர் மரபு மாற்றத்தையும் செய்துள்ளார். "காப்புத் தெய்வம் கணபதி மரபாயிருக்கத் தம் நூல்களில் தம் கொள்கைகளுக்குத் தகவும், பாடற் பொருண்மைக்குத் தகவும் காப்புக் கடவுளை மாற்றிக்கொள்கிறார். திருமகளந்தாதியில் 'குருமரபிற் பட்டார் குழாம் இகழாப் பன்னிரண்டாழ்வார் பதமும் கட்டாய மானபெருங் காப்பு' என நவின்றிருப்பதும், 'குஞ்சரி மாலையில் தோகை மயிலும், சுடரிலைச் செவ்வேற்படையும் வாகைபுனை சேவலும் காவல்' என்றுரைத்திருப்பதும்,

சத்தியவாசகத்தில் தம் கொள்கையான தெய்வம் ஒன்றே என்பதைக் காட்டும் வகையில், 'சத்தியவாசகம் சாற்றும் பொருட்டு ஒரே நித்தியப் பொருளை நினைத்துக் கைதொழுவாம்'என அழைத்திருப்பதும் சான்றாகும்.

'பெண் மடலேறுவதாகப் புதுக்கவித் தொடை தொடுத்தேகிச் சிவன்றனை புரைந்தமர் சொருபானந்தன் சேவடி பணிந்தானே' (புல, 30, 13 தத்துவராயர்) என மரபு மாற்றத்தை ஏற்றுக்கொள்ளும் புலவர், தாம் எடுத்துக்கொண்ட பொருண்மைக்குத் தகச் சில மாற்றங்களை மேற்கொண்டுள்ளார் (தமிழ் இலக்கியக் கொள்கை - 6, ப.281) என ஆய்வாளர் திருமதி ச. சிவகாமி கூறுவது இங்கே இணைத்துப் பார்ப்பதற்குரியதாகும்.

## மறுமணம்பற்றிப் பேசிய துணிவு

சமயவாதியாக விளங்கும் அடியவர்கள் கணவனை இழந்த மகளிர் மறுமணம் செய்துகொள்வதனை அவ்வளவு எளிதில் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். சீர்திருத்தவாதிகள் வேண்டுமானால் மறுமணத்தை ஏற்றுக்கொள்வர். ஆனால், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பிற சமயவாதிகளிடமிருந்து வேறுபட்டவர் ஆவார். உயிர் இரக்கமென்னும் உயரிய கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட காரணத்தால் இவர் மறுமணத்திற்குத் தம்முடைய முழு இசைவையும் வழங்கி ஆதரிக்கின்றார். இதுவும் புதுமைக்களமாகும்.

"மகப்பேறு மணம்சாவு முதலவாய
வகைகளுக்கும் விதிகள் பலவகுத்தார் முன்னோர்
அகத்தோங்கும் பொருளளவிற் செயலே நன்றாம்
அதுகிடக்க; நூலிழந்திட்டு அனங்கன் அம்பால்
மிகச்சோரு மடநல்லாள் கலவி வேட்டு
மேவுகருப் பங்கெடுக்கும் வின்னயை எண்ணில்
சகத்தோர்கள் அறியமற்றோர் கொழுநன் தன்னைச்
சார்ந்திருக்கச் சொன்னமுறை தவறா காதே"

(கௌமார முறைமை, கருமகாண்டம், 23)

என்று பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே மறுமணம் குறித்துச் சுவாமிகள் பேசியுள்ளார் என்பது அக்காலச் சூழலில் வியக்கத்தக்க புதுமைதான்!

## இந்திமொழியில் இரண்டு வெண்பாக்கள்

குமரகுருபர அடிகள் தில்லியை ஆண்ட பாதுஷாவிடம் இந்தியிலே பேசி வெற்றிகண்டார். வல்லான் வகுத்த வழியிலே வண்ணச்சரபரும் இந்தியில் இரண்டு இனிய வெண்பாக்களைப் பாடிப் புதுமை நிகழ்த்தியுள்ளார்.

முருகனை வாழ்த்தி ஒரு வாக்குக் கொடுத்தருளும் வண்ணம் முதற்பாடலில் இவர் வேண்டுகிறார். இவர் நெல்லையில் தம் தவச்சாலையுள் தோண்டிய கிணற்றில் நீர் தோன்றுமாறு அருள்க என வேண்டுகிறார்.

"பத்தர்மே பாணிதேவ் பாராஆத் மேபாலா
அத்தர்பூல் பேன்கர் அவ்வல் ஆயாநை - அத்தீபாய்
பாணிசிர்ப்பர் ரக்யாய்சோ பக்கீர்சா யேப்பேட்டா
ப்(பு) ராணேதில் சேயேக்பாத் போல்"

(தனிப்பாடல் திரட்டு, 331)

இரண்டாவது வெண்பாவில் குதிரையில் (மயில் மீது) வருகின்ற "பெருமானே! என் வார்த்தையைக் கேட்டருள்வாயாக!" என்பதாகும்.

"அத்மியாஞ்சொப் மேரேபாஸ் ஆனாசா ணாதேரா
கொத்பாமிஞ் சேவோன கோடேபர்க் - கத்லம்பே
பாலா லடாய்முர்கை பக்கரா சங்காத்ஷோக்
சோலாரூப் லாலாபாத் சுன்" (தனிப்பாடல் திரட்டு, 332)

இவ்விரு வெண்பாக்களும் தனிப்பாடல் திரட்டில் வருவன.

பிறமொழியிலும் தமக்குப் பாட இயலும் என்பதனைச் சுவாமிகள் மெய்ப்பித்துக் காட்டியுள்ளமையும் புதுமைக்களம் என்பதில் ஐயமில்லை.



# 7. வண்ணம் பாடிய வண்மை

## வானினும் உயர்புலமை

"திருநெறிய தமிழ் வளர்த்த அருளாளர்கள் வரிசையில் தெய்வத்தமிழ் வளர்த்துத் தந்தவர்கள் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள் ஆவார்... அவர்கள் ஓதாது உணர்ந்த செம்பொருட் செல்வர். முருகன் திருவருள் பெற்ற அருளாளர். தெளிந்த செந்தாப் புலமையால் தாம் உணர்ந்த செய்திகளைத் தம் நிலையில் விளக்கும் பேராற்றல் படைத்தவர்" (இலக்கண இலக்கியக் களஞ்சியம் தண்டபாணி சுவாமிகள், முன்னுரை, ப.i) என வண்ணச்சரபரின் வானினும் உயர்ந்த புலமைச் செழுமையைத் தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார் இனங்காட்டுவர்.

## இதுவே முதல் நூல்

சுவாமிகள் தம்முடைய அறுவகை இலக்கணத்துள் வண்ணப்பாக்களின் இலக்கணத்தை 28 நூற்பாக்களில் கூறியுள்ளார். அவற்றை விரித்துக் கூறும் போக்கில் 100 நூற்பாக்களில் வண்ணங்களின் இலக்கணத்தை "வண்ணத்தியல்பு" என்ற நூலில் வடித்துக் தந்துள்ளார். வண்ணம் பாடுவதில் வல்லமை பெற்ற புலவர்களை வென்றவர் தண்டபாணி சுவாமிகள். சிங்கத்தையும் வெல்லும் ஆற்றல் நிறைந்த சரபப்பறவை போன்றவர் என்பது கருதியே இவரை 'வண்ணச்சரபர்' என்று புலவர்கள் சிறப்புப் பெயர் கொண்டு அழைத்தனர். "இக்காலத்தில் கவிபாடும் புலவர் அரியர். வண்ணக்கவிபாடுவோர் மிக அரியர். எனினும் முந்தையோர் பாடிய வண்ணக் கவிகளை இலக்கண நுட்பத்துடன் பொருள் உணர்ந்து துய்ப்பது எல்லார்க்கும் இயன்றதே. இதற்குப் பெருந்துணை புரிவது இந்நூல்" என்று வண்ணத்தியல்பு நூலின் பதிப்புரையில் தவத்திரு. சுந்தரசுவாமிகள் கூறும் கருத்து இங்கே நினையத்தகும். 'வண்ணத்தியல்பு இலக்கண

நூல் வண்ணம் குறித்துத் தனியே எழுந்த முதல் நூல் எனலாம்" (வண்ணத்தியல்பு, ப.6) எனப் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி இந்நூலின் சிறப்பினை விதந்து கூறுவார்.

## வண்ணம் குறித்து முன்னைய இலக்கணங்கள்

தொல்காப்பியச் செய்யுளியலுள் இருபது வண்ணங்கள் பற்றித் தொல்காப்பியர் பேசியுள்ளார்.

"வண்ணந் தாமே நாலைந் தென்ப"

(தொல். செய்யுளியல், 211)

இவ்வண்ணங்கள் இருபதும் எழுத்தடிப்படையில் அமைவன. பிற்காலத்தில் வந்த யாப்பருங்கல விருத்தி நூறு வண்ணங்களைப் பற்றி விரித்துக் கூறும். இந்நூறு வண்ணங்களும் எழுத்துக்கள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து ஒலிக்கும் ஓசை வேறுபட்டால் அமையும். இதனால் நடைநயம் வெளிப்படும். இவற்றிலிருந்து வேறுபட அமைவதே வண்ணச்சரபர் கூறியுள்ள வண்ணங்களின் இலக்கணம். இவற்றின் அடிப்படையில் ஏற்பட்ட வளர்ச்சியே வண்ணத்தியல்பு. திருஞானசம்பந்தர், திருமழிசை ஆழ்வார், அருணகிரிநாதர் எனப் பலரால் சந்தப்பாடல்கள் இயற்றப்பெற்றுள்ளன. சந்தத்தில் தனி முத்திரையைப் பதித்த அருணகிரிநாதரைத் தொடர்ந்து அதற்கு முதன்மை தந்து பாடல்கள் பாடியதோடு இலக்கணநூலையும் இயற்றியவர் வண்ணச்சரபர். 'வண்ணத்தியல்பு' என்ற நூலைச் சிறிது அறிமுகம் செய்து வைக்கும் போக்கில் அமைவதே இப்பகுதி. விரிந்த ஆய்வு இங்கு மேற்கொள்ளப் பெறவில்லை.

## பிற்கால வண்ணமுறை

சந்தக் குழிப்புப்படியே ஒலி அமைந்து வருவதே வண்ண முறையாகும். சுவாமிகள் வண்ணத்தியல்பில் எண்வகைச் சந்தங்கள் பற்றியும். அவற்றின் நீட்சிபற்றியும் பின்வருமாறு தெளிவுறுத்தியுள்ளார்.

"தத்தவும் தாந்தவும் தந்தவும் தாந்தவும்
தனவும் தானவும் தன்னவும் தய்யவும்
தத்தா என்பதின் நீடலும் அடங்கும்
எண்வகைச் சந்தம் என்பர் பெரியோர்" (வண்ணத்தியல்பு)

சந்தங்கள் சில சேர்ந்தது துள்ளல்; பல துள்ளல்கள் சேர்ந்தது ஒரு குழிப்பாகும். மூன்று குழிப்பும் ஒரு சிறு தொங்கல் துள்ளலும்

சேர்ந்து கலையாகும். சிலகலைகள் இரண்டு தொங்கல் துள்ளல்கள் கொண்டு வரும். வண்ணப்பாவின் முற்பகுதி 'ஆண்கலை' என்றும் பிற்பகுதி 'பெண்கலை' என்றும் கூறப்பெறும்.

சந்தப்பாக்கள் 5 வகை

| 1. கலை வண்ணம் | 2.வகுப்பு வண்ணம் | 3.உடற்கூற்று வண்ணம் | 4. வண்ண வண்ணம் | 5. சந்த விருத்தம் |
|---|---|---|---|---|
| (எ.டு) | (எ.டு) | (எ.டு) | (எ.டு) | (எ.டு) |
| அண்ணா மலையார் வண்ணம் | வேல் வகுப்பு: அருணகிரிநாதர் | உடற் கூற்று வண்ணம்: பட்டினத்தார் | திருப்புகழ் அருணகிரிநாதர் | வில்லிபுத்தூரார் பாரதத்துள் வரும் பாடல்கள் |

வண்ணம் பாடத் தெரியாத புலவர் சான்றோர் அவையில் மிகவும் வருந்துவர் என்று சுவாமிகள் கூறுவதனால் இதன் தேவை இனிது புலனாகின்றது.

"வண்ணச் செந்தமிழ் வளமை ஓர்ந்தோர்
நால்வகைப் புலவர் தம்முள் ஏறே."

( வண்ணத்தியல்பு, 97)

## வண்ணப்பாவின் மேன்மை

"ஆசு வலவர்க்கு வண்ணம் புலியாம்" (ஔவையார், தனிப்பாடல் திரட்டு, 1) என்பது வண்ணப்பாட்டின் மேன்மையை உணர்த்தும். வண்ணம் பாடுவது வெண்பாவை விடவும் கடினம். ஆனால் சுவாமிகள் நினைத்த அளவிலே வண்ணப்பாக்கள் பாடும் ஆற்றல் மிக்கவராய் விளங்கியுள்ளார்.

"பிற பாடல்களுக்கும் வண்ணப்பாட்டுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. வண்ணப்பாட்டில் ஓசை நயம் மிகுந்த நுட்பம் வாய்ந்தது. சிறிது கவனக் குறைவாக இருந்தாலும் ஓசை கெட்டு வண்ணப்பா தன் நிலையில் தாழ்ந்துவிடும்" (குமாரபூபதீயம்) என்று பேராசிரியர் குமாரபூபதி தம்முடைய நூலின் முன்னுரையில் சுட்டுவது இங்கே எண்ணத்தகும்.

சுவாமிகள் 'வண்ண மஞ்சரி' என்றொரு வண்ணவியல்புக்கு இலக்கியமும் படைத்துள்ளார். இவர் பாடியுள்ள " தானதன தானதன தானதன தானதன தனதானா" என்ற சந்தத்திற்குரிய பாடல் ஒன்றைக் காண்பது இவண் பொருந்துவதாகும்.

"மாறுபடும் வேள்விமுயல் மாதவர்கள் தாமருவு மடவாரோ(டு)
ஊறுபட மோகினியொ டேகிவரு சோணவரை உயர்வோதார்
நீறுபடு பாதிமதி போலுமென மூவரைகள் கிளர்சீரால்
நீறுபடர் மேனியில ராதியரை யாமணுவும் நினையேமே"

(அருணைப் பதிற்றுப்பத்தந்நாதி, 91)

'எந்தக் கவியினும் சந்தக் கவியே மேல்" என்பதனை நன்கு அறிந்தவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இவர் இதற்கு நூற்பா வடிவில் இலக்கணம் வகுத்துப் புதுமை படைத்த இலக்கணியாவார். தமிழுக்கு அழகு என்று சுவாமிகள் கருதுவது வண்ணம் பாடுதலையே!

"எண்வகைச் சந்தமும் பாடும் திறமும் இகலவரை
விண்வயிற் செல்ல விடுக்கின்ற சக்தியும் மெய்யருளும்
கண்வரு காட்சியும் தோயும் பெருமைக் கவிஞர்வென்றி
தண்வளிச் சாரற் பொதியைமுன் ஈன்ற தமிழ்க்கழகே"

(தமிழலங்காரம், 100)



# 8. வியப்புக்குரியவை

## மாறுபட்ட கோணத்தில்

வண்ணச்சரபரின் தோற்றமே ஏனைய துறவிகளின் தோற்றத்திலிருந்து மாறுபட்டுத் தோன்றியப் பிறரை வியக்குமாறு செய்யும்! அப்படியானால் அவர்தம் செயல்களும் நடவடிக்கைகளும் மற்றவர்க்கு வியப்பை - விந்தையை ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை. சுவாமிகள் வடக்கில் உள்ள திருத்தலங்களை வழிபட்டு வரும்போது திருவயிந்திபுரம் என்னும் வைணவத் தலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலை வழிபட வேண்டி அத் திருக்கோயில் உள்ளே சென்றார். இவர்தம் முரண்பட்ட தோற்றப்பொலிவைக் கண்ட இரு வைணவர்கள் வெறுப்புணர்வோடு சுவாமிகளிடம் விளக்கம் கூறுமாறு வேண்டினர். சுவாமிகளும் நேர்மையான வினாக்களுக்கு விடை கூற இசைந்தார். அவர்கள், "எங்கள் வடகலையை இடது தோளில் ஏன் அணிந்தீர்கள்?" என்றனர். இதற்குச் சுவாமிகள், "இரண்டு வினாக்களை விட்டு விட்டு, மூன்றாவதான வினாவைத் தானே நீங்கள் கேட்டீர்கள்? ஆதலால் உங்கள் உள்ளத்தில் திருநீற்றின் மீது உள்ள வெறுப்பை விட மிகுந்த வெறுப்புத் தென்கலையின் மீது உள்ளதனை அறிந்தேன்!" என்றார். மேலும் அவர்களிடம்,

1. "திருநீறுபூசி அதன் மேல் நாமம் இட்டது பற்றியும்,
2. நெற்றியில் நாமம் மட்டும் அணியாதது பற்றியும் கேட்காமல்,
3. இடத்தோளில் நாமம் இட்டதனைப்பற்றிக் கேட்டமையினால் நான் அறிந்து கொண்டேன்" என்றாராம்.

அவ்விரு வைணவர்களும் "அவற்றையுமே கூறுக" என வேண்டினர். உடன் வண்ணச்சரபர், "நாராயணனது லீலா வடிவமே

பத்து அவதாரங்களாகும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்கள் அன்றோ! அது போன்ற ஒரே பரம்பொருளின் பல்வேறு வடிவமே ஆறுசமயங்கள் என நானறிந்து தேர்ந்தேன். ஆதலால் திருநீறு, திருமண் இரண்டனையும் சமமாகத் தரித்தேன். அன்றியும் நாம் கிழக்கு முகமாக நின்று எச்செயலையும் செய்வது நம்முடைய மரபு. அப்போது வலக்கை தென்திசையில் இருப்பதால் தென்கலை நாமத்தை வலத்தோளிலும் இடது கையில் வடகலையும் வலக்கையினால் இட்டேன். நெற்றியில் ஏதேனும் ஒன்றைத்தான் அணிதல் வேண்டும். நாமத்தில் இரண்டில் ஒன்றை நெற்றியில் அணிந்தால் நான் அரை வைணவன் தான்! இரு திருநாமங்களும் சமம் என்பதனை உணர்ந்த நான் அவ்வாறு உலகமெல்லாம் உண்டுமிழ்ந்த நாராயணன் இவ்வேறுபாட்டிற்கு அமையமாட்டன்" எனக் காரணங்களை முறையாக விளக்கினார். வியப்புக்குரிய இதனைக் கேட்ட இரு வைணவர்களும் அமைதியடைந்தனர். பின் அங்கு எழுந்தருளியுள்ள தேவநாதப் பெருமாள் மீது சுவாமிகள் பதிகம் பாடிவிட்டு வேலூருக்குப் புறப்பட்டார்.

## தமிழே உயர்ச்சி எனல்

முருகதாசர் வேலூரில் தங்கியிருந்த போது ஒரு வேளாளனும் அந்தணனும் இவரிடம் வலிய வந்து, "வடமொழியே உயர்வு; வேதம் வடமொழியில் தோன்றியது"; என்று வழக்காடினர். அதற்கு இவர், "தமிழிலும் வேதம் உண்டு; ஆனால் ஆட்டை வதைத்து ஊன் அவி பெய்து உண்ணுமாறு தமிழ் வேதம் கூறவில்லை" என்றார். மீண்டும் அவர்கள், "உம் தமிழ்மொழி அக்கர லோபத்தினது" என்றனர். இவரோ. 'எகரம், ஒகரம், இன்னும் ற, ன, ழ ஆகியனவும் வடமொழியில் இல்லை; ஆதலால் அதுவும் அத்தகையதே"என்றார். இப்படி இரவு முழுவதும் அம்மூவருக்கும் இடையில் மொழி பற்றிய வாதம் தொடர்ந்தது. இறுதியில் திருவுளச் சீட்டு எழுதிப் போட்டு முடிவை ஏற்றுக் கொள்ள இருதரப்பினருமே இசைந்தனர். தமிழ், வடமொழி இரண்டும் காலம், நாடு, குலம், மானம் என்றவாறு ஏழு சீட்டெழுதி வேலாயுதத்தின் முன்னர் இட்டுச் சிறுபெண் ஒருத்தி மூலம் ஒரு சீட்டு எடுக்குமாறு செய்தனர். "தமிழே உயர்ச்சி" என்ற சீட்டு வந்தமை கருதிச் சுவாமிகள் நனி மகிழ்ந்தார். அச்சீட்டைத் தலையிலே தரித்துக் கண்களில் ஒற்றிப்பிறர் மகிழ்ந்து, வியப்புறும் வகையில் வாயில் மென்று உண்டார். மேலும் "தமிழே உயர்ச்சியென்று சீட்டுக் கொடுத்த பெருமாளே...." எனத் திருப்புகழ்ப் பாடல் ஒன்றும் பாடிக் கூத்தாடிக் கொண்டாடினார். அதனோடு நின்றுவிடாமல் 'தமிழலங்காரம்' என்னும் பெயரில் நூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களில் ஒரு நூலையும் பாடி மகிழ்ந்தனர்.

"திருப்புகழென் றோதினர்கேட் டவர்வணங்கி யேகினர்பின்
திறமை காட்டி
விருப்பமலிவுற்றதமி ழலங்காரப் பனுவலொன்றும்
விளம்பித்தீர்த்தார்
குருப்புலவனாங் குகன்மெய் யருள்பெறுங் கௌமாரரெதிர்
குறுகியவர்
பொருப்புகழ் சீர்ச்செயமடைந்து போகுவர் அப்பால்நடந்த
புகழ்ச்சிசொல்வாம்"
(தண்டபாணிவிஜயம், பூருவபாகம், 185)

என்பது செந்தினாயக சுவாமிகளின் திருவாக்கு. தமிழலங்கார நூலில் பல தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளைக் கூறித் தமிழன் சிறப்பினைச் சுவாமிகள் எடுத்துரைப்பார். மேலும் "வடமொழி கலந்திடாத தமிழென விளங்கு பாடல்" என இவர் கூறுவதனால் தமிழின் தனித்தன்மையை நன்கு அறிந்திருந்தார் எனலாம்.

புதுவை நகரில் இவர் தங்கியிருந்தபோது முருகப் பெருமான் மீது ஒரு பதிகம் பாடினார். "மூவாறு கண்ணுடைய முருகவேளே" என்ற மகுடம் அமையும் வண்ணப் பதிகம் ஒன்றும் பாடினார்.

### கோட்டூரில் நடந்தது

சுவாமிகள் கோட்டூர் என்னும் ஊருக்குச் சென்றிருந்தார். அவர் வருகையை அறிந்த அன்பர் ஒருவர் சுவாமிகளை வரவேற்றுப் பேணி விருந்தளிந்தார். அன்புடன் இன்முகம் காட்டி அவர் பேணிய தன்மை கண்ட சுவாமிகள்,

"கோட்டூரிற் சைவன்முகம் கோணாமற் கூடத்தில்
ஈட்டுதென்னை யோலை இலைகொணர்ந்து - போட்டெனக்குச்
சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்
சாறுமிட்டுப் பெற்றான் தவம்" (தனிப்பாடல்திரட்டு, 229)

என்று வியந்து போய் ஒரு வெண்பாவும் பாடிமகிழ்ந்தார். கோட்டூர்க்காரர் போட்ட உணவின் சிறப்பு சுவாமிகளை ஒரு வெண்பாப் பாடுமாறு தூண்டிற்று. இதனோடு ஒப்பிட்டுக் காணத்தக்க நிகழ்ச்சி ஒன்று. செய்யுள் இயற்றவல்ல புலமையாளராகிய மாதவச் சிவஞானமுனிவர் திருவாவடுதுறையில் தம்முடைய மாணாக்கர்கள் சூழ்ந்திருக்க அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது ஆதீனப் பொறுப்புகளைக் கவனித்துக் கொள்ளுமாறு சிவஞான முனிவரிடம் சந்நிதானம் ஒப்படைத்துவிட்டு வெளியே சென்றிருந்தார். அப்போது இங்கிதம்

தெரியாத சமையற்காரன் அன்றைய மதிய உணவுக்குக் காய் கறி என்ன சமைக்க வேண்டும் என்று முனிவரிடம் கேட்க வேண்டிக் கைகட்டி வாய் பொத்தி முனிவரின் கட்டளைக்குக் காத்து நின்றான். பாடம் நடத்திக் கொண்டே முனிவரும் சமையலுக்குரிய கட்டளைகளையும் சொன்னார். அவர் சொன்னவற்றைக் கூட்டிப் பார்த்தல் அது ஒரு வெண்பாவாக முடிந்ததாம். இதோ அவ்வெண்பா:

"சற்றே துவையலரை; தம்பியொரு பச்சடிவை;
வற்றலே தேனும் வறுத்துவை - குற்றமிலை;
காயமிட்டுக் கீரைகடை; கம்மென வேமிள
காயரைத்து வைப்பாய் கறி"

சிவஞான முனிவர், தண்டபாணி சுவாமிகள் போன்றோர் இறைநெறிப் பாடல்களைப் பாடுவதோடு நின்றுவிடாமல் சமத்காரமாகப் பாடுகின்ற ஆற்றலும் பெற்றிருந்தனர் என்பது வியத்தற்குரிய ஒன்றுதானே!

## ஓர் உருண்டைதான்

குமாரபுரியில் தண்டபாணி சுவாமிகள் சண்முக சுவாமிகளின் தவச்சாலையில் தங்கியிருந்தார். அப்போது தில்லைத் திருவாயிரம் அச்சேற்றப்பட்டது. அந்நூலின் இறுதித் திருப்புகழ்ப் பாடலிலே சுவாமிகள், "பெருமானே" என்று அமைத்திருந்தார். அந்நூல் அரங்கேற்றத்தின் போது ஒரன்பர் ஓர் ஐயம் கேட்டார்.

"அருணகிரிநாதர் திருப்புகழில் 'பெருமாளே' என்று சொல்லியுள்ளார். தாங்கள் 'பெருமானே' என்று கூறியுள்ளீர்கள்! இரண்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன?" என்றார். உடனே வண்ணச்சரபர் " ஓர் உருண்டைதான்" என்று மறுமொழி கூறினாராம். ஆம்! ள, ன என்ற இரண்டு எழுத்துக்களின் வரிவடிவிற்கும் நடுவில் ஒருசுழிதான் வேறுபடுகின்றது என்பதனை அவ்வன்பர் அறியவில்லை! 'பெருமாள் பெருகிய மாட்சியுடையவன்; பெருமான் பெருகிய மேன்மையினன்; பொருள் ஒன்றேயாகும்' என்றாராம்.

## திருமால் உலகத்தை எவ்வாறு அளந்தார்?

சென்னைக் கந்தகோட்டப் பிள்ளைத்தமிழைச் சுவாமிகள் அங்கே அரங்கேற்றம் செய்தார். அந்தப் பிள்ளைத் தமிழ்ப்பாடல்களை விளக்கிச் சுவாமிகள் விரிவுரையாற்றினார். இவ்வரிய சொற்பொழிவைக் கேட்டு மகிழ்ந்த ஒரு வைணவ

அன்பர் சுவாமிகளின் பாடலைக் கேட்க ஆர்வம் மிகக் கொண்டிருந்தார். "உள்ளே வருவதற்கு ஏற்றபடி இவ்விடம் இல்லையே! முருகன் கோயிலாக இருப்பது பற்றித் எனக்கு ஒரு மனக்கலக்கம் ஏற்படுகிறது" என்று சுவாமிகளுக்கு வேண்டிய ஒருவரிடம் கூறினார். இச் செய்தியை அவரும் சுவாமிகளிடம் அப்படியே கூறினார். உடன் சுவாமிகள், "நாம் கூறும் செய்தியை அவரிடம் கூறிவருக. இவ்வளவு தமிழ் ஆர்வமும் நம்மீது அன்பும் கொண்டமைக்கு மகிழ்ச்சிதான்! திருமால் இவ்வுலகத்தை மூன்றடி மண்கேட்டு அளந்த போது, கந்தசாமி கோயிலைச் சேர்ந்து அளந்தாரா? இதனை விட்டுவிட்டு அளந்தாரா?" என அவரைக் கேட்டு வருக" என்றார் இவ்விளக்க வினாவைக் கேட்ட வைணவ அன்பர் முருகன் கோவிலுக்குள் வந்து மனக்கலக்கம் நீங்கிச் சுவாமிகளை வணங்கி அவர்தம் அருந்தமிழ்ப் பாடலையும் பேருரையையும் கேட்டு மகிழ்ந்தனராம். இப்படிச் சுவாமிகள் வாழ்வில் நடைபெற்ற விந்தையான - ஆர்வம் ஊட்டுகின்ற பல அரிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன்.

### சூரன் மிகப் பொல்லான்

திருவாமாத்தூரில் கந்தசஷ்டி விழா நடைபெற்றது. அப்போது பெரும் மழையும் பெருங்காற்றும் வீசியது. இதனால் ஆறாவது நாள் சூரசம்காரம் நடைபெறவேண்டிய விழா. அன்று நடைபெறாமல் எட்டாம் நாளன்று சூரன் வதம் நடைபெற்றதாம். இதை அறிந்த சுவாமிகள்.

"இவ்வருடத்துச் சூரன்மிகப் பொல்லான் போலும்
இதற்குமுந்தும் வருடத்துச் சூரர் எல்லாம்
அவ்வவ்வரு டத்தில்வந்த கந்த சட்டி
அதில் மடிந்தார்; இவன்றான்அட் டமிவந் துற்றும்
வெவ்வலியாற் போர்செய்கின்றான் இதற்கோர் ஞாயம்
வேறிருந்தால் இக்கணமே விளம்ப வேண்டும்
பௌவமுடைப் புவிமுகம்நேர் ஆமாத்தூரின்
பரமனெற்றிக் கனல்வழியாற் பயந்தசேயே!"

(தனிப்பாடல் திரட்டு, 133)

எனப்பாடி அங்கிருந்தோர் சிந்தையை மகிழ்வித்தாராம்.

### தோசைக்குப் பாட்டு

தேவகோட்டைக்குச் சுவாமிகள் சென்றிருந்தார். அவ்வூரினரான சொர்ணமையர் சுவாமிகளை வரவேற்றுத் தோசை வார்த்து விருந்து பேணினார். தோசையை உண்டு மகிழ்ந்து அத்தோசையின் சிறப்பைப் பின்வருமாறு பாராட்டினாராம்:

"தென்னர்புகழ் சீர்குலவு தேவகோட் டைப்பதிவாழ்
சொன்னமையர் வீட்டுள்ள தோசையே! - உன்னைஅயன்
கண்டா லிலைவகுத்த காரணமோ? நீயதைக்கண்டு
உண்டாயி னாயோ? உரை"

(தனிப்பாடல் திரட்டு, 230)

உணவு வகைகளில் நம் உடலுக்கு உகந்தவை பலவுண்டு. அவற்றுள் கேழ்வரகு கேடுவிளைவிக்காத ஒன்று - இதனை நமக்கு அறிவுறுத்த எண்ணிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், கேழ்வரகின் பல்வகை மேன்மைகளை,

"கூழ்வரகு, சாமை, நெடிய தினை,வரகிற்
கேழ்வரகு மெத்தக் குணமாம் - கேழ்வரகு
பிட்டாம் களியாம் பெரும்பா ணைக்கூழாம்
சுட்டாலும் தோசை சுகம்"

(தனிப்பாடல் திரட்டு, 231)

என்று அடுக்கிச் சொல்வது நம்மையும் கேழ்வரகுத் தோசையை உண்ணுமாறு தூண்டுகிறது!

### காளமேகம் பாடலுக்குச் சுவாமிகள் தரும் விளக்கம்

திருமலைராயன் அவைக்குச் சென்ற காளமேகப்புலவர் அங்குள்ள புலவர்கள் செருக்குற்றுத் தம்மைக் கவிராயர்கள் என்று இறுமாந்து கூறிக்கொண்டனர். அத்துடன் நில்லாமல் காளமேகப் புலவரையும் ஏளனம் செய்தனர். இதனைக் கண்ணுற்ற காளமேகம் குரங்கு (கவி என்றால் குரங்கு என்று ஒரு பொருளுண்டு) என்னும் பொருள் பட அதன் அடையாளங்களைக் கூறி ஒரு வெண்பாவைப் பாடினார்.

"வாலெங்கே நீண்ட வயிறெங்கே முன்னிரணடு
காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே - சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்கள் நீவிர்
கவிராயர் என்றிருந்தக் கால்"

(காளமேகம் பாடல்கள், புலியூர்க் கேசிகன் உரை, ப.37)

என்று காளமேகம் பொழிந்தவுடன் அங்கிருந்த புலவர்களின் நாடி தளர்ந்து போயிற்றாம். மேலே நாம் கண்ட பாடலுக்கு - காளமேகப் புலவர் குரலுக்கு - விளக்கம் தருவார் போலத் தண்டபாணி சுவாமிகள் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

"வாலுடனே நீண்ட வயிறுடனே மற்றிரண்டு
காலுடனே உட்குழிந்த கண்ணுங்கேள் - ஓலையினில்
ஊன்றிக் கரம்கண் நடுஒண்வயிறு, கைவிரல்கள்
ஏன்றவிடு கால்நுனிவா லே" (தனிப்பாடல் திரட்டு, 315)

காளமேகப் புலவரின் கடுகடுத்த சொற்களுக்குச் சுவாமிகள் ஒரு புதுவிளக்கம் கூறித் தம் புலமையைப் பிறர் வியக்குமாறு செய்துள்ளார். பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு ஊன்றி எழுதினமையால் பள்ளம் ஏற்படுகின்றது. இவையே உட்குழிந்த கண்கள். உட்குழிந்த கண்ணுக்கு விளக்கம் ஓலையினில் ஊன்று அக்கரம். ஏட்டில் நடுவிடமே வயிறாகும்; ஏட்டின் நுனிப் பகுதியே வாலாகும். ஏட்டில் எழுதும் போது இடது கை விரல்கள் ஓலையைத் தாங்குகின்றன. அவ்வாறு தாங்கும் விரல்களே கால்கள் ஆகும் என்றார் தண்டபாணி சுவாமிகள்.

## மகுடம் சூட்டி மகிழ்வோம்

"புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனாம்"

(பழமொழி நானூறு. 15)

என்னும் பழமொழிப் பாடலுக்கு ஏற்பப் புலமை வளம் காட்டிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளை உவமைக் கவிஞர் சுரதா,

"அருணகிரி நாதருக்கு விழாவுண் டானால்
அவர்போலும் முருகனருள் பெற்று வண்ணச்
சரபமெனப் பெரியோரால் புகழப் பெற்ற
தண்டபாணி சுவாமிக்கேன் விழாக்கள் இல்லை?
திருவருளைப் பெற்றாரை மதித்தில் போன்று
சிந்தனைவா திகளையும்நாம் மதித்தல் வேண்டும்
அருமருந்து மாந்தர்க்குத் தேவை யென்றால்
ஆரமுதும் மாந்தர்க்குத் தேவை யன்றோ?"

(கவிஞர் சுரதா, தேன்மழை, ப. 202)

என்று வியந்து போற்றுவார். வண்ணச் சரபரின் வேற்றுமையில் ஒற்றுமை காணும் பண்பும், கொல்லாமைக் கோட்பாடும், சமய ஒற்றுமை உணர்வும், ஆழமான அருந்தமிழ்ப் பற்றும் தமிழ்ச் சமுதாயத்தில் இன்று மலரவேண்டும்; மறுமலர்ச்சி பெறவேண்டும்! பத்தொன்பதில் வாழ்ந்த அருளாளராகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளை 'இலக்கிய இலக்கண இமயம்' என்று மகுடம் சூட்டி வணங்குவோம்.





பின்னிணைப்பு - 1


வண்ணச்சரபரிடம் பழகியோரும் பயின்றோரும்
வண்ணச்சரபர் போற்றிய புண்ணியர்கள்
பழகிய பண்புடையோர்
ஞானஉபதேசம் பெற்றவர்
புலமைப்பயன் பெற்றோர்
1. வடலூர் வள்ளலார்
2. ஆறுமுக நாவலர்
3. ஞானசித்த சுவாமிகள்
தவத்திரு. இராமானந்த சுவாமிகள்
சிரவை ஆதீனம்
1. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை
2. மாம்பழக் கவிராயர்
3. அட்டாவதானம் பூவை எஸ். கல்யாணசுந்தர முதலியார்
4. மகாவித்துவான் சபாபதி முதலியார்
5. அட்டாவதானம் சபாபதி முதலியார்
6. வெண்பாப்புலி வேம்பத்தூரார்
7. தேவகோட்டை வன்றொண்டர் செட்டியார்
8. நாடகப் பேராசான் சங்கரதாசு சுவாமிகள்
9. நெல்லை அழகியசொக்கநாதபிள்ளை
10. நெல்லை போற்றிமுத்துப்பிள்ளை
11. பண்டிதை மனோன்மணியம்மாள்
12. சண்முகசுவாமிகள், குமாரபுரி
13. சண்முகம்பிள்ளை, தாசில்தார், விழுப்புரம்
14. வீரகேரளம்புதூர் சமீன் இருதயாலய மருதப்பத் தேவர்
1. வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முனிவர்
2. சண்முகதாசபிள்ளை (மருகர்)
3. சித்திரபுத்திரபிள்ளை (தம்பி)
4. உரத்தூரார் சின்னு ரெட்டியார்
5. தி.மு. செந்தினாயக சுவாமிகள் (மைந்தர்)
6. அரன்வாயில் வேங்கடசுப்புப் பிள்ளை
7. அரன்வாயில் தங்கவேலுப்பிள்ளை
8. கழுகுமலை இராமகிருஷ்ண பிள்ளை
9. ஊற்றுமலை சமீன் கந்தசாமிப் புலவர்
10. சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள்

பின்னிணைப்பு - 2

## வண்ணச்சரபரின் படைப்புகள்

(விரிவான நூல்களின் தொகை பின்னிணைப்பில்)




1. கணபதி ஆயிரம்
2. ஞாயிறு ஆயிரம்
3. தில்லைத்திருவாயிரம்
4. திருவரங்கத்திருவாயிரம்
5. பழனித்திருவாயிரம்
6. திருச்செந்தூர்ப் பிரபந்தங்கள் மற்றும் பல

அந்தாதி, வகுப்பு, அலங்காரம் கலம்பகம், பிள்ளைத்தமிழ் மாலை எனப் பல

1. திருமகளந்தாதி
2. ஆங்கிலியர்அந்தாதி
3. வேல்வகுப்பு
4. திருவருணைக்கலம்பகம்
5. மயிலலங்காரம்
6. தமிழலங்காரம்

மற்றும் பல நூல்கள் பாடியுள்ளார்

## வண்ணச்சரபரின் படைப்புகள்

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | இரவி எழுபது | 72 |
| 2. | சூரியமூர்த்தி எழுகூற்றிருக்கை | 2 |
| 3. | சூரியமூர்த்தி பதிகம் 10 | 120 |
| 4. | சூரியமாலை | 32 |
| 5. | வெண்பா | 2 |
| 6. | சிவபெருமான் ஏகபாதத்தந்தாதி | 32 |
| 7. | சிவபெருமான் ஒன்பதுகூற்றிருக்கை | 2 |
| 8. | சிவபெருமான் சதகம் | 102 |
| 9. | சிவபெருமான் பதிகம் 9 | 108 |
| 10. | சிவபெருமான் பதிக மணிமாலை | 300 |
| 11. | சிவபெருமான் வெண்பா | 4 |
| 12. | அம்பிகை எழுகூற்றிருக்கை | 2 |
| 13. | அம்பிகை ஏழு பதிகம் | 79 |
| 14. | அம்பிகை மருந்து கொடுத்த பதிகம் | 12 |
| 15. | அம்பிகை பதிகம் 5 | 60 |
| 16. | ஆணையிட்டழைத்த சரசுவதி பதிகம் | 12 |
| 17. | ஆணையிட்டழைத்த திருமகள் பதிகம் | 12 |
| 18. | கலைமகள் பதிகம் | 36 |
| 19. | காமாட்சி வெண்பா | 1 |
| 20. | குஞ்சரி பஞ்சகம் | 7 |
| 21. | சக்தி கவச நூல் | 102 |
| 22. | சக்தி பஞ்சகம் | 7 |
| 23. | திரிபுரசுந்தரி பதிகம் | 12 |
| 24. | திருமகள் பதிகம் 3 | 36 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 25. | தெய்வயானைப் பதிகம் | 12 |
| 26. | பூமாதேவி பதிகம் | 12 |
| 27. | வள்ளித்தாய் பதிகம் | 12 |
| 28. | வள்ளி பஞ்சகம் | 7 |
| 29. | வள்ளி பதிகம் | 12 |
| | திருமால் | |
| 30. | அரியோகபாதத்தந்தாதி | 32 |
| 31. | திருமாலந்தாதி | 102 |
| 32. | திருமால் எழுகூற்றிருக்கை | 2 |
| 33. | திருமால் தெய்வீகப் பதிகம் | 12 |
| 34. | திருமால் தூயில் நீங்கு பதிகம் | 1 |
| 35. | திருமால் பத்துபதிகம் | 84 |
| 36. | திருமால் பதிகம் | 7 |
| | விநாயகர் | |
| 37. | கணபதி மாலை | 102 |
| 38. | பிரணவ விநாயகர் பதிகம் | 12 |
| 39. | மணிமுத்தாநதி பதிகம் | 1 |
| 40. | விநாயகர் ஐந்து பதிகம் | 1 |
| 41. | விநாயகர் எழுகூற்றிருக்கை | 2 |
| 42. | விநாயகர் பதிகம் 5 | 60 |
| | முருகப் பெருமான் | |
| 43. | அண்டவாதமும் சளிப்பும் நீங்க வேண்டு பதிகம் | 13 |
| 44. | அயிலணிகைப் பெருமைக்காரன் வகுப்பு | 2 |
| 45. | எண்கூற்றிருக்கை | 2 |
| 46. | எழுகூற்றிருக்கை | 2 |
| 47. | ஏகத்தாள் இதழகலந்தாதி | 13 |
| 48. | ஏடணை தீர்க்கவேண்டு பதிகம் | 13 |
| 49. | ஏழிளையனார் திருப்புகழ் | 9 |
| 50. | கங்கைப் பதிகம் (முருகன்) | 13 |
| 51. * | கந்தனைந் திருடன் என்ற பதிகம் | 13 |
| 52. * | கந்தனை நல்லவன் என்ற பதிகம் | 13 |
| 53. | கடன் தீர்த்த முருகன் பதிகம் | 13 |
| 54. | கலிவிடந்தாதி | 102 |
| 55. | கிணற்றுப் பதிகம் (முருகன்) | 13 |
| 56. | கீர்த்தனை | 20 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 57. | கௌமார தீபம் | 18 |
| 58. * | கௌமாரத் தொகை | 14 |
| 59. | கௌமார நூல் | 12 |
| 60. | கௌமார விநோதம் | 25 |
| 61. | கௌமார லகிரி | 102 |
| 62. | சுப்ரமணிய நூல் | 32 |
| 63. | சண்முகச்சிவன் பதிகம் | 13 |
| 64. | சிங்காரவேலர் வேண்டுகோட் பதிகம் | 13 |
| 65. | சித்திரத்துறை சிவகுருபரன் பதிகம் | 13 |
| 66. | சிவகுருபரன் பதிகம் | 13 |
| 67. | செம்பொனந்தாதி | 102 |
| 68. | தலையணிச் சீரிதழகல் அந்தாதி | 102 |
| 69. | திருச்செந்தூரான் தேடிவந்த பதிகம் | 13 |
| 70. | திருக்கைவேற் சேவகன் பதிகம் | 13 |
| 71. | திருப்புகழ் | 107 |
| 72. | திருப்புகழ் | 2 |
| 73. | தேள் விடந்தீர்த்த பதிகம் | 13 |
| 74. | தூதுவிட்ட பதிகம் | 13 |
| 75. | நீட்டுரமாலை | 34 |
| 76. | படைவீட்டுப் பதிகம் 36 | 468 |
| 77. * | படைவீட்டுத் திருப்புகழ் | 38 |
| 78. | பற்றொழியவேண்டு பதிகம் | 13 |
| 79. | பூமிதேவிப் பதிகம் (முருகன்) | 13 |
| 80. | பெரிய குருபரன் பதிகம் | 13 |
| 81. | பொதுத் தெய்வப் பதிகம் (முருகன்) | 13 |
| 82. * | போற்றிப் பனுவல் | 8 |
| 83. | மலைநாட்டுக் குகன் பதிகம் | 13 |
| 84. | முருகன் கௌமார அந்தாதி | 102 |
| 85. | முருகன் பதிகம் 82 | 106 |
| 86. | முருகன் பதிக வருஷம் | 722 |
| 87. * | முருகன் கலிவெண்பா | 1 |
| 88. * | முருகன் வெண்பா | 2 |
| 89. * | முருகானந்த லகிரி | 102 |
| 90. | வகுப்பு | 1 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 91. | விடுகவிகள் | 8 |
| 92. | வெண்பா | 19 |
| 93. | வெள்ளைப்பூ தந்த குகன் பதிகம் | 13 |
| 94. | வேலாயுத வண்ணப்பதிகம் | 13 |
| | **சமயாதீதம்** | |
| 95. | எழுகூற்றந்தாதி | 87 |
| 96. | சண்மத கௌமார சிலேடைப் பதிகம் 6 | 72 |
| 97. | சமயாதீதத் திருப்புகழ் | 105 |
| 98. | சமயாதீதப் பதிகம் 17 | 221 |
| 99. | சமயாதீத வண்ணப் பதிகம் 2 | 26 |
| | **சமரசம்** | |
| 100. | அரன், அரி சிலேடைப் பதிகம் | 12 |
| 101. | ஏழாயிரப் பிரபந்தம் | 7008 |
| 102. | கலிநீக்க வேண்டு சமரசப்பதிகம் | 13 |
| 103. | கலியறச் சொன்ன பதிகம் | 13 |
| 104. | சந்தக்கலித்துறை யந்தாதி | 32 |
| 105. | சமரசத் தசாங்கக் கூற்றிருக்கை | 2 |
| 106. | சமரசப் பதிகம் 16 | 208 |
| 107. | சமரசப் பதிகம், நாய்க்குருளைப் பதிகம் | 36 |
| 108. | சமரச முன்னிலை நூல் | 102 |
| 109. | தவளைப் பதிகம் | 13 |
| 110. | தெய்வப் பதிகம் | 13 |
| 111. | பெருமாளந்தாதி (முருகன், திருமால் சிலேடை) | 102 |
| 112. | பெருமானந்தாதி (சிவன், திருமால் சிலேடை) | 102 |
| 113. | பிணிதீர்த்த பதிகம் | 13 |
| 114. * | மொழிநெறி எழுபா | 9 |
| | **இலக்கணம்** | |
| 115. * | அறுவகை இலக்கணம் | 7786 |
| 116. * | ஏழாம் இலக்கணம் | 318 |
| 117. * | வண்ணத்தியல்பு | 111 |
| | **பலவகை நூல்கள்** | |
| 118. | அகத்தியார் பதிகம் 2 | 26 |
| 119. * | அணிற்காத்த பதிகம் | 12 |
| 120. | அபேத மாலை மாற்று | 1 |
| 121. | அரசாட்சி நூல் | 102 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 122. * | அரிஹரபுத்திரர் பதிகம் | 13 |
| 123. * | அருணகிரிநாதர் புராணம் | 441 |
| 124. | அருளாட்சி நூல் | 137 |
| 125. | அருளானந்தமூர்த்தி பஞ்சகம் | 7 |
| 126. | ஆங்கிலியர் அந்தாதி | 102 |
| 127. | ஆயிரந் தீபம் | 13 |
| 128. * | ஆறெழுத்தலங்காரம் | 103 |
| 129. | இருவர் இரட்டை மணிமாலை (சேரமான், ஔவை) | 22 |
| 130. | இன்னிசைப் பஃறொடைவெண்பா | 1 |
| 131. | ஈசானதேசிகப் பதிகம் | 12 |
| 132. | உண்மைப் பதிகம் | 12 |
| 133. | எழுபா எழுபது | 72 |
| 134. | ஏகபாதம் | 2 |
| 135. | ஏகன் எழுபது | 72 |
| 136. | ஐந்துமுகச்சிவன் ஆறுமுகச் சிவன் சிலேடைப்பதிகம் | 13 |
| 137. | ஒரு தொடைச் செய்யுள் நிரோட்டகக் குகனந்தாதி | 102 |
| 138. | ஒரு பொருள் விருத்தம் | 1 |
| 139. | ஔவையார் பதிகம் | 12 |
| 140. | கங்கை அந்தாதி | 1102 |
| 141. | கட்டளைக் கலித்துறை | 2 |
| 142. | கண்ணோய் தீர்த்த பதிகம் | 13 |
| 143. | கல்லுப்பெருமாள் காட்டுப்பெருமாள் பதிகம் | 13 |
| 144. | கல்விழுந்திடாதபடி காத்த பதிகம் | 13 |
| 145. | கவி எழுதல் விழைந்த பதிகம் | 12 |
| 146. | காப்பு மாலை | 5 |
| 147. | கிணற்றுத் திருப்புகழ் | 1 |
| 148. | கிணற்று வண்ணப்பதிகம் | 13 |
| 149. | கீர்த்தனைகள் | 9 |
| 150. | குகை நமசிவாயர் பதிகம் | 12 |
| 151. | குபேரன் பதிகம் | 12 |
| 152. | குரு முன்னிலை நூல் | 38 |
| 153. | குருநாதன் அந்தாதி | 102 |
| 154. * | குருபரதத்துவ காவியம் | 1261 |
| 155. | கருமுதற் பாசுரம் | 14 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 156. | குவிபா ஒருபஃது | 12 |
| 157. | கைக்கிளை மறுத்த பதிகம் | 12 |
| 158. | கைநோய் தீர்த்த பதிகம் | 13 |
| 159. | கொலைநீக்க வேண்டு பதிகம் | 13 |
| 160. * | கௌமார முறைமை (காண்டம் 3) | 308 |
| 161. | ஞான அந்தாதி | 32 |
| 162. * | சடகோபர் சதகத்தந்தாதி | 112 |
| 163. * | சடகோபர் பத்து | 10 |
| 164. | சதகவுந்தி | 102 |
| 165. | சத்தசதகம் | 702 |
| 166. | சத்திய சாட்சிப் பதிகம் | 13 |
| 167. * | சத்திய சூத்திரம் | 122 |
| 168. | சத்திய முன்னிலைப் பதிகம் | 13 |
| 169. * | சத்திய வாசகம் | 122 |
| 170. | சத்துருசங்கார விருத்தம் | 18 |
| 171. | சமய சூத்திரம் | 51 |
| 172. | சரசுவதி பூரம் கடித்த பதிகம் | 12 |
| 173. | சற்குண, நிற்குண தனிப்பொருள் பதிகம் | 13 |
| 174. | சற்குரு கவிகள் | 3 |
| 175. | சற்குரு பாதப் பதிகம் | 13 |
| 176. | சற்குரு விஜயம் | 169 |
| 177. * | சாத்தனார் அகவல் | 1 |
| 178. * | சித்தர் அந்தாதி | 102 |
| 179. | சித்தி விளையாடற் பதிகம் | 13 |
| 180. | சிவகுருநாத வெண்பா | 102 |
| 181. | சிவராத்திரி பதிகம் | 14 |
| 182. | சிவாயகுரு பதிகம் | 13 |
| 183. | சிறப்பு நூல் | 102 |
| 184. | சுரந்தீர்த்த பதிகம் | 26 |
| 185. | சேரமான் ஆசிரியப்பா | 2 |
| 186. | தண்டபாணி ஆசிரியப்பா | 39 |
| 187. | தமிழ்க்கவிகள் உதிக்கும் வம்பு சகியாப் பதிகம் | 13 |
| 188. * | தமிழலங்காரம் | 102 |
| 189. * | தமிழைத் துதித்த பதிகம் | 12 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 190. | தமிழ் விரும்பும் தெய்வம் இன்றித்தவித்த பதிகம் | 13 |
| 191. | தமிழ் வெறுத்த பதிகம் | 12 |
| 192. | தவப் பதிகம் | 13 |
| 193. | தனிக்குறில் வெண்பா | 1 |
| 194. | தனிநெடில் வெண்பா | 1 |
| 195. | தாழிசை | 1 |
| 196. | தானே தானான பதிகம் | 12 |
| 197. | திரிபு யமகக் கவி | 2 |
| 198. | திருக்கூட்டப் புகழ்ச்சி | 14 |
| 199. | திருப்பொதுச் சூத்திரம் | 9 |
| 200. | திருமலையம்மை கவி | 14 |
| 201. | திருமுலைப்பால் இரந்த பதிகம் | 12 |
| 202. * | திருமேனிச் சிவப்பு | 45 |
| 203. | திருவடி சூட்டிய பதிகம் | 13 |
| 204. | திருவருட் கண்ணி | 53 |
| 205. | திருவருட் சிந்தனைப் பதிகம் | 13 |
| 206. | திருவருட் போதம் | 13 |
| 207. | திருவருள் நாட்டம் | 1020 |
| 208. | திருவருள் வழக்கு | 38 |
| 209. | திருவெண்பா | 212 |
| 210. * | தியானாநுபூதி | 37 |
| 211. | தெய்வக்கண்ணி | 122 |
| 212. | தெய்வங்கட்குத் தமிழாசை விளைத்த பதிகம் | 13 |
| 213. | தெய்வத் திருவாயிரம் | 1002 |
| 214. * | தெய்வநாயகன் பதிகம் | 13 |
| 215. | தெய்வ மஞ்சரி | 34 |
| 216. | தெய்வமஞ்சரி நூல் | 32 |
| 217. | தெய்வ வழக்கு | 104 |
| 218. | தெய்வவாழிப் பதிகம் | 13 |
| 219. | தெய்வாநுபூதி | 102 |
| 220. | தையச்சந்தக் கவி | 1 |
| 221. | நந்தனப் பாமாலை | 366 |
| 222. | நல்ல தெய்வங்கள் பதிகம் | 13 |
| 223. | நவவீரர் பதிகம் | 13 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 224. | நாமாவளிப் பதிகம் (பொது) | 14 |
| 225. * | நானிலைச்சதகம் | 102 |
| 226. | நிரோட்டகத் தணிச்செய்யுள் அந்தாதி | 102 |
| 227. | நேரிசைப் பஃறொடைவெண்பா | 1 |
| 228. | பதிகவுந்தி | 13 |
| 229. | பரதெய்வ மகுட ஆசிரியப் பதிகம் | 13 |
| 230. | பரதேசிக் காவலன் பதிகம் | 13 |
| 231. | பரமகுருநாதன் பதிகம் | 13 |
| 232. | பல நமாக்காரன் வகுப்பு | 1 |
| 233. | பலிமறுத்த பதிகம் | 12 |
| 234. | பனை முறியப் பாடிய வெண்பா | 12 |
| 235. | பாடுந்தன்மை மறுத்த பதிகம் | 12 |
| 236. | பாறைக் கிணற்றந்தாதி | 102 |
| 237. | பாறையறும் பதிகம் | 13 |
| 238. | பிரணவாநுபூதி | 38 |
| 239. | பிரியாமை வேண்டுபதிகம் | 13 |
| 240. * | புலவர் கவி | 2 |
| 241. * | புலவர் புராணம் | 3003 |
| 242. | பேரொலியலந்தாதி | 34 |
| 243. | பொதுநூல் | 102 |
| 244. | பொதுவான தெய்வ வகுப்பு | 1 |
| 245. | பொய்ப்புலவோர்பால் புகல் நவரத்னம் | 11 |
| 246. | பொருட்கலி முழுதும்போம் பதிகம் | 13 |
| 247. | மயிலலங்காரம் | 102 |
| 248. | மரக்கல வருத்தப் பதிகம் | 13 |
| 249. | மருதன் காப்புப் பதிகம் | 13 |
| 250. | மழைப்பதிகம் | 13 |
| 251. * | மனுநெறித் திருநூல் | 1300 |
| 252. | மாணிக்கவாசகர் திரிபு, யமகம், பாடல் | 5 |
| 253. | மாலை மாற்று | 2 |
| 254. * | முசுகுந்த நாடகம் | 71 |
| 255. | முதலொலியல் அந்தாதி | 32 |
| 256. | முத்தமிழப் பாமாலை | 34 |
| 257. | முருகதாசர் அநுபூதி | 102 |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 258. | மெய் வரோதய சதகம் | 102 |
| 259. | மெய்வழக்குப் பதிகம் | 13 |
| 260. | மெய் வழக்கு மாலை | 14 |
| 261. | யாத்திரை துயர்தீரவேண்டு பதிகம் | 13 |
| 262. | வடலூரார் வருகைப் பதிகம் | 12 |
| 263. | வடலூரார் வினாப் பதிகம் | 12 |
| 264. | வருக்கக் குறள் | 249 |
| 265. | வழக்குப் பதிகம் | 13 |
| 266. | விடுகவி | 10 |
| 267. | விடுகவி | 20 |
| 268. | விடுபாட்டு | 9 |
| 269. | விற்பனம் | 132 |
| 270. | வீரவாகுத்தேவர் பதிகம் | 26 |
| 271. | வேண்டுகோள் மாலை | 18 |
| 272. * | வேலலங்காரம் | 102 |
| 273. | வேற்படைப் பதிகம் | 13 |
| | தனிப்பாடல் | |
| 274. | தனிப்பாடல் திரட்டு | 210 |
| | மொத்தப் பாடல்கள் | 49,722 |

குறிப்பு : * இவ்வாறு குறியிட்டிருக்கும் நூல்கள் அச்சாகி வெளிவந்துள்ளன.

## சான்றோர்களைப் பற்றி எழுதிய அறிஞர்கள்

**1**

திருஞான சம்பந்தர் *(மரபின் மைந்தன் முத்தையா)*
திருநாவுக்கரசர் *(பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை)*
சுந்தரர் *(புலவர்மணியன்)*

**2**

மாணிக்கவாசகர் *(முனைவர் தெ.ஞானசுந்தரம்)*
காரைக்கால் அம்மையார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
சேக்கிழார் *(முனைவர் செல்வக்கணபதி)*

**3**

ஆண்டாள் *(முனைவர் நிர்மலா மோகன்)*
குலசேகர ஆழ்வார் *(முனைவர் கா.அரங்கசாமி)*
திருமங்கையாழ்வார் *(முனைவர் அமுதன்)*

**4**

பெரியாழ்வார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
நம்மாழ்வார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*
வேதாந்ததேசிகர் *(முனைவர் பிரேமா நந்தகுமார்)*

**5**

ஸ்ரீமத்வர் *(டாக்டர் சுதா சேஷையன்)*
ஸ்ரீராமானுசர் *(முனைவர் ம.பெ. சீனிவாசன்)*
வள்ளலார் *(முனைவர் ம.ரா.போ.குருசாமி)*

**6**

திருமூலர் *(முனைவர் அ.அறிவொளி)*
மெய்கண்டார் *(முனைவர் ந.இரா.சென்னியப்பன்)*
தாயுமானவர் *(முனைவர் இ.சுந்தரமூர்த்தி)*

**7**

வீரமாமுனிவர் *(முனைவர் ம.செ.இரபிசிங்)*
குணங்குடி மஸ்தான் *(முனைவர் தக்கலை பஷீர்)*
மகாகவி பாரதியார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*

**8**

சாந்தலிங்க சுவாமிகள் *(தவத்திரு.சாந்தலிங்க இராமசாமி அடிகளார்)*
கந்தசாமி சுவாமிகள் *(புலவர் ப.வெ.நாகராசன்)*
சுவாமி சித்பவானந்தர் *(வழக்கறிஞர் மு.மாரியப்பன்)*

**9**

சிவப்பிரகாசர் *(முனைவர் ம.மனோன்மணி)*
சிவஞான முனிவர் *(முனைவர் வே.செல்லாத்தாள்)*
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் *(முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்)*

**10**

ஆதிசங்கரர் *(எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்)*
அருணகிரியார் *(முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்)*
குமரகுருபரர் *(முனைவர் இரா.மோகன்)*